உ

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

## வர்ணாச்ரம தர்மகாண்ட: பூர்வபாக:

श्री वैद्यनाथदीक्षितविरचितम्

प्रथमो भागः

वर्णाश्रमधर्मकाण्डः - द्रविडानुवादयुतः



வெளியிடுபவர் :

**வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை**

(கும்பகோணம்) சார்பில்

**ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்**

ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502.

விக்ருதி - 2010

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

श्री वैद्यनाथदीक्षितविरचितम्

प्रथमो भागः

## वर्णाश्रमधर्मकाण्डः

द्रविडानुवादयुतः

# ஸ்ம்ருதிமுக்தாபலம்

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றியது

**முதல் பாகம்**

## வர்ணாச்ரம தர்ம காண்டம்

தொகுத்தளிப்பவர் :

**வைத்ய S.V. ராதாக்ருஷ்ண சாஸ்திரீ**

*வெளியிடுபவர் :*

*வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை*

(கும்பகோணம்) சார்பில்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம்

ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502.

விக்ருதி - 2010

# SMRITI MUKTA PHALAM
# VARNASRAMA DHARMA KANDAM
*with Tamil Translation*

*Edited by :*
Vaidya S.V. Radhakrishna Sastri.
*Srirangam*

*Published on behalf of :*
*Veda Dharma Sastra Paripalana Sabha*
*Regd. Office : Kumbakonam*

*by*
*Sri Kanchi Kamakoti Peetam,*
*Srimatam, Samsthanam*
*1, Salai Street,*
*Kancheepuram - 631 502.*

*Lasertypeset & Printed at :*
*V.K.N. Enterprises*
*Mylapore, Chennai-4, Cell: 9840217036*

☎ :044-27222115
Fax: 044 -27224305, 37290060

Email: skmkanci@md3.vsnl.net.in.

॥ Sri Chandramouleeswaraya Namaha: ॥

Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya Sarvagnapeeta :

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

# JAGADGURU SRI SANKARACHARYA SWAMIGAL

## Srimatam Samsthanam

**No. 1, Salai Street, KANCHIPURAM - 631 502.**

मङ्क्त्वा सत्स्मृतिसागरे सुगहने लब्ध्वा वरं मौक्तिकं
श्रुत्यम्बागलभूषणं समतनोत् श्रीवैद्यनाथो महान्।
भूयस्तद्द्रविडानुवादकनकैस्तन्वन् स्रजं सुन्दरीं
राधाकृष्णसुधीस्सदा विजयतां श्रीचन्द्रमौलीक्षणात्।।

अक्षैर्मा दीव्येति आम्नायामृताम्बुधिबिन्दुभिः निखिलस्मृतिनिचयेन च प्रभुसम्मिततया, इतिहासपुराणवृन्दमाक्षिकधारया सुहृत्सम्मिततया, काव्यरसानुभूतीक्षुसारवर्षैः कान्तासम्मिततया च प्रतिपादितः धर्मकलापः सूक्ष्मगतिको विलसति। धर्म एव विशिनष्टि समाजं समजात्। मनीषिमनोगोचरस्य तस्य धर्मस्यावगतये परमकारुणिका ऋषयः स्मृतिग्रन्थान् विलिख्य महदुपकारमतानिषुः। धर्मकलापापकलनकलापटौ कलौ मानवानां बोधनाय वैद्यनाथदीक्षीताख्यो विद्वदग्रेगण्यः स्मृतिसागरं निर्मथ्य पीयूषमाचिन्वन् स्मृतिमुक्ताफलाख्यं ग्रन्थमरीरचत्। सोऽयं ग्रन्थः वर्णाश्रमधर्मकाण्डः, आह्निककाण्डः, आशौचकाण्डः, श्राद्धकाण्डः, तिथिनिर्णयकाण्डः तथा प्रायश्चित्तकाण्डश्चेति काण्डषट्केन निखिलमपि धर्मं प्रतिपादयति। यं वै रक्षसि धर्मं त्वं धृत्या च नियमेन च। स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षत्विति श्रीमद्रामायणवचनेन धर्मो रक्षति रक्षित इति सुष्ठ्ववगम्यते। लोकानां धारणाद्धर्म इति सार्थाभिधां बिभ्रतो धर्मस्य सेवनं लोकव्यवस्थायाः स्थिरीकरणमिति न संशीतिः। सोऽपि धर्मः अनेन ग्रन्थरत्नेन सुष्ठ्ववगम्यते। तस्यैतस्य ग्रन्थस्य वर्णाश्रमधर्मकाण्डभागः वैद्यश्री शिवे राधाकृष्णशास्त्रिभिः द्रविडानुवादेन सह परिष्कृत्य वेदधर्मशास्त्रपरिपालनसभाद्वारा प्रकाश्यते इति ज्ञात्वा भृशं मोदामहे। सोऽयं यत्नः श्रीमहात्रिपुरसुन्दर्यम्बासमेत श्रीचन्द्रमौलीश्वरकृपया सफलो भवत्विति ग्रन्थसम्पादकः एवमेव ग्रन्थरत्नानि प्रकाशयन्नैहिकामुष्मिकश्रेयोविलासैः समेधतामिति प्रकाशने साहाय्यकर्तारश्च समस्तमङ्गलानि अवाप्नुयुः पठितारश्च धर्मसेवनेन निखिलश्रेयांस्यधिगच्छन्त्विति चाशास्महे।

नारायणस्मृतिः।

शाङ्करसंवत्सरः २५२०
काञ्चीपुरम्

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# நூல் அறிமுகம்

*தர்மம் அர்த்தம் காமம் என்ற மூன்று மனிதனின் நாட்டத்திற்குரிய பொருட்கள் நம் பண்பாட்டில் முக்கிய இடம் பெறுகின்றன. இவற்றில் தர்மம் என்பது நமது பண்பட்ட வாழ்க்கைக்குரிய நடை முறையாகும். அர்த்தம் என்பது பண்பட்ட வாழ்க்கைக்குத் தேவையான ஸாதனத்தைப் பெறுகிற முறை. காமம் என்பது வாழ்க்கைக்குரிய குறிக்கோளைப் பெற உதவுகிற விருப்பத்தைப் பண்படுத்துகிற முறை. அர்த்தமோ காமமோ தர்மத்திற்கு முரண்படுமானல் நல் வாழ்க்கைக்கு உதவாது. அவரவர் நிலையில் முரண்படாமல் இம்மூன்றையும் தர்மத்தை வழிகாட்டியாகக் கொண்டு வாழ்வின் நிலையை மேம்படுத்துவதே பாரதப் பண்பின் உயிர் நிலையாகும். தர்மம் மறுபிறப்பற்ற முக்தியையும் தரவல்ல ஆன்மீக வளர்ச்சிக்கும் காரண மென்பதால் மனிதனின் நாட்டத்திற்கு உகந்தவற்றில் முதலிடம் பெறுகிறது. அறம் (தர்மம்) பொருள் (அர்த்தம்) இன்பம் (காமம்) வீடு (முக்தி) என்று அவற்றை வரிசைப்படுத்துவர்.*

*ஸ்ரீராமன் வனவாஸத்திற்கு முற்படும்போது லக்ஷ்மணன் அதைத் தடுக்க முற்பட, ராமன் வனவாஸத்தை முறைப்படுத்துகிறார்.*

धर्मार्थकामाः खलु तात लोके समीक्षिता धर्मफलोदयेषु।
ते तत्र सर्वे स्युरसंशयं मे भार्येव वश्याऽभिमता सुपुत्रा। *என்று.*

*ஒரு நற்குணமிக்க மனைவி கணவனுக்கு அனுகூலமாக, மனத்திற்குப் பிடித்தவளாக, நன் மக்களின் தாயாக இருக்க கணவனின் அறமும், பொருளும் இன்பமும் ஒருங்கே அமைவதால், தர்மத்தை நாடி வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டவனுக்கு*

தர்மத்துடன் அர்த்த காமங்களும் மன நிறைவுதரும். தர்மச் செயலின் நிறைவு அர்த்த காம நிறைவுமாகும். தர்மச் செயலில் இந்நிறைவைக் கண்டவன் அர்த்தத்திற்கென காமத்திற்கென தர்மத்தைப் புறக்கணித்துச் செயல்பட நேராது.

''தார்மிகப் பண்பாட்டால் உள்ளம் ஆத்மா என்ற உட்பொருளை எளிதில் நெருங்குகிறது. பிரும்மம் என்ற பரம்பொருளே தனித் தனி சரீரத்தில் ஆத்மாவாக ஸச்சிதானந்தமாகத் துலங்குகிறது என்ற உணர்வு மேம்பட, பிறப்பும் இறப்பும் விடாமல் தொடர்கிற கர்மக் கட்டு விலகுமாறு சரீராதிகளிலுள்ள ''தான்'' என்ற உணர்வு மறைகிறது. இதனை உணர்ந்த தவச்சீலர்களான முனிவர்கள் தர்மத்தின் நிலையைப் பல நிலைகளில் பல கோணங்களில் ஆராய்ந்து அதனையொட்டிய வாழ்க்கை முறையை வகுத்துத் தந்துள்ளனர். அம்முறைகளை விஷய வாரியாகத் தொகுத்துத் தருகிற நூல்களை ஸ்ம்ருதி, தர்ம சாஸ்திரம் என வழங்குவர்.

தர்மம் என்பது அவரவர் நிலைக்கேற்ற வாழ்க்கை முறை எனலாம். மனித சமுதாயச்சிறப்பிற்கான வாழ்க்கை முறைகளில் பல்வேறு பொறுப்புகள் உள்ளன. இனம், குலம், குடியிருப்பு, நடைமுறை, பொதுப் பண்பு என்பவற்றிற்குக் கல்வி, ஆட்சி, பொருளாதாரம், சமுதாயப் பணி, பரஸ்பர ஒற்றுமை, என்ற பல பொறுப்புகள் உதவுகின்றன. கல்வியின்றி பண்போ, பொது நலனோ, கட்டுப்பாடோ, வசதிகளோ நிலைத்திராது. நாட்டை ஆளும் பொறுப்பிலுள்ள அரசன் தன் ஸந்ததியையும் நாடாளும் முறையில் தேர்ந்தவர்களாக்குகிறான். ஆட்சி கையாள்கிற முறையில் பரம்பரைத் தொழிலாகும் போது விரிவும் வலிவும் கூர்மையும் பெற்றுச் சிறப்படைகிறது. இத்தகையதே வாணிபமும் விவசாயமும் கல்வியும்.

தான் கற்றுணர்ந்ததை ஆராய்ந்து தேர்ச்சிபெற்றவன் மற்றொருவனுக்கு அதை எளிதில் கட்டமுடியும். வாழ்நாள்

முழுவதும் அவ்விதம் கற்பதும். கற்பிப்பதுமாகப் பயன்படுத்துபவன், தான் அதில் முழுமை பெறுவதுடன் தன் ஸந்ததியினரையும் அவ்வழியில் எளிதில் பழக்கிவிடுவான். தான் கற்றதைப் பிறருக்கு கற்பிப்பது அவனது முக்கியக் கடமையுமாகிறது. கற்பதிலும் ஆள்வதிலும் வாணிபத்திலும் வியவசாயத்திலும்தான் கண்டுணர்ந்த எளிய நேரான வழியைத் தன் ஸந்ததியர்க்கு உணர்த்தி வழிப்படுத்துவது கடமையும் மன நிறைவு தருவதுமாகிறது. தன் உழைப்பு வீணுகாதபடி, தன் குறுகிய வாழ்நாட்களில் பெற்றது தன்னேடு மாய்ந்து விடாதபடி அரிய சொத்தாகத் தன் மக்களிடம் ஒப்படைப்பதைவிட வாழ்வில் பெறுகிற பெரும் பேறு வேறு ஒன்றில்லை. இதனையே குலவழி. ஆசாரம், ஸமுதாசாரம், பண்பாடு என்பர். இப்படிப் பண்பட்டவர், தம் தமக்கேற்ற நடைமுறை, உற்ருர் - உறவினர்தேர்வு, உறைவிடத் தேர்வு, பழக்க வழக்கங்கள் என்று பல கோணங்களில் இதனை அமைத்துக்கொள்கின்றனர். இதுவே தர்ம வாழ்க்கை முறை.

இம்முறையில் துன்பத்தைத் தருகிற வாழ்க்கைக்குச் சிறிதும் இடமில்லாமல் இம்மையும் மறுமையும் இன்பம் நிறைந்திருக்கும் என்பர் பெரியோர். எண்ணற்ற தலைமுறை-தலை முறையாகப் பழகி வழக்கில் இருக்கிற இம்முறை, வேதங்களும் ஸ்ம்ருதிகளும் புராணங்களுமான தார்மிகர்கள் பற்றுக்கோடான வழிகாட்டி நூல்களைப் பின்பற்றி வாழ்ந்த நன் மக்களின் அனுபவத் தொகுப்பு நூல்களாக தொகுக்கப் பெற்று இன்று நம் கைகளில் கிடைக்கப் பெறுவது பேரதிசயமாகும்.

वेदोऽखिलो धर्ममूलम्। तद्विदां च स्मृतिशीले என்பது தார்மிக வாழ்க்கை முறையைத் தொகுத்தளிக்கிற கௌதம தர்ம ஸூத்திர நூலின் முதலிரண்டு ஸூத்ரங்கள். தார்மிக வாழ்க்கை முறைக்கு மூல நூல் வேதமும் அதனை ஒட்டி வாழ்ந்து சீர் பெற்று முனிவர்களின் நினைவுக் குறிப்பு

நூல்களான ஸ்ம்ருதிகளும் அவற்றையே ஒட்டி வாழ்ந்து மேனிலை பெற்றவர்களின் வழக்கிலிருந்து இயல்பாக அமைந்த வாழ்க்கை முறைகளுமாகும், இந்நூல்களும் அவ்வாறு வாழ்ந்த பெரியோர்களும் தாம் அறிந்து, உணர்ந்து அவ்வாறு வாழ்ந்து பழகி வழக்கில் கொணர்ந்து அதனைத் தன்னியல்பாகக் கொண்டு தாற்காலிக சுகத்தின் ஈர்ப்பால் சிறிதும் தடுமாறுமல், அதிலேயே தொட்டிலிலிருந்து இடுகாடு மட்டுமென்று வாழ்ந்த பெரியோர்களின் நடைமுறையே சீலம் எனப்படும்.

மிக விரிந்த நாட்டுப் பலகோடி மக்கள் பல நாகரிக அமைப்பில் வாழ்ந்தவர்களிடையே இந்த ஸ்ம்ருதிகளும் சீலங்களும் பெரிதும் மதிக்கப் பெற்று அவற்றைப் பின் பற்றி வாழ்வதே தம் கடமை என ஏற்றுக் கொள்ளத்தக்க நடுநிலை இவற்றிற்கு உண்டு.

வேதங்கள், அவற்றின கிளைகள். அவற்றிலுள்ள மந்திரங்கள் சடங்குமுறைகள் அவைகளைத் தமது குறிக்கோளாகக் கொண்ட ஆபஸ்தம்பர் முதலிய ஸூத்ரகாரர்கள். அவர்களின் வழியில் நின்ற நிர்ணயஸிந்து, சந்திரிகா, மிதாக்ஷரீ, மாதவீயம் முதலிய ஸதாசாரக் குறிப்பு நூல்கள் மிகவும் எளிதில் பாமரனும் புரிந்துகொள்ளத் தக்கவை. அவற்றை மேலும் எளியவையாக்க வந்ததே ஸ்ம்ருதிமுக்தாபலம். ஸ்மிருதிகளில் கண்ட பல வாக்யங்களின் கருத்தைச் சுருக்கி எளிதில் தரிக்கவல்ல முத்தாக இந்நூல் நம் முன் வைக்கிறது.

குறிப்பாகத் தென் தேசத்தியவரின் நன்னடை முறையை மனத்திற்கொண்டு மற்ற பகுதியினரின் பொது நடைமுறையையும் சீர் தூக்கி மிகச் சில குறிப்பிட்ட முறைகளின் சீரையும் சிறப்பையும் இந்நூல் விளக்குகின்றது. மாமன் மகளை மணப்பது அத்தை மகளை மணப்பது போன்றதும் மற்ற தேசப் பகுதிகளில் தவறெனக் கொள்ளும் நிலையில் இம்முறைக்கும் ஸ்ம்ருதி

முதலியவற்றில் இடமிருப்பதை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். தமிழ் நாட்டிலுள்ள ஸதாசாரங்கள் ஸம்ப்ரதாயங்கள் மற்றப் பகுதியிலுள்ளவற்றுடன் வேறுபடுவதால் உள்ள சிறப்பும் இந்நூலில் இடம் பெறுகிறது.

300 ஆண்டுகளுக்குமுன் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் பகுதியிலுள்ள கண்டிர மாணிக்கம் என்ற அக்ரஹாரத்தில் வாதூல கோத்ரத்தில் பிறந்த வைத்யநாத தீக்ஷிதர் என்ற சுருதி-ஸ்மிருதி-புராணப் பேரறிஞர் தமிழகப் பெருமக்களின் நல் வழக்கிலிருந்த ஆசார - அநுஷ்டான - ஸம்பிரதாயங்களின் மூல ச்ருதி - ஸ்மிருதி வசனங்களை வியக்கத் தக்கமுறையில் தொகுத்து அவற்றினிடையே உள்ள கருத்து வேற்றுமையையும் சீர்படுத்தி எல்லா தர்மங்களையும் ஆறு பகுதிகளாக இங்கு தொகுத்தளித்துள்ளார்.

ஸ்ம்ருதி முக்தாபலத்தின் முதற் பகுதியான வர்ணாச்ரம தர்ம காண்டம் இந்நூலில் இடம் பெறுகிறது. ஆஹ்நிக காண்டம், ஆசௌச காண்டம், சிராத்த காண்டம், திதி நிர்ணய காண்டம், பிராயச்சித்த காண்டம் என்ற மேலும் ஐந்து பகுதிகள் தொடர்ந்து பதிப்பிக்கப் பெற்று வெளியாகும்.

வர்ணாசிரம தர்மம் என்ற பகுதி மற்ற பகுதிகளின் ஆணிவேராகும். இதில் தாயின் கருவிலிருந்து வெளிவந்த சிசு பிறந்த நொடியிலிருந்தே பண்படுத்தப்படுகிறது. அவ்வாறு பிறந்த சிசுவிற்கு ஒவ்வொன்றையும் அதன் தாயும் தந்தையும் தூய்மை மிக்க வாழ்விற்கு அறிமுகப்படுத்தி அதன் அவசியத்தை உணரச் செய்து அததற்கேற்றவாறு பயிற்சி அளிக்கிற பொறுப்பை ஏற்க வேண்டியிருக்கிறது. அந்தப் பண்பட்ட வாழ்வைப் பெற்றவர்களே தன் மக்களை அதில் பயில்விக்க முடியும். அவர்கள் அந்த சீரிய வாழ்க்கை முறையை இயல்பாகப் பெற அவர்களது பெற்றோர்களும் உற்றார் உறவினரும்

அப்பண்புடன் வாழ்ந்து காட்டுவது அவசியமாகிறது. அதனுல் திடீரென யாரோ ஒருவர் இம்முறையைப் பயின்று நிறைவு பெறுவது சுற்றத்தார் அவ்வாறு பண்பட்டிருந்தால்தான் நிலைபெறும்.

உழவிற்கும் அக்நிஹோத்ரத்திற்கும் ஒத்துவராதென்பர். இரண்டிற்கும் செயல்படும் நேரம் ஒன்றே. அதனுல் இந்த செயல் முறைகளில் குழப்பம் நேராதிருக்க நம் ஸமுதாயம் ஒரமைப்பை ஏற்றிருக்கிறது. அதனை வர்ண தர்மம் என்பர். அந்தணர், க்ஷத்திரியர், வைச்யர், சூத்ரர் என்று நான்கு வர்ணத்தினர். இவர்களின் முதல் மூவரை த்விஜாதி த்விஜர் என்பர். தாயின் கருவிலிருந்து வெளிப்பட்டது முதல் பிறப்பு. உபநயனத்தின் மூலம் முதல் மூவர் இரண்டாவது பிறப்பை அடைகின்றனர். ஜாதி - பிறப்பு, இவர்கள் இருபிறப்பாளர். அதனுல் த்விஜாதி, துவிஜர், நாலாம் வர்ணத்தவர் இந்த இரண்டாம் பிறப்பற்றவர். அதனுல் ஏகஜாதி, ஏகஜர், இவர் தொழிலாளி. அந்தணர் தன்னை மூன்று வகையில் நெறிப்படுத்திக் கொள்கிருர். அதிபூதம், அத்த்யாத்மம், அதிதைவம் என. பஞ்சபூதமயமான உள்ளுலகமான சரீரம், அதே பஞ்சபூதங்களாலான வெளியுலகத்துடன் தொடர்புகொள்வதற்கான பண்பாடு - ஆதி பௌதிகமாகும். சரீரம் முதலியவற்றுடன் தொடர்பற்ற ஆத்மா என்ற ஜீவனுடன் வாழ வழி வகுப்பது ஆத்யாத்மிகம். வெளி உலகத்தை நெறிப்படுத்துகிற அக்னி, ஆதித்யன், வருணன் முதலானோரும் நம் வாழ் முறையைக் கண்காணித்து நெறிப்படுத்துபவர். அவர்களுடன் தொடர்புகொள்ளப் பல வழிகள். அவற்றின் மூலம் அவர்களுடன் தொடர்புகொள்ளும் வழியில் நம் நடைமுறையை அமைத்துக் கொள்வதும் ஆதி தைவிகமாகும்; இம்மூன்றுலும் தன்னைப் பண்படுத்திக்கொள்ள தாய் தந்தையர் அளித்த உடலைத் தக்கதாக்கவே இரு பிறப்பாளராக உபனயனம் செய்துகொள்கின்றனர். இந்த இரண்டாம் பிறப்பு மூவருக்கும் பொதுவானுலும் வழக்கிலுள்ள

நடைமுறையை மீண்டும் மீண்டும் ஆராய்ந்து அதிலேயே நிறைவு பெறுவதால் அந்தணன் சிறப்புக்குரியவன். மற்ற இருவரும் அரசாட்சி முறையிலும் வாணிபப் பொருளாதார முறையிலும் பெரிதும் ஈடுபடும் பொறுப்புள்ளவராதலால் ஆத்யாத்மிக - ஆதி தைவிக வழியில் அதிகம் ஈடுபட வாய்ப்பு பெறுவதில்லை. அதனால் அந்தணரை ஆத்யாத்மிக ஆதி தைவிக நெறியில் குருவாகக் கொள்வர். அதுவே அந்தணர்க்கான சிறப்பின் அடிப்படை. ஆத்மிகப் பணியில் ஈடுபாடு அதிகரிக்க லௌகிகப் பணியில் ஈடுபட நேரமில்லாததால் அந்தணர் தனி இடம் பெறுகிறார். அதனால் அந்தணரின் வாழ்முறையை தர்ம சாஸ்திரம் பெரிதும் கருத்தில் கொண்டு நடைமுறையைக் கட்டுப்படுத்தியுள்ளதைத் தர்மசாஸ்த்ரத்தில் காண்கிறோம்.

தர்மம் இருவகை. நான்கு வர்ணத்தினருக்கும் பொதுவான ஸாமான்ய தர்மம். அந்தந்த வர்ணத்திற்கேற்பட்ட விசேஷ தர்மம் என. விசேஷ தர்மம் பெரிதும் அந்தணரைக் கட்டுப்படுத்துகிறது. தான் தர்மம் எனக் கொண்டதை சிறிதேனும் தவறின்றிப் பிறருக்குப் போதித்து நடைமுறை வழிகாட்டுவதிலும், மற்ற வர்ணத்தினரின் பிரதிநிதியாகி ஆதி தைவிக வழி பாட்டின் பொறுப்பை ஏற்பதிலும் தன் நிலையை லௌகிக வருவாய்த் துறைக்குப் பயன்படுத்தாமல் ஆன்மிக வழிபாட்டு முறையில் வேண்டிப் பெறாமல் தானே பிறர் தன்னை மதித்து ஈந்த தக்ஷிணை - தானம் முதலிய வற்றால் நிறைவுறச் செய்து கொள்வதும் அவனது முக்கியக் கடமையும் செய்முறையும் எனத் தன் நோக்கத்தைச் சீர்படுத்தி வாழ்ந்து காட்டுவதும் சமுதாயத்தில் அவனை பெருமை மிக்கவனாகச் செய்தது.

ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றிய ஸ்ம்ருதி முக்தாபலத்தின் முதற் பகுதியான வர்ணாசிரம தர்ம காண்டம் அந்தந்த வர்ணத்தினரின் அறநெறிக் கடங்கிய வாழ்க்கைச் சிறப்பையும் அதற்கான கட்டுப்பாட்டையும் விளக்குகிறது. முன்னூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த

ஸமூகத்தை மனத்திற்கொண்டு இயற்றப்பட்ட இந்நூல் இன்றுள்ள தார்மிக வாழ்வைப் பெரிதெனக் கருதி வாழ்கிற மக்களிடையே வியப்பையும் தார்மிக வாழ்வின் சிறப்பை உணர்ந்து அதனைத் தம் தம் சக்திக்கேற்பப் பின்பற்ற ஆர்வத்தையும் விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை.

இம்மூல நூல் ஸம்ஸ்கிருத மொழியின் இயல்பான சுருக்கமும் பொருள் நெருக்கமும் கொண்டது. சென்ற நூற்றாண்டில் இதன் கருத்துச் செறிவை உணர இயலாமையை உணர்ந்த கும்பகோணம் சாரதாவிலாஸ அச்சகத்தினர் அங்கு சிறந்த பேரறிஞராக விளங்கிய பண்டித மண்டன ஸ்ரீ நாராயண சாஸ்திரி அவர்களின் தமிழ்மொழி பெயர்ப்புடன் வர்ணாசிரம தர்ம காண்டத்தை வெளியிட்டனர். அதனையொட்டிய தமிழுரையுடன் இதனை வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை வெளியிடுகிறது. மற்ற 5 பகுதிகளும் விரைவில் தமிழுரையுடன் வெளியாகும் என எதிர்பார்க்கப்படுகிறது.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி, ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய பூஜ்யஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களின் அருளாணை ஒன்றையே துணையாகக் கொண்டு வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபை இதனை வெளிக் கொணர்கிறது. இவ்வரிய பணியில் இவனுக்கும் மிகச் சிறிய பங்களித்த ஸ்ரீ ஆசார்ய ஸ்ரீ சரணர்களின் ஸ்ரீ சரணங்களில் இதனை ஸமர்ப்பித்துக் கிருதார்த்தனாக முடிந்தது இவன் பெற்ற பெரும் பாக்கியம்.

ஸ்ரீரங்கம்.
15.10.2010

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ.

உ

# वर्णाश्रमधर्मकाण्डः - विषयानुक्रमणिका

## வர்ணாசிரம தர்ம காண்டம் - பொருளடக்கம்

श्री गुरुभ्यो नमः

# स्मृतिमुक्ताफलम्

*श्री वैद्यनाथदीक्षितविरचितम्*

## ஸ்ரீ வைத்யநாத தீக்ஷிதர் இயற்றிய

# ஸ்மிருதிமுக்தாபலம்

## १. वर्णाश्रमधर्मकाण्डः

## 1. வர்ணாசிரமதர்மகாண்டம்

### मङ्गलश्लोकाः

अङ्केविहारिणमनुक्षणमद्रिजायाः
तं केवलं कलभमद्भुतमाश्रयामः।
नित्यं य एष बहुलै(भि)र्निजसेवकानां
प्रत्यूहपुञ्जकबलैः परितोषमेति॥ १

*தினந்தோறும் தன்னை ஸேவிப்பவர்களுடைய விக்னங்களின் தொகுதியெனும் கவளங்களால் திருப்தியையடைகின்றதும் மலைமகளின் மடியின்மீது க்ஷணந்தோறும் விளையாடுவதும், அற்புதமானதுமான அந்த கஜமுகக்கடவுளையே சரணமடைவோம். (1)*

पारावती विधिमुखावलिसौधपङ्क्तेः
मायाविहीनजनमानसराजहंसी।

योगीश्वरैरपि विमृग्यनिजस्वरूपा
वागीश्वरी दिशतु मे वचसां समृद्धिम् ॥२

*நான்முகனின் முகங்களெனும் மாளிகைமுகவாயில் பெண்புறுபோன்றவளும், மாயை இல்லாத மனமுடைய மனிதர்களின் மனமெனும் மானஸ ஸரஸ்ஸில் அன்னப்பேடு போன்றவளும், யோகீச்வரர்களாலும் தேடப் பெற்ற தனது ஸ்வரூபமுடையவளுமான கலைமகள் எனக்கு வாக்குகளின் ஸம்பத்தைக் கொடுத்தருள வேண்டும்.2*

शरणं तमुपैमि साधुसेव्यं सदयं कञ्चन देवताविशेषम् ।
सहसा चरणाम्बुजं यदीयं मुनिवैधुर्यनिरासहेतुरासीत् ॥३

*நொடியில் கௌதமமுனியின் மனைவியிழந்த தன்மையைத் தீர்க்கக் காரணமானதும், ஸாதுக்களால் ஸேவிக்கத்தக்கதும் கருணையுள்ளதுமான ஸ்ரீராமனெனும் தைவத்தைச் சரணமடைகிறேன்.3*

श्रीरामचन्द्रचरणद्वयपद्मकोशात् मा यातु मे चपलमानसचञ्चरीकः ।
मुक्तेर्वशीकरणचूर्णमहो यदीयं गात्रेषु बिभ्रति रजोऽपि रजोविहीनाः ॥ ४

*ரஜோ குணமற்றவரும் முக்தியெனும் மாதை வசப்படுத்த வல்ல பொடியான ஸ்ரீ ராமனின் திருவடித்தூசியைத் தங்கள் உடலில் பூசிக் கொள்கின்றனர். அந்த ராமனின் இரு திருவடித் தாமரை யரும்புகளிலிருந்தும் என் மனமெனும் பரபரப்புமிக்க வண்டு வெளியில் செல்லாதிருக்கட்டும்.4*

भवकोदण्डदलनं भवबन्धविमोचनम् ।
दशकण्ठरिपुं वन्दे दशस्यन्दननन्दनम् ॥ ५

*சிவனின் வில்லை முறித்தவர். பிறவிக்கட்டை நீக்குபவர். ராவணனின் எதிரி, அந்த தசரதரின் புதல்வரை வணங்குகிறேன். 5*

वैद्यनाथाध्वरी रामदासो वाधूलवंशजः ।
स्मृतिमुक्ताफलं नाम कुरुते सारसंग्रहम् ।। ६

*வாதூல கோத்திரத்திலுதித்தவரும் ராமபக்தருமான வைத்யநாத தீக்ஷிதர் ஸ்மிருதி முக்தாபலம் எனும் இந்த ஸாரச்சுருக்க நூலை இயற்றுகிறார்.6*

उरुविस्तरधर्मशास्त्रवार्धेः उपलब्धं महता परिश्रमेण ।
श्रवणेषु निधीयतां किमन्यैः स्मृतिमुक्ताफलमेकमेव सद्भिः ।। ७

*மிகவிரிவான தர்மசாஸ்திரக் கடலிலிருந்தும் கடும் உழைப்பால் தேடிப்பெற்ற ஸ்மிருதிமுத்தொன்று நல்லோர்கள் காதுகளில் கொள்ளப்படட்டும். மற்றதனால் ஆவதென்ன?.7*

क्व नु विशकलितं तु धर्मशास्त्रं क्वच पुनराकलने मम प्रवृत्तिः ।
सरलमतिजुषस्तथापि सन्तः सततमिदं मम साहसं सहन्ताम् ।। ८

*ஆங்காங்கு சிதறிக்கிடக்கும் தர்மசாஸ்திரம் எங்கே? அவற்றை மறுபடி தொகுப்பதில் என் உழைப்பு எங்கே? மென்மைமிக்க இதயமுள்ள நல்லோர் இந்த என் ஸாஹஸத்தைப் பொறுத்து கொள்ளட்டும். 8*

## धर्मप्रमाणनिरूपणम्

### தர்மப்ரமாண நிரூபணம்

तत्रादौ धर्मप्रमाणानि निरूप्यन्ते । तत्र मनुः 'वेदोऽखिलो धर्ममूलं स्मृतिशीले च तद्विदाम् । आचारश्चैव साधूनां आत्मनस्तुष्टिरेव च ।'' इति । वेद इति जातावेक वचनम् । धर्ममूलं - धर्मस्य प्रमाणम् । न केवलं विध्यात्मक एव वेदो धर्मप्रमाणम् । किन्तु मन्त्रार्थवादात्मकोऽपीत्युक्तमखिल इति । अथ यत्र प्रत्यक्षो वेदो नोपलभ्यते तत्र कथमित्यत उक्तं - 'स्मृतिशीले च तद्विदाम्' इति । तद्विदां - वेदार्थविदां स्मृतिः -

धर्मशास्त्रेतिहासपुराणानि, शीलं च धर्ममूलम्।

முதலில் தர்மப் பிரமாணங்களை விளக்குகிறேன். மனு கூறுகிறார். வேதமனைத்தும் அதன் பொருளறிந்தவரின் நினைவுக்குறிப்பும் சீலமும் ஆசாரமும் ஸாதுக்களின் மனநிறைவும் தர்மத்தின் பிரமாணங்கள். வேதம் என இங்கு பொதுவாக ஒருமையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ரிக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்கள் நான்கையும் வேதம் என்ற சொல் குறிப்பிடும். விதி (கட்டளை) ரூபமாயுள்ள வேதப்பகுதி மட்டுமல்ல. மந்திரமும் அர்த்தவாதமும் வேதமே. அதனால் பிரமாணமே. நேரிடையாக வேதவாக்கியம் கிடைக்காத இடத்தில் வேதமறிந்தோரின் குறிப்புகளும் நடைமுறையும் பிரமாணமே. தர்மசாஸ்திரம், இதிஹாஸம், புராணமும் இவற்றில் அடங்கியவையே.

सत्संभावनाहेतुरात्मगुणसंपत् शीलम् । तदुक्तं महाभारते - ‘तत्तत्कर्म तथा कुर्यात् येन श्लाघ्येत संसदि । शीलं समासेनैतत्ते कथितं कुरुनन्दन’ इति । अत्रोदाहरणं - युधिष्ठिरस्य यक्षरूपधारिधर्मात् स्वसोदरानादरेण नकुलजीवितवरणम् । तद्विदामाचारश्चैव धर्ममूलम् । धर्माधिकारनिमित्तं शौचाचमनादिलक्षणक्रियाविशेष आचारः । साधूनां परमधार्मिकाणाम् । आत्मनस्तुष्टिः- मनसो रुचिः, सा च धर्ममूलम् । प्रमाणान्तरागोचरत्वेन धर्मं प्रति संशयिते ष्वर्थेषु यो धर्मत्वेन मनसे रोचते स धर्म इत्यर्थः ॥

### நன்னடைமுறை

ஸாதுக்கள் நன்கு மதிக்கின்ற ஆத்மகுணம் சீலமாகும். மஹாபாரதத்தில் - எந்த செயலை எப்படிச் செய்தால் ஸபையில் புகழப்படுவானோ. அதை அப்படிச் செய்யவேண்டும். குருவம்சத்தை மகிழ்விப்பவனே, சுருக்கமாய் சீலம் பற்றியுரைத்தேன் - உதாரணம்-

*யதிஷ்டிரர், யக்ஷரூபம் தரித்த தர்மதேவனிடமிருந்து, தன் கூடப்பிறந்தவர்களையும் ஆதரியாமல் நகுலனைப் பிழைப்பிக்க வரம் வேண்டுதல். வேதவித்துக்களின் ஆசாரமும் தர்மமூலம். சௌசம், ஆசமனம் முதலிய செய்கைகளே ஆசாரமெனப்படும். ஸாதுக்களின் மனஸ்துஷ்டியும் தர்மமூலம். வேறு ப்ரமாணம் கிடைக்காததால் ஸம்சயான விஷயங்களில், ஸாதுக்களின் மனதிற்கு எது தர்மமென ருசிக்கின்றதோ அதுவே தர்மமாம்.*

यद्यप्यप्रत्यक्षो वेदो मूलभूतोऽस्मदादिभिर्नोपलभ्यते तथाऽपि मन्वादय उपलब्धवन्त इत्यनुमीयते । यथाऽऽहापस्तम्बः — 'तेषामुत्सन्नाः पाठाः प्रयोगादनुमीयन्त' इति। तथा च प्रत्यक्षो वेदस्तेषां धर्मप्रमाणम् । अन्येषां वेदाः स्मृत्यादिकं च प्रमाणमित्यर्थः । याज्ञवल्क्यश्च — 'श्रुतिस्स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मनः। सम्यक्सङ्कल्पजः कामो धर्ममूलमिदं स्मृतमिति ॥ सम्यक्सङ्कल्पजः कामः शास्त्राविरुद्धः । यथा 'स्वर्गकामेन मया ज्योतिष्टोमः कर्तव्य इत्यादिः ॥ व्यासः - 'धर्ममूलं वेदमाहुर्ग्रन्थराशिमकृत्रिमम् । तद्विदां स्मृतिशीले च साध्वाचारं मनःप्रियम् इति । हारीतः - 'वेदाः प्रमाणं स्मृतयः प्रमाणं धर्मार्थयुक्तं वचनं प्रमाणम् । यस्य प्रमाणं न भवेत् प्रमाणं कस्तस्य कुर्याद्वचनं प्रमाणमिति ॥ आपस्तम्बः 'धर्मज्ञसमयः प्रमाणं वेदाश्च' इति ॥ गौतमः - 'वेदो धर्ममूलं तद्विदां च स्मृतिशीले' इति । तेन नित्यनिर्दोषवेदमूलत्वादुपनयनादिरेव धर्मः । न शाक्यादिकल्पितागम-मूलकचैत्यवन्दनकेशोल्लुञ्छनादिरिति ॥

*ப்ரத்யக்ஷமில்லாத வேதபாகம் நம்மைப் போன்றவர்களால் அறியப்படாவிடினும், மன்வாதிகள் அதை அறிந்தனரென்று ஊஹிக்கப்படுகிறது. ஆபஸ்தம்பர் - ''மறைந்துபோன வேதவாக்யங்களின் பாடங்கள் பிரயோகத்தினால் அனுமானிக்கப்படுகின்றன'' என*

ஆகவே அவர்களுக்குப் பிரத்தியக்ஷமான வேதம் தர்மவிஷயத்தில் பிரமாணம். மற்றவர்களுக்கு வேதமும் ஸ்மிருதி முதலியவைகளும் பிரமாணமென்றர்த்தம்.

யாஜ்ஞவல்க்யர்- "சுருதி, ஸ்மிருதி, ஸதாசாரம் தன தாத்மாவுக்குப் பிரியமானது, நல்ல எண்ணத்திலுதித்த விருப்பம், இவைகள் தர்மப்ரமாணங்கள்". இங்கு விருப்பமென்பது சாஸ்த்ரவிரோதமின்றி எழும் விருப்பம். 'ஸ்வர்கத்தை விரும்பும் என்னல் ஜ்யோதிஷ்டோமம் செய்யத்தகுந்தது' என்பது போன்றது. வியாஸர்- 'ஒருவருமியற்ருத கிரந்தராசியான வேதம், அதையறிந்தவர்களின் ஸ்மிருதி சீலம், ஸாதுக்களின் ஆசாரம், மனத்திற்குப் பிரியமானது இவைகளைத் தர்மமூலமெனச் சொல்லுகிருர்கள்.' ஹாரீதர் - "வேதங்கள், ஸ்மிருதிகள், தர்மார்த்தங்களை அனுஸரித்த வசனம், இவைகள் தர்மப்ரமாணங்கள். இவைகள் எவனுக்கு ப்ரமாணமாவதில்லையோ, அவன் சொல்லை யார் ப்ரமாணமாகக் கொள்வார் ?" ஆபஸ்தம்பர் - "தர்மஜ்ஞர்களின் ஸமயமும், வேதங்களும் ப்ரமாணங்கள்." கௌதமர் - "வேதமும், வேதமறிந்தவர்களின் ஸ்மிருதி, சீலம், இவைகளும் தர்மப்ரமாணங்கள்." ஆகையால், நித்யமாயும், நிர்தோஷமாயுமுள்ள வேதத்தை மூலமாகக் கொண்டமையால் உபநயனம் முதலியவையே தர்மம், சாக்யர் முதலியவர்களால் கற்பிக்கப்பட்ட ஆகமங்களை மூலமாயுடைய சைத்யவந்தனம், கேசங்களைப்பிடுங்கி எடுத்தல் தர்மமல்ல.

## स्मृतेः प्रामाण्यम्

तत्र शङ्खः 'वेदमूलाः स्मृतयः' इति। मरीचिः - 'दुर्बोधा वैदिकाः शब्दाः प्रकीर्णत्वाच्च ये खिलाः । तत्रैत एव दृष्टार्थाः स्मृतितन्त्रे प्रतिष्ठिताः' इति । मनुः - 'श्रुतिं पश्यन्ति मुनयः स्मरन्ति च तथा स्मृतिम्। तस्मात् प्रमाणमुभयं प्रमाणैः प्रमितं भुवि ।। योऽवमन्येत ते मूले

हेतुशास्त्राश्रयाद्द्विजः । स साधुभिः बहिष्कार्यो नास्तिको वेदनिन्दकः' इति - । हारीतः - 'न यस्य वेदा न च धर्मशास्त्रं न वृद्धवाक्यं हि भवेत् प्रमाणम् । सोऽधर्मकृद्दृष्टिहतो दुरात्मा नात्माऽपि तस्येह भवेत् प्रमाणम्' इति ॥ देवलः - मन्वादयः प्रयोक्तारो धर्मशास्त्रस्य कीर्तिताः । तत्प्रयुक्तप्रयोक्तारो गृह्यकारास्तु मन्त्रतः' इति ॥ अङ्गिराः - 'प्रमाणानि प्रमाणज्ञैः परिपाल्यानि यत्नतः। सीदन्ति हि प्रमाणानि प्रमाणैरव्यवस्थितैरिति ॥

### ஸ்மிருதி பிரமாணம்

சங்கர் - 'ஸ்மிருதிகள் வேதத்தையே மூலமாக உடையவைகள்.' மரீசி - 'பல சாகைகளிலிருப்பதால் கிலங்களாயும், ஸுலபமாய் அறியமுடியாதவைகளுமான வைதிகசப்தங்கள் எவையோ அவைகளே, முனிவர்களால் தெளிவாக அர்த்தங்களுடையவைகளாய் ஸ்மிருதிகளில் அமைக்கப்பட்டிருக்கின்றன'. மனு - 'இருஷிகள் வேதத்தை நேராகப்பார்த்து ஸ்மிருதியைச் செய்கின்றனர். ஆகையால் அவ்விரண்டும் உலகில் ப்ரமாணம். அந்த இரண்டையும் ஹேதுசாஸ்த்ரத்தை ஆச்ரயித்து எவன் அவமதிப்பானே, அந்த வேதநிந்தகனை நாஸ்திகனை ஸாதுக்கள் பஹிஷ்கரிக்க வேண்டும்'. ஹாரீதர் - 'வேதங்கள், தர்மசாஸ்த்ரம், பெரியோர் வாக்யம், இவைகள் எவனுக்குப் ப்ரமாணமாகவில்லையோ, அவன் பாபி, குருடன், துராத்மா, அவனுக்குத்தனது ஆத்மாவும் ப்ரமாணமாகாது'. தேவலர் - மனு முதலியவர்கள் தர்மசாஸ்த்ரங்களை இயற்றினர்கள், கிருஹ்யகாரர்களோ அத்தர்மசாஸ்த்ரங்களில் சொல்லியவைகளை மந்த்ரங்களுடன் வெளியிட்டனர். அங்கிரஸ் - ப்ரமாணங்களை அறிந்தவர்கள் ப்ரமாணங்களைக் கவனத்துடன் பரிபாலிக்க வேண்டும். இல்லாவிடில் வியவஸ்தையற்ற ப்ரமாணங்களால் நல்ல ப்ரமாணங்கள் சீர் குலையும்.

धर्मनिरूपणम्

'वाक्कर्मजन्योऽभ्युदयनिश्रेयसहेतुः अपूर्वाख्य आत्मगुणो धर्म इति हरदत्तः ॥ तत्र मनुः - 'विद्वद्भिः सेवितः सद्भिर्नित्यमद्वेषरागिभिः । हृदयेनाभ्यनुज्ञातो यस्तं धर्मं व्यवस्यत इति । विद्वद्भिः वेदार्थविद्भिः, अद्वेषरागिभिः सद्भिः धर्मः नित्यं सेवितः धर्मत्वेन नित्यमनुष्ठितः, न शोकमोहादिना कदाचित्केनचिन्निमित्तेन । किञ्च हृदयेनाभ्यनुज्ञातः इदमेव श्रेय इति स्वारस्ययुक्तेन हृदयेन स्वीकृतः, एवंभूतो योऽर्थः, तं धर्मं व्यवस्यत - हे महर्षयः निश्चिनुतेत्यर्थः ॥ स एव 'आचारः प्रथमो धर्मः श्रुत्यक्तः स्मार्त एव च । तस्मादस्मिंस्त्रये युक्तो नित्यं स्यादात्मवान् द्विजः' इति । त्रये श्रौतस्मार्ताचारेष्वित्यर्थः ॥ याज्ञवल्क्यः - 'देशे काल उपायेन द्रव्यं श्रद्धासमन्वितम् । पात्रे प्रदीयते यत्तत् सकलं धर्मलक्षणम्' इति ॥ देशः कुरुक्षेत्रादिः, कालः - उपरागादिः, उपायः - शास्त्रोक्तेतिकर्तव्यताकलापः, द्रव्यं गवादि, श्रद्धा - आस्तिक्यबुद्धिः, तदन्वितं यथा भवति तथा पात्रे प्रदीयते यत्, तत् धर्मस्योत्पादकम् । किमेतावदेव धर्मस्योत्पादकम् नेत्याह सकलमिति ॥ अन्यदपि यागादि तत् सकलं धर्मस्य कारणम् ॥

தர்ம நிருபணம்

'வாக்கர்மங்களாலுண்டாவதும், இவ்வுலகம் பரவுலகம் இவைகளில் சுகத்திற்குக்காரணமானதும், அபூர்வமெனப் பெயருள்ளதுமான ஆத்மகுணம் தர்மமெனப்படும் என்றார் ஹரதத்தர். மனு - வேதவித்துக்களாயும், த்வேஷராகங்களற்றவர்களாயு முள்ள ஸாதுக்களால் எப்பொழுதும் ஸேவிக்கப்பட்டதும், மனமொப்பி ஒப்புக்கொள்ளப்பட்டதுமானது எதுவோ அதைத் தர்மமென நிச்சயிப்பீர். ஸாதுக்களின் ஆசாரமும், வேதங்களின் சொல்லப்பட்டதும், ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டதும் தர்மமெனப்படும். ஆகையால்

நன்மையை விரும்பும் த்விஜன் இம்மூன்றிலும் பற்றுள்ளவனாயிருக்கவேண்டும். யாஜ்ஞவல்க்யர் - குருக்ஷேத்ரம் முதலான புண்யக்ஷேத்ரங்களிலும், உபராகம் முதலிய புண்யகாலங்களிலும், விதிப்படி ஆஸ்திக்யபுத்தியுடன் நற்பாத்திரத்தில் தானம் கொடுப்பதும், யாகம் முதலியவும் தர்மத்திற்குக்காரணம்.

विश्वामित्रः - 'यमार्याः क्रियमाणं हि शंसन्त्यागमवेदिनः । स धर्मो यं विगर्हन्ते तमधर्मं प्रचक्षते' इति ॥ व्यासः - 'सत्यं दमस्तपश्शौचं सन्तोषो ह्रीः क्षमाऽऽर्जवम् । ज्ञानं शमो दया ध्यानमेष धर्मः सनातनः इति ॥ बृहस्पतिः - 'ज्ञानं यज्ञं सतां पूजा वेदधारणमार्जवम् । एष धर्मः परो ज्ञेयः फलवान् प्रेत्य चेह च ॥ भोगेष्वसक्तिः सततं तथैवात्मावलोकनम् । श्रेयः परं मनुष्याणां प्राह पञ्चशिखो मुनिः' इति ॥ अपरं धर्ममाह याज्ञवल्क्यः - 'इज्याचारदमाहिंसादानस्वाध्याय-कर्मणाम् । अयन्तु परमो धर्मो यद्योगेनात्मदर्शनम् इति ॥ योगेन - चित्तवृत्तिनिरोधेन ॥ आपस्तम्बः - 'न धर्माधर्मौ चरत आवं स्व इति न देवा न गन्धर्वा न पितर इत्याचक्षतेऽयं धर्मोऽयमधर्म इति यस्त्वार्याः क्रियमाणं प्रशंसन्ति स धर्मो यद्गर्हन्ते सोऽधर्म' इति ॥ आवमिति छान्दसं रूपं, आवामित्यर्थः । यदि हि धर्माधर्मौ विग्रहवन्तौ आवां स्व इति ब्रुवाणौ चरेतां, यदि वा देवादयः प्रकृष्टज्ञाना ब्रूयुः इमौ धर्माधर्माविति, तदोपलब्धिः स्यात् । तदभावात् शिष्टा यत् प्रशंसन्ति स धर्मः, यत् गर्हन्ते सोऽधर्म इत्यर्थः ॥

விச்வாமித்ரர் - வேதமறிந்த பெரியோர்கள், எதைச்செய்தால் புகழ்கின்றனரோ அதைத் தர்மமென்றும், எதைச்செய்தால் நிந்திக்கின்றனரோ அதை அதர்ம மென்றும் சொல்லுகிறார்கள். வ்யாஸர் - உண்மை பேசுதல், இந்த்ரியங்களினடக்கம், தவம், தூய்மை, ஸந்தோஷம், வெட்கம், பொறுமை, நேர்மை, ஜ்ஞானம், மன

தினடக்கம், தயை, த்யானம் இவை ஸநாதநதர்ம மெனப்படும். பிருஹஸ்பதி - ஞானம், யாகம், ஸத்துக்களைப் பூஜித்தல், வேதத்தைத் தரித்தல், கபடமின்மை, எனுமிவை இஹபரவுலகங்களில் பலனையளிக்கும் உயர்ந்த தர்மமாகவறியத்தக்கது. எப்பொழுதும் போகங்களில் பற்றில்லாமையும், ஆத்மஜ்ஞானமும், மனிதர்களுக்கு மிகவும் நன்மையென பஞ்சசிகரெனும் முனிவர் சொல்லுகிறார். யாஜ்ஞவல்க்யர் - யாகம், ஆசாரம், தமம், அஹிம்ஸை, தானம், அத்யயனம், எனும் இக்கர்மங்களைவிட, யோகத்தினால் (சித்திவிருத்தி நிரோதத்தால்) ஆத்மாவைத் தர்சிப்பதே பெரிய தர்மம். ஆபஸ்தம்பர் - தர்மாதர்மங்கள் சரீரத்துடன் நாங்கள் தர்மாதர்மங்கள் என்று சொல்லிக்கொண்டு ஸஞ்சரிப்ப தில்லை, தேவர்கள், கந்தர்வர்கள், பிதுருக்களாவது இது தர்மம். இது அதர்மமென்று நேரில் சுட்டிக்காட்டுவதில்லை. ஆகையால் பெரியோர் எக்கார்யம் செய்தால் புகழ்கின்றரோ அது தர்மம். எதை நிந்திக்கின்றனரோ அது அதர்மம்.

## शिष्टलक्षणम्

तत्र बोधायनः - 'शिष्टाः खलु विगतमत्सरा निरहङ्काराः कुम्भीधान्या अलोलुपा डम्भदर्पलोभमोहक्रोधवर्जिताः' इति । स एव - 'धर्मशास्त्ररथारूढा वेदखड्गधरा द्विजाः । क्रीडार्थमपि यं ब्रूयुः स धर्मः परमः स्मृतः' इति ।। याज्ञवल्क्यः - 'चत्वारो वेदधर्मज्ञाः पर्षत्त्रैविद्यमेव वा । सा ब्रूते यं स धर्मः स्यादेको वाऽध्यात्मवित्तमः' इति ।। तिस्रो विद्या अधीयन्त इति त्रैविद्याः । तेषां समूहः त्रैविद्यमित्यर्थः ।। पराशरः - 'चत्वारो वा त्रयो वाऽपि यं ब्रूयुः वेदपारगाः । स धर्म इति विज्ञेयो नेतरैस्तु सहस्रशः' इति ।। आपस्तम्बः — 'सर्वजनपदेष्वेकान्तसमाहितमार्याणां वृत्तं सम्यग्विनीतानां वृद्धानां आत्मवतां अलोलुपानां अदाम्भिकानां वृत्तसादृश्यं भजेतैवमुभौ लोकावभिजयति' इति ।। विनयादिगुणोपेतानां

आर्याणां सर्वजनपदेषु यदेकान्तेन अव्यभिचारेण समाहितं अनुष्ठितं वृत्तमनुष्ठानं, न मातुलसुतापरिणयवत् कतिपयविषयम्, तद्वृत्तसादृश्यं भजेत, एवं कुर्वन्नुभौ लोकावभिजयतीत्यर्थः ।।

### சிஷ்ட லக்ஷணம்

போதாயனர் - பொறாமை, அஹங்காரம், ஆசை, டம்பம், திமிர், பேராசை, மோஹம், க்ரோதம் இவைகளற்றவர்களாயும், தேவையான தான்யமுடையவர்களாயுமுள்ளவர்கள் சிஷ்டர்களெனப் படுவர். அவரே - தர்ம சாஸ்த்ரமென்னும் ரதத்திலேறியவர்களும், வேதமென்னும் கத்தியைத் தரித்தவர்களுமான ப்ராம்மணர்கள் விளையாட்டிற்காகவாவது எதைச் சொல்வார்களோ அது உயர்ந்த தர்மமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யாக்ஞவல்க்யர் - வேதம், தர்மசாஸ்த்ரம் இவைகளை அறிந்த நாலு பிராம்மணர்களின் கூட்டம், அல்லது மூன்று வித்யைகளையும் தர்மசாஸ்த்ரத்தையுமறிந்த ப்ராம்மணர்களின் கூட்டம் பரிஷத் எனப்படும். அந்தப் பரிஷத் எதைச் சொல்லுகின்றதோ அது தர்மமாகும். அல்லது, ஆத்மக்ஞானியும், தர்மசாஸ்த்ரஜ்ஞனுமான ஒரு ப்ராம்மணன் சொல்லுவதும், தர்மமாகும். பராசரர் - வேதம் முழுவதுமறிந்த நால்வர் அல்லது மூவர் எதைச் சொல்வார்களோ அது தர்மமென அறியத்தக்கது. வேதமறியாதவர் ஆயிரம் பேர்கள் சொன்னாலும் அது தர்மமாகாது. ஆபஸ்தம்பர் - நல்லவணக்கம், இந்த்ரியஜயம் இவைகளுள்ளவர்களும், கருமித்தனம், டம்பம் இல்லாதவர்களுமான பெரியோர், மாமன்மகளை மணப்பது போன்றவைகளைத் தவிர்த்து ஸகல தேசங்களிலும் ஒரேவிதமாய் அனுஷ்டிக்கப்பட்ட ஆசாரத்தை அனுஷ்டிக்க வேண்டும். இவ்வித மனுஷ்டிப்பவன் இகபரலோகங்க ளிரண்டையும் தன் வசமாக்கிக்கொள்கிறான்.

### स्वस्वधर्मानुष्ठाने फलनिरूपणम्

स एव — 'सर्ववर्णानां स्वधर्मानुष्ठाने परमपरिमितं सुखं, ततः परिवृत्तौ कर्मफलशेषेण जातिं रूपं वर्णं बलं मेधां प्रज्ञां द्रव्याणि धर्मानुष्ठानमिति प्रतिपद्यते तच्चक्रवदुभयोर्लोकयोः सुख एव वर्तत' इति ॥ अस्यार्थः — 'सर्वेषां वर्णानां वर्णाश्रमप्रयुक्तधर्मानुष्ठाने परं अपरिमितं उत्कृष्टमक्षय्यं सुखं स्वर्गाख्यं भवति। न केवलमेतावन्मात्रम्। किं तर्हि? ततः परिवृत्तौ - पुनर्जन्मनि कर्मशेषेण अभुक्तांशेन आभिजात्यादीनि प्रतिपद्यते। तस्माच्चक्रवत् उभयोर्लोकयोः - इह चामुत्र च, सुख एव वर्तते न जातुचित् दुःख इति ॥ तैत्तिरीयोपनिषदि श्रूयते — 'धर्म इति धर्मेण सर्वमिदं परिगृहीतं धर्मान्नातिदुश्चरं तस्माद्धर्मे रमन्त' इति। धर्मो नाम नित्यनैमित्तिकादि श्रौतं स्मार्तं च कर्म। तेन धर्मेण सर्वमाध्यात्मिकादिभेदभिन्नमिदं जगत् परिगृहीतं स्थितम्। तस्माद्धर्मात्परं दुश्चरं नास्ति। वैदिकैर्मुमुक्षुभिः श्रेयोर्थिभिश्च धर्म एव कर्तव्यः। तस्माद्धर्मे रमन्त इत्यर्थः ॥ तत्रैव पुनः श्रूयते - 'धर्मो विश्वस्य जगतः प्रतिष्ठा लोके धर्मिष्ठं प्रजा उपसर्पन्ति धर्मेण पापमपनुदति धर्मे सर्वं प्रतिष्ठितं तस्माद्धर्मं परमं वदन्ति इति ॥ अयमर्थः - 'धर्मः पूर्वोक्तः विश्वस्य जगतः प्रतिष्ठा -प्रतितिष्ठत्यनेनेति प्रतिष्ठा। श्रौतस्मार्तकर्मभिः समस्तं जगत् ध्रियत इत्यर्थः। लोके धर्मिष्ठं अतिशयेन धर्मानुष्ठातारं, प्रजाः धर्मावाप्त्यर्थं धर्मोपकरणार्थं वा उपसर्पन्ति - उपगच्छन्ति। धर्मेण विहिताकरणप्रतिषिद्धसेवननिमित्तं पापमपनुदति। धर्मे सर्वं प्रतिष्ठितं, इतरथा बाधितं स्यात्। तस्माद्धर्मं परमं वदन्ति धर्मविद इति ॥ चन्द्रिकायाम् - 'वर्णत्वमेकमाश्रित्य यो धर्मः सम्प्रवर्तते। वर्णधर्मःस उक्तस्तु यथोपनयनं किल ॥ तथैवाश्रममाश्रित्य योऽधिकारः प्रवर्तते। स एवाश्रमधर्मः स्यात् भिक्षादण्डादिको यथा। वर्णत्वमाश्रमत्वञ्च योऽधिकृत्य प्रवर्तते। स वर्णाश्रमधर्मस्तु यथा मौञ्जी तु मेखला' इति।

मनुः — धर्मं शनैः सञ्चिनुयाद्वल्मीकमिव पुत्तिकाः । परलोकसहायार्थं सर्वभूतान्यपीडयन् ।। नामुत्र हि सहायार्थं पिता माता च तिष्ठतः । न पुत्रदारा न ज्ञातिर्धर्मस्तिष्ठति केवलः ।। एकः प्रजायते जन्तुरेक एव प्रमीयते । एकोऽनुभुङ्क्ते सुकृतमेक एव च दुष्कृतम् ।। मृतं शरीरमुत्सृज्य काष्ठलोष्टसमं क्षितौ । विमुखा बान्धवा यान्ति धर्मस्तमनुगच्छति ।। तस्माद्धर्मं सहायार्थं नित्यं सञ्चिनुयाच्छनैः । धर्मेण हि सहायेन तमस्तरति दुस्तरम् ।। धर्मप्रधानं पुरुषं तपसा हतकिल्बिषम् । परलोकं नयत्याशु भास्वन्तं खशरीरिणम् ।। श्रुतिस्मृत्युदितं सम्यङ्निबद्धं स्वेषु कर्मसु । धर्ममूलं निषेवेत सदाचारमतन्द्रितः' इति ।। धर्मस्य मूलं धर्ममूलम् ।। धर्मस्याचाराधीनत्वात् ।।

### தன் தன் தர்மானுஷ்டானபலன்

ஆபஸ்தம்பர் - ஸகலவர்ணங்களுக்கும் தமக்குரிய *தர்மங்களை அனுஷ்டிப்பதில் உயர்ந்ததும் அக்ஷயமுமான ஸ்வர்க்கமெனும் ஸுகமுண்டாகின்றது. மறுபிறப்பிலும் புண்யகர்மசேஷத்தால் உயர்ந்த ஜாதி, ரூபம், வர்ணம், பலம், மேதை, பிரக்ஞை, திரவியங்கள், தர்மானுஷ்டானமிவை போன்றவைகளையுமடைகிறான். ஆகையால் சக்கரம்போல் இரண்டுலகங்களிலும் ஸுகத்திலேயே இருக்கிறான். தைத்திரீயோபநிஷத் - தர்மத்தினால் இந்த ஸகல ஜகத்தும் நிலைத்திருக்கின்றது. தர்மத்தைவிட அனுஷ்டிக்க எளிதானதில்லை. ஆகையால் ஸத்துக்கள் தர்மத்தில் ரமிக்கிறார்கள். (1) அதிலேயே - தர்மமே ஸகல ஜகத்திற்கும் ப்ரதிஷ்டை, உலகில் தர்மிஷ்டனையே ஜனங்கள் நாடிச்செல்கின்றனர். விஹிதகர்மானுஷ்டான தர்மத்தால் தவிர்க்கத்தக்க கர்மஜன்ய பாபத்தைப் போக்குகிறான். ஸகலமும் தர்மத்திலிருக்கின்றது. ஆகையால் தர்மஜ்ஞர்கள் தர்மத்தைப் பெரிதாய்ச் சொல்லுகின்றனர்.* சந்த்ரிகையில் *- வர்ணமொன்றை மட்டில் ஆச்ரயித்து எந்தத்தர்மம்*

நடைபெறுமோ அது வர்ண தர்மம்; உபநயனம் போன்றது. ஆச்ரமத்தை மட்டிலாச்ரயித்து நடப்பது ஆச்ரம தர்மம்; பிக்ஷை தண்டம் போன்றது. வர்ணம் ஆச்ரமம் இரண்டையுமாச்ரயித்து ப்ரவர்த்தித்த தர்மம் வர்ணாச்ரமதர்மம்; மௌஞ்சியான மேகலை போன்றது. மனு - பரலோகத்தில் ஸஹாயத்திற்காக ஸகல ப்ராணிகளையும் பீடிக்காமல், கரையான் புற்றைச் சேர்ப்பது போல் மெதுவாகத் தர்மத்தைச் சேகரிக்கவேண்டும். பரலோகத்தில் ஸஹாயத்திற்காகப் பிதா, மாதா, புத்ரன், மனைவி, ஜ்ஞாதி ஒருவரும் இருப்பதில்லை. தர்மமொன்றே இருக்கின்றது. பிராணியானவன் ஒருவனாகவே பிறக்கிறான்; ஒருவனாகவே இறக்கிறான்; ஒருவனாகவே ஸ்வர்க்கத்தை அனுபவிக்கிறான்; ஒருவனாகவே நரகத்தை அனுபவிக்கிறான். பிராணனில்லாத சரீரத்தைக் கட்டை மண்கட்டி இவைகளுக்குச் சமமாகப் பூமியில் விட்டு விட்டுப் பந்துக்கள் திரும்பிப்பாராமல் போகிறார்கள். தர்மமொன்றே இறந்தவனைத் தொடர்ந்து செல்லுகின்றது. ஆகையால், ஸஹாயத்திற்காக எப்பொழுதும் கொஞ்சம் கொஞ்சமாகத் தர்மத்தைச் சேர்க்கவேண்டும். தர்மமென்னும் ஸஹாயத்தினால் தாண்டமுடியாத நரகாதி துக்கத்தைத் தாண்டுகிறான். தர்மத்தையே அனுஷ்டிப்பவனும், தவத்தினால் பாபத்தைப் போக்கியவனும், ப்ரகாசமுடையவனும், ப்ரம்மஸ்வரூபியுமான புருஷனை, தர்மமே சீக்கிரம் உயர்ந்த உலகத்தை அடைவிக்கின்றது. ச்ருதி ஸ்மிருதிகளால் சொல்லப்பட்டதும் தனது கர்மங்களில் ஸம்பந்தித்ததும், தர்மத்திற்கு மூலமுமான ஸதாசாரத்தைச் சோம்பலற்றவனாய் ஸேவிக்கவேண்டும்.

## आचारप्रशंसा

स एव (मनुः)- 'एवमाचारतो दृष्ट्वा धर्मस्य मुनयो गतिम्। सर्वस्य तपसो मूलमाचारं जगृहुः परम् ॥ आचारात् प्रच्युतो विप्रो न वेदफलमश्नुते। आचारेण तु संयुक्तः संपूर्णफलभाग्भवेत् ॥ आचाराल्लभ्यते

ह्यायुः आचारादीप्सिताः प्रजाः । आचाराद्धनमक्षय्यमाचारो हन्त्य-लक्षणम् ।। दुराचारो हि पुरुषो लोके भवति निन्दितः । दुःखभागी च सततं व्याधितोऽल्पायुरेव च ।। सर्वलक्षणहीनोऽपि यस्सदाचारवान्नरः । श्रद्दधानोऽनसूयुश्च शतं वर्षाणि जीवति इति ।।

### ஆசாரத்தின் பெருமை

மனு - இவ்விதம் ஆசாரத்தால் தர்மத்தை அடைவதை முனிவர் தெரிந்து ஸகல தபஸ்ஸுக்கும் மூலமான ஆசாரத்தையே ஏற்றனர். ஆசாரத்தினின்றும் நழுவிய ப்ராம்மணன் வேதத்திற்கூறிய பலனையடைவதில்லை. ஆசாரத்தினால் ஆயுளும், இஷ்டமான பிரஜைகளும், குறைவற்ற தனமும், அடையப்படுகின்றன. தேஹத்திலுள்ள துர்லக்ஷணத்திலுண்டாகும் துஷ்டபலத்தையும் ஆசாரம் போக்குகின்றது. துராசாரமுடைய புருஷன் உலகில் நிந்திக்கப்பட்டவனும், எப்பொழுதும் துன்புற்றவனும் வியாதியுடையவனும், அல்பாயுஸ்ஸாயுமாகிறான். ஸர்வலக்ஷணங்களுள் ஒன்றுமில்லாதவனானாலும், ப்ராம்மணன் ஸதாசாரமுடையவனும், ச்ரத்தையுடைவனும், அஸூயையற்றவனுமிருந்தால் நூறுவருஷங்கள் ஜீவித்திருப்பான்.

वसिष्ठः - 'आचारहीनं न पुनन्ति वेदा यद्यप्यधीतास्सह षड्भिरङ्गैः । छन्दांस्येनं मृत्युकाले त्यजन्ति नीडं शकुन्ता इव जातपक्षाः।। कपालस्थं यथा तोयं श्वदृतौ च यथा पयः । दुष्टं स्यात् स्थानदोषेण वृत्तहीने तथा श्रुतम् ।। ब्राह्मणस्य तु देहोऽयं नोपभोगाय कल्पते । इह क्लेशाय महते प्रेत्यानन्तसुखायचे' ति ।।

வஸிஷ்டர் - வேதங்கள் ஆறு அங்கங்களுடன் கற்கப்பட்டிருந்தாலும் ஆசாரமற்றவனைச் சுத்தப்படுத்துவதில்லை. இறகு முளைத்த பறவைகள் கூட்டை விட்டுவிடுவதுபோல் வேதங்கள் அந்திய காலத்தில்

இவனை விட்டுவிடுகின்றன. கபாலத்திலுள்ள ஜலம்போலும், நாய்த்தோற்பையிலுள்ள பால்போலும், ஆசாரமற்றவனிடத்திலுள்ள வேதமும் ஆச்ரய தோஷத்தால் தானும் துஷ்டமாகிறது. பிராம்மணனின் இந்தத் தேஹம் இவ்வுலகிலுள்ள அல்ப போகத்திற்காக ஏற்படுவதில்லை. இவ்வுலகில் மிகுந்த க்லேசத்தை யடைவதற்கும் பரலோகத்தில் அனந்தமான ஸுகத்தை யடைவதற்காகவுமேற்படுகிறது.

पराशरः— 'चतुर्णामपि वर्णानामाचारो धर्मपालकः । आचारभ्रष्ट देहानां भवेद्धर्मः पराङ्मुखः' इति ॥ 'शिष्टानामभिमतो दयादाक्षिण्यादि-युक्तो वृत्तविशेष आचारः' इति माधवीये ॥ बृहस्पतिः — 'शौर्यवीर्यार्थरहितस्तपोज्ञानविवर्जितः' ॥ शौर्यादिरहितः क्षत्रिय पुत्रः, अर्थरहितो वैश्यपुत्रः, तपोज्ञानाचाररहितो ब्राह्मणपुत्र इति विवेकः ॥ भगवान् — 'वर्णानामाश्रमाणां च या मर्यादा मया कृता । तां ये समनुवर्तन्ते प्रसादस्तेषु सम्भवेत्' इति ॥ आश्वमेधिके — 'श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा यस्तामुल्लङ्घ्य वर्तते । आज्ञाच्छेदी मम द्रोही मद्भक्तोऽपि न वैष्णव' इति ॥ स्मृत्यन्तरे — 'यथेक्षुहेतोस्सलिलं धर्मपथेन वर्तयन् यशश्च कामांश्च वसूनि सोऽश्नुत' इति ॥

பராசரர் - நான்கு வர்ணங்களின் தர்மங்களையும் ஆசாரமே பரிபாலிக்கின்றது. ஆசாரமில்லாத தேஹமுடையவர்க்கு தர்மமும் பராங்முகமாய்ப் போகும். சிஷ்டர்களால் அங்கீகரிக்கப்பட்டதும், தயை, தாக்ஷிண்யம் முதலியவைகளோடு கூடியதுமான ஓர் நன்னடத்தையே ஆசாரமென மாதவீயத்தில் கூறியுள்ளார். பிருஹஸ்பதி - சௌர்யம் வீர்யமிவையில்லாத க்ஷத்ரியனும், பணமில்லாத வைச்யனும், தபஸ், ஜ்ஞானம், ஆசாரம் இவைகளில்லாத பிராம்மணனும் தாயின் மலத்திற்குச் சமானமாகச் சொல்லப்படுகின்றார்கள். பகவான் - வர்ணங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும் என்னால் செய்யப்பட்ட வரையை

எவர்கள் அனுஸரிக்கின்றார்களோ அவர்களிடத்தில் என் அனுக்ரஹமுண்டாகும். அச்வமேதபர்வத்தில் -சுருதியும் ஸ்மிருதியும் எனது கட்டளையேயாகும். எவன் அதை மீறி நடக்கின்றானோ, அவன் எனது கட்டளையை மீறியவனாத லால் எனக்குத்துரோஹம் செய்தவன். என் பக்தனானாலும் அவன் வைஷ்ணவனல்லன். வேறுஸ்மிருதியில் -கரும்பிற்காக இறைக்கப்பட்ட தண்ணீர் எப்படி (அதனுடனுள்ள) புற்களையும், கொடிகளையும் நனைக்கிறதோ, அவ்விதம் தர்மமார்க்கத்தோடு இருக்கும் மனிதன் கீர்த்தி காமங்கள், தனங்கள் இவைகளையு மனுபவிக்கின்றான்.

नारदः - 'धिग्जन्माचाररहितं जन्म धिङ्गानवर्जितम् । शूद्रेऽपि दृश्यते वृत्तं ब्राह्मणे न तु दृश्यते । शूद्रोऽपि ब्राह्मणो ज्ञेयो ब्राह्मणः शूद्र एव सः ।। हरभक्तिपरो वाऽपि हरिध्यानपरोऽपि वा । भ्रष्टो यस्त्वाश्रमाचारात् पतितस्सोऽभिधीयते । वेदो वा हरिभक्तिर्वा भक्तिर्वाऽपि महेश्वरे । स्वाचारात् पतितं मूढं न पुनाति द्विजोत्तमम् ।। पुण्यक्षेत्राभिगमनं पुण्यतीर्थनिषेवणम् । यज्ञो वा विविधो ब्रह्मन् त्यक्ताचारं न रक्षति ।। आचारात् प्राप्यते स्वर्ग आचारात् प्राप्यते सुखम् । आचारात् प्राप्यते मोक्ष आचारात् किं न सिध्यति' इति ।।

நாரதர் - ஆசாரமில்லாததும், மானமில்லாததுமான ஜன்மத்தைச் சுடவேண்டும். சூத்ரனிடத்திலும் ஆசாரம் காணப்படுகிறது. பிராம்மணனிடத்தில் காணப்படவில்லை (எனில்) சூத்ரனும் பிராம்மணனாவான். பிராம்மணனும் சூத்ரனாவான். சிவபக்தனானாலும், விஷ்ணுபக்தனானாலும், எவன் தனது ஆச்ரமாசாரத்தினின்றும் தவறியவனோ அவன் பதிதனெனப்படுவான். வேதமும், விஷ்ணுபக்தியும், சிவபக்தியும், ஆசாரமற்ற மூடனைச் சுத்தனாக்குவதில்லை. புண்யக்ஷேத்ரங்களுக்குச் செல்வதும், புண்யதீர்த்தங்களைச் சேவிப்பதும், அநேகவிதமான யாகமும் ஆசாரமில்லாதவனை ரக்ஷிப்பதில்லை. ஆசாரத்தினால்

*ஸ்வர்க்கம், ஸுகம், மோக்ஷம் இவைகள் அடையப் படுகின்றன. ஆசாரத்திஞல் எதுதான் ஸித்திப்பதில்லை ?*

महाभारते आनुशासनिके — 'आचाराल्लभते चायुराचाराल्लभते श्रियम् । आचाराल्लभते कीर्तिं पुरुषः प्रेत्य चेह च ॥ ये नास्तिका निष्क्रियाश्च गुरुशास्त्रातिलङ्घिनः । अधर्मज्ञा दुराचारास्ते भवन्ति गतायुषः' इति ॥ पारिजाते — 'सदाचारेण देवत्वमृषित्वं च तथैव च । प्राप्नुवन्ति कुयोनित्वं मनुष्यास्तद्विपर्यये' इति ॥

மஹா பாரதத்தில் *ஆனுசாஸனிகத்தில் - ஆயுள், ஸம்பத், இஹபரவுலகங்களின் கீர்த்தி என்னுமிவைகளைப் புருஷன் ஆசாரத்திஞலடைகிருன். எவர்கள் நாஸ்திகர் களாயும், நற்கார்யமற்றவர்களாயும், குரு, சாஸ்திரம் இவர்களை மீறியவர்களாயும், தர்மமறியாதவர் களாயும், துராசாரர்களாயுமிருக்கின்றனரோ, அவர்கள் ஆயுளையிழந்தவர்களாகின்றனர். பாரிஜாதத்தில் - மனிதர்கள் ஆசாரத்திஞல் தேவத்தன்மையையும், ருஷித்தன்மையை யுமடைகின்றனர். ஆசாரமில்லாவிடில் ஜன்மங்களை அடைகின்றனர்.*

## सदाचारलक्षणम्

विष्णुपुराणे — 'सदाचारवतां पुंसां जितौ लोकावुभावपि । साधवः क्षीणदोषाः स्युः सच्छब्दः साधुवाचकः ॥ तेषामाचरणं यत्तु सदाचारः स उच्यते' इति ॥ संस्कारमञ्जर्याम् — 'यस्मिन्देशे य आचारः पारम्पर्य क्रमागतः । श्रुतिस्मृत्यविरोधेन सदाचारस्स उच्यते' इति ॥ मनुः - 'धर्मव्यतिक्रमो दृष्टो महतां साहसं तथा । तदन्वीक्ष्य प्रयुञ्जानः संसीदत्यवरोऽबलः ॥ तेजोमयानि पूर्वेषां शरीराणीन्द्रियाणि च । दोषैस्ते नोपलिप्यन्ते पद्मपत्रमिवाम्भसा' इति ॥ कतकभरद्वाजावन्योन्यं व्यत्यस्य भार्ये जग्मतुः । वसिष्ठश्चण्डालीमक्षमालीं प्रजापतिश्च स्वां

दुहितरमित्यादि धर्मव्यतिक्रमो दृष्टः । जामदग्न्येन रामेण पितृवचनाद-विचारेण मातुः शिरश्छिन्नमित्यादि साहसं दृष्टम् । तदन्वीक्ष्य प्रयुञ्जानः तदिति 'न पुंसकमनपुंसके नैकवच्चास्यान्यतरस्या'मित्येकशेष एकवद्भावश्च । तं व्यतिक्रमं तच्च साहसमन्वीक्ष्य दृष्ट्वा स्वयमपि तथा प्रयुञ्जानः । अवरः इदानीन्तनः । अबलः दुर्बलः संसीदति = प्रत्यवैति । तेषामपि किं दोषो नेत्यत्राह 'तेजोमयानीति ॥ 'तद्यथैषीकातूलमग्नौ प्रोतं प्रदूयेत एवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्त' इति श्रुतेः ॥

### ஸதாசாரலக்ஷணம்

விஷ்ணுபுராணத்தில் - ஸதாசாரமுள்ள மனிதர்களால் இரண்டு உலகங்களும் ஜயிக்கப்பட்டிருக்கின்றன. தோஷமற்றவர்கள் ஸாதுக்களெனப்படுவர். ஸத் என்ற சப்தம் ஸாதுக்களைச் சொல்லுகின்றது. அந்த ஸத்துக்களின் ஆசாரமெதுவோ அது ஸதாசாரமெனப்படுகின்றது. ஸம்ஸ்காரமஞ்சரியில் - எந்தத் தேசத்தில் எந்த ஆசாரம் பரம்பரையின் கிரமமாய் வந்திருக்கின்றதோ, சுருதி, ஸ்மிருதி விரோதமற்ற அந்த ஆசாரமே அந்தத் தேசத்தில் ஸதாசாரமெனப்படும். மனு - மகான்களின் தர்மவரைமீறல் காணப்படுவதுபோல், ஸாஹஸமும் காணப்படுகிறது. அதைப் பார்த்து இக்காலத்திலுள்ள மற்றொருவன் செய்வானுகில் (தேஜோ)பலமில்லாததால் அழிந்து போவான். முன்னோர்களின் சரீரங்களும் இந்த்ரியங்களும் தேஜோமயங்களாயிருந்தன. ஆகையாலவர்கள், தாமரையிலை ஜலத்திலுல்போல் தோஷங்களால் பற்றப்படவில்லை. கதகரும் பரத்வாஜரும், ஒருவர்க் கொருவர் மனைவிகளை மாற்றிக் கொண்டனர். வஸிஷ்டர் அக்ஷமாலியென்னும் சண்டாளியையடைந்தார். பிரும்மா தன்பெண்ணையடைந்தார். இவைபோன்ற தர்மமீறல் காணப்படுகிறது. தந்தையின் வசனத்தால் பரசுராமன் ஆலோசியாமல் தாயின் தலையை வெட்டினுன். இது முதலிய ஸாஹஸமும் காணப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்து இப்போதுள்ள மனிதன் செய்தால் கேடடைவான்.

अत्रापस्तम्बः — 'दृष्टो धर्मव्यतिक्रमः साहसं च पूर्वेषां तेषां तेजोविशेषेण प्रत्यवायो न विद्यते तदन्वीक्ष्य प्रयुञ्जानस्सीदत्यवर'. इति ॥ गौतमः — 'दृष्टो धर्मव्यतिक्रमः साहसं च महतां, न तु दृष्टार्थेऽवरदौर्बल्यात्, इति ॥ न दृष्टार्थे धर्मव्यतिक्रमादपीदानीन्तनस्य न साधीयसी प्रवृत्तिरित्यर्थः २॥ बोधायनः — 'अनुष्ठितं तु यद्देवैर्मुनिभिर्यदनुष्ठितम् । नानुष्ठेयं मनुष्यैस्तदुक्तं कर्म समाचरे'दिति ॥ याज्ञवल्क्यः — 'कर्मणा मनसा वाचा यत्नाद्धर्मं समाचरेत् । अस्वर्ग्यं लोकविद्विष्टं धर्म्यमप्याचरेन्न तु' इति । धर्म्यं विहितमपि लोकविद्विष्टं यस्मात्तस्मादस्वर्ग्यमित्यर्थः ।

ஆபஸ்தம்பர் - கௌதமர் - போதாயனர் - *தேவர்களாலும்முனிகளாலும்எது அனுஷ்டிக்கப்பட்டதோ அது மனுஷ்யனாலனுஷ்டிக்கத் தகுந்ததல்ல. சுருதி ஸ்மிருதிகளிற் சொல்லியதையே மனுஷ்யன் அனுஷ்டிக்கவேண்டும். யாக்ஞவல்க்யர் - மனம், வாக்கு, காயம் இவைகளால் பிரயத்தினத்துடன் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். தர்மவழியானாலும் மேலுலகம் தரஇயலாததால் அதை அனுஷ்டிக்கக் கூடாது.*

## स्मृत्यादिप्रशंसा

मनुः - 'इदं शास्त्रमधीयानो ब्राह्मणः संशितव्रतः । मनोवाग्देहजैर्नित्यं कर्मदोषैर्न लिप्यते ॥ अर्हः स्याद्धव्यकव्यानामर्हश्च पृथिवीमिमाम् । ग्रहणाद्धर्मशास्त्राणां ब्रह्मलोकमवाप्नुयात् ॥ विदुषा ब्राह्मणेनेदमध्येतव्यं प्रयत्नतः । शिष्येभ्यश्च प्रवक्तव्यं सम्यङ्नान्येन केनचित् । इदं स्वस्त्ययनं श्रेष्ठमिदं बुद्धिविवर्द्धनम् । इदं यशस्यमायुष्यमिदं निश्रेयसं परम् ॥ धर्मशास्त्रमधीयानो ब्राह्मणः क्षत्रियोऽथ विट् । पुनाति हि पितॄन्सर्वान् सप्त सप्तावरांस्तथा ॥ अमार्गेण प्रवृत्तानां व्याकुलेन्द्रियचेतसाम् । निवर्तकं धर्मशास्त्रं व्याधीनामिव भेषजम् ।

श्रुतिस्मृती चक्षुषी द्वे द्विजानां न्यायवर्त्मनि । मार्गमुज्झन्ति तद्धीनाः प्रपतन्ति पथश्च्युताः' इति ॥

### ஸ்மிருதி முதலியவற்றின் பெருமை

மனு - *பிராம்மணன் இந்தச் சாஸ்திரத்தைக் கற்றவனாய் வ்ரதங்களையனுஷ்டிப்பவனாகில் மனோ வாக்காயங்களாலுண்டாகும் தோஷங்களால் பற்றப் படுகிறதில்லை. ஹவ்யகவ்யங்களுக்கு அர்ஹனாகிறான். இப்பூமியை வாங்குவதற்கும் அர்ஹனாகிறான். தர்மசாஸ்த்ரங்களைக் கற்பதினால் பிரம்ம லோகத்தையடைகிறான். வித்துவானான பிராம்மணனால் இது பிரயத்தின பூர்வமாய்க் கற்கத்தகுந்தது. சிஷ்யர்களின் பொருட்டும் கற்பிக்கத் தக்கது. மற்றவன் கற்பிக்கக்கூடாது. இது இஷ்டத்தைக்கொடுக்க கூடியது. இது புத்தியை விருத்தி செய்யக் கூடியது. இது புகழ், ஆயுஸ், மோக்ஷம் இவைகளையளிக்கக்கூடியது. தர்மசாஸ்த்ரத்தைக் கற்கும் பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன் தன்குலத்தில் முன்னும் பின்னுமுள்ள ஏழுதலைமுறையிலுள்ளவர்களைச் சுத்தர்களாக்குகிறான். அமார்க்கத்தில் பிரவர்த்தித்தவர் கட்கும், தடுமாறிய இந்த்ரியம் மனமுடையவர்கட்கும், தர்மசாஸ்த்ரமே, வியாதிகளுக்கு மருந்துபோல் துன்பநிவர்த்திக்கும் ஸாதனமாயிருக்கின்றது. த்விஜர்களுக்கு நியாயமார்க்கத்திற்செல்ல, சுருதி, ஸ்மிருதி என்னும் இவ்விரண்டும் இரண்டு கண்களாகும். அக்கண்ணில்லாத வர்கள் வழியை விட்டுவிடுகிறார்கள். பிறகு பதிதர்களாகிறார்கள்.*

हारीतः —'यथा हि वेदाध्ययनं धर्मशास्त्रमिदं तथा । अध्येतव्यं ब्राह्मणेन नियतं स्वर्गमिच्छता' इति ॥ शङ्खलिखितौ- रागद्वेषाग्निदग्धानामज्ञानविषपायिनाम् । चिकित्सा धर्मशास्त्राणि व्याधीनामिव भेषज'मिति ॥ स्मृतिरत्नावल्याम् — 'स्मृतिं विना न हि ज्ञानं धर्मस्य भवति क्वचित् । न जातु ज्ञायते रूपमालोकेन विना यथेति ॥

याज्ञवल्क्यः — 'पुराणन्यायमीमांसाधर्मशास्त्राङ्ग-मिश्रिताः । वेदाः स्थानानि विद्यानां धर्मस्य च चतुर्दश' इति ।। विद्यानां स्थानानि चतुर्दश । धर्मस्य स्थानानि हेतवः । एतानि त्रैवर्णिकैरध्येतव्यानि । तदन्तर्गतत्वाद्धर्मशास्त्रमध्येतव्यम् ।। शूद्रं प्रकृत्य यमः - 'तस्मादस्याधिकारोऽस्ति न वेदेषु न तु स्मृताविति ।। मनुरपि — 'निषेकादिः श्मशानान्तो मन्त्रैर्यस्योदितो विधिः । तस्य शास्त्रेऽधिकारोऽस्मिन् ज्ञेयो नान्यस्य कस्यचित्' इति ।।

ஹாரீதர் - ஸ்வர்க்கத்தை விரும்பும் ப்ராம்மணன் வேதத்தைப்போல் தர்மசாஸ்த்ரத்தையும் அவச்யம் கற்கவேண்டும். சங்கலிகிதர்கள் - ராகம், த்வேஷம் என்னும் நெருப்புக்களால் தஹிக்கப்பட்டவர்களுக்கும், அஜ்ஞானமென்னும் விஷத்தை உட்கொண்டவர்களுக்கும் தர்மசாஸ்த்ரங்கள், வ்யாதிகளுக்கு மருந்துபோல் சிகித்ஸையாயிருக்கின்றன. ஸ்மிருதிரத்னுவளியில் - வெளிச்சமில்லாமல் உருவம் அறியப்படாததுபோல், ஸ்மிருதியில்லாமல் ஒருவனுக்கும் தர்மஜ்ஞானம் உண்டாவதில்லை. யாக்ஞவல்க்யர் - புராணம், நியாயம், மீமாம்ஸா, தர்மசாஸ்த்ரம், ஆறு அங்கங்கள், இவைகளுடன் கூடிய நான்கு வேதங்கள் என்னும் இப்பதினுன்கும் வித்யைகளுக்கு ஸ்தானங்களாகவும், தர்மத்திற்குக் காரணங்களாகவும் இருக்கின்றன. இவை மூன்று வர்ணத்தார்களாலுமம் கற்கத்தகுந்தவை. அவைகளுக்குட்பட்டதால் தர்மசாஸ்த்ரமும் கற்கத்தகுந்தது. நாலாமவனை குறித்து யமன் - ஆகையாலிவனுக்கு வேதங்களிலும், ஸ்மிருதிகளிலும் அதிகாரமில்லை. மனுவும் - நிஷேகம் முதல் ச்மசானம் வரையிலுள்ள ஸம்ஸ்காரங்கள் மந்த்ரங்களுடன் எவனுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவனுக்கே இந்தத் தர்மசாஸ்த்ரத்தில் அதிகாரம். மற்ற ஒருவனுக்கும் இல்லை.

मानवधर्मस्य श्रैष्ठ्यं दर्शयत्यङ्गिराः —'यत्पूर्वं मनुना प्रोक्तं

धर्मशास्त्रमनुत्तमम् । न हि तत् समतिक्रम्य वचनं हितमात्मनः ॥ वेदादुपनिबद्धत्वात् प्राधान्यं तु मनोः स्मृतम् । मन्वर्थविपरीता तु या स्मृतिः सा न शस्यत' इति ॥ श्रुतिरपि - 'यद्वै किञ्च मनुरवदत्तद्भेषज-मिति ॥ व्यासहारीतौ - 'अवेक्षेत च शास्त्राणि मन्वादीनि द्विजोत्तमः । वैदिकान्नियमान् वेदान् वेदाङ्गानि च सर्वशः ॥ धर्मशास्त्रं सदा पठ्यं ब्राह्मणैः शुद्धमानसैः । वेदवत् पठितव्यं च श्रोतव्यं च दिवानिशम् ॥ श्रुतिहीनाय विप्राय स्मृतिहीने तथैव च । दानं भोजनमन्यच्च दत्तं कुलविनाशनम् । तस्मात् सर्वप्रयत्नेन धर्मशास्त्रं पठेद्द्विजः । श्रुतिस्मृती तु विप्राणां चक्षुषी द्वे विनिर्मिते ॥ काणस्तत्रैकया हीनो द्वाभ्यामन्धः प्रकीर्तित इति ॥

*அங்கிரஸ் - மனுவினால் முன்பு சொல்லப்பட்ட உயர்ந்த தர்மசாஸ்த்ரம் எதுவோ அதைவிட்டு வேறு விதமான சாஸ்த்ரம் இல்லை. வேதத்தினின்றே எடுத்துச்செய்யப்பட்டிருப்பதால் மனுசாஸ்த்ரம் ப்ரதானமாகின்றது. மனுஸ்மிருதிக்கு விருத்தமான ஸ்மிருதி புகழப்படுகிறதில்லை. ச்ருதியும் - மனு எதைச்சொன்னாரோ அது மருந்து. வ்யாஸஹாரீதர்கள் - ப்ராம்மணன் மன்வாதிகளியற்றிய தர்மசாஸ்த்ரங்கள், வேதோக்த நியமங்கள், வேதங்கள், வேதாங்கங்கள் இவைகளை முற்றிலும் கவனிக்க வேண்டும். ப்ராம்மணர்கள் சுத்த மனதுடன் வேதத்தைப்போலவே தர்ம சாஸ்த்ரத்தையும் படிக்கவேண்டும்; எப்பொழுதும் கேட்கவும் வேண்டும். சுருதிஸ்மிருதிகளை அறியாத ப்ராம்மணனுக்குக் கொடுக்கும் தானம், போஜனம், மற்றவையும், கொடுப்பவனின் குலத்தை அழிக்கும். ஆகையால் தீவ்ர முயற்சியுடன் த்விஜன் தர்மசாஸ்த்ரத்தைக் கற்கவேண்டும். விப்ரர்களுக்குச் சுருதி, ஸ்மிருதி என்னுமிவ்விரண்டும் இரண்டு கண்களாம் அவைகளில் ஒன்றில்லாதவன் ஒற்றைக்கண்ணன். இரண்டுமில்லாதவன் குருடன் எனப்படுவான்.*

विष्णुः - 'पुराणं मानवो धर्मः साङ्गो वेदश्चिकित्सितम् । आज्ञासिद्धानि चत्वारि न हन्तव्यानि हेतुभिरिति ॥ वसिष्ठः - 'अप्रामाण्यं च वेदानामार्षाणां चैव कुत्सनम् । अव्यवस्था च सर्वत्र एतन्नाशनमात्मनः' इति ॥ व्यासः - 'तेन स्मार्तमनुष्ठानमन्तरेण न वैदिकम् । प्रवर्तते द्विजातीनां कर्मसिद्धिमभीप्सतामिति ॥ प्रचेताः 'अमीमांसा बहिश्शास्त्रा ये चान्ये वेदवर्जिताः । यत्ते ब्रूयुर्न तत्कुर्या द्वेदाद्धर्मो विधीयत' इति ॥ चतुर्विंशतिमते — 'अर्हच्चार्वाकवाक्यानि बौद्धादिपठितानि च । विप्रलम्भकवाक्यानि सर्वाणि च विवर्जये'दिति ॥

விஷ்ணு - புராணம், மனுதர்மம், ஸாங்கமான வேதம், வைத்யசாஸ்த்ரம், இந்நான்கும் ஈசனின் ஆக்ஞையினுல் ஏற்பட்டவை. ஆதலால் ஹேது சாஸ்த்ரங்களால் அவைகளைக் கெடுக்கக் கூடாது. வஸிஷ்டர் - வேதங்களில் அப்ரமாணபுத்தியும், ஆர்ஷ க்ரந்தங்களை நிந்தித்தலும், எல்லாவற்றிலும் கட்டுப் பாடில்லா திருத்தலும் தனக்கு நாசகாரணமாம். வியாஸர் - ஆகையால் கர்மஸித்தியை விரும்பும் ப்ராம்மணர்களும் ஸ்மார்த்த கர்மானுஷ்டானமின்றி, வைதிக கர்மானு ஷ்டானம் ஏற்படுவதில்லை. ப்ரசேதஸ் - வேதம், மீமாம்ஸை, சாஸ்த்ரம் இவைகளை அறியாதவர்கள் சொல்வதைச் செய்யக்கூடாது. தர்மமென்பது வேதத்திலிருந்தே விதிக்கப்படுகிறது. சதுர்விம்சதி மதத்தில் - ஆர்ஹதர்கள், சார்வாகர்கள், பௌத்தர்கள் முதலியவர்களின் வாக்யங்களையும் ஏமாற்றுகிறவர்களின் வாக்யங்களையும் முற்றிலும் தள்ளவேண்டியது.

## श्रुतिस्मृत्यादीनां बलाबलनिरूपणम्

मनुः — 'श्रुतिद्वैधं तु यत्र स्यात् तत्र धर्मावुभौ स्मृतौ । उभावपि हि तौ धर्मौ सम्यगुक्तौ महर्षिभिः' ॥ अत्रोदाहरणमाह स एव - उदितेऽनुदिते चैव समयाऽवि(ध्यु)षिते तथा । सर्वथावर्तते यज्ञ इतीयं

वैदिकी श्रुति'रिति (सूर्यनक्षत्रवर्जितः कालः समयाध्युषितशब्देनोच्यते। उदयात् पूर्वमरुणकिरणवान् प्रविरलतारकोऽनुदितकालः' इति मनुस्मृतिव्याख्यायाम्) समयाविषिते उदितानुदित इत्यर्थः ॥ अयञ्च यथाकल्पसूत्रं व्यवस्थितविकल्पः।

சுருதி ஸ்மிருதி முதலியவற்றின் பலாபல நிரூபணம்

மனு - எந்தக் கர்மாவில் இரண்டு சுருதிகளுக்கு பேதமுள்ளதோ, அதில் அவ்விரண்டு அர்த்தங்களும் தர்மங்களென்று மஹர்ஷிகளால் கூறப்பட்டிருக்கின்றன. இதற்கு உதாஹரணத்தை அவரே சொல்லுகின்றார் - ஸூர்யனின் உதயத்திற்குப் பின்னும், முன்னும், நக்ஷத்ரங்கள் மறைந்து ஸூர்யன் உதயமாகாமலிருக்கும் காலத்திலும் அக்னிஹோத்ரம் செய்யவேண்டுமென சுருதி வாக்யங்கள் விதிக்கின்றன. இவ்விதிகள் எல்லாம் ப்ரமாணங்களே. ஒவ்வொரு சாகைக்கு ஒவ்வொரு காலமென்று வ்யவஸ்தை செய்யப்படுகிறது.

तथा च सुमन्तुः - 'यत्र शास्त्रगतिर्भिन्ना सर्वकर्मसु भारत । उदितेऽनुदिते चैव होमभेदो यथा भवेत् । तस्मिन् कुलक्रमायातमाचारं चाचरेद्द्विजः । स गरीयान् महाबाहो सर्वशास्त्रोदितादपि इति ॥ मनुः - 'येनास्य पितरो याता येन याताः पितामहाः । तेन यायात् सतां मार्गं तेन गच्छन्न रिष्यती'ति ॥ स्मृत्यादिद्वैधेऽपि विकल्प एव द्रष्टव्यः । तथा च गौतमः— 'तुल्यबलविरोधे विकल्प' इति ॥ तुल्यबलयोः श्रुत्योः स्मृत्योश्च विरोधे विकल्प इत्यर्थः ॥ लोकाक्षिः - 'श्रुतिस्मृतिविरोधे तु श्रुतिरेव गरीयसी । अविरोधे सदा कार्यं स्मार्तं वैदिकवत्तदेति ॥ विरोधाधिकरणन्यायोऽत्रानुग्राहको द्रष्टव्यः । तथा हि - अध्वरे महावेद्यां सदोनामकस्य मण्डपस्य मध्ये काचिदुदुम्बरशाखा स्तम्भत्वेन निखाता भवति । तामुद्दिश्य वस्त्रवेष्टनं स्मर्यते 'औदुम्बरी सर्वा वेष्टयितव्ये'ति । तत्र संशयः 'एषा स्मृतिः प्रमाणं न वे'ति । तत्र 'अष्टकाः कर्तव्या'

சாதாதபர் - பணத்திற்காக எவ்வளவு வேதாக்ஷரங்களை உபயோகிக்கின்றானோ அவ்வளவு கர்ப்பஹத்தி தோஷங்களை வேதத்தை விற்பவனடைவான். சாகலேயர் - ப்ரக்யாபனம், ப்ராத்யயனம், எவ்வளவு எனக்குத் தருகிறாய் என்று கேட்டுக் கொண்டு ப்ரதிக்ரஹம், யாகம் செய்வித்தல், அத்யயனம் செய்வித்தல், வாதம் என்று ஆறுபிரகாரமுள்ளது வேதவிக்ரயமென்பது. ப்ரக்யாபன மென்பது நான் நான்கு வேதங்களையுமறிந்தவன் என்பதுபோல் ராஜக்ருஹம் முதலியதில் கூவுதல். தனது மேன்மையைவெளியிடுவதற்காக அத்யயனம் செய்தல் ப்ராத்யயனம். 'ப்ரச்னபூர்வம்' (எவ்வளவு தருவாய்!) என்பது ப்ரதிக்ரஹம், யாஜனம், அத்யாபனம் என்ற மூன்றுகளிலும் சேரும். 'வாதம்' என்பது இதரனை அவமதித்துத் தன்வித்யையை ப்ரகாசப்படுத்தி ஒருவருக்கொருவர் விவாதம் செய்வதாம்.

शातातपः — 'प्रश्नपूर्वं तु यो दद्याद् ब्राह्मणाय प्रतिग्रहम्। स पूर्वं नरकं याति ब्राह्मणस्तदनन्तरमिति ॥ स्मृतिसंग्रहे — गायत्रीं मूल्यमादाय परस्मै यः प्रयच्छति। स जीवन्नन्त्यजातित्वं सम्प्राप्नोति न संशयः' इति । शौनकः—'वेदाक्षराणि यावन्ति नियुङ्क्ते त्वर्थकारणात्। तावतीभ्रूणहत्या वै लभते नात्र संशयः ॥ अर्थार्थं भोजनार्थं वा यो वेदाक्षरमुच्चरेत्। चण्डालस्तु स विज्ञेयः सर्वकर्मबहिष्कृत' इति ॥ भृतकाध्ययनभृतकाध्यापने उपपातकेषु पठति याज्ञवल्क्यः — 'भृतकाध्ययनादानं भृतकाध्यापनं तथेति ॥

சாதாதபர் -கேள்வியை முன்கேட்டு எவன் பிராமண னுக்குத் தானம் கொடுக்கின்றானோ அவன் முதலில் நரகத்தையடைவான். பிராமணன் பிறகு நரகத்தை யடைவான். ஸ்ம்ருதி ஸங்க்ரஹத்தில் - எவன் விலையைப்பெற்றுக் கொண்டு காயத்ரியைப் பிறனுக்குப தேசிப்பானோ அவன் உயிருடனிருக்கும்போதே சண்டாளனாகிறான். ஸம்சயமில்லை. சௌனகர் -

*பணத்திற்காக எவ்வளவு வேதாக்ஷரங்களையுபயோகிக்கின்றானோ அவ்வளவு கர்ப்பஹத்தி தோஷங்களை அடைகிறான். ஸம்ஶயமில்லை. எவன் பணத்திற்காகவாவது போஜனத்திற்காகவாவது வேதாக்ஷரத்தை உச்சரிப்பபானோ அவன் ஸர்வ கர்மங்களுக்குமர்ஹனல்லாத சண்டாளன் என்று அறியத்தகுந்தவன். கூலியைப் பெற்றுக்கொண்டு அத்யயனம் செய்தல், அத்யயனம் செய்வித்தல் இவைகளை உபபாதகங்களில் படிக்கின்றார்* யாக்ஞவல்க்யர்.

## उपाकरणम्

तत्र मनुः — 'श्रावण्यां पौष्ठपद्यां वाऽप्युपाकृत्य यथाविधि । युक्तश्छन्दांस्यधीयीत मासान्विप्रोऽर्द्धपञ्चमान् ॥ पुष्ये तु च्छन्दसां कुर्याद्बहिरुत्सर्जनं द्विजः । माघशुक्लस्य वा प्राप्ते पूर्वाह्णे प्रथमेऽहनीति ॥ अध्वर्यूणां श्रावण्यां, प्रौष्ठपद्यां छन्दोगानामिति व्यवस्थितविषयोऽयं विकल्प इति तद्व्याख्याने ॥ ग्रामाद्बहिरुत्सर्जनाख्यं कर्म प्रथमेऽहनि - प्रथमायां तिथौ । पुष्येऽध्वर्यूणां माघे छन्दोगानाम् ॥

### உபாகர்ம

மனு - *பிராமணன் ச்ராவணபூர்ணிமையிலாவது, ப்ரௌஷ்டபத பூர்ணிமையிலாவது விதிப்படி உபாகரணத்தைச் செய்து, பிறகு 4 1/2 மாதங்களில் முயற்சியுள்ளவனாய் வேதங்களை அத்யயனம் செய்யவேண்டும். பௌஷமாஸத்தில் கிராமத்திற்கு வெளியில் உத்ஸர்ஜனத்தைச் செய்யவேண்டும், மாகமாஸ சுக்லபக்ஷ ப்ரதமையிலாவது பகலின் முதற்பாகத்தில் செய்யவேண்டும். யாஜுஷர்களுக்கு சிராவணியிலும், ஸாமகர்களுக்கு ப்ரௌஷ்டபதியிலுமென்று வ்யவஸ்தித விகல்பம்' என்று வ்யாக்யானத்தில். பௌஷத்தில் யாஜுஷர்களுக்கும், மாகத்தில் ஸாமகர்களுக்கும் உத்ஸர்ஜனம்.*

आपस्तम्बः — 'श्रावण्यां पौर्णमास्यामध्यायमुपाकृत्य मासं प्रदोषे नाधीयीत तैष्यां पौर्णमास्यां रोहिण्यां वा विरमे दर्धपञ्चमाश्चतुरो मासानित्येक इति ।।

ஆபஸ்தம்பர் - "ச்ராவணபூர்ணிமையில் உபாகரணம் செய்துவிட்டுப் பிறகு ஒருமாதம் வரையில் ராத்ரியின் முதற்பாகத்தில் அத்யயனம் செய்யக்கூடாது. தைஷபூர்ணிமையிலாவது ரோகிணியிலாவது உத்ஸர்ஜனம் செய்யவேண்டும். 4 1/2 மாதங்கள் அத்யயனம் என்று சிலர்."

'मेषादिस्थे सवितरि यो यो दर्शः प्रवर्तते । चान्द्रमासास्तत्त-दन्ताश्चैत्राद्या द्वादश स्मृताः ।। तेषु या या पौर्णमासी सा सा चैत्र्यादिका स्मृता । कादाचित्केन योगेन नक्षत्रस्येति निर्णय' इति ।। तदेवं सवितरि सिंहस्थे याऽमावास्या तदन्ते चान्द्रमसे मासे या मध्यवर्तिनी पौर्णमासी सा श्रावणी । श्रवणयोगस्तु भवतु वा मा वाभूत् । तस्यामध्यायमुपाकृत्य । स्वगृह्योक्तविधिना । 'उपाकर्म स्वगृह्योक्ते काल इति अत्रिस्मरणात् स्वगृह्योक्ते काले उपाकर्म कृत्वा स्वाध्यायमधीयीत ।

ஸூர்யன் மேஷாதிராசிகளிலிருக்கும்பொழுது எந்தெந்த தர்மம் வருகிறதோ அந்தந்த தர்மத்தை முடிவாகக்கொண்டவைகள் சைத்ரம் முதலிய பன்னிரண்டு மாஸங்கள், அந்த மாஸங்களில் எந்தெந்த பௌர்ணமாஸி வருகிறதோ அதது 'சைத்ரீ' என்பது முதலிய பேருடன் கூடியதாகும். ஒரு ஸமயத்தில் அந்த நக்ஷத்ரத்துடன் கூடுவதால் அந்தப்பெயருண்டாகிறது. ஸூர்யன் ஸிம்ஹராசியிலிருக்கும் பொழுது வரும் தர்மத்தை முடிவாயுடைய சாந்த்ரமாஸத்தில் நடுவிலுள்ள பூர்ணிமை ச்ராவணீ எனப்படும். ச்ரவண நக்ஷத்ரம் சேர்ந்தாலும் சேராவிடினும், அதில் உபாகர்மத்தைத் தனது க்ருஹ்யத்தில் சொல்லியகாலத்தில் செய்து அத்யயனம் செய்யவேண்டும்.

अधीयानश्च मासमेकं प्रदोषे प्रथमरात्रिभागे नाधीयीत । तैष्यां पौर्णमास्यां तैषे मासि तिष्यात्पूर्वा या रोहिणी तस्यां वा विरमेत् - गृह्योक्तविधिना उत्सर्जनं कुर्यात्। अनयोः पक्षयोः पञ्च मासानधीयीत। अर्धपञ्चमानीति - अर्धं पञ्चमं येषां ते अर्धपञ्चमाः । अर्धाधिकां श्चतुरो मासानधीयीतेत्येके मन्यन्ते। अस्मिन्पक्षे प्रौष्ठपद्यामुपाकरणं उत्सर्जनस्य वा प्रतिकर्षः शाखान्तरदर्शनादिति ॥

*ஒரு மாதம் வரையில் இரவின் முதல் பாகத்தில் அத்யயனம் செய்யக்கூடாது. தைஷ பூர்ணிமையிலாவது, அதற்குமுன் வரும் ரோகிணீநக்ஷத்திரத்திலாவது தனது க்ருஹ்யத்திலுள்ள விதிப்படி உத்ஸர்ஜனத்தைச் செய்யவேண்டும். இவ்விரண்டு பக்ஷங்களிலும் 5 மாஸம் அத்யயனம் செய்யவேண்டும். சிலர் 4 1/2 மாஸம் அத்யயனம் செய்யவேண்டுமென்கிறூர்கள். இந்த பக்ஷத்தில் ப்ரௌஷ்டபதியில் உபாகர்மம், அல்லது உத்ஸர்ஜனத்தையாவது முந்திச் செய்யவேண்டும், இதரசாகையில் இவ்விதம் காண்பதால்.*

तथा गौतमः — 'श्रवणादि वार्षिकं श्रवणां प्रौष्ठपदीं वोपाकृत्याधीयीत छन्दांस्यर्धपञ्चमान्मासान्पञ्च दक्षिणायनं वेति ॥ श्रवणां श्रावण्यां पौर्णमास्यां प्रौष्ठपदीं - प्रौष्ठपद्यां वोपाकृत्य तदादि छन्दांस्यधीयीत । तदिदमध्ययनं वार्षिकं प्रतिसंवत्सरं भवति । अर्धपञ्चमान् पूर्णान्वा पञ्च मासान् यावद्दक्षिणायनं वाऽधीयीतेत्यर्थः ॥

*அவ்விதமே கௌதமர் - ச்ராவணியிலாவது, ப்ரௌஷ்டபதியிலாவது உபாகர்மத்தைச்செய்து பிறகு 4½ அல்லது 5 மாதம், அல்லது தக்ஷிணாயனம் முழுவதுமாவது வேதங்களை அத்யயனம் செய்யவேண்டும். இந்த அத்யயனம் ப்ரதி வர்ஷமும் செய்யத்தகுந்தது.*

बोधायनस्तु — 'श्रावण्यां पौर्णमास्यामाषाढ्यां वोपाकृत्य तैष्यां माघ्यां वोत्सृजेयु'रिति ॥ याज्ञवल्क्यः — 'अध्यायानामुपाकर्म

श्रावण्यां श्रवणेन वा । हस्तेनौषधिभावे वा पञ्चम्यां श्रावणस्य त्विति ॥ औषधीनां प्रादुर्भावे सति श्रावणमासस्य पौर्णमास्यां श्रवणयुक्ते वा दिने हस्तेन युक्तायां पञ्चम्यां वा स्वगृह्योक्तविधिना कुर्यात् ॥

போதாயனர் - *ச்ராவண பூர்ணிமையிலாவது, ஆஷாட பூர்ணிமையிலாவது உபாகர்மத்தைச் செய்து, தைஷ பூர்ணிமையிலாவது, மாகபூர்ணிமையிலாவது உத்ஸர்ஜனத்தைச் செய்யவேண்டும்.* யாக்ஞவல்க்யர் - *பயிர்கள் செழித்த காலத்தில் ச்ராவண மாஸத்தில் பூர்ணிமையிலாவது, ச்ரவண நக்ஷத்ரமுள்ள தினத்திலாவது, ஹஸ்த நக்ஷத்ரத்துடன் கூடிய பஞ்சமியிலாவது தங்கள் க்ருஹ்யத்தில் சொல்லியவிதிப்படி உபாகர்மத்தைச் செய்யவேண்டும்.*

अत्र व्यवस्था दर्शिता स्मृत्यर्थसारे — 'श्रावण्यां पौर्णमास्यां श्रावणमासस्य श्रवणे वा पञ्चम्यां हस्ते वा पञ्चमीहस्तयोगे वा भाद्रपदमासपौर्णमास्यां वा तत्रापि श्रवणे हस्ते वा पञ्चम्यां पञ्चमीहस्तयोगे वा यथा स्वकुलाचारं कुर्यादिति ॥

*இது விஷயத்தில் வ்யவஸ்தை காண்புவிக்கப் பட்டிருக்கிறது ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - ச்ராவண பூர்ணிமையிலாவது, ஶ்ராவணமாஸத்தின் ஶ்ரவண நக்ஷத்ரத்திலாவது, பஞ்சமியிலாவது, ஹஸ்தத்திலாவது, பஞ்சமியும் ஹஸ்தமும் சேர்ந்ததினத்திலாவது, பாத்ரபதபூர்ணிமையிலாவது, அந்த மாஸத்தின் ச்ரவண நக்ஷத்ரத்திலாவது, ஹஸ்தத்திலாவது, பஞ்சமியிலாவது, பஞ்சமீ ஹஸ்தங்கள் சேர்ந்த தினத்திலாவது தங்கள் குலாசாரப்படி செய்யவேண்டும்.*

कालादर्शेऽपि — 'अध्यायानामुपाकर्म श्रावण्यां तैत्तिरीयकाः । बह्वृचाश्श्रवणे कुर्युस्सिंहस्थोऽर्को भवेद्यदि ॥ सहस्तशुक्लपञ्चम्यां न तद्ग्रहणसंक्रमे । असिंहार्के प्रौष्ठपद्यां श्रवणे च व्यवस्थयेति ॥ अर्कः सूर्यः सिंहराशिस्थो यदि स्यात्, तदा तैत्तिरीयकाः श्रावणमासस्य

पौर्णमास्यामध्यायानामुपाकर्म कुर्युः । बह्वृचाः श्रवणनक्षत्रयुक्ततिथौ कुर्युः । तत्रासम्भवे तन्मास एव हस्तनक्षत्रयुक्तपञ्चम्यां वा कुर्युः । ग्रहणे संक्रमे च तदुपाकर्म न कुर्युः । असिंहार्क इति । यदि सूर्यः सिंहराशिस्थितो न भवति, तदा प्रौष्ठपद्यां भाद्रपदपौर्णमास्यां श्रवणे च व्यवस्थया कुर्युः । प्रौष्ठपद्यां तैत्तिरीयकाः कुर्युः । बह्वृचाः श्रवणनक्षत्रयुक्ततिथाविति व्यवस्था । चकाराद्भाद्रपदमासे हस्तनक्षत्रयुक्ततिथाविति सूचितम् ॥

காலாதர்ஶத்திலும் - ஸூர்யன் ஸிம்மராசியிலிருந்தால், தைத்திரீயசாகிகள் ச்ராவணமாஸத்தின் பூர்ணிமையிலும், ருக்வேதிகள் ச்ரவண நக்ஷத்ரமுள்ள தினத்திலும் உபாகர்மத்தைச் செய்யவேண்டும். அதில் ஸம்பவிக்காவிடில், அந்த மாதத்திலேயே ஹஸ்த நக்ஷத்ரத்துடன் கூடிய பஞ்சமியிலாவது செய்யவேண்டும். க்ரஹணத்திலும் ஸங்க்ரமணத்திலும் உபாகரணத்தைச் செய்யக்கூடாது. ஸூர்யன் ஸிம்மராசியில்லாவிடில், தைத்திரீயசாகிகள் ப்ரௌஷ்டபத பூர்ணிமையிலும் ருக்வேதிகள் ச்ரவண நக்ஷத்ரமுள்ள தினத்திலும் செய்யவேண்டும். 'च' என்பதால் பாத்ரபத மாஸத்தில் ஹஸ்த நக்ஷத்ரமுள்ள தினத்திலுமென்பது ஸூசிக்கப் பட்டது.

तदाह गार्ग्यः — 'पर्वण्यौदयिके कुर्युः श्रावणं तैत्तिरीयकाः । बह्वृचाः श्रवणे चैव ग्रहसंक्रान्तिवर्जिते' इति ॥ औदयिके - उदयकालव्यापिनि ॥ गोभिलोऽपि — 'पर्वण्यौदयिके कुर्युः श्रावणे तैत्तिरीयकाः । बह्वृचाः श्रवणर्क्षे तु हस्तर्क्षे सामवेदिन' इति ॥ स एव — 'छन्दोगाभिहिताः कुर्युः प्रातरौत्सर्गिकीं क्रियाम् । अपराह्णेऽप्युपाकर्म पुष्यहस्तर्क्षयोर्द्विजाः इति । हस्तर्क्षे उपाकर्म पुष्यर्क्षे उत्सर्गं च कुर्युः ॥ अन्यच्च — 'अध्यायानामुपाकर्म कुर्यात्कालेऽपराह्णिके । पूर्वाह्णे तु विसर्गः स्यादिति वेदविदो विदुः ॥ उपाकर्मणि चोत्सर्गे यथाकालं समेत्य च । ऋषीन् दर्भमयान् कृत्वा पूजयेत्तान् द्विजस्तत' इति ॥

கார்க்யர் - தைத்திரீயசாகிகள் உதயகால வ்யாபியான பூர்ணிமையிலும், ருக்வேதிகள் உதயவ்யாபியான ச்ரவண நக்ஷத்ரத்திலும் உபாகர்மத்தைச் செய்யவேண்டும். க்ரஹணமாவது ஸங்க்ரமணமாவது சேர்ந்தால் செய்யக்கூடாது. கோபிலரும் - தைத்திரீயசாகிகள், ம்ராவணமாஸத்தில் உதய வ்யாபியான பூர்ணிமையிலும், ருக்வேதிகள் ம்ரவண நக்ஷத்ரத்திலும், ஸாமவேதிகள் ஹஸ்த நக்ஷத்ரத்திலும் செய்யவேண்டும். ஸாமவேதிகள் புஷ்ய நக்ஷத்ரத்தில் பூர்வாஹ்ணத்தில் உத்ஸர்ஜனத்தையும், ஹஸ்தநக்ஷத்திரத்தில் அபராஹ்ணத்தில் உபாகர்மத்தையும் செய்யவேண்டும். வேதங்களின் உபாகரணத்தை அபராஹ்ணத்திலும், உத்ஸர்ஜனத்தைப் பூர்வாஹ்ணத்திலும் செய்யவேண்டுமென்று வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர். உபாகரணத்திலும், உத்ஸர்ஜனத்திலும், விஹிதமான காலத்தில் தர்ப்பங்களால் இருஷிகளைச் செய்து அவர்களைப் பூஜிக்கவேண்டும்.

सामवेदिनः सिंहभाद्रपदे मौढ्यादिना दूषिते सति कन्यामासापरपक्षे हस्तनक्षत्रे उपाकर्म कुर्वन्ति ।। तत्र सायं त्रिमुहूर्तव्यापि हस्तनक्षत्रं ग्राह्यम् । मौढ्यादिरहिते तु सिंहभाद्रपदे शुक्ले उदयादि-सङ्गवान्तव्यापि हस्तनक्षत्रं ग्राह्यम् । तथा सङ्ग्रहे — 'हस्तर्क्षमुदये शुक्ले त्रिमुहूर्तास्तगेऽसित' इति, 'हस्तर्क्षं त्वाष्ट्र ऋक्षेण संयुतं सङ्गवान्तयुगिति च ।। तिथिदर्पणे च — 'औदयिके सङ्गवस्पर्शे श्रुतौ पर्वणि चार्कभे । कुर्युर्नभस्युपाकर्म ऋग्यजुस्सामगाः क्रमा'दिति ।। सङ्गवस्पर्शे सङ्गवान्त-स्पर्शे ।।

ஸாமவேதிகள், ஸிம்ஹபாத்ரபதமானது மௌட்யம் முதலியதால் துஷ்டமாயிருந்தால் கன்யாமாஸத்தின் க்ருஷ்ணபக்ஷத்தில் ஹஸ்தநக்ஷத்திரத்தில் உபாகர்மத்தைச் செய்கிறார்கள். அப்பொழுது ஸாயங்காலத்தில் 3 முஹூர்த்தம் வ்யாப்தி உள்ள ஹஸ்த நக்ஷத்ரத்தைக் க்ரஹிக்கவேண்டும். ஸிம்ஹபாத்ரபதத்திற்கு தோஷ

மில்லாவிடில் சுக்லபக்ஷத்தில் உதயம்முதல் ஸங்கவாந்தம் வரையில் வ்யாப்தியுள்ள ஹஸ்தநக்ஷத்ரத்தைக் க்ரஹிக்கவேண்டும். ஸங்க்ரஹத்தில் - சுக்லபக்ஷத்தில் ஹஸ்தநக்ஷத்ரம் உதய வ்யாப்தமாயும் க்ருஷ்ணபக்ஷத்தில் ஸாயங்காலத்தில் மூன்று முகூர்த்தங்கள் வ்யாப்தியுள்ளதாயுமிருக்கவேண்டும். ஹஸ்தநக்ஷத்ரம் சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடினால் ஸங்கவாந்தம் வரையில் வ்யாப்தியுள்ளதாயிருக்கவேண்டும். திதிதர்ப்பணத்திலும் - ஔதயிகமான ச்ரவண நக்ஷத்ரத்திலும், ஸங்கவாந்த ஸ்பர்சியான பூர்ணிமை, ஹஸ்தம் இம்மூன்றுகளிலும், முறையே ருக், யஜுஸ், ஸாமவேதிகள் ச்ராவணமாஸத்தில் உபாகர்மத்தைச் செய்யவேண்டும்.

अत्र वृद्धगार्ग्यः — 'घटीपरिमितः कालः सङ्गवादूर्ध्वपर्वणि । औदयिकमिति प्राहुर्मुनयस्तिथिचिन्तका इति ।। गर्गः — 'परेऽह्नि सङ्गवादूर्ध्वं पूर्णिमा श्रवणव्रते इति ।। स्मृत्यन्तरे — 'सन्धिः सङ्गवतः पश्चादर्वाङ्मध्यन्दिनाद्यदि । तत्रैवोपाकृतिं कुर्यात्सद्यश्च समिदाहुतिः ।। सन्धिः सङ्गवतः प्राक्चेत् पूर्वस्मिन्पर्वणि क्रिया । श्वोभूते समिदाधानमेष श्रावणिको विधि'रिति ।।

வ்ருத்தகார்க்யர் - ஸங்கவகாலத்திற்கு மேலுள்ள காலத்தில் கடிகையாவது வ்யாப்தியுள்ள காலத்தை ஔதயிகமென்று திதியையறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். கார்க்கர் - மறுதினத்தில் பூர்ணிமை, ஸங்கவகாலத்திற்கு மேல் இருந்தால், இது ச்ராவணத்திற்கு உரியது. மற்றொரு ஸ்ம்ருதியில் - பூர்ணிமா ப்ரதிபத்துகளின் ஸந்தியானது, ஸங்கவத்திற்குப்பின் மத்யான்ஹத்திற்கு முன்னிருந்தால், அன்றே உபாகர்மத்தையும் ஸமிதா தானத்தையும் செய்யவேண்டும். ஷ ஸந்தியானது ஸங்கவத்திற்கு முன்னிருந்தால் முதல்நாள் பர்வத்தில் உபாகர்மமும் மறுநாளில் ஸமிதாதானமும் செய்யப்பட வேண்டும். இது உபாகர்மத்தின் விதியாம்.

तथाऽध्वर्यूनधिकृत्य स्मर्यते — 'श्रावणी पौर्णमासी तु सङ्गवात्परतो यदि । तदैवौदयिकी ग्राह्या नान्यदौदयिकी भवेदिति ॥ तदेवमुदयाद्द्वादशघटिकाधिककिञ्चित्कालव्यापिन्यां पौर्णमास्यां यजुश्शाखिनामुपाकर्म, उदयाद्द्वादशघटिकाव्यापिनि हस्तनक्षत्रे छन्दोगानां, मौढ्यादिदूषितेषु सिंहभाद्रपदे कन्यापरपक्षे सायं त्रिमुहूर्तव्यापिनि हस्तनक्षत्रे छन्दोगानां, बह्वृचानां तु सूर्योदयात्परं घटिकाद्वयव्यापिनि श्रवणनक्षत्रे ॥

மற்றோரிடத்தில் யாஜுஷர்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது - ச்ராவண பூர்ணிமையானது ஸங்கவத்திற்குப் பின்னிருந்தால் தான் ஔதயிகீ என்று க்ரஹிக்கலாம். இல்லாவிடில் ஔதயிகீ என்றாகாது. ஆகவே உதயம் முதல் 12 நாழிகைக்குமேல் ஸ்வல்ப காலமாவது வ்யாப்தியுள்ள பூர்ணிமையில் யாஜுஷர்களுக்கு உபாகர்மம். உதயாதி 12 நாழிகை வ்யாப்தியுள்ள ஹஸ்த நக்ஷத்ரத்தில் ஸாமகர்களுக்கு உபாகர்மம், ஸிம்ஹபாத்ரபதம் மௌட்யாதி தோஷமாயிருந்தால் கன்யாமாஸத்தில் க்ருஷ்ணபக்ஷத்தில் ஸாயங்காலத்தில் 6 நாழிகை வ்யாப்தியுள்ள ஹஸ்தத்தில் உபாகர்மம், ஸூர்யோதயத்திற்குப் பிறகு 2 நாழிகை வ்யாப்தியுள்ள ச்ரவண நக்ஷத்ரத்தில் ருக்வேதிகளுக்கு உபாகர்மம்.

तथैव सङ्ग्रहे — 'उदयव्यापिनि त्वेव विष्णवृक्षे घटिकाद्वयम् । तत्कर्म सार्थकं (व्यापिके चैव) स्याच्च तदोपाकरणं भवेदिति ॥ तथा पद्धतौ - 'यां तिथिं समनुप्राप्य श्रवणं घटिकाद्वयम् । तस्यामुपाकृतिं कुर्युराश्वलायनशाखिन' इति ॥ गार्ग्यः - अर्धरात्रादधस्ताच्चेत् सङ्क्रान्त्यां ग्रहणेऽपि वा । न कर्तव्यमुपाकर्म परतश्चेन्न दोषभागिति ॥ वसिष्ठः — 'मलमासे निपतिते सूतके मृतकेऽपि वा । ग्रहणे सङ्क्रमे वाऽपि मौढ्येऽपि

गुरुशुक्रयोः ॥ प्रौष्ठपद्यामथाषाढ्यामुपाकरणमिष्यते । प्रौष्ठपद्यामुपाकुर्याच्छ्रावणं दूषितं यदि ॥ आषाढे वाऽपि कर्तव्यं प्रौष्ठपद्याश्च दूषणे । मासत्रयेऽपि दोषश्चेत् श्रावण्यामेव कारये' दिति ॥

இவ்விதமே ஸங்க்ரஹத்தில் - உதயம் முதல் இரண்டு நாழிகை வ்யாப்தியுள்ள ச்ரவண நக்ஷத்ரத்தில் செய்தாலே அந்தக் கர்மம் ஸபலமாகுமாதலால் அவ்விதமான ச்ரவணத்திலேயே உபாகரணம் செய்யப்படவேண்டும். அப்படியே பத்ததியில் - எந்த தினத்தில் ஶ்ரவணநக்ஷத்ரம் உதயாதி இரண்டு நாழிகை வ்யாப்தியுள்ளதாயிருக்கின்றதோ அந்த தினத்தில் ஆஶ்வலாயன சாகிகள் உபாகர்மத்தைச் செய்யவேண்டும். கார்க்யர் - ஸங்க்ரமணமாவது க்ரஹணமாவது அர்த்தராத்ரத்திற்கு முன்னிருந்தால் அன்று உபாகர்மத்தைச் செய்யக்கூடாது. அர்த்தராத்ரத்திற்குப் பிந்தியிருந்தால் தோஷமில்லை. வஸிஷ்டர் - மலமாஸத்திலும், ஜநநாசௌசத்திலும், மரணாசௌசத்திலும், க்ரஹணத்திலும், ஸங்க்ரமணத்திலும், குருசுக்ர மௌட்யத்திலும், ச்ராவண பூர்ணிமை நேர்ந்தால் ப்ரௌஷ்டபத பூர்ணிமையிலாவது, ஆஷாட பூர்ணிமையிலாவது உபாகரணத்தைச் செய்யவேண்டும். ச்ராவணிக்கு தோஷமிருந்தால் ப்ரௌஷ்டபதியிலும், ப்ரௌஷ்டபதிக்கும் தோஷமிருந்தால் ஆஷாடியிலும் செய்யவேண்டும். மூன்றுமாஸங்களிலும் தோஷமிருந்தால் ச்ராவணியிலேயே செய்யவேண்டும்.

व्यासः—'श्रावण्यामथवाऽऽषाढ्यां प्रौष्ठपद्यामथापि वा । दुष्टायां पूर्वपूर्वस्यामुत्तरस्यां विधीयते ॥ कालत्रयेऽपि दोषे तु श्रावण्यामेव कारयेत् । पौर्णमास्यास्तु नित्यत्वादापस्तम्बस्य शासनात् ॥ मुक्त्वा भाद्रपदाषाढौ श्रावण्यामेव कारयेदिति ॥ 'अधीतवेदविद्यानां कर्तव्यं तु द्विजन्मनाम् । अध्यायाङ्गमिदं नित्यमिति होवाच भार्गवः ॥ वेदोपाकरणे प्राप्ते कुलीरस्थे दिवाकरे । उपाकर्म न कर्तव्यं कर्तव्यं सिंहयुक्तके ॥

सिंहदर्शात्तु या पूर्वा पूर्णिमा श्रावणी मता । तत्रैवोपाकृतिं कुर्यात् सिंहस्थोऽर्को भवेन्न वा' इत्यादीनां वचनानां परस्परविरुद्धानां देशभेदेनाविरोधमाहुः ॥ (निगमः — 'श्रावण्यां श्रावणं कर्म यथाविधि समाचरेत्। उपाकर्म च कर्तव्यं कर्कटस्थे दिवाकरे' ॥ सत्यव्रतः — 'सिंहे रवौ श्रावणे च कन्यायां प्रौष्ठपादिके । आषाढ्यां कटके वाऽपि वेदोपाकरणं भवेत्' । व्याघ्रपादः — 'रवौ कटकराशिस्थेऽप्याषाढे श्रावणेऽपि वा । उपाकर्म च कर्तव्यं निषेधो नास्ति दक्षिणे' ॥ गर्गः — 'कुलीरे रविसंयुक्ते उपाकुर्यात्तु दक्षिणे । नर्मदोत्तरदेशे तु कर्तव्यं सिंहयुक्तके' इति ॥ 'कुलीरे सूर्यसंयुक्ते उपाकुर्यात्तु दक्षिणे । नर्मदोत्तरदेशे तु कर्तव्यं सिंहयुक्तक' इति ॥ आन्ध्रमहाराष्ट्रकर्णाटककायस्था दाक्षिणात्याः । तद्व्यतिरिक्तास्सर्वे नर्मदोत्तरदेशस्था इत्यभियुक्तवादः ॥

வ்யாஸர் - ச்ராவணீ, ஆஷாடீ, ப்ரௌஷ்டபதீ இவைகளுள் முந்தியது துஷ்டமாயிருந்தால் பிந்தியதில் செய்யவேண்டும். மூன்றுகாலங்களிலும் தோஷமிருந்தால் ச்ராவணியிலேயே செய்யவேண்டும். ஆபஸ்தம்பரின் விதியினுல். ச்ராவணி நித்யமானதால் பாத்ரபத ஆஷாட பூர்ணிமைகளைவிட்டு ச்ராவணியிலேயே செய்ய வேண்டும். 'வேதாத்யயனம் செய்த த்விஜர்களுக்கு அத்யயனத்திற்கு இது அங்கமானதால் அவச்யம் செய்யப்படவேண்டும் என்று பார்க்கவர் சொன்னுர்.' ஸூர்யன் கடகத்திலிருக்கும்போது உபாகர்மம் வந்தால் செய்யக்கூடாது. ஸூர்யன் ஸிம்ஹத்திலிருக்கும் போதுதான் செய்யவேண்டும்.' 'ஸிம்ஹமாஸத்தின் தர்சத்திற்கு முந்திய பூர்ணிமை எதுவோ அது ச்ராவணீ எனப்படும். ஆகையால் அதிலேயே உபாகரணத்தைச் செய்யவேண்டும். ஸூர்யன் ஸிம்ஹத்திலிருந்தாலும், இல்லாவிடினும்' என்றிவ்விதம் பரஸ்பர விருத்தங்களான வசனங்களுக்கு தேசபேதத்தைக் கொண்டு விரோத பரிஹாரத்தைச் சொல்லுகிருர்கள் - 'நர்மதாநதியின் தெற்கு

தேசத்தில், ஸூர்யன் கடகத்திலிருக்கும்போது உபாகரணம் செய்யவேண்டும். நர்மதையின் வடக்கு தேசத்தில், ஸூர்யன் ஸிம்ஹத்திலிருக்கும்போது செய்யவேண்டும்' என்று. ஆந்த்ரர், மஹாராஷ்ட்ரர், கர்ஞடகர், காயஸ்தர் என்ற இவர்கள் தக்ஷிணதேசத்தி லுள்ளவர்கள், மற்ற எல்லோரும் நர்மதோத்தர தேசத்திலுள்ளவர்கள் என்பது பெரியோர்களின் சொல்.

गुरुशुक्रमौढ्ये मलमासे च प्रथमोपाकरणं निषेधति वृद्धमनुः — 'गुरुभार्गवयोर्मौढ्ये मलमासे तथैव च । प्रथमोपाकृतिर्न स्यात्कुर्याच्चेत्स विनश्यतीति ॥ यत्तु — 'प्राधान्येन विधानाच्च मनुनाऽध्यायकर्मणः । प्रथमोपाकृतिश्चापि कर्तव्येत्याह गौतमः' इति गौतमवचनं, तत् कृतशान्तिविषयम् ॥

வ்ருத்தமனு - குருசுக்ரர்களின் மௌட்யத்திலும், மலமாஸத்திலும் ப்ரதமமான உபாகரணத்தைச் செய்யக்கூடாது. செய்தால் அவன் நசிப்பான். 'உபாகர்மத்தை முக்யமென்று மனு விதித்திருப்பதால் ப்ரதம உபாக்ருதியையும் செய்யலாம் என்று கௌதமர் சொல்லுகிருர்' என்ற கௌதம வசனம் சாந்தி செய்து செய்யலாமென்ற விஷயம்.

यदाह बृहस्पतिः — 'शान्तिं कृत्वा तयोर्वाऽपि शुक्रदेवेन्द्रमन्त्रिणाम् । होमैर्दानैर्जपैर्वाऽपि तयोरुदितमन्त्रकैः ॥ कर्तव्यं श्रावणं विप्रैरिति जीवेन भाषित'मिति ॥ श्रावणप्रौष्ठपदाषाढेष्वेकस्मिन् दोषरहिते प्रथमोपाकृतिः कर्तव्या । त्रिष्वपि दुष्टेषु श्रावणमासे शान्तिपूर्विका कर्तव्या ॥ उदितमन्त्रकैः ग्रहयज्ञोक्ततत्तन्मन्त्रैः ॥

ப்ருஹஸ்பதி - ச்ராவணம், ப்ரௌஷ்டபதம், ஆஷாடம் இவைகளுள் தோஷமில்லாத மாஸத்தில் ப்ரதமோபாகர்மாவைச் செய்யவேண்டும். மூன்றுமாஸங் களும் துஷ்டங்களாஞல் ச்ராவணமாஸத்திலேயே

*க்ரஹயக்ஞத்தில் சொல்லிய மந்த்ரங்களால் ஹோமம், ஜபம், தானம் இவைகளுடன் சாந்திசெய்து பிறகு செய்யவேண்டும்.*

पद्धतिग्रन्थे — ''बृहस्पते अतियदिति बृहस्पतेः, प्रवश्शुक्रायेति शुक्रस्य, आप्यायस्वेति मलमासे सोमस्य, सूर्योपरागे सङ्क्रान्तौ च चित्रन्देवानां उदुत्यञ्जातवेदसं, सूर्यो देवीमुषसं उद्वयन्तमसस्परि-आसत्येन, देवो वस्सवितोत्पुनात्विति सूर्यस्य सोमोपरागे सोमो धेनुमिति षड्भिः नवोनव इति च सोमस्य शान्तिहोमं कृत्वोपाकरणाङ्गहोमं कुर्यादिति ॥

*பத்ததிக்ரந்தத்தில் - 'ப்ருஹஸ்பதே அதியத்' என்ற மந்த்ரத்தினுல் குரு மௌட்யத்தில் குருவுக்கும், சுக்ர மௌட்யத்தில் 'ப்ரவச்சுக்ராய' என்பதால் சுக்ரனுக்கும், மலமாஸத்தில் 'ஆப்யாயஸ்வ' என்பதால் சந்த்ரனுக்கும், ஸூர்யக்ரஹணத்திலும், ஸங்க்ரமணத்திலும் 'சித்ரந் தேவாஞம், உதுத்யஞ்ஜாதவேதஸம், ஸூர்யோதேவீம், உத்வயம், ஆஸத்யேந, தேவோவ:' என்ற மந்த்ரங்களால் ஸூர்யனுக்கும், சந்த்ரக்ரஹணத்தில் 'ஸோமோ தேனும்' என்பது முதலான ஆறுமந்த்ரங்கள், 'நவோ, நவ:' என்ற மந்த்ரம் இவைகளால் சந்த்ரனுக்கும் சாந்திஹோம் செய்து பிறகு உபாகர்மாங்கமான ஹோமத்தைச் செய்ய வேண்டும்.*

प्रथमोपक्रमे प्राप्ते कुलीरस्थे रवौ सति । उपाकर्म न कुर्वीत कुर्यात् सिंहस्थिते रवौ' ॥ यत्तु — 'यज्ञोपवीतं कर्तव्यं श्रावणे गुरुशुक्रयोः । बाल्ये मौढ्येऽपि वार्द्धक्ये कर्तव्यं नित्यकर्मव'दित्यादि, तच्छाखाधीशस्य प्राबल्ये सति वेदितव्यमिति सार्वभौमीये ॥

*ஸூர்யன் கடகராசியிலிருக்கையில் ப்ரதமோபா கரணத்தைச் செய்யக்கூடாது. ஸூர்யன் ஸிம்மத்தி லிருக்கும்போது தான் செய்யவேண்டும். 'குரு, சுக்ரன்*

இவர்களுக்கு மௌட்யம், பால்யம், வார்த்தகம் இவைகள் நேர்ந்தாலும் ச்ராவணமாஸத்தில் உபாகர்மத்தை நித்யகர்மம்போல் செய்யவேண்டும்' என்பதுபோன்ற வசனம் சாகாதீசன் பலிஷ்டனாயிருந்தால் செய்யலாமென்ற விஷயமென்றறியத்தக்கது என்று ஸார்வபௌமீயத்தில்.

तत्रैव - 'ऋग्यजुस्सामाथर्वेशा जीवशुक्रकुजेन्दुजाः । शाखाधीशे शक्तियुक्ते तच्छाखाध्ययनं शुभम् । एको मूढो भवेदन्यः स्वोच्चमित्रांशगो यदि । स्वराशिमूढगौ चैव मौढ्यदोषो न विद्यते (इत्यात्रेयदर्शनात्) इत्यादिवचनाच्छुक्रे शक्तियुक्ते गुरुमौढ्येऽपि यजुश्शाखिनामुपाकर्म कर्तव्यम् । शुक्रमौढ्यादावप्येवम् । मौढ्यादिदोषेषूपाकरणवर्जनस्मरणं स्वशाखाधीशस्य शक्त्यभावविषयमिति । शाखाधीशस्य शक्तौ सत्यामपि मासत्रयदोषे श्रावणमासे शान्तिपूर्वकमेवोपाकर्म कर्तव्यमित्यन्ये ।

ஸார்வபௌமீயத்திலேயே - 'குரு, சுக்ரன், குஜன், புதன் இவர்கள் முறையே, ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற சாகைகளுக்கு அதிபதிகள். சாகாதீசன் சக்தியுள்ளவனாயிருக்கையில் அந்தசாகையை அத்யயனம் செய்வது சுபமாகும். குரு சுக்ரர்களுள் சாகாதீசனல்லாத ஒருவன் மூடனாயிருந்தால் சாகாதீசனாகிய மற்றவன் ஸ்வராசியிலாவது, தன் உச்சராசியிலாவது, மித்ரராசியிலாவது இருந்தால், அவர்கள் தன் ராசியிலேயே மௌட்யத்தையடைந்திருந்தாலும் மௌட்யதோஷ மில்லை' என்பது முதலான வசனங்களால் சுக்ரன் பலிஷ்டனாயிருந்தால் குருமௌட்யத்திலும் யாஜுஷர்கள் உபாகரணம் செய்யலாம். சுக்ரமௌட்யம் முதலியவை களிலுமிவ்விதமே. மௌட்யாதி தோஷங்களில் உபாகரணம் செய்யக்கூடாதென்பது சாகாதீசன் சக்தியற்றவனாயிருக்கும் விஷயம், ''சாகாதீசன் சக்தியுள்ளவனாயிருந்தால் மூன்று மாஸங்களுக்கும் தோஷமேற்பட்டால் ச்ராவணமாஸத்தில் சாந்தியைச்

செய்தே உபாகர்மத்தைச் செய்யவேண்டும்'' என்று சிலர்.

एतच्चोपाकरणं गृहस्थब्रह्मचारिणोः साधारणं कर्म । मन्वादिभिः गृहस्थधर्ममध्ये उपाकरणस्य विधानात्, उपाकर्म तथोत्सर्गं वनस्थानामपीष्यते । धारणाध्ययनं कृत्वा गृहिणां ब्रह्मचारिणामिति देवलस्मरणात्, 'अधीयीत गृहस्थोऽपि नियमाद् ब्रह्मचारिवदिति व्यासस्मरणाच्च, 'समावृत्तो ब्रह्मचारिकल्पेन यथान्यायमितर इति शौनकस्मरणाच्च ॥ अत्र ब्रह्मचारिकल्पेनेति ईषदसमाप्तौ कल्पप्प्रत्ययविधानात् गृहस्थस्य मेखलाजिनदण्डरहितमुपवीतधारणं तर्पणहोमादिकमविरुद्धं कर्तव्यतयाऽवगम्यते ॥

இந்த உபாகர்மம் க்ருகஸ்தனுக்கும் ப்ரம்மசாரிக்கும் பொதுவானது. மனு முதலியவர்கள் க்ருஹஸ்த தர்மங்களினிடையில் உபாகர்மத்தை விதித்திருப்பதாலும், 'உபாகர்ம, உத்ஸர்க்கம் இவை வானப்ரஸ்தர்களுக்கும் விதிக்கப்படுகின்றன. தாரணத்திற்காக அத்யயனம் செய்யும் க்ருஹஸ்தர்கள் பிரம்மசாரிகள் இவர்களுக்கும் விதிக்கப்படுகின்றன' என்று தேவலர் வசனத்தாலும், 'க்ருஹஸ்தனும் ப்ரம்மசாரிபோல் நியமத்துடன் அத்யயனம் செய்யவேண்டும்' என்று வ்யாஸர் சொல்லுவதாலும், 'ஸமாவர்த்தனமானவன், ப்ரம்ம சாரியின் கல்பத்தின்படியும், ஸமாவர்த்தன மாகாதவன் ந்யாயப்படியும் செய்யவேண்டும் என்று சௌனகர் சொல்லுவதாலும். இங்கு 'கல்ப' என்ற பதப்ரயோகத்தால், க்ருஹஸ்தனுக்கு மேகலை, மான், தோல், தண்டம் இவைகளின்றி உபவீததாரணம் தர்ப்பணம் ஹோமம் முதலிய அவிருத்தமானவை - செய்யத்தகுந்ததாய்த் தோன்றுகிறது.

अत्र उपवीतधारणविधिमाह भारद्वाजः — 'अथ यज्ञोपवीतस्य धारणे कथ्यते विधिः । स्नात्वा शुद्धः शुचौ देशे प्रक्षालितपदद्वयः ॥

करद्वन्द्वपवित्रश्च कृतोपस्पर्शनो द्विजः । उपविश्यासने दार्भे प्राणानायम्य वाग्यतः । मन्त्रं सदैवमुच्चार्य ब्रह्मसूत्रं गले क्षिपेत् ।। दक्षिणं बाहुमुद्धृत्य शिरसैव सह द्विजः । गृहस्थस्य वनस्थस्य सूत्रं प्रति पुनः पुनः ।। मन्त्रोच्चारणमाचामो द्वितयं क्रमशः स्मृतमिति ।।

உபவீதத்தைத் தரிக்கும் விதியைச் சொல்லுகிருர் பாரத்வாஜர் - யக்ஞோபவீதத்தைத்தரிக்கும் விதி சொல்லப்படுகின்றது. ஸ்நானம் செய்து சுத்தனுய் சுத்தமான தேசத்தில் இரண்டு கால்களையும் அலம்பிக்கொண்டு இரண்டு கைகளிலும் பவித்ரம் தரித்து ஆசமனம் செய்து தர்ப்பாஸனத்திலுட்கார்ந்து மௌனியாய் ப்ராணுயாமம் செய்து மந்த்ரத்தை தேவதையுடனுச்சரித்து, உபவீதத்தைக் கழுத்தில் போட்டுக் கொள்ளவேண்டும். வலது கையைச் சிரஸுடன் உபவீதத்திற்குள் தூக்கவேண்டும். க்ருஹஸ்தனுக்கும், வானப்ரஸ்தனுக்கும் ஒவ்வொரு உபவீதந்தோறும் மந்த்ரமும் ஆசமனமும் விதிக்கப்பட்டிருக்கின்றது.

शाण्डिल्यः — 'आर्द्रवासा न कुर्वीत कर्म किञ्चित्कथञ्चन । राक्षसं तद्धि विज्ञेयं तस्माद्यत्नेन वर्जयेत् । उपवीतादिकं धार्म्यमुपाकर्मणि तन्नवम् । अनवं वा नवं वाऽपि पुरातनमिह त्यजे'दिति ।। स्मृतिसारे — मौञ्जीयज्ञोपवीतादि नवमेव तु धारयेत् । कटिसूत्रञ्चापि नवं नवं वस्त्रमुपाकृताविति ।।

சாண்டில்யர் - ஈரமான வஸ்த்ரத்தைத் தரித்தவனுய் எக்கார்யத்தையும் செய்யக்கூடாது. செய்தால் அது ராக்ஷஸமாகும். ஆகையால் அதை அவச்யம் தவிர்க்கவேண்டும். உபாகர்மத்தில் உபவீதம் முதலியவைகளைப் புதிதாய் தரிக்கவேண்டும். முன் தரித்திருப்பது புதிதாய் இருந்தாலும் பழையதாயிருந்தாலும் அதை விட்டுவிடவேண்டும். ஸ்ம்ருதி ஸாரத்தில் - உபாகர்மத்தில் மௌஞ்சீ, யக்ஞோபவீதம்,

*கடிஸூத்ரம், வஸ்த்ரம் முதலியவைகளைப் புதியதாகவே தரிக்கவேண்டும்.*

व्रतचतुष्टयेऽप्येवमेव स्मर्यते — 'मेखलामजिनं दण्डं वस्त्रं यज्ञोपवीतकम्। पूर्वोपयुक्तमुत्सृज्य धारयेयुर्नवं व्रत इति ।। अत्र कपर्दी — 'प्रजापतिमुखान् देवानेकैकांस्त्रिस्तिलोदकम्। उद्धृत्य तर्पणं कुर्युः श्रावण्यां तैत्तिरीयकाः' इति ।। ब्रह्मचारिणामुपाकर्मणि वपनमावश्यकम्। 'श्रावण्यां पौर्णमास्यां शिष्यं वापयित्वे' ति वैखानसे दर्शनात्, 'क्षुरकर्म न कर्तव्यं चौलात्परमृतुत्रयम्। तथोपनयनादूर्ध्वमुपाकर्म विना क्वचित्' इत्यादिस्मृतेश्च। तत्र तिथिवारादिदोषोऽपि न चिन्त्यः। 'वैधे कर्मणि तु प्राप्ते कालदोषं न चिन्तयेत्। सद्यः क्षौरं प्रकुर्वीत मातापित्रोर्मृतौ तथे' ति वसिष्ठस्मरणात्।।

*நான்கு வ்ரதங்களிலும் இவ்விதமே சொல்லப்படுகிறது. மேகலை, க்ருஷ்ணாஜினம், தண்டம், வஸ்த்ரம், யக்ஞோபவீதம் இவைகளை முன்னிருந்தவைகளை விட்டுப்புதியதாய் வ்ரதத்தில் தரிக்கவேண்டும். கபர்தீ - தைத்திரீய சாகிகள் ச்ராவணபூர்ணிமையில் ப்ரஜாபதி முதலான தேவர்களைக் குறித்துத் தனித்தனியாய் திலோதகத்தை எடுத்து மூன்று தடவை தர்ப்பணம் செய்யவேண்டும். உபாகர்மத்தில் ப்ரம்மசாரிகளுக்கு வபனம் ஆவச்யகம். 'ச்ராவண பூர்ணிமையில் சிஷ்யனுக்கு வபனம் செய்வித்து' என்று வைகாநஸ ஸூத்ரத்தில் காணப்படுவதாலும், 'சௌளத்திற்குப் பிறகு 3ருது (6-மாஸம்) வபனம் கூடாது. அப்படியே உபநயனத்திற்குப் பிறகும் 6-மாஸங்களில் உபாகர்மமின்றி வபனம் கூடாது' என்பது முதலான ஸ்மிருதியினாலும். அதில் திதிவாராதி தோஷமும் கவனிக்கத்தக்கதில்லை. 'சாஸ்த்ரத்தினால் விதிக்கப்பட்ட கர்மம் நேர்ந்தால் அதில் காலதோஷத்தைக் கவனியாமல் உடனே வபனம் செய்துகொள்ளவேண்டும்.*

*மாதாபிதாக்களின் மரணத்திலு மப்படியே' என்று வஸிஷ்டர் சொல்லியிருப்பதால்.*

एवं प्रत्यब्दं श्रावण्यामुपाकर्म कार्यम् । तथा कात्यायनः— 'प्रत्यब्दं यदुपाकर्म सोत्सर्गं विधिवद्द्विजैः । क्रियते छन्दसां तेन पुनराप्यायनं परम् । अयातयामैश्छन्दोभिर्यत् कर्म क्रियते द्विजैः । क्रीडमानैरपि सदा तत्तेषां सिद्धिकारण'मिति ॥

*இவ்விதம் வர்ஷந்தோறும் ச்ராவணியில் உபாகர்மத்தைச் செய்யவேண்டும். காத்யாயனர் - பிராமணர்கள் வர்ஷந்தோறும் செய்யும் உத்ஸர்ஜனத்துடன் கூடிய உபாகர்மத்தினால், வேதங்களுக்கு மறுபடி வீர்யத்தால் பூரணம் ஏற்படுகிறது. வீர்யம் குறையாத வேதங்களால் பிராமணர்கள் எக்கார்யத்தை விளையாட்டுடன் செய்தாலும் அது அவர்களுக்கு எப்பொழுதும் கார்யஸித்திக்குக்காரணமாகின்றது.*

अनध्यायः ।

तत्र मनुः — 'यथाशास्त्रन्तु कृत्वैवमुत्सर्गं छन्दसां बहिः । विरमेत्पक्षिणीं रात्रिं तद्वाऽप्येकमहर्निशम्' ॥ तद्वेदाध्ययनम् ॥ 'अत ऊर्ध्वन्तु छन्दांसि शुक्लेषु नियतः पठेत् ।' वेदाङ्गानि च सर्वाणि कृष्णपक्षे तु सं पठेत् ॥ एतदुपाकृत्याध्ययनं स्नातकानां ब्रह्मचारिणामपि साधारणम् । 'इमान्नित्यमनध्यायानधीयानो विवर्जयेत् । अध्यापनञ्च कुर्वाणः शिष्याणां विधिपूर्वकम् । उपाकर्मणि चोत्सर्गे त्रिरात्रं क्षपणं स्मृतम् । अष्टकासु त्वहोरात्रमृत्वन्तासु च रात्रिषु' ॥ उपाकर्मणि त्रिरात्रमुत्सर्गे तु पूर्वोक्तपक्षिण्यहोरात्राभ्यां सह विकल्प इति विज्ञानेश्वरीये ॥

*அனத்யாயம்*

*மனு - இவ்விதம் சாஸ்த்ரப்படி வேதோத்ஸர்ஜனத்தை க்ராமத்திற்கு வெளியில் செய்து அன்றுபகலும் மறுநாள்*

பகலும் கூடிய ராத்ரியில் அத்யயனம் செய்யக்கூடாது. அல்லது அன்று பகல் ராத்ரிமுழுவதுமாவது கூடாது. இந்த அனத்யாயத்திற்குப்பிறகு சுக்ல பக்ஷங்களில் வேதங்களேயும், க்ருஷ்ணபக்ஷங்களில் வேதாங்கங்கள் எல்லாவற்றையும் நியமத்துடன் படிக்கவேண்டும். இவ்விதம் உபாகரணம் செய்து அத்யயனம் செய்வது ஸ்நாதகர்களுக்கும் ப்ரம்மசாரிகளுக்கும் பொதுவானது. இனி சொல்லப்படும் அநத்யாயகாலங்களே அத்யயனம் செய்யும் சிஷ்யனும், செய்விக்கும் குருவும் வர்ஜிக்கவேண்டும். உபாகர்மத்திலும், உத்ஸர்ஜனத்திலும் 3 நாள் கூடாது. அஷ்டகைகளிலும், ருதுக்களின் முடிவிலும் ஒருநாள் அனத்யயனம். 'உபாகர்மத்தில் மூன்றுநாள். உத்ஸர்க்கத்தில் முன் சொல்லிய பக்ஷிணி 'ஒருநாள் இவைகளுடன் விகல்பம்' என்று விக்ஞானேஶ்வரீயத்தில்.

प्रथमाध्ययने त्र्यहमितरत्र पक्षिण्यहोरात्रं वा 'उत्सर्गे प्रथमाध्याये त्वनध्यायस्त्र्यहं भवेत् । धारणाध्ययनादौ तु पक्षिणीदिनमेव वेति मनुस्मरणादित्यन्ये ॥ 'मार्गशीर्षे तथा पौषे माघमासे तथैव च । तिस्रोऽष्टकास्समाख्याताः कृष्णपक्षेषु सूरिभि'रिति ॥ विष्णुस्तु - 'तिस्रोऽष्टकाः तिस्रोऽन्वष्टकाः तिस्रः पूर्वेद्युः प्रौष्ठपदे हेमन्त-शिशिरयोरपरपक्षे त्विति ॥ नित्यानध्यायानाह हारीतः - 'प्रतिपत्सु चतुर्दश्यामष्टम्यां पर्वणोर्द्वयोः । श्वोऽनध्यायेऽद्य शर्वर्यां नाधीयीत कदाचनेति ॥

முதலாவது அத்யயனத்தில் மூன்றுநாள், மற்றதில் பக்ஷிணீ அல்லது தினம் உத்ஸர்ஜனத்திற்குப்பிறகு ப்ரதமாத்யயனத்தில் மூன்று நாட்கள் தாரணாத்யயனம் முதலியவற்றில் பக்ஷிணீ அல்லது ஒருநாள் அத்யயனம் என மனு கூறியுள்ளதால் என்பர். மார்கசீர்ஷம், பௌஷம், மாகம் இம்மாஸங்களில் கிருஷ்ணபக்ஷத்தில் மூன்று அஷ்டகைகள் என வித்வான்கள் கூறுவர். விஷ்ணுவோவெனில் புரௌஷ்டபத மாதத்திலும்

ஹேமந்த சிசிர ருதுக்களிலும் கிருஷ்ணபக்ஷங்களில் மூன்று அஷ்டகைகள் என்கிறார். அஷ்டமியிலும் அதன் முதல் தினத்திலும் மறுதினத்திலும் செய்யப்படுவதால், மூன்று அஷ்டகைகள் என்பர். நித்யங்களான அநத்யயன தினங்களைச் சொல்லுகிறார். ஹாரீதர் - பிரதமை, சதுர்தசி, அஷ்டமீ 2 பர்வங்கள் அனத்யயன் தினத்திற்கு முந்திய ராத்திரி இவைகளில் அத்யயனமே சொல்லக்கூடாது.

मनुः - 'अमावास्या गुरुं हन्ति शिष्यं हन्ति चतुर्दशी । ब्रह्माष्टकापौर्णमास्यस्तस्मात्ताः परिवर्जयेदिति ।। ब्रह्म वेदः । वीर्यं घ्नन्ति । अष्टकापौर्णमास्यः - अष्टमीपौर्णमास्यः ।। नैमित्तिकानध्यायानाह याज्ञवल्क्यः 'श्वक्रोष्टु-गर्दभोलूकसामबाणार्तनिस्वने । अमेध्यशव-शूद्रान्त्यश्मशान-पतितान्तिके ।। देशेऽशुचावात्मनि च विद्युत्स्तनित-संप्लवे । भुक्त्वाऽऽर्द्रपाणिरम्भोन्तरर्द्धरात्रेऽतिमारुते ।। पांसुप्रवर्षे दिग्दाहे सन्ध्यानीहारभीतिषु । धावतः पूतिगन्धे च शिष्टे च गृहमागते ।। खरोष्ट्रयानहस्त्यश्वनौवृक्षेरिणरोहणे । सप्तत्रिंशदनध्यायानेतांस्तान् कालिकान्विदुरिति ।।

மனு - அமாவாஸ்யை குருவையும் சதுர்தசீ சிஷ்யனையும் அஷ்டமியும் பௌர்ணமியும் வேதத்தையும் கெடுக்குமானதால் இவைகளில் அத்யயனம் கூடாது. நைமித்திகமான அனத்யயன தினங்களை யாஜ்ஞவல்க்யர் சொல்லுகிறார் - நாய், நரி, கழுதை, கோட்டான், ஸாமவேதம், பாணத்தால்அரபட்டவனின் துயரக் குரல், மேத்யம், சவம், சூத்ரன், சண்டாளன், ச்மசானம், பதிதன் இவர்களின் அருகிலும் அசுத்ததேசத்திலும் அசக்தனா யிருக்கும்பொழுதும் மின்னல் இடி அடிக்கடி உண்டாகும் போதும் சாப்பிட்டபிறகு ஈரமுள்ள கைகளையுடையவனா யிருக்கும் போதும். ஜலத்தின் நடுவிலிருக்கும்போதும் நடுராத்திரியிலும் பெரும் காற்றடிக்கும் போதும் மண்மாரியிலும் திக்குகள் எரிவதுபோல்

காணப்படும்போதும், ஸந்த்யையிலும் பனியிலும் திருடன் முதலிய பயத்தில் ஓடிக்கொண்டிருக்கும் போதும் துர்கந்தத்திலும் சுரோத்திரியன் வீட்டிற்கு வந்த போதும் கழுதை, ஒட்டகம், வண்டி முதலிய வாகனம், காளை, குதிரை, ஓடம், மரம், உப்பளம் இவைகளிலிருக்கும் போதும் அத்யயனம் கூடாது. இவை 37ம் தற்காலிக அனத்யயனங்கள்.

स एव - त्र्यहं प्रेतेष्वनध्यायः शिष्यर्त्विग्गुरुबन्धुषु । उपाकर्मणि चोत्सर्गे स्वशाखाश्रोत्रिये तथा' ॥ तथा-प्रेते ॥ 'सन्ध्या गर्जितनिर्घातभूकंपोल्कानिपातने । समाप्य वेदं द्युनिशमारण्यकमधीत्य च' ॥ द्युनिशं - अहोरात्रमनध्यायः । 'पञ्चदश्यां चतुर्दश्यां अष्टम्यां राहुसूतके । ऋतु सन्धिषु भुक्त्वा च श्राद्धिकं प्रतिगृह्य च' ॥ ऋतुसन्धिः = प्रतिपत् । द्युनिशमनध्यायः ॥ 'पशुमण्डूकनकुलश्वाहिमार्जारमूषकैः । कृतेऽन्तरे त्वहोरात्रं शक्रपाते तथोच्छ्रय' इति ॥ शक्रपातः = आश्वयुक्छुक्लद्वादशी ॥ उच्छ्रयः भाद्रपदशुक्लद्वादशी ॥

யாஜ்ஞவல்கியரே, சிஷ்யன் ருத்விக், குரு, பந்து இவர்களில் எவரேனும் இறந்தாலும் உபாகர்மத்திற்கும் உத்ஸர்ஜனத்திற்கும் பிறகும் ஸ்வசாகையை ஓதுவித்த அந்தணர் இறந்தாலும் 3 நாட்கள் அனத்யயனம். ஸந்தியா காலங்களில் மேக ஒலி, இடி, பூகம்பம், கொள்ளிவிழுதல், வேதத்தை ஓதி முடித்தல், ஆரண்ய வேதப்பகுதியை, அத்யயனம் செய்தல் இவைகளுக்குப் பிறகு ஒருநாள் அனத்யயனம். அமாவாஸ்யை, பூர்ணிமை, சதுர்தசி, அஷ்டமி, கிரஹணம், ருது ஸந்தி, சிராத்த போஜனம் இவைகளில் ஒருநாள் அநத்யயனம். பசு, தவளை, கீரி, நாய், பாம்பு, பூனை, எலி இவை குறுக்கில் சென்றாலும், இந்திரதுவஜமேறும் நாளிலும் (பாத்ரபதசுக்லத்வாதசீ) இந்த்ரத்வஜமிறக்கும் தினத்திலும் (ஆப்வயுஜ சுக்லத்வாதசீ) ஒருநாள் அனத்யயனம்.

यत्पुनर्गौतमेनोक्तम् 'श्वनकुलमण्डूकसर्पमार्जाराणां त्र्यहमनध्यायो विप्रवासश्चेति, तत् प्रथमाध्ययनविषयमिति विज्ञानेश्वरीये ।। मनुः – 'कर्णश्रवेऽनिले रात्रौ दिवा पांसुसमूहने । एतौ वर्षास्वनध्यायावध्यायज्ञाः प्रचक्षते ।। विद्युत्स्तनितवर्षेषु महोल्कानाञ्च सम्भवे । आकालिकमनध्यायमेतेषु मनुरब्रवी'दिति ।। विद्युदादिप्रदुर्भावकालादारभ्य नाडिकाषष्टिरकालः, तत्र भवमाकालिकम् ।। येयमुक्ता विद्युदादिप्रवृत्तिः सा वर्षासु सन्ध्ययोश्चेदाकालिकमनध्ययननिमित्तं भवति । अन्यथा चेन्नेत्याह स एव — 'एतांस्त्वभ्युदितान्विद्याद्यदा प्रादुष्कृताग्निषु । तदा विद्यादनध्यायमनृतावभ्रदर्शने' इति ।। प्रादुष्कृताग्निविहृतेष्वग्निषु, सन्ध्ययोरिति यावत् । एतान्विद्युदादीनभ्युदितान्विद्यात्पश्येत्तदा आकालिकमनध्यायं विद्यात् । अनृतौ वर्षर्तुव्यतिरिक्ते चर्तौ, अभ्रसंप्लवे अकालिकमनध्यायं विद्यात् ।। 'निर्घाते भूमिचलने ज्योतिषाञ्चोपसर्जने ।। एतानाकालिकान्विद्यादनध्यायानृतावपि' ।। उपसर्जने - उपप्लवे । चलनादौ । अपिशब्दादनृतावपि ।

நாய், கீரி, தவளை, பாம்பு, பூனை இவைகள் குறுக்கிட்டால் மூன்றுநாள் அனத்யாயமும், விப்ரவாஸமும் செய்யவேண்டும் என்று கௌதமர் சொல்லியது ப்ரதமாத்யயனத்தைப் பற்றியது, என்று விக்ஞானேஶ்வரீயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனு - வர்ஷாகாலத்தில் இரவில் மிகுந்தசப்தத்துடன் காற்றடித்தாலும், பகலில் புழுதியை வாரியடித்தாலும் அனத்யாயமென்று அத்யயனத்தை அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். மின்னல், இடி, மழை, கொள்ளி இவைகள் ஸம்பவித்தாலும் ஆகாலிக அனத்யாயமென்று மனு சொன்னார். மின்னல் முதலியவைகள் உண்டாகியகாலம் முதல் 60 நாழிகையுள்ளகாலம் ஆகாலமாம். அதிலுள்ளது ஆகாலிகம். இந்த மின்னல்

முதலியவை வர்ஷா காலத்தில் ஸந்தியைகளில் உண்டானால் ஆகாலிக அனத்யயனத்திற்கு நிமித்தங்களாகின்றன. மற்றக்காலத்திலில்லை என்கிறார் மனுவே - இவைகள் ஸந்த்யாகாலத்திலுண்டானால் ஆகாலிக அனத்யாயம். வர்ஷருதுவைத் தவிர்த்த மற்ற ருதுக்களில் மேகம் மிகுதியாயுண்டானாலும் ஆகாலிகமான அனத்யாயம். இடிவிழுதல், பூகம்பம், க்ரஹங்களுக்குத் தொந்தரை இவைகள் எந்த ருதுவில் உண்டானாலும் ஆகாலிக அனத்யாயமுண்டு.

'अन्तर्गतशवे ग्रामे वृषलस्य च सन्निधौ । अनध्यायो रुद्यमाने समवाये जनस्य च ।। उदके मध्यरात्रे च विण्मूत्रस्य विसर्जने । उच्छिष्टश्राद्धभुक्तौ च मनसाऽपि न चिन्तयेत् ।। प्रतिगृह्य द्विजो विद्वानेकोद्दिष्टस्य केतनम् । त्र्यहं न कीर्तयेद्ब्रह्म राज्ञो राहोश्च सूतके' इति ।। एकोद्दिष्टस्य -नवश्राद्धादेः, कीर्त्यते -निमन्त्र्यतेऽनेनेति-केतनं द्रव्यम् । राज्ञः सूतके पुत्रजन्मनि, राहुसूतके = ग्रहणमुक्तौ च त्र्यहं न कीर्तयेदिति । एतद्ग्रस्तास्तमनविषयम् । 'रवीन्द्वोर्ग्रहणे चैव नाधीयीत दिवानिश'मिति स्मरणात् ।। 'शयानः प्रौढपादश्च बद्ध्वा चैवावसक्थिकाम् । नाधीयीतामिषं जग्ध्वा सूतकान्नाद्यमेव च' ।। पादस्योपरि पादो यस्य स प्रौढपादः । वस्त्रादिनावसक्थिकां बद्ध्वा ।।

பிணமுள்ள க்ராமத்திலும், அதார்மிகனின் எதிரிலும், அழுகைச் சத்தத்திலும், ஜனக்கூட்டத்திலும், ஜலத்திலும், நடுராத்ரியிலும், மலமூத்ரவிஸர்ஜனத்திலும், அசுத்தனாயிருக்கும்போதும், ப்ராத்தபோஜனத்திலும் வேதத்தை மனதாலும் சிந்திக்கக்கூடாது. நவப்ராத்தம் முதலிய ஏகோத்திஷ்ட ப்ராத்தத்தில், ப்ரதிக்ரஹம் செய்தாலும், அரசனுக்குப் புத்ரன் பிறந்த ஸூதகத்திலும், க்ரஹணத்திலும் மூன்றுநாள் அனத்யயனம், க்ரஹணத்தில் மூன்றுநாள் அனத்யயனம் என்றது க்ரஸ்தாஸ்தமன விஷயம். 'ஸூர்யசந்த்ரர்களின் க்ரஹணத்தில் ஒருநாள்

அனத்யயனம்' என்ற ஸ்ம்ருதியினால். படுத்தவனாயும், பாதத்தில் பாதத்தை வைத்துக்கொண்டும், வஸ்த்ரத்தினால் கால்களைக் கட்டிக் கொண்டும், மாம்ஸம், ஸூதகான்னம் முதலியதைச் சாப்பிட்டும் அத்யயனம் செய்யக்கூடாது.

'नीहारे बाणशब्दे च सन्ध्ययोरेव चोभयोः । अमावास्याचतुर्दश्योः पौर्णमास्यष्टकासु च ।। पांसुवर्षे दिशां दाहे गोमायुविरुते तथा । श्वखरोष्ट्रे च रुवति पङ्क्तौ च न पठेद्द्विजः ।। नाधीयीत श्मशानान्ते ग्रामान्ते गोव्रजे तथा । वसित्वा मैथुनं वासः श्राद्धिकं प्रतिगृह्य च' ।। श्मशानान्ते श्मशानसमीपे । गोव्रजे- गोष्ठे - (घोषे) । मैथुनं मैथुनसम्बन्धि । प्रतिगृह्य- भुक्त्वा स्वीकृत्य च ।। श्राद्धिकं प्रतिगृह्येत्येतत् प्रपञ्चयति स एव — 'प्राणि वा यदि वाऽप्राणि यत्किञ्चिच्छ्राद्धिकं भवेत् । तदालभ्याप्यनध्यायः पाण्यास्यो हि द्विजः स्मृतः' ।। आलभ्य दत्तं पाणिना स्पृष्ट्वा । प्रतिग्रह एव भोजनमित्याह पाण्यास्यो हीति ।।

பனியிலும், பாணத்தின் சப்தத்திலும், இருஸந்த்யைகளிலும் அமாவாஸ்யை, சதுர்த்தசீ, பூர்ணிமை, அஷ்டமீ இவைகளிலும், புழுதிவீச்சிலும், திக்குகள் எரிவதிலும், நரி, நாய், கழுதை, ஒட்டகம் இவைகளின் சப்தத்திலும், இவைகளின் பந்தியிலும் அத்யயனம் கூடாது. ச்மசானத்தின் ஸமீபத்திலும், க்ராமத்தின் ஸமீபத்திலும், மாட்டுக் கொட்டிலிலும், மைதுன வஸ்த்ரத்தைத் தரித்தும், ச்ராத்தத்தைச் சேர்ந்த வஸ்துவை ப்ரதிக்ரஹித்தும் அத்யயனம் செய்யக்கூடாது. ப்ராணனுள்ளதாயினும், ப்ராணனில்லாததாயினும், ச்ராத்தத்தைச் சேர்ந்த வஸ்துவைக் கையால் ப்ரதிக்ரஹித்தாலும் அனத்யாயம். பிராமணனுக்கு கையே முகமானதால் ப்ரதிக்ரஹமே போஜனமாம்.

न विवादे न कलहे न सेनायां न सङ्गरे । न भुक्तमात्रे नाजीर्णे न वमित्वा न शुक्तके' ।। वाग्युद्धं विवादः । अङ्गयुद्धं कलहः । शस्त्रयुद्धं -

सङ्गरः । शुक्तके भुक्तस्यान्नस्य यातयामस्य गन्धरसाविर्भावे ॥ अतिथिश्चाननुज्ञाप्य मारुते वाति वा भृशम् । रुधिरे तु स्रुते गात्रा च्छस्त्रेण च परिक्षते ॥ सामध्वनावृग्यजुषं नाधीयीत कदाचन । वेदस्याधीत्य चैवान्तमारण्यकमधीत्य च' ॥ सामध्वनौ - सामाधीत्य तत्क्षणमेव ऋग्यजुषं नाधीयीत । वेदस्यान्तं उपनिषदम्, आरुणकेतुकं चाधीत्य ऋग्यजुषं नाधीयीत ॥

*வாய்க்கலகத்திலும், கை முதலியவைகளாற் சண்டையிலும், ஸேனையிலும், ஆயுத யுத்தத்திலும், சாப்பிட்ட உடனும், அஜீர்ணத்திலும், வாந்தி செய்த உடனும், புளிப்பானவை ஏப்பத்திலும் அத்யயனம் கூடாது. அதிதியினிடம் அனுக்ஞை பெறுமலும், காற்று அதிகமாய் அடிக்கும்போதும், தன் தேகத்திலிருந்து இரத்தம் பெருகும்போதும், ஆயுதத்தால் காயம் ஏற்பட்டாலும். அத்யயனம் கூடாது. ஸாமவேதத்தின் த்வனி கேட்கப்படும்போது, வேதத்தின் அந்தமான உபநிஷத்தை அத்யயனம் செய்த பிறகும், ஆருணகேதுகத்தை அத்யயனம் செய்தபிறகும், ருக், யஜுர்வேதங்களை அத்யயனம் செய்யக்கூடாது.*

सामध्वनावृग्यजुषानध्यायेऽर्थवादमाह स एव — 'ऋग्वेदो देवदेवत्यो यजुर्वेदस्तु मानुषः । सामवेदः स्मृतः पित्र्यस्तस्मात्तस्याशुचिर्ध्वनिः' ॥ 'पशुमण्डूकमार्जारश्वसर्पनकुलाखुभिः । अन्तरागमने विद्यादनध्यायमहर्निशम् ॥ द्वावेव वर्जयेन्नित्यमनध्यायौ प्रयत्नतः । स्वाध्यायभूमिश्चाशुद्धामात्मानश्चाशुचिं द्विजः' इति । नित्यं - आपद्यपि । अनेनान्येषामनध्यायनिमित्तानामापद्यनुज्ञा सूचिता ॥

*ஸாமவேதத்வனியில் ருக் யஜுர்வேதங்களின் அனத்யாயவிஷயத்தில்அர்த்தவாதத்தைச் சொல்லுகின்றார் மனுவே - ருக்வேதம் தேவர்களுடையது. யஜுர் வேதம் மானுஷமாகும். ஸாமவேதம் பித்ருக்களுடையது.*

ஆகையால் ஸாமவேதத்தின் த்வனி அசுசிபோன்றது. பசு, தவளை, பூனை, நாய், பாம்பு, கீரி, எலி இவைகள் குருவுக்கும் சிஷ்யனுக்கும் குறுக்காகச் சென்றால் ஒருநாள் அனத்யாயம். அத்யயனம் செய்யும் தேசம் அசுத்தமாயிருந்தாலும், தன் தேகம் அசுத்தமாயிருந்தாலும் அத்யயனம் கூடாது. இந்த இரண்டு நிமித்தங்களிலும் எப்பொழுதும் அவச்யம் அத்யயனம் கூடாது. இதனால் மற்ற நிமித்தங்களிலும் ஆபத்காலத்தில் அனுக்ஞை ஸூசிக்கப்பட்டது.

नारदः - 'अयने विषवे चैव शयने बोधने हरेः । अनध्यायस्तु कर्तव्यो मन्वादिषु युगादिष्विति ॥ मन्वादयो मत्स्यपुराणे दर्शिताः - 'आश्वयुक्छुक्लनवमी कार्तिकी द्वादशी तथा । तृतीया चैत्रमासस्य तथा भाद्रपदस्य च ॥ फाल्गुनस्याप्यमावास्या पुष्यस्यैकादशी सिता । आषाढस्यापि दशमी माघमासस्य सप्तमी ॥ श्रावणस्याष्टमी कृष्णा आषाढस्यापि पूर्णिमा । कार्तिकी फाल्गुनी चैत्री ज्यैष्ठी पञ्चदशी सिता ॥ मन्वन्तरादयश्चैते दत्तस्याक्षय्यकारका इति ॥

நாரதர் - அயனம், விஷுவம், சயனத்வாதசீ, உத்தானத்வாதசீ, மன்வாதிகள், யுகாதிகள் இவைகளிலும் அத்யயனம் கூடாது. மன்வாதிகள் மத்ஸ்யபுராணத்தில் தெரிவிக்கப்படிருக்கின்றன - ஆச்வயுஜ சுக்ல நவமீ, கார்த்திக சுக்ல த்வாதசீ, சைத்ர சுக்ல த்ருதீயா, பாத்ரபத சுக்ல த்ருதீயா, பால்குனமாவாஸ்யா, புஷ்ய சுக்லைகாதசீ, ஆஷாட சுக்ல தசமீ, மாக சுக்லஸப்தமீ, ச்ராவண க்ருஷ்ணாஷ்டமீ, ஆஷாட பூர்ணிமா, கார்த்திக பூர்ணிமா, பால்குன பூர்ணிமா, சைத்ர பூர்ணிமா, ஜ்யேஷ்ட பூர்ணிமா இந்த 14 திதிகளும் மன்வாதிகளெனப்படும். இவைகளில் செய்யப்பட்ட தானம் குறைவில்லாத பலனைத்தரும்.

युगादयो विष्णुराणेऽभिहिताः - 'वैशाखमासस्य सिता तृतीया नवम्यसौ कार्तिकशुक्लपक्षे । नभस्यमासस्य च कृष्णपक्षे त्रयोदशी पञ्चदशी तु माघ इति ॥ शयनं - आषाढशुक्लद्वादशी, बोधनं - कार्तिकशुक्ल-द्वादशी ॥

யுகாதிகள் விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக் கின்றன - வைசாக சுக்ல த்ருதீயா, கார்த்திக சுக்ல நவமீ, ப்ரௌஷ்டபத க்ருஷ்ணத்ரயோதசீ, மாகாமாவாஸ்யா இந்த நான்கும் யுகாதிகளாம்.

व्यासः - 'श्लेष्मातकस्यच्छायायां शाल्मलेर्मधुकस्य च । कदाचिदपि नाध्येयं कोविदारकपित्थयोरिति ॥ हारीतः — 'महानवम्यां द्वादश्यां भरण्यामपि पर्वसु । तथाऽऽक्षयतृतीयायां शिष्यान्नाध्यापयेद्विजः ॥ माघमासे तु सप्तम्यां रथाख्यायां तु वर्जयेत् । अध्यापनं समभ्यञ्जन् स्नानकाले च वर्जयेदिति ॥ द्वादश्यां श्रवणद्वादश्याम्, भरण्यां - भाद्रपदभरण्याम् ॥ तदाह वृद्धगार्ग्यः — 'ऋक्षेषु द्वे हि नक्षत्रे स्वाध्याये परिवर्जयेत् । द्वादश्यां श्रवणं भाद्रे भरणी च महालय इति ॥

வ்யாஸர் - நரிவள்ளி, முள்ளிலவு, இலுப்பை, மலையகத்தி, விளா இவைகளின் நிழலில் அத்யயனம் கூடாது. ஹாரீதர் - மஹாநவமீ, த்வாதசீ, பரணீ, பர்வங்கள், அக்ஷயத்ருதீயை, ரதஸப்தமீ இவைகளிலும், எண்ணெய் தேய்த்துக் கொண்டும், ஸ்நாநகாலத்திலும் அத்யயனம் செய்விக்கக்கூடாது. இங்கு த்வாதசீ என்பது ப்ரவணத்வாதசியையும், பரணீ என்பது பாத்ரபத பரணியையும் குறிக்கின்றது. இதை வ்ருத்தகார்க்யர் சொல்லுகிறார் - நக்ஷத்ரங்களுள் இரண்டு நக்ஷத்ரங்களை அத்யயனத்தில் தவிர்க்கவேண்டும். அவைகளாவன - த்வாதசியில் சேரும் ப்ரவணமும், மஹாளயபக்ஷத்தில் வரும் பரணியும்.

सत्यतपाः - 'आभाकासितपक्षेषु मैत्रश्रवणरेवती । द्वादश्यां संस्पृशेयुश्चेत्तत्रानध्ययनं विदुरिति ॥ गार्ग्यः - 'मैत्रर्क्षात् षोडशर्क्षेषु वर्षेऽनध्ययनं विदुः । अतिवर्षे त्रिरात्रं स्यादल्पवर्षे तु वासर'मिति ॥ मैत्रर्क्षे - अनुराधाः, तस्मादारभ्य मृगशीर्षान्तेषु अतिवृष्टौ त्रिरात्रं अल्पवृष्टौ वासरमित्यर्थः ॥

ஸத்யதபஸ் - ஆஷாடம், பாத்ரபதம், கார்த்திகம் இம்மாஸங்களின் சுக்லத்வாதசியில், அனுஷம், ச்ரவணம், ரேவதீ இந்த நக்ஷத்ரங்கள் ஸம்பந்தித்தால் அதில் அனத்யயனம் என்பார்கள். கார்க்யர் - வர்ஷகாலத்தில் அனுஷம் முதல் ம்ருகசீர்ஷம் வரையிலுள்ள 16 நக்ஷத்ரங்களில் அதிகமழையானால் 3-நாட்களும், ஸ்வல்ப மழையானால் 1 நாளும் அனத்யயனமாம்.

जाबालिः - 'नाधीयीत नरो नित्यमादावन्ते च पक्षयोः । आदौ च हीयते बुद्धिरन्ते च ब्रह्म हीयत' इति ॥ पक्षादिः — प्रतिपत्, पक्षान्तः चतुर्दशी ॥ तथा रामायणे हनुमद्वचनम् — 'सा स्वभावेन तन्वङ्गी तद्वियोगाच्च कर्शिता ॥ प्रतिपत्पाठशीलस्य विद्येव तनुताङ्गतेति ॥ बोधायनः - 'सायं प्रातस्सन्ध्ययोश्च नाधीयीत महानिशि । प्रातः सन्ध्या त्रिनाडी स्यात् सायंसन्ध्या तथाविधा ॥ महानिशा तु विज्ञेया चतस्रो घटिकास्तथेति ॥

ஜாபாலி - ப்ரதமையில் அத்யயனம் செய்தால் புத்திகுறையும். சதுர்தசியில் அத்யயனம் செய்தால் வேதம் குறையும். ஆகையால் அவைகளில் அவச்யம் அத்யயனம் செய்யக்கூடாது. அவ்விதமே ராமாயணத்தில் ஹனுமான் வாக்யம் - ஸ்வபாவத்தினாலேயே மெலிந்த சரீரமுடைய அந்த ஸீதை ராமனின் வியோகத்தினாலும் வருத்தப்பட்டவளானதால், ப்ரதமையில் படிக்கும் வழக்கமுள்ளவனுடைய வித்யைபோல் இளைப்பை அடைந்திருக்கிறாள். போதாயனர் - இரண்டு ஸந்த்யைகளிலும் மகாராத்ரியிலும் அத்யயனம் கூடாது. ப்ராதஸ்ஸந்த்யை 3 நாழிகை. ஸாயம் ஸந்த்யை 3 நாழிகை. மகாராத்ரி என்பது 4 நாழிகை.

वृद्धगौतमः — 'यायाद्गजोऽन्तरे व्याघ्रो नैवाधीयीत हायनम् । शशोऽपि वा श्वपाकोऽजः षण्मासानिति सूरय इति ॥ गौतमः —

'नाधीयीत वायौ दिवा पांसुहरे कर्णश्राविणि नक्तं वाण(वाद्य)भेरी मृदङ्गगर्तार्तशब्देषु (गर्तो रथः)श्वसृगालगर्दभसंह्रादे लोहितेन्द्र-धनुर्नीहारेष्वभ्रदर्शने चापर्तौ मूत्रित उच्चारितो निशासन्ध्यादकेष्विति सङ्कुलोपहित वेदसमाप्तिच्छर्दि श्राद्धमनुष्ययज्ञभोजनेष्वहोरात्रमिति ॥ सङ्कुलः राज्योपद्रवः, उपहितः अग्निदाहः छर्दिः- भुक्त्वोद्गारः, श्राद्धं पार्वणं, मनुष्य यज्ञः सीमन्तादिः ॥

வ்ருத்த கௌதமர் - *யானை, புலி இவைகள் குருசிஷ்யர்களின் நடுவிற் சென்றால் ஒரு வர்ஷமும், முயல், நாயாடி, ஆடு இவைகள் சென்றால் ஆறுமாதமும் அத்யயனம் கூடாது என்பர் அறிஞர்கள்.* கௌதமர் - பகலில் *புழுதியைத் தூற்றும் காற்றடிக்கும்போதும், ராத்ரியில் அதிகசப்தத்துடன் இடிக்கும்போதும், வாணம், பேரீ, ம்ருதங்கம், ரதம் துக்கப்படுகிறவன் இவைகளின் சப்தத்திலும், நாய், நரி, கழுதை இவைகளின் சப்தத்திலும் சிவந்த இந்த்ரதனுஸ், மூடுபனி, அகாலத்தில் மேகதர்சனம் இவைகளிலும், மலமூத்ர விஸர்ஜனம், ஆவச்யகமான ஸமயத்திலும், மகாநிசியிலும், ஸந்த்யைகளிலும், ஜலத்திலிருக்கும்போதும், ராஜ்யத்திற்கு உபத்ரவகாலத்திலும், அக்னிபாதையிலும், வேதஸமாப்தியிலும், வாந்தியிலும், ஃப்ராத்தபோஜனம், ஸீமந்தான்னதி போஜனம் இவைகளிலும் ஒருநாள் அனத்யயனம்.*

आपस्तम्बः - 'निगमेष्वध्ययनं वर्जये'दिति ॥ निगमः = चत्वरः ॥ 'श्मशाने सर्वतश्शम्याप्रासाद्ग्रामेणाध्यवसिते क्षेत्रेण वा नानध्यायो ज्ञायमाने तु तस्मिन्नेव देशे नाधीयीतेति ॥ शम्या क्षिप्ता यावति देशे पतति ततोऽर्वाक् श्मशानसमीपे नाध्येयम् । यदा श्मशानं ग्रामतया क्षेत्रतया वाऽध्यवसितं स्वीकृतं तदाऽध्येतव्यमेवेति । यदि तु अवसितमपि श्मशानं ज्ञायते अयं स प्रदेश इति तदा तावत्येव देशे नाधीयीत न शम्याप्रासादित्यर्थः ॥

ஆபஸ்தம்பர் - நாற்சந்தியில் அத்யயனம் செய்யக்கூடாது. ஶ்மசானத்தைச் சுற்றி சம்யாப்ராஸ தூரத்திற்குள் அத்யயனம் கூடாது. (கட்டு முளையை விட்டெறிந்தால் அது எவ்வளவு தூரத்தில் விழுமோ அவ்வளவு தூரமுள்ள ப்ரதேசம் 'சம்யாப்ராஸம் எனப்படும்). மயானமாய் இருந்த இடமே க்ராமமாகவாவது, வயலாகவாது இருந்தால் அனத்யாயமில்லை. இந்த இடம் தான் மயானமாயிருந்த தென்று தெரிந்தால் அந்த இடத்தில் மட்டில் அத்யயனம் கூடாது. சம்யாப்ராஸம் வரையில் கூடாதென்ற நியமம் இல்லை.

स एव –'सन्धावनुस्तनिते रात्रिं स्वप्नपर्यन्तां विद्युती'ति ॥ सायंसन्ध्यायां मेघगर्जने रात्रिं सर्वां नाधीयीत । तत्र विद्युति सत्यां स्वप्नपर्यन्तां प्रहरावशिष्टां रात्रिं नाधीयीतेत्यर्थः ॥ प्रातस्सन्ध्यामाह स एव – 'उपव्युषं यावता वा कृष्णां रोहिणीमिति शम्याप्रासाद्विजानीयादेतस्मिन्काले विद्योतमाने सप्रदोषमहरनध्याय इति । उपव्युषसि विद्युति सत्यामपरेद्युः सप्रदोषमहरनध्यायः । प्रदोषादूर्ध्वमध्ययनम् । यावता वा कालेन शम्याप्रासादर्वागवस्थितां गां कृष्णामिति वा रोहिणीं गौरवर्णामिति वा जानीयादेतस्मिन्काले उपव्युषसि वेत्यन्वयः ॥

ஆபஸ்தம்பரே - ஸாயம்ஸந்தியில் மேகம் கர்ஜித்தால் ராத்ரிமுழுவதும் அனத்யயனம். அப்பொழுது மின்னல் உண்டானால் தூக்கம் வரையுள்ள ராத்ரி மட்டும் (மூன்று யாமம் வரையில்) அனத்யயனம். விடியற்காலத்திலாவது, சம்யாப்ராஸத்திற்குட்பட்டிருக்கும் பசுவைக் கருப்பு என்றாவது சிவப்பு என்றாவது அறியக்கூடிய ஸமயத்திலாவது மின்னல் உண்டானால் மறுநாள் ப்ரதோஷத்துடன் கூடிய பகல் முழுவதும் அனத்யயனம்.

स एव — 'दह्रेऽपररात्रे स्तनयित्नुनोर्ध्वमर्द्धरात्रादित्येक इति ॥

वर्षर्ताविदम् । इतरर्तौ स एवाह — 'विद्युत्स्तनयित्नुर्वृष्टिश्चापर्तौ यत्र सन्निपतेयुस्त्र्यहमनध्याय एकेन द्वाभ्यां वैतेषामाकाल' मिति ।।

*அவரே - தஹ்ர மென்கிற அபர ராத்ரத்தில் இடி சப்தம் உண்டானுல் ப்ரதோஷத்துடன் கூடிய பகல் முழுவதும் அனத்யாயம். அர்த்தராத்ரத்திற்குப்பிறகு உண்டானுலும் அனத்யாயம் என்று சிலர். (ராத்ரியின் மூன்ருவது பாகம் அபர ராத்ர மெனப்படும். அதை மூன்று பாகங்களாக்கினுல் முதல் பாகம் அபர ராத்ரமென்றும், மூன்ருவது பாகம் தஹ்ர மென்றும் சொல்லப்படுகிறது. இது வர்ஷருதுவில்.*

यस्मिन् देशे यो वर्षाकालस्ततोऽन्यस्तत्रापर्तुः । तत्र यदि विद्युदादयस्समुदितास्स्युः तदा त्र्यहमनध्यायः । एतेषां विद्युदादीनां मध्ये एकेन द्वाभ्यां वा योगे आकालमनध्यायः । परेद्युस्तस्मात्कालादित्यर्थः ।

*மற்ற ருதுவிலுள்ளதைப்பற்றி அவரே - எந்தத் தேசத்தில் எது வர்ஷாகாலமோ அதைத்தவிர்த்த காலம் அத்தேசத்தில் அபர்த்து எனப்படும். அபர்த்துவில் மின்னல், இடி, மழை இம்மூன்றும் சேர்ந்து உண்டானுல் மூன்று நாள் அனத்யாயம். இவைகளுள் ஒன்று, அல்லது இரண்டு நேர்ந்தால் ஆகாலம் (60 நாழிகை) அனத்யயனம்.*

स्मृत्यर्थसारे — 'चतुर्दश्यष्टमीपर्वप्रतिपद्वर्जितेषु च । वेदाङ्गन्यायमीमांसाधर्मशास्त्राणि चाभ्यसेत् ।। उदयेऽस्तमये वाऽपि मुहूर्तत्रयगामि यत् । तद्दिनं तदहोरात्रं चानध्यायविदो विदुः ।। केचिदाहुः- क्वचिद्देशे यावत्तद्दिननाडिकाः, तावदेव त्वनध्यायो न तन्मिश्रदिनान्तरे ।। अधिकायां त्रयोदश्यां चतुर्दश्यां दिवा यदि । अमावास्या च दृश्येत तदाऽनध्ययनं भवेदिति ।। अत्र त्रयोदशीवृद्ध्या दिनद्वये स्वाध्यायदिनत्वमापन्नाऽधिकेत्युच्यते । तस्यां त्रयोदश्यामनध्ययनम् । यदि चतुर्दश्यां दिवा अमावास्या स्वल्पाऽपि दृश्येतेत्यर्थः ।।

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் - சதுர்தசீ, அஷ்டமீ, பர்வங்கள், ப்ரதமை இவைகள் தவிர மற்றதினங்களில் வேதாங்கங்கள், ந்யாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்த்ரம் இவைகளை அப்யஸிக்க வேண்டும். உதயத்திலாவது, அஸ்தமயத்திலாவது மூன்று முகூர்த்தம் (6-நாழிகை) அனத்யாய திதி வ்யாபித்திருந்தால் அந்தத்தினமும் அந்த அஹோராத்ரமும் அனத்யாயமென்று அனத்யாய மறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். அனத்யாயதிதிகளின் நாழிகைகள் உள்ள வரையில் அனத்யயனமே யன்றி அதற்கு மேற்பட்ட திதியில் இல்லையென்று சிலதேசத்தில் சிலர் சொல்லுகின்றனர். சதுர்தசியின் பகலில் ஸ்வல்பமாக வாவது அமாவாஸ்யை காணப்படுமாகில் அதற்கு முன் உள்ள அதிகத்ரயோதசியில் அனத்யயனம்.

स एव — 'प्रणवव्याहृतीनां च गायत्र्याः शिरस्तथा । नित्ये नैमित्तिके कार्ये व्रते यज्ञे क्रतौ तथा ।। प्रवृत्ते काम्यकार्ये च नानध्यायस्तथा स्मृतः। देवतार्चनमन्त्राणां नानध्यायः सदा स्मृत' इति ।। आपस्तम्बोऽपि — 'विद्यां प्रत्यनध्यायः श्रूयते न कर्मयोगे मन्त्राणा'मिति ।। सङ्ग्रहेऽपि — 'अल्पं जपेदनध्ययो पर्वण्यल्पतरं जपेत् । श्रीरुद्रं पावमानीश्च गृहीतनियमादृत इति ।। मनुः — 'वेदोपाकरणे चैव स्वाध्याये चैव नैत्यके । नानुरोधोऽस्त्यनध्याये होममन्त्रेषु चैव ही'ति ।।

அவரே - ப்ரணவம், வ்யாஹ்ருதிகள், காயத்ரீ, அதன்சிரஸ் இவைகளுக்கும், நித்ய நைமித்திக கார்யங்களிலும், வ்ரதத்திலும், யக்ஞத்திலும், க்ரதுவிலும், காம்ய கர்ம்ங்களிலும், தேவதார்ச்சனத்திலும் மந்த்ரங் களுக்கு அனத்யாயமில்லை. ஆபஸ்தம்பர் - மந்த்ரங்களைக் கற்றுக்கொள்வதில் அனத்யாயமே யன்றி, கர்மங்களை யனுஷ்டிப்பதிலில்லை. ஸங்க்ரஹத்தில் - ஸ்ரீ ருத்ரம், பாவமானி, நியமமுள்ள மந்த்ரம் இவைகளைத் தவிர மற்ற மந்த்ரங்களை, அனத்யாயத்தில் அல்பமாகவும், பர்வத்தில் மிக அல்பமாகவும் ஜபிக்கவேண்டும். மனு -

உபாகர்மத்திலும், (வேதாங்கத்திலும்) ப்ரம்ம யக்ஞத்திலும், ஹோம மந்த்ரங்களிலும் அனத்யயனத்தை அனுஸரிக்கவேண்டியதில்லை.

कूर्मपुराणे — 'अनध्यायश्च नाङ्गेषु नेतिहासपुराणयोः । न धर्मशास्त्रेष्वन्येषु पर्वण्येतानि वर्जये'दिति ॥ कालादर्शे - 'पूर्वश्चोर्ध्वमनध्यायमहस्सङ्क्रमणे निशि । दिवा पूर्वोत्तरा रात्रिरिति वेदविदो विदुः ॥ स्वाध्यायस्याह्न्यनध्यायो मुहूर्तद्वितयादधि । स्यात्किञ्चिदपि तं प्राहुरनध्यायश्च संशये ॥ यदा भवेदनध्याय तिथिरुत्तरभाविनी । तदा पूर्वतिथौ रात्रौ नाधीयीतेति निश्चय इति ॥ अनयोरर्थः — 'स्वाध्यायस्याह्न्यनध्यायः मुहूर्तद्वितयात् अधि ऊर्ध्वं किञ्चिदपि स्यात् तं स्वाध्यायमनध्यायं प्राहुः । पूर्वोक्तनिमित्त-सन्देहादनध्यायसंशये चानध्यायं प्राहुः । यदा उत्तरभाविनी तिथिरनध्यायो भवेत् तदा पूर्वतिथौ रात्रौ नाधीयीतेति निश्चय' इति ॥ अत्र बोधायनः — 'यद्यनध्यायदिनमत्रापि स्वाध्यायदिने द्विमुहूर्तादुपरि दृश्येत निमित्तविशेषसंशयेनानध्यायविषयमप्यनध्यायं प्राहुरिति विज्ञायते' इति ॥

கூர்மபுராணத்தில் - வேதாங்கங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தர்மசாஸ்த்ரங்கள் இவைகளுக்கு அனத்யயனம் கிடையாது. பர்வங்களில் இவைகளை அத்யயனம் செய்யக்கூடாது. காலாதர்சத்தில் - ராத்ரியில் ஸங்க்ரமணமானால் அதற்கு முன் பின் உள்ள பகல்களும் அந்தராத்ரியும், பகலில் ஸங்க்ரமணமானால் அதற்கு முன் பின் உள்ள ராத்ரிகளுடன் அந்தப்பகலும் அனத்யயனம். அத்யயனதினத்தின் பகலில் அனத்யயன திதியானது இரண்டு முஹூர்த்தங்களுக்குமேல் கொஞ்சம் சம்பந்தப்பட்டாலும் அந்தத் திதி அனத்யயனமாகும். சொல்லிய நிமித்தத்தில் ஸம்சயமிருந்தாலும் அனத்யயனம். மறுதிதி அனத்யயன திதியாயிருந்தால்

முதல் நாள் ராத்ரியில் அத்யயனம் கூடாது. போதாயனரும் - இதையே கூறுகிறார்.

हारीतः — 'श्वोऽनध्यायेऽद्य शर्वर्यां नाधीयीत कदाचन । चातुर्मास्यद्वितीयासु वेदाध्यायं विवर्जयेदिति ॥ आषाढकार्तिक-फाल्गुनकृष्णद्वितीयाश्चातुर्मास्यद्वितीयाः ॥ गौतमोऽपि — 'कार्तिकी फाल्गुन्याषाढी पौर्णमासीति तिस्रोऽष्टकास्त्रिरात्रमिति ॥ उक्तपौर्णमासीरारभ्य त्रिरात्रम् । तथा तिस्रोऽष्टकाः सप्तम्यादयः । तास्वपि त्रिरात्रमनध्ययनमित्यर्थः ॥ अथ प्रदोषानध्यायानाह वृद्धगार्ग्यः — 'रात्रौ यामद्वयादर्वाक्सप्तमी स्यात्त्रयोदशी । प्रदोषस्स तु विज्ञेयस्सर्वविद्याविगर्हितः ॥ रात्रौ नवसु नाडीषु चतुर्थी यदि दृश्यते । प्रदोषस्स तु विज्ञेयो वेदाध्यायविगर्हितः ॥ आद्यन्तयोः कलामात्रं यदि पश्येत्त्रयोदशीम् । प्रदोषस्स तु विज्ञेयस्सर्वशब्दविगर्हितः । त्रयोदशी यदा रात्रौ यामस्तत्र निशामुखे । प्रदोष इति विज्ञेयो ज्ञानवान्मौनमाचरेत् ॥ भोजनं मैथुनं यानमभ्यङ्गं हरिदर्शनम् । अन्यानि शुभकर्माणि प्रदोषे नैव कारयेदिति ॥

ஹாரீதர் - மறுநாள் அனத்யயனமானால் முதல்நாள் ராத்ரியிலும், சாதுர்மாஸ்ய த்விதீயைகளிலும் வேதாத்யயனம் செய்யக்கூடாது. ஆஷாட கார்த்திக பால்குனங்களின் கிருஷ்ண பக்ஷத்விதீயைகள் சாதுர்மாஸ்ய த்விதீயைகளெனப்படும். கௌதமர் - கார்த்திகம், பால்குனம், ஆஷாடம், இம்மூன்று மாஸங்களின் பூர்ணிமை முதல் மூன்று நாட்களும், அஷ்டகாகாலங்களில் ஸப்தமீ முதல் மூன்று நாட்களும் அனத்யயனம். ப்ரதோஷாநத்யாயங்களைச் சொல்லுகின்றார் வ்ருத்த கார்க்யர் - ராத்ரியில் இரண்டு யாமங்களுக்குள் ஸப்தமீ அல்லது த்ரயோதசீ இருக்குமானால் அது ப்ரதோஷ மெனப்படும். அது ஸகல வித்யைகளுக்கும் நிஷித்தமான காலம். ராத்ரியில் ஒன்பது நாழிகைக்கும் சதுர்த்தீ

ब्राह्मणस्य तु यद्दत्तं तदभावे तु तद्धनम्। स कुल्ये तस्य निनयेत्तदभावेऽस्य बन्धुषु। दद्यात्सजातिशिष्येभ्यस्तदभावेऽप्सु निक्षिपेदिति ॥

நாரதர் - பிராமணர் விஷயத்தில் உத்தேசித்த தானத்தை உடனே கொடுக்கவேண்டும். கொடாமல் ஒரு நாள் அதிக்ரமித்தால் இரண்டு மடங்கு அதிகமும், மூன்று நாளானல் ஆறு மடங்கும், ஒரு வர்ஷமானல் ஆயிரம் மடங்கும், அதிகமாகக் கொடுக்கவேண்டும். ஒரு வர்ஷத்திற்கு மேல் ப்ராயச்சித்தமில்லை. தாதா நரகத்தை அடைவான். பிராமணனை உத்தேசித்துக் கொடுக்கப்பட்ட தானத்ரவ்யத்தை, அவனில்லாவிடில் அவன் குலத்தில் பிறந்தவனுக்கும், அவனில்லாவிடில் அவன் பந்துவுக்கும், அவனில்லாவிடில் அவனுக்கு ஸமானஜாதியுள்ளவனுக்கும், அல்லது சிஷ்யனுக்கும் கொடுக்கவேண்டும். அவனுமில்லாவிடில் ஜலத்தில் போடவேண்டும்.

आपस्तम्बः - 'देशतः कालतः शौचतः सम्यक् प्रतिग्रहीतृत इति दानानि प्रतिपादयती' ति ॥ वाल्मीकिः - 'उत्पतन्नपि वाऽऽकाशं विशन्नपि रसातलम्। अटन्नपि महीं कृत्स्नां नादत्तमुपतिष्ठते ॥ दत्तं हि प्राप्यते स्वर्गे दत्तमेवोपभुज्यते। यत्किञ्चिद्दत्तमश्नाति नादत्तमुपतिष्ठते' इति ॥

ஆபஸ்தம்பர் - புண்யக்ஷேத்ரத்திலும், புண்யகாலத்திலும், க்ருச்ராதிஸமாப்தியிலும், நல்ல ப்ரதிக்ரஹீதாவினிடத்திலும் தானங்களைக் கொடுக்கவேண்டும். வால்மீகி - ஆகாசத்திற் பறந்தாலும், பாதாளத்திற் புகுந்தாலும், பூமிமுழுவதும் சுற்றி யலைந்தாலும், முன் ஜன்மங்களிற் கொடுபடாததை அடையமுடியாது. ஸ்வர்க்கத்திலும், முன் கொடுத்ததையே அடைகிருன். கொடுக்கப்பட்டதையே அனுபவிக்கின்ருன். இவ்வுலகிலும், முன்கொடுத்ததையே புஜிக்கின்ருன். கொடுக்காததை அடைவதென்பதில்லை.

यत्तु- 'दानं क्रयधर्मश्चापत्यस्य न विद्यत' इत्यापस्तम्बस्मरणम्, 'स्वकुटुम्बाविरोधेन देयं दारसुतादृत इति यदपि याज्ञवल्क्यवचनम्,

तज्ज्येष्ठपुत्रविषयमेकपुत्रविषयं च । द्वादशविधेषु पुत्रेषु दत्तक्रीतयोरपि मन्वादिभिः पठितत्वात्, 'दत्तौरसेतरेषां तु पुत्रत्वेन परिग्रह' इति दत्तौरसव्यतिरिक्तानामेव पुत्राणां कलौ वर्ज्यत्वस्मरणाच्च ।। तथा च वसिष्ठः - न ज्येष्ठं पुत्रं दद्यात् प्रतिगृह्णीयाद्वा न चैकं पुत्रं स हि सन्तानाय पूर्वेषां, न स्त्री पुत्रं दद्यात् प्रतिगृह्णीयाद्वाऽन्यत्राभ्यनुज्ञानाद्भर्तुः, पुत्रं प्रतिग्रहीष्यन् बन्धूनाहूय राजनि चावेद्य निवेशनस्य मध्ये व्याहृतीभिर्हुत्वा अदूरबान्धवं सन्निकृष्टमेव प्रतिगृह्णीयादिति ।। बह्वृचब्राह्मणेऽपि शुनश्शेपाख्याने - 'ज्येष्ठं पुत्रं न प्रयच्छेदित्यादि ।।

'பிள்ளையைத் தானம் செய்தலும், க்ரயம் செய்தலும் கூடாது' என்ற ஆபஸ்தம்பவசனமும் 'தன் குடும்பத்திற்கு விரோதமின்றி பெண்ஜாதி, பிள்ளைகளைத்தவிர மற்றதைத் தானம் செய்யலாம்' என்ற யாக்ஞவல்க்ய வசனமும் மூத்தபிள்ளை விஷயமும், ஏகபுத்ரவிஷயமுமாம், ஏனெனில், மன்வாதிகள் பன்னிரண்டு விதமான புத்ரர்கள் நடுவில் தத்தன், க்ரீதன் இவர்களையும் படித்திருப்பதாலும், 'தத்தன், ஔரஸன் இவர்களைத் தவிர மற்ற புத்ரர்களைக் கலியில் ஸ்வீகரிக்கக்கூடாது' என்று ஸ்ம்ருதியிருப்ப தாலும். அப்படியே வஸிஷ்டர் - ஜ்யேஷ்ட புத்ரனைக்கொடுக்கக்கூடாது, வாங்கவும் கூடாது. ஏகபுத்ரனையுமப்படியே. அவன் முன்னோர்களின் வம்ஶத்திற்காக உள்ளவன். ஸ்த்ரீ பர்த்தாவின் உத்தரவின்றிப்புத்ரனைக்கொடுக்கக்கூடாது, வாங்கவும் கூடாது. புத்ரனை ஸ்வீகரிப்பவன்தன் பந்துக்களை அழைத்து, அரசனிடம் தெரிவித்து, வீட்டின் நடுவில் வ்யாஹ்ருதிகளால் ஹோமம் செய்து, ஸமீபபந்துவாயும், ஸமீபத்திலிருப்பவனுமான புத்ரனையே ஸ்வீகரிக்க வேண்டும். பஹ்வ்ருசப்ராம்ஹணத்தில் சுனச்சேபனின் வ்ருத்தாந்தத்தில் - ஜ்யேஷ்டனான புத்ரனைக் கொடுக்கக் கூடாது என்பது முதலியன.

अथ दानपात्रनिरूपणम्।

तत्र मनुः - 'ब्राह्मणो जायमानो हि पृथिव्यामधि जायते। ईश्वरः सर्वभूतानां धर्मकोशस्य गुप्तये॥ सर्वस्वं ब्राह्मणस्येदं यत्किञ्चिज्जगतीगतम्। श्रैष्ठ्येनाभिजनेनेदं सर्वं वै ब्राह्मणोऽर्हती'ति॥ स्मृतिसारे 'सर्वस्य प्रभवो विप्राः श्रुताध्ययनशालिनः। तेभ्यः क्रियापराः श्रेष्ठास्तेभ्योऽप्यध्यात्म-वित्तमा' इति॥ स्मृत्यर्णवे - 'अज्ञेभ्यो ग्रन्थिनः श्रेष्ठा ग्रन्थिभ्यो धारिणो वराः। धारिभ्यो ज्ञानिनः श्रेष्ठा ज्ञानिभ्योऽध्यवसायिन' इति॥

**தானயோக்யர்கள்**

மனு - *பிராமணன் பிறக்கும்போதே பூமியில் பெரியவனாகிறான். ஸகலப்பிராணிகளின் தர்மங்களைக் காக்கவும் வல்லவனாகின்றான். பூமியிலுள்ள தனமும் ப்ராமணனுக்குச் சொந்தமானது போன்றது. ப்ரம்மாவின் முகத்திற் பிறந்ததால் சிறப்பால் ப்ராமணனே எல்லாவற்றையும் க்ரஹிக்க அர்ஹனாகிறான்.* ஸ்ம்ருதி ஸாரத்தில் - *வேதசாஸ்த்ரங்களை அறிந்த பிராமணர்கள், எல்லோருக்கும் பிரபுக்களாவார்கள். அவர்களைவிட அனுஷ்டானம் செய்பவர்கள் சிறந்தவர்கள், அவர்களைவிட ஆத்மாவை நன்றாயறிந்தவர்கள் சிறந்தவர்கள்.* ஸ்ம்ருத்யர்ணவத்தில் - *படிக்காதவர்களைவிடப் படித்த வர்களும், அவர்களைவிடப்படித்ததை மறவாதவர்களும், அவர்களைவிட அர்த்தத்தை அறிந்தவர்களும், அவர்களை விட அனுஷ்டானம் செய்பவர்களும் சிறந்தவர்களாம்.*

यमः - 'विद्यायुक्तो धर्मशीलः प्रशान्तो दान्तः क्षान्तः सत्यवादी कृतज्ञः। स्वाध्यायवान् धृतिमान् गोशरण्यो दाता यज्वा ब्राह्मणः पात्रमाहुः। स्वाध्यायाढ्यं योनिमन्तं प्रशान्तं वैतानस्थं पापभीरुं बहुज्ञम्। स्त्रीषु क्षान्तं धार्मिकाणां शरण्यं वृत्तेः कान्तं तादृशं पात्रमाहु'रिति॥

யமன் - *வித்வானும், தர்மசீலனும், சாந்தி, தாந்தி, பொறுமை, ஸத்யம், நன்றியறிதல், வேதாத்யயனம்,*

தைர்யம் இவைகளுடையவனும், கோஸம்ரக்ஷணம் செய்பவனும், தானம் செய்பவனும், யாகம் செய்பவனும் ஆன ப்ராமணன் (பாத்ரம்)(தானத்திற்கு யோக்யன்) எனப்படுவான். வேதாத்யயனமுள்ளவனும், நற்குலத்திற் பிறந்தவனும், சாந்தனும், அக்னிஹோத்ரியும், பாப பயமுள்ளவனும், மிகவறிந்தவனும், ஸ்த்ரீகளிடம் பொறுமையுள்ளவனும், தார்மிகர்களைக் காப்பவனும், நன்னடத்தைகள் உள்ளவனும் பாத்ரம் என்பார்கள்.

याज्ञवल्क्यः - 'न विद्यया केवलया तपसा वाऽपि पात्रता । यत्र वृत्तमिमे चोभे तद्धि पात्रं प्रकीर्तितमिति । शातातपः - 'यथाऽश्वा रथिहीनाः स्युः रथी चाश्वैर्यथा विना । एवं तपो ह्यविद्यस्य विद्या वा ह्यतपस्विनः ।। यथाऽन्नं मधुसंयुक्तं मधु चान्नेन संयुतम् । एवं तपश्च विद्या च संयुतं भेषजं मतमिति ।। वसिष्ठः - 'किञ्चिद्वेदमयं पात्रं किञ्चित्पात्रं तपोमयम् । पात्राणा मुत्तमं (मपि तत्) पात्रं शूद्रान्नं यस्य नोदर इति ।।

யாக்ஞவல்க்யர் - தனியான தபஸ்ஸினாலும், தனியான வித்யையினாலும் பாத்ரத்தன்மை இல்லை. எவனிடத்தில் இவ்விரண்டும் அனுஷ்டானமும் இருக்கின்றவோ அந்தப் பிராமணனே பாத்ரமெனப் படுவான். சாதாதபர் - வித்யையில்லாதவனின் தபஸ்ஸானது தேர்க்காரனில்லாத குதிரைகள் போலவும், தபஸ்ஸில்லாதவனின் வித்யையானது குதிரைகளில்லாத தேர்க்காரன் போலவுமாம். அன்னமும், தேனும் சேர்ந்து எப்படி ஹிதகரமாகிறதோ, அதுபோலத் தபஸ்ஸும் வித்யையும் சேர்ந்து ஹிதகரமாகின்றது. வஸிஷ்டர் - எவன் வயிற்றில் சூத்ரான்னம் சேரவில்லையோ அவனே பாத்ரங்களுள் உத்தமமான பாத்ரமாம்.

ब्रह्मकैवर्तके - 'ये पूर्वं पूजिता ये च मानिताः स्युर्नमस्कृताः । तान्निराकृत्य चान्येषु कुर्वन् भक्तिं व्रजत्यध इति ।। देवलः - 'मात्रश्च ब्राह्मणश्चैव श्रोत्रियश्च ततः परम् । अनूचानस्तथा भ्रूण ऋषिकल्प ऋषिर्मुनिः।

इत्येतेऽष्टौ समुद्दिष्टा ब्राह्मणाः प्रथमं श्रुतौ । तेषां परः परः श्रेष्ठो विद्यावृत्तविशेषत इति ॥

ப்ரம்மகைவர்த்தகத்தில் - தன்ஞல் முன்பு பூஜிக்கப்பட்டும், ஸம்மானிக்கப்பட்டும், நமஸ்கரிக்கப் பட்டுமுள்ளவர்களை நிராகரித்து அன்யர்களிடத்தில் பக்தியைச் செய்பவன் பதிதஞகிருன். தேவலர் - மாத்ரன், பிராமணன், ம்ரோத்ரியன், அனூசானன், ப்ரூணன், ருஷிகல்பன், ருஷி, முனி என எட்டு விதமாகப் பிராமணர்கள் வேதத்தில் சொல்லப்படுகின்றனர். இவர்களுள் முந்தியவனைவிடப் பிந்தியவன் வித்யையாலும், ஆசாரத்தாலும் சிறந்தவன் ஆகின்ருன்.

एतेषां लक्षणमाह स एव - 'ब्राह्मणानां कुले जातो जातिमात्रो यदा भवेत् । अनुपेतः क्रियाहीनो मात्र इत्यभिधीयते । एकदेशमतिक्रम्य वेदस्याचारवानृजुः । स ब्राह्मणस्समाख्यातो निभृतः सत्यवाग्घृणी ॥ एकदेशातिक्रमो वेदस्य किञ्चिन्न्यूनस्याध्ययनम् । निभृतः - शान्तः। 'एकां शाखां सकल्पां वा षड्भिरङ्गैरधीत्य वा । षट्कर्मनिरतो विप्रः श्रोत्रियो नाम धर्मवित् ॥ जन्मना ब्राह्मणो ज्ञेयः संस्कारैर्द्विज उच्यते । विप्रत्वं विद्यया चापि त्रिभिः श्रोत्रिय उच्यते ॥ वेदवेदाङ्गतत्वज्ञः शुद्धात्मा पापवर्जितः । शेषं श्रोत्रियवत् प्राप्तः सोऽनूचान इति स्मृतः ॥ अन्तर्व्रतगुणोपेतो यज्ञस्वाध्याययन्त्रितः। भ्रूण इत्युच्यते शिष्टैः शेषभोजी जितेन्द्रियः ॥ वैदिकं लौकिकं चैव सर्वज्ञानमवाप्य च । आश्रमस्थो वशी नित्यमृषिकल्प इति स्मृतः ॥ लौकिकमर्थार्जनादिकर्म ॥

இவர்களின் இலக்கணத்தைச் சொல்லுகின்ருர் அவரே - பிராமணகுலத்தில் பிறந்து உபநயனமில்லாமல் அனுஷ்டானமில்லாதவன் மாத்ரன் எனப்படுவான். வேதத்தைக் கொஞ்சம் குறைவாக அத்யயனம் செய்தவனும், ஆசாரம், சாந்தி, ஸத்யம், தயை

இவைகளுடையவனும், ருஜுவாய் உள்ளவனும் பிராமணன் எனப்படுவான். ஒருசாகை முழுவதையும் கல்பஸூத்ரத்துடனுவது, ஆறு அங்கங்களுடனுவது, அத்யயனம் செய்து தர்மமறிந்தவனும் யஜனம் முதலிய ஆறுகர்மங்களை அனுஷ்டிப்பவனுமானவன் ஶ்ரோத்ரிய னெனப்படுவான். பிறப்பினுல் பிராமணனென்றும், ஸம்ஸ்காரங்களால் த்விஜனென்றும், வித்யையினுல் விப்ரனென்றும், இம்மூன்ருலும் ஶ்ரோத்ரியனென்றும் சொல்லப்படுகிருன். வேதம், வேதாந்தங்கள் இவைகளின் தத்வத்தை அறிந்தவனும், சுத்தசித்தனும், பாபமற்றவனு மாய், ஶ்ரோத்ரியனின் குணங்களுடன் கூடியவன் அனூசானன் எனப்படுவான். வ்ரதங்களுடனும் குணங்களுடனும் கூடியவனும், யாகம், வேதாத்யயனம் இவைகளில் நியமமுடையவனும், தேவ பித்ரு சிஷ்டான்னபோஜியும், ஜிதேந்த்ரியனுயுமுள்ளவன் ப்ரூணன் எனப்படுவான். வைதிகம் லௌகிகம் எனப்படும் எல்லாஜ்ஞானத்தையுமடைந்து ஆஶ்ரமத்திலிருப்பவனும், ஜிதேந்த்ரியனுயுமுள்ளவன் ருஷிகல்பன் எனப்படுவான்.

'ऊर्ध्वरेतास्तपस्व्यग्र्यो नियताशनसंश्रयः । शापानुग्रहयोः शक्तः सत्यसन्धो भवेदृषिः । निवृत्तः सर्वतत्वज्ञः कामक्रोधविवर्जितः । ध्यानस्थो निष्क्रियो दान्तस्तुल्यमृत्काञ्चनो मुनि'रिति ॥

ஊர்த்வரேதஸ்ஸாயும், தபஸ்வியாயும், ஆஹாராதி நியமமுடையவனுயும், ஶாபம், அனுக்ரஹம் இவைகளில் ஶக்தியுடைவனுயும், ஸத்ய ஸந்தனுயுமுள்ளவன் ருஷியெனப்படுவான். விஷயங்களில் பற்றில்லாதவனும், ஸகல தத்வங்களையுமறிந்தவனும், காமக்ரோதங்களற்ற வனும், த்யான நிஷ்டனும், நிஷ்க்ரியனும், ஜிதேந்த்ரியனும், மண், பொன் இரண்டையும் ஸமமாய்ப் பாவிப்பவனுமாயுள்ளவன் முனி எனப்படுவான்.

यमः - शीलं संवसता ज्ञेयं शौचं संव्यवहारतः । प्रज्ञा संकथनात् ज्ञेया त्रिभिः पात्रं परीक्ष्यत इति ॥ बोधायनः - 'वेदानां किञ्चिदधीत्य

ब्राह्मण एकां शाखामधीत्य श्रोत्रियोऽङ्गाध्याय्यनूचानः कल्पाध्यायी ऋषिः कल्पसूत्रप्रवचनाध्यायी भ्रूण इति ।। दक्षः - 'समं द्विगुणसाहस्रमनन्तं च यथाक्रमम् । दाने फलविशेषः स्याद्धिंसायामेवमेव हि ।। सममब्राह्मणे दानं द्विगुणं ब्राह्मणब्रुवे । प्राधीते शतसाहस्रमनन्तं वेदपारग इति ।। गौतमोऽपि - 'समद्विगुणसाहस्रानन्तानि फलान्य-ब्राह्मणब्राह्मणश्रोत्रियवेदपारगेभ्य' इति । साङ्गं सकल्पं सरहस्यं च यो वेदमधीते स वेदपारग' इति हरदत्तः ।।

யமன் - கூட வஸிப்பதால் சீலமும், நடவடிக்கையினுல் சௌசமும், பேசுவதினுல் க்ஞானமும் அறியப்படுமாதலால் இம்மூன்ருலும் பாத்ரத்தைப் பரீக்ஷிக்கவேண்டும். போதாயனர் - வேதங்களுள் ஸ்வல்பபாகத்தை அத்யயனம் செய்தவன் ப்ராமணன். ஒரு ஶாகை முழுவதும் கற்றவன் ஶ்ரோத்ரியன். அங்கங்களையும் கற்றவன் அனூசானன். கல்பஸூத்ரத்தையும் கற்றவன் ருஷி. ஸூத்ர ப்ரவசனங்களையும் கற்றவன் ப்ரூணன் எனப்படுவான். தக்ஷர் - அப்ராம்மணன். ப்ராமணன், வேதாத்யாயீ, வேதபாரகன் இவர்களிடத்தில் கொடுக்கப்படும் தானமானது, முறையே ஸமம், இரண்டு பங்கு, ஆயிரம், அனந்தமான பலனை அளிக்கும். ஹிம்ஸையிலும் இவ்விதமே பாபத்தையறியவும். கௌதமர் - அப்ராம்மணன், பிராமணன், ஶ்ரோத்ரியன், வேதபாரகன் இவர்களுக்குக் கொடுக்கப்படும் தானம் முறையே ஸமம், இரண்டுமடங்கு, ஆயிரம், அனந்தமுமான பலனைக் கொடுக்கும். 'அங்கங்களுடனும், கல்ப ஸூத்ரங்களுடனும், ரஹஸ்யங்களுடனும் கூடிய வேதத்தைக் கற்றவன் வேதபாரகன் என்ருர் ஹரதத்தர்.

अब्राह्मणलक्षणमुक्तं स्मृत्यन्तरे - 'अब्राह्मणास्तु षट् प्रोक्ता इति शातातपोऽब्रवीत् । आद्यो राजभृतस्त्वेषां द्वितीयः क्रयविक्रयी ।। तृतीयो बहुयाज्यः स्याच्चतुर्थो ग्रामयाजकः । पञ्चमस्तु भृतस्त्वेषां ग्रामस्य नगरस्य च ।। अनादित्यां तु यः पूर्वां सादित्यां चैव पश्चिमाम् । नोपासीत द्विजः सन्ध्यां स षष्ठोऽब्राह्मणस्स्मृत इति ।।

அப்ராம்மண லக்ஷணத்தைப்பற்றி வேறு ஸ்ம்ருதியில் - அப்ராம்மணர்கள் ஆறு விதமாவர். முதல்வன் அரசனுக்கு ஊழியம் செய்பவன், இரண்டாமவன் க்ரய விக்ரயம் செய்பவன், மூன்றுமவன் அனேகர்களுக்கு யாஜகனுயிருப் பவன், நான்காமவன் க்ராமயாஜகன், ஐந்தாமவன் க்ராமம் அல்லது நகரத்திற்கு ஊழியக்காரன், ஆறுமவன் ஸூர்ய உதயத்திற்கு முன் ப்ராதஸ்ஸந்த்யையையும், அஸ்தமயத்திற்கு முன் ஸாயம் ஸந்த்யையையும் உபாஸிக்காதவன் என்று சாதாதபர் சொன்னுர்.

संवर्तस्तु - 'उत्पत्तिप्रलयौ चैव भूतानामागतिं गतिम् । वेत्ति विद्यामविद्यां च स भवेद्वेदपारग इति ।। बृहस्पतिः - 'श्रोत्रिये चैव साहस्रमाचार्ये द्विगुणं ततः । आत्मज्ञे शतसाहस्रमनन्तं त्वग्निहोत्रिणीति। व्यासः - 'प्रथमं तु गुरोर्दानं दद्यात् श्रेष्ठमनुक्रमात् । ततोऽन्येषां च विप्राणां दद्यात्पात्रानुसारतः ।। संस्कृतैः प्राकृतैर्वाक्यैः यः शिष्यमनुरूपतः । देशकालाद्युपायैश्च बोधयेत् स गुरुः स्मृतः ।। गुरोरभावे तत्पुत्रं तद्भार्यां तत्सुतां तथा । पौत्रं प्रपौत्रं दौहित्रमन्यं वा तत्कुलोद्भवम् ।। तदा नातिक्रमेद्दानं प्रत्युताधोगतिप्रदमिति ।

ஸம்வர்த்தர் - பூதங்களின் உற்பத்தி, நாசம், ஆகதி, கதி, வித்யை, அவித்யை இவைகளை அறிந்தவன் வேதபாரகன் எனப்படுவான். ப்ருஹஸ்பதி - ஶ்ரோத்ரியனிடத்தில் கொடுக்கப்படும் தானம் ஆயிரமடங்கும், ஆசார்யனிடத்தில் அதைவிட இரண்டு மடங்கும், ஆத்மக்ஞானியினிடத்தில் நூறுயிரம் மடங்கும். அக்னிஹோத்ரியினிடத்தில் அளவற்றதுமான பலனைக் கொடுக்கும். வ்யாஸர் - உயர்ந்த தானத்தை முதலில் குருவுக்கும், பிறகு மற்றவர்களுக்கும் யோக்யதானுஸாரமாகவும் தானங்களைக் கொடுக்க வேண்டும். சிஷ்யனுக்குத் தகுந்தபடி ஸம்ஸ்க்ருதம்

அல்லது தேசபாஷையிலுள்ள வாக்யங்களாலும், தேசகாலங்கள் முதலிய உபாயங்களாலும் சிஷ்யனுக்கு உபதேசிப்பவர் குரு எனப்படுவர். குரு இல்லாவிடில், அவருடைய புத்ரன், பார்யை, பெண், பௌத்ரன், ப்ரபௌத்ரன், தௌஹித்ரன், குலத்திற் பிறந்தவன் இவர்களைக் குறித்துதானத்தைக் கொடுக்க வேண்டும். மாறிச்செய்தால் அதோகதியைக் கொடுக்கும்.

व्यासः - मातापित्रोश्च यद्दत्तं भ्रातृष्वसृ सुतासु च । जायात्मजेषु यद्दत्तं सोदर्ये स्वर्गसंक्रमः। पितुः शतगुणं दानं सहस्रं मातुरुच्यते । अनन्तं दुहितुर्दानं सोदर्ये दत्तमक्षयम् । भगिनीभागिनेयानां मातुलानां पितृष्वसुः । दरिद्राणां च बन्धूनां दानं कोटिगुणं भवेदिति । विष्णुः- पुरोहितस्त्वात्मनः पात्रं स्वसृदुहितृ पुत्र जामातरश्चेत्यन्ये गुणरहिता अप्येते तस्य तस्य पात्रमिति ।

வ்யாஸர் - மாதா, பிதா, ப்ராதா, பகினீ, பெண், பெண்ஜாதி, பிள்ளை, ப்ராத்ருபுத்ரன் இவர்களிடத்தில் கொடுப்பது ஸ்வர்க்கத்திற்கு மார்க்கமாகும். பிதாவுக்குக் கொடுத்தால் நூறு மடங்கும், மாதாவிற்கானால் ஆயிரம் மடங்கும், பெண்ணிற்கானால் அளவற்றதும், ஸஹோதரிக்கு அக்ஷயமும், பகினீ, மருமான், மாதுலன், அத்தை, தரித்ரர்களான பந்துக்களுக்குக் கொடுத்தால், கோடிமடங்கு அதிகமுமானபலனுண்டாகும். விஷ்ணு - புரோஹிதன் தனக்குப் பாத்ரம். பகினீ, பெண், பிள்ளை, மாப்பிள்ளை இவர்களும் என்று சிலர். இவர்கள் குணமில்லாதவர்களாயினும் அவனவனுக்குப் பாத்ரமாவார்.

दक्षः - 'मातापित्रोर्गुरोर्मित्रे विनीते चोपकारिणि । दीनानाथविशिष्टेभ्यो दत्तमक्षय्यमुच्यते । हृतस्वा हृतदाराश्च ये विप्रा देशविप्लवे । अर्थार्थमभिगच्छन्ति तेभ्यो दत्तं महाफलम् । व्यसनार्थमृणार्थं वा कुटुम्बार्थं हिताय च । एवमाद्येषु दातव्यं सर्वधर्मेष्वयं विधिः ।

अग्निहोत्री तपस्वी च ऋणवान् म्रियते यदि । अग्निहोत्रं तपश्चैव तत्सर्वं धनिनान्धनम् । मातापितृविहीनस्य संस्कारोद्वाहनादिभिः । यः स्थापयति तस्यैव पुण्यसङ्ख्या न विद्यते । न तच्छ्रेयोऽग्निहोत्रेण नाश्वमेधेन लभ्यते । यच्छ्रेयः प्राप्यते पुंसो विप्रेण स्थापितेन वै ।। दीनान्धकृपणानाथबालवृद्धातुरेषु च । यद्दीयते च दयया तदनन्तफलं भवेदिति ।।

தக்ஷர் - மாதா, பிதா, குரு, மித்ரன், வணக்கமுள்ளவன், உபகரிப்பவன், ஏழை, அநாதன், சிஷ்டன் இவர்களுக்குக் கொடுக்கப்படும் தானமும் அக்ஷயபலனாகும். தேசத்தின் ஆபத்காலத்தில் பணம், பெண்ஜாதி இவைகளை இழந்து பணத்திற்காக வருகின்றவர்களுக்குக் கொடுக்கப்படும் தானம் மஹாபலனையளிக்கும். ஆபத்தைத் தீர்ப்பதற்கும், கடனை நீக்குவதற்கும், குடும்பத்திற்கு ஹிதமான கார்யத்திற்கும், இவைபோன்ற தர்ம விஷயங்களுக்கும் கொடுக்க வேண்டும். இது விதி ஆகும். அக்னிஹோத்ரியும், தபசியும் கடனைத்தீர்க்காமல் இறந்தால், அவர்களின் புண்யமெல்லாம் கடன் கொடுத்தவர்களைச் சேரும். மாதா பிதாக்களில்லாதவனை உபநயனம் விவாஹம் முதலியவைகளைச் செய்வித்துப் பிரதிஷ்டை செய்பவன் எவனோ அவன் புண்யத்திற்குக் கணக்கில்லை. ஒரு பிராமணனைப் ப்ரதிஷ்டை செய்விப்பதாலுண்டாகும் புண்யம் அக்னிஹோத்ரத்தினாலும், அஸ்வமேதத்தினாலு முண்டாகாது. ஏழை, குருடன், க்ருபணன், அநாதன், பாலன், கிழவன், ஆதுரன் இவர்களுக்குத்தயையுடன் கொடுப்படும் தானம் அனந்தபலமுள்ளதாகும்.

व्यासः - 'सन्निकृष्टमधीयानमतिक्रामति यो द्विजम् । भोजने चैव दाने च दहत्यासप्तमं कुलम् ।। ये पूर्वं पूजिता ये च पुरस्तात् स्युर्नमस्कृताः । तान्निराकृत्य नव्येषु भक्तिं कुर्वन्पतत्यध' इति ।। मनुः - 'भृत्यानामुपरोधेन यत्करोत्यौर्ध्वदैहिकम् । तद्भवत्यसुखोदर्कं जीवितस्य

मृतस्य च ॥ दूरस्थमपि यत्पात्रं मनसा चिन्त्य विष्णुवत्। भूमौ निक्षिप्य तोयञ्च द्रव्यं तत् प्रतिपादयेदिति ॥

வ்யாஸர் - ஸமீபத்திலிருப்பவனும், அத்யயனம் செய்பவனுமான ப்ராமணனைப் போஜனத்திலும், தானத்திலும், எவன் அதிக்ரமிப்பானோ அவனுடைய ஏழு தலை முறைவரையில் அந்தப் பாபம் தகிக்கும். எவர்கள் முன்பு பூஜிக்கப்பட்டவர்களோ, நமஸ்கரிக்கப்பட்டவர்களோ, அவர்களை நிராகரித்துவிட்டுப் புதியவர்களிடம் பக்தியைச் செய்பவன் அதோகதியை அடைவான். மனு - அவம்யம் காக்கவேண்டிய புத்ரபார்யாதிகளை வருத்திக்கொண்டு பரலோகத்திற்காகச் செய்யப்படும் தானம் முதலியவை தானம் செய்பவன் பிழைத்திருக்கும்போதும் இறந்தபிறகும் துக்கத்தையே கொடுப்பவை ஆகும். தூரத்திலிருக்கும் பாத்ரத்தை விஷ்ணுவைப்போல மனதினால் த்யானித்து பூமியில் ஜலத்தை விட்டுப் பிறகு அந்த த்ரவ்யத்தைக் கொடுக்கலாம்.

हेमाद्रौ - 'न्यायार्जितस्य वित्तस्य द्वावनर्थौ प्रकीर्तितौ । अपात्रे प्रतिपत्तिश्च पात्रे चाप्रतिपादनमिति ॥ **आपस्तम्बः** - 'योक्ता च धर्मयुक्तेषु द्रव्यपरिग्रहेषु च प्रतिपादयिता च तीर्थे यन्ता चातीर्थे' इति ॥ तीर्थं - पात्रम्। अतीर्थमपात्रम् ॥ 'संप्राप्तान् भोजनार्थं वै ब्राह्मणान् वृत्तिकर्शितान्।परीक्षां ये च कुर्वन्ति ते वै निरयगामिन' इति भारते ॥

ஹேமாத்ரியில் - நியாயமாய் ஸம்பாதிக்கப்பட்ட தனத்திற்குக் கெடுதிகள் இரண்டாம். அவையாவன - அபாத்ரத்தில் கொடுப்பதும், பாத்ரத்தில் கொடாமலிருத்தலும். ஆபஸ்தம்பர் - தர்மத்திற்கு விரோதமில்லாத வழிகளால் தனத்தை ஸம்பாதிப்பவனாயும், பாத்ரத்தில் கொடுப்பவனாயும், அபாத்ரத்தில் கொடாதவனாயும் இருக்கவேண்டும். பிழைப்பில்லாமல் போஜனத்திற்காக

*வந்த பிராமணர்களைப் பரீக்ஷிப்பவர்கள் நரகத்தை அடைவார்கள் என்று பாரதத்தில்.*

शातातपः - 'सन्निकृष्टमधीयानं ब्राह्मणं यो व्यतिक्रमेत् । स रासभशतां योनिं गच्छेत्तस्य व्यतिक्रमे ।। यस्य चैकगृहे मूर्खो दूरे चापि गुणान्वितः । गुणान्विताय दातव्यं नास्ति मूर्खे व्यतिक्रमः ।। ब्राह्मणातिक्रमो नास्ति मूर्खे मन्त्रविवर्जिते । ज्वलन्तमग्निमुत्सृज्य न हि भस्मनि हूयत इति ।। व्यासः - 'यदि स्यादधिको विप्रः शीलविद्यादिभिस्तु यः । तस्मै यत्नेन दातव्यं व्यतिक्रम्यापि सन्निधिमिति ।।

*சாதாதபர் - ஸமீபத்திலிருப்பவனும், அத்யயனம் செய்பவனுமான ப்ராமணனை அதிக்ரமிப்பவன் நூறு தடவை கழுதையாகப் பிறப்பான். ஸமீபத்திலிருப்பவன் மூர்க்கனுயிருந்தால் தூரத்திலிருக்கும் குணமுள்ள வனுக்குக் கொடுக்கலாம் அதனுல் பிராமணுதிக்ரம தோஷமில்லை. வேதமில்லாத மூர்க்கனை அதிக்ரமிப்பதால் தோஷமில்லை. ஜ்வலிக்குமக்னியைவிட்டுச் சாம்பலில் ஹோமம் செய்வதில்லை. வ்யாஸர் - தூரத்திலுள்ளவன், சீலம், வித்யை முதலியவைகளால் சிறந்தவனுயிருந்தால் அவனுக்கே முயற்சியுடன் கொடுக்க வேண்டும். ஸமீபத்திலிருக்கும் மூர்க்கனை அதிக்ரமிப்பதால் தோஷமில்லை.*

अन्नदानविषये तु पतितव्यतिरिक्तप्रत्यासन्नातिक्रमे दोष एव । 'अन्नं सर्वत्र दातव्यमिति वचनात् । कृत्ये तु शुचीन् मन्त्रवतः सर्वकृत्येषु भोजयेदिति । तथा स्मृत्यन्तरम् 'अन्नस्य क्षुधितं पात्रमिति ।। आनुशासनिके - 'तथाऽऽपस्सर्वदा देयाः सर्वजातिष्वसंशयम् । यदेतद्दुर्लभतरं मम लोके द्विजोत्तम' इति यमवचनम् ।।

*அன்னதான விஷயத்திலோவெனில் 'அன்னத்தை எல்லோருக்கும் கொடுக்கவேண்டும்' என்றிருப்பதால்*

பதிதனல்லாது ஸமீபத்திலுள்ளவனை அதிக்ரமிப்பதில் தோஷமே. ஸ்ராத்தாதிகளில் சுத்தர்களான மந்த்ரமுள்ளவர்களையே புஜிப்பிக்கவேண்டும். 'அன்னத்திற்குப் பசியுள்ளவனே பாத்ரம்' என்று ஒரு ஸ்ம்ருதியில். ஆனுஸாஸனிகத்தில் - 'எப்பொழுதும் எல்லாஜாதிகளுக்கும் ஜலத்தைக்கொடுக்க வேண்டும்; ஓ பிராமணோத்தம! இது என் உலகில் கிடைப்பதற்கரிதானது என்று யமனின் வாக்யம்.

व्यासः - 'शूद्रे समगुणं दानं वैश्ये तु द्विगुणं स्मृतम्। क्षत्रिये त्रिगुणं प्राहुः षड्गुणं ब्राह्मणे स्मृतम्॥ श्रोत्रिये चैव साहस्रमाचार्ये द्विगुणं ततः॥ आत्मज्ञे शतसाहस्रमनन्तं चाग्निहोत्रिणि ॥ अथैकभविकं दानं कर्मयोगरतात्मनाम् । शतजन्मभवं दानं तपोनिष्ठे प्रतिष्ठितम् ॥ जपयज्ञप्रयुक्तेषु सहस्रभविकं स्मृतम् । आभूतसंप्लवं भावि प्रदानं शिवयोगिनाम् । अथैकभविकं दानं गोषु ज्ञेयं महाफलम् ॥ द्विगुणं च तदेकैकं तथा वै वर्णसङ्करे ॥ शूद्रे चतुर्गुणं प्रोक्तं विशि चाष्टगुणं भवेत्। क्षत्रिये षोडशगुणं ब्रह्मबन्धौ तथैव तु ॥ द्वात्रिंशत्तु कृतं दानं वेदाध्ययनतत्परे। शताब्दं तद्विनिर्दिष्टं तपोनित्ये प्रतिष्ठितम्॥ अनन्तं च तदेवोक्तं ब्राह्मणे वेदपारग' इति॥

வ்யாஸர் - சூத்ரனிடத்தில் கொடுக்கும் தானம் ஒரு மடங்கும், வைஸ்யனிடத்தில் இரண்டு மடங்கும், க்ஷத்ரியனிடத்தில் மூன்று மடங்கும், ப்ராமணனிடத்தில் ஆறு மடங்கும், ஸ்ரோத்ரியனிடத்தில் ஆயிர மடங்கும், ஆசார்யனிடத்தில் இரண்டாயிரமடங்கும், ஆத்மக்ஞானியிடத்தில் லக்ஷமடங்கும், அக்னிஹோத்ரியினிடத்தில் அனந்தமுமான பலனைக் கொடுக்கும். கர்மயோகிகளிடம் செய்த தானம் ஒரு ஜன்மமும், தபஸ்விகளிடத்தில் நூறு ஜன்மமும், ஜபயக்ஞ முடையவர்களிடத்தில் ஆயிரம் ஜன்மமும், சிவயோகிகளிடம் ப்ரளயம் வரையிலும் அழியாத பலனைக்கொடுக்கும். பசுக்களிடம்

*கொடுக்கப்படும் தானம் ஒரு மடங்கும், ஸங்கரஜாதியினிடம் இரண்டு மடங்கும், சூத்ரனிடத்தில் நான்கு மடங்கும், வைஶ்யனிடத்தில் எட்டு மடங்கும், க்ஷத்ரியனிடத்திலும் இழிவான ப்ராமணனிடத்திலும் பதினாறு மடங்கும், வேதாத்யயனம் செய்பவனிடத்தில் முப்பத்திரண்டு மடங்கும், தபஸ்ஸிலிருப்பவனிடத்தில் நூறுமடங்கும் வேதத்தின் கரைகண்ட ப்ராமணனிடத்தில் அனந்தமாகவும் பலனைக்கொடுக்கும்.*

शूद्रादीनां पात्रत्वं मन्त्रवद्गवादिव्यतिरिक्तविषयम्।। 'मन्त्रपूर्वं तु यद्दानममन्त्राय प्रयच्छति । दातुर्निकृत्य हस्तं तु भोक्तुर्जिह्वां निकृन्तती' ति।। इति दानपात्रनिरूपणम्।।

*சூத்ராதிகளுக்குத்தானம் கொடுக்கலாமென்பது மந்த்ரத்துடன் கூடிய தானம் முதலியவைகளைத் தவிர்த்த தானங்களின் விஷயம். மந்த்ரமுள்ள தானத்தை மந்த்ரமில்லாதவனுக்குக் கொடுத்தால், கொடுப்பவனின் கையையும், வாங்கினவனின் நாக்கையும் அறுக்கின்றான்' என்பர்.*

अथ अपात्रनिरूपणम्।।

तत्र शातातपः - 'नष्टं देवलके दत्तमप्रतिष्ठं च वार्द्धुषौ । यच्च वाणिज्यके दत्तं न च तत् प्रेत्य नो इह ।। देवार्चनरतो विप्रो वित्तार्थी वत्सरत्रयम्। स वै देवलको नाम हव्यकव्येषु गर्हित इति ।। स्मृतिसंग्रहे - 'देवार्चनपरो यो हि परार्थं वित्तकाङ्क्षया। चतुर्वेदधरो विप्रः स चण्डालसमो भवेत्। कर्मदेवलकाः केचित् कल्पदेवलकाः परे। शुद्धदेवलकाः केचित् त्रिधा देवलकाः स्मृताः ।। अर्थार्थी कालनिर्देशी यो देवं पूजयेत्सदा । कर्मदेवलको नाम सर्वकर्मबहिष्कृतः ।। पाञ्चरात्रविधानज्ञो दीक्षाविरहितोऽर्चकः । चतुर्वेदाधिकारोऽपि कल्पदेवलकः स्मृतः ।। आगमोक्तविधानज्ञो भूतकाल्युपजीवकः । शुद्धदेवलको नाम सर्वकर्मबहिष्कृतः ।। आर्षेयोक्तविधानेतु देवलत्वं न विद्यते ।

तस्मात्सर्वप्रयत्नेन वैदिकेनैव पूजये'दिति ॥

### தானத்திற்குத் தகாதவர்

சாதாதபர் - தேவலகனிடத்தில் கொடுத்தது நாசமடையும். வார்த்துஷிகனிடத்தில் கொடுத்தது பலனற்றது. வ்யாபாரம் செய்பவனிடம் கொடுத்தது இஹபரவுலகங்கள் இரண்டிலும் பயனற்றது. பணத்திற்காக மூன்று வர்ஷம் தேவபூஜை செய்தவன் தேவலகன் எனப்படுவான். அவன் தேவகார்யங்களுக்கும் பித்ருகார்யங்களுக்கும் அனர்ஹனுகிறுன். ஸ்ம்ருதிஸங்க்ரகத்தில் - பணத்தாசையால் பிறருக்காகத் தேவபூஜை செய்யும் பிரரமணன் நான்கு வேதங்களைக் கற்றவனுயினும் சண்டாளனுக்குச் சமமாவான். கர்மதேவலகர் என்றும், கல்பதேவலகர் என்று, சுத்த தேவலகர் என்றும் தேவலகர் மூன்று விதமாகின்றனர். காலத்தைக்குறிப்பிட்டுப் பணத்திற்காகத் தேவபூஜை செய்பவன் கர்மதேவலகன் எனப்படுவான். அவன் ஸர்வகர்மங்களுக்கும் அனர்ஹன். தீக்ஷைபெருமல் பாஞ்சராத்ர விதிப்படி தேவபூஜை செய்பவன் நான்கு வேதங்களையுமறிந்தவனுயினும்கல்பதேவஸகன் எனப்படுவான். ஆகமங்களில் சொல்லிய விதிப்படி பூதம், காளீ இவைகளைப்பூஜிப்பவன் சுத்ததேவலகன் எனப்படுவான். அவன் ஸர்வகர்மங்களிலும் அனர்ஹன். ருஷிகளால் சொல்லப்பட்ட விதிப்படி பூஜித்தால் தேவலகத்தன்மை இல்லை. ஆகையால் எப்படியாவது வைதிக ப்ரகாரத்திலுலேயே பூஜை செய்யவேண்டும்.

यमः - 'समार्घं धनमादाय महार्घं यः प्रयच्छति। स वै वार्द्धुषिको नाम यश्च वृद्ध्योपजीवति ॥ यस्तु निन्दन् परगुणान् प्रशंसत्यात्मनो-गुणान्। स वै वार्द्धुषिको नाम ब्रह्मवादिषु गर्हित इति ॥ वृद्धमनुः - 'पात्रभूतोऽपि यो विप्रः प्रतिगृह्य प्रतिग्रहम्। असत्सु विनियुञ्जीत तस्मै

देयं न किञ्चन ।। सञ्चयं कुरुते यश्च प्रतिगृह्य समन्ततः । धर्मार्थे नोपयुङ्क्ते च न तं तस्करमर्चये' दिति ।।

யமன் - ஸரியான வட்டிக்குப் பணத்தை வாங்கி அதிகவட்டிக்குக் கொடுப்பவனும், வட்டியினுலேயே பிழைப்பவனும் வார்த்துஷிகன் எனப்படுவான். இவன் வேதமறிந்தவர்களால் நிந்திக்கப்பட்டவன். பிறரின் குணங்களை நிந்தித்துத் தன் குணங்களைப்புகழ்பவனும் வார்த்துஷிகன், முன்போன்றவனுமாம். வ்ருத்தமனு - யோக்யனுயினும், எவன் தானத்தை வாங்கிக் கெட்டவிஷயங்களில் உபயோகிப்பானே அவனுக்கு ஒன்றையும் கொடுக்கக்கூடாது. பலவிடங்களிலும் தானத்தை வாங்கித் தர்மத்திற்கு உபயோகிக்காமல் சேர்த்துவைப்பவன் திருடனுகையால் அவனைப் பூஜிக்கக்கூடாது.

विष्णुधर्मोत्तरे - 'परस्थाने वृथादानमशेषं परिकीर्तितम् । आरूढपतिते चैव अन्यथाऽऽप्तैर्धनैश्च यत् ।। व्यर्थमब्राह्मणे दानं पतिते तस्करे तथा । गुरोश्चाप्रीतिजनके कृतघ्ने ग्रामयाजके । वेदविक्रयिके चैव यस्य चोपपतिर्गृहे । स्त्रीभिर्जितेषु यद्दत्तं व्यालग्राहे तथैव च ।। ब्रह्मबन्धौ च यद्दत्तं यद्दत्तं वृषलीपतौ । परिचारेषु यद्दत्तं वृथादानानि षोडशे' ति ।।

விஷ்ணு தர்மோத்தரத்தில் - அன்னியர் ஸ்தானத்தில் செய்த தானம் முழுதும் வீணெனச் சொல்லப் பட்டிருக்கிறது. ஆரூடபதிதனுக்குக் கொடுத்ததும், அன்யாயமாய்க் கிடைத்த தனங்களால் செய்யப்படும் தானமும், அப்பிராமணன், பதிதன், திருடன், குருத்வேஷி, நன்றியுணராதவன், க்ராமப் புரோஹிதன், வேதத்தை விற்பவன், ஜாரனை வீட்டிலுடையவன், ஸ்த்ரீகளால் ஜயிக்கப்பட்டவன், பாம்பைப்பிடிப்பவன், இழிவான பிராமணன், வ்ருஷளீபதி, பரிசாரகன் இவர்களுக்குக் கொடுத்த தானமும், ஆக இப்பதினுறு தானங்களும் வீண்தானங்களெனப்படும்.

वृषलीपतिलक्षणमाह दक्षः - 'पितुर्गेहे तु या कन्या रजः पश्यत्यसंस्कृता। सा कन्या वृषली ज्ञेया तत्पतिर्वृषलीपतिरिति ॥ देवलः - 'वन्ध्या च वृषली प्रोक्ता वृषली च मृतप्रजा। अपरा वृषली ज्ञेया कुमारी या रजस्वलेति ॥

*வ்ருஷளீபதி லக்ஷணத்தைப்பற்றி தக்ஷர் - விவாஹமாகாமல் பிதாவின் வீட்டில் ருதுமதியான பெண் வ்ருஷளீ எனப்படுவாள். அவளின் பதி வ்ருஷளீபதி எனப்படுவான். தேவலர் - மலடியும், பிறந்த குழந்தைகளை இழந்தவளும், விவாஹமாகாமல் ருதுமதியானவளும் வ்ருஷளீ எனப்படுவாள்.*

व्यासः - 'न वार्यपि प्रयच्छेत्तु नास्तिके हैतुके तथा। न पाषण्डेषु सर्वेषु नावेदविदि धर्मविदिति ॥ पराशरः - 'युक्तिच्छलेन सर्वत्र यः शास्त्रविहितेष्वपि । संशयं कुरुते सोऽयं हैतुको नास्तिकाधम इति ॥ प्रजापतिः - 'यः स्वधर्मपरित्यागी पाषण्डीत्युच्यते बुधैः । तत्सङ्ग-कृत्तत्समः स्यात्तावुभावपि पापिनौ । ये तु सामान्यभावेन मन्यन्ते पुरुषोत्तमम्। ते वै पाषण्डिनो ज्ञेया नरकार्हा नराधमा' इति ॥

*வ்யாஸர் - நாஸ்திகன், ஹேதுவாதம் செய்பவன். ஸர்வவிதமான பாஷண்டர்கள், வேதமறியாதவன் இவர்களிடத்தில் தர்மத்தை அறிந்தவன் ஜலத்தைக்கூடக் கொடுக்கக்கூடாது. பராசரர் - யுக்திஎனும் கபடத்தால், சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்ட தர்மங்களிலும் ஸம்பமயச்தைச் செய்பவன் ஹைதுகன் எனப்படுவான். இவன் நாஸ்திகனைவிட அதமன். ப்ரஜாபதி - ஸ்வதர்மத்தை விட்டவன் பாஷண்டீ எனப்படுவான். அவனுடன் சேர்ந்தவனும் அவனுக்குச் சமானனுவான். அவ்விருவர்களும் பாபிகள். எவர்கள் புருஷோத்தமனை (விஷ்ணுவை) இதரர்களுக்குச் சமானமாக நினைக்கின்றனரோ அவர்கள் பாஷண்டிகள், நரகத்தையடைபவர்கள், மனிதர்களுள் அதமர்கள்.*

नारदः - 'षण्डस्य पुत्रहीनस्य दम्भाचाररतस्य च । नक्षत्रपाठकस्याऽपि दत्तं भवति निष्फलमिति ॥ व्यासः - 'पङ्ग्वन्धबधिरा मूका व्याधिनोपहताश्च ये । भर्तव्यास्ते तु सततं न तु देयः प्रतिग्रहः ॥ यस्त्वसद्भ्यो ददातीह स्वद्रव्यं धर्मनाशनम् । स पूर्वाभ्यधिकः पापी नरके पच्यते नरः ॥ यतीनां काञ्चनं दत्वा दाता ताम्बूलं ब्रह्मचारिणाम् । चोराणामभयं दत्वा च नरकं व्रजेत् ॥ अनर्हते यद्ददाति न ददाति यदर्हते । अर्हानर्हापरिज्ञानाद्धनाद्धर्माच्च हीयत इति ॥

*நாரதர் - நபும்ஸகன், புத்ரனில்லாதவன், கபடாசாரமுள்ளவன், நக்ஷத்ர சோதிடன் இவர்களுக்குக் கொடுக்கும் தானம் நிஷ்பலமாகும். வ்யாஸர் - நொண்டி, குருடன், செவிடன், ஊமை, வ்யாதிகளால் துன்புற்றவன் இவர்களை எப்பொழுதும் போஷிக்கவேண்டும். தானம் கொடுக்கக்கூடாது. அஸத்துக்களுக்குத்தானம் கொடுப்பவன் தர்மம் நசித்து அதிக பாபியாகி நரகத்தை அடைவான். யதிகளுக்குப் பணத்தையும், ப்ரம்மசாரி களுக்குத் தாம்பூலத்தையும், திருடர்களுக்கு அபயத்தையும் தானம் செய்தால் இருவரும் நரகத்தை அடைவார்கள். யோக்யாயோக்யர்களை அறியாமல் அயோக்யனுக்குக் கொடுப்பதாலும், யோக்யனுக்குக் கொடாததாலும், தனம், தர்மம் இவை வீண்.*

यमः - 'अव्रतानाममन्त्राणां जातिमात्रोपजीविनाम् । नैषां प्रतिग्रहो देयो न शिला तारयेच्छिलाम् । द्रविणं नैव दातव्यं सततं पापकर्मणः । अपविद्धाग्निहोत्रस्य गुरोर्विप्रियकारिणः । द्रविणं नैव दातव्यं सततं पापकर्मणः । न प्रतिग्रहमर्हन्ति वृषलाध्यापका द्विजाः । शूद्रस्याध्यापनाद्विप्रः पतत्यत्र न संशय' इति ॥ वृषलस्वरूपमाह पराशरः - 'अग्निकार्यपरिभ्रष्टाः सन्ध्योपासनवर्जिताः । वेदश्च येऽनधीयानास्ते सर्वे वृषलाः स्मृताः ॥ उपारुदन्ति दानानि गौ रथः काञ्चनं क्षितिः । अश्रोत्रियस्य विप्रस्य करं दृष्ट्वा निराकृतेः । राजधानी यथा शून्या यथा कूपश्च निर्जलः । यथा हुतमनग्नौ तु तथा दत्तं द्विजब्रुवे' इति ॥

யமன் - வ்ரதங்களை அனுஷ்டியாமல், வேதத்தைக் கற்காமல் ஜாதியால் மட்டில் ப்ராமணரானவர்களுக்குத் தானம் கொடுக்கக்கூடாது. ஒரு கல் மற்றொரு கல்லை ஆற்றைத்தாண்டவைக்க முடியாது. அக்னிஹோத்ரத்தை விட்டவனுக்கும், குருவுக்கு அப்ரியத்தைச் செய்பவனுக்கும், எப்பொழுதும் பாபத்தைச் செய்பவனுக்கும் தானம் கொடுக்கக்கூடாது. சூத்ரர்களை வேதம் படிப்பிக்கும் ப்ராமணர்கள் தானத்திற்குப் பாத்ரர்களாகார். ப்ராமணன் சூத்ரனைப் படிப்பித்தால் பதிதனாகிறான்; இதில் ஸம்ஶயமில்லை. வ்ருஷளஸ்வரூபத்தைப் பராசரர் கூறுகிறார்- அக்னிகார்யம் செய்யாதவர்களும், ஸந்த்யாவந்தனம் செய்யாதவர்களும், வேதாத்யயனமில்லாதவர்களும், வ்ருஷளர்கள் எனப்படுவார்கள். தானத்திற்குரிய பசு, தேர், பொன், பூமி இவைகள் வேதாத்யயனமற்ற பிராமணனின் கையைப்பார்த்துக் கண்ணீர் விடுகின்றன. ஜனங்களில்லாத பட்டணம் போலும், ஜலமில்லாத கிணறு போலும், சாம்பலில் செய்த ஹோமம் போலும், ப்ராம்மணாதமனிடத்தில் கொடுத்த தானம் வீணாகும்.

अपात्रे दातुर्दोषमाह व्यासः - 'दुर्विप्रा गणिका वेश्या विटचारणकारवः । सततं यं प्रशंसन्ति तं विद्यात्पुरुषाधमम् ॥ ये च ज्यौतिषिकाश्चोराः कुण्डगोलाश्च याचकाः । सौनिका यं प्रशंसन्ति तं विद्यात्पुरुषाधमम् ॥ उत्कोचजीविनो भ्रष्टा वेश्यापतिविदूषकाः । गायका यं प्रशंसन्ति तं विद्यात्पुरुषाधममिति ॥

அபாத்ரத்திற் கொடுப்பவனுக்குத் தோஷத்தைக் கூறுகிறார் வ்யாஸர் - பிராமணாதமர்களும், வேசிகளும், விடர்களும் சாரணர்களும், கருமான்களும் ஜோஸ்யர்களும், திருடர்களும், குண்டர்களும், கோளகர்களும், யாசகர்களும், மாம்ஸவிக்ரயிகளும், லஞ்சத்தினால் பிழைப்பவர்களும், பதிதர்களும், வேஶ்யாபதிகளும், விதூஷகர்களும் எவனைப்புகழ்கின்றனரோ அவனைப் புருஷாதமனாய் அறியவேண்டும்.

## प्रतिग्रहनिरूपणम्

अथ प्रतिग्रहो निरूप्यते ॥ तत्र मनुः - 'शिलोञ्छमप्याददीत विप्रोऽजीवन् यतस्ततः । प्रतिग्रहाच्छिलं श्रेयस्ततोऽप्युञ्छः प्रशस्यते ॥ सप्त वित्तागमा धर्म्या दायो लाभः क्रयो जयः । प्रयोगः कर्मयोगश्च सत्प्रतिग्रह एव च ॥ प्रतिग्रहसमर्थोऽपि प्रसङ्गं तत्र वर्जयेत् । प्रतिग्रहेण ह्यस्याशु ब्राह्मं तेजो विनश्यती'ति ॥

### ப்ரதிக்ரஹ நிரூபணம்

*மனு - தன் வ்ருத்தியால் பிழைக்கமுடியாத ப்ராமணன் எங்கிருந்தாவது சிலம், உஞ்சம் இவைகளை ஸ்வீகரிக்கலாம். ப்ரதிக்ரஹத்தை விட சிலம் ப்லாக்யமானது. அதைவிட உஞ்சம் சிறந்தது. வயல்களில் சிதறிக்கிடக்கும் தான்யக்கதிர்களைப் பொறுக்குவது சிலம். தான்யங்களைப் பொறுக்குவது உஞ்சம் எனப்படும். தர்ம விரோதமின்றிப் பொருளடைய வழிகள் ஏழு. அவைகளாவன - 1. தாயம் (வம்ஶத்தில் கிடைப்பது) லாபம். (புதையல் முதலியவைகளால் கிடைப்பது) 3. க்ரயம். 4. ஜயம், 5. ப்ரயோகம். (வட்டியால் பெருக்குவது) 6. கர்மயோகம் (க்ருஷி, வ்யாபாரம்) 7. ஸத்ப்ரதிக்ரஹம்.*

प्रतिग्रहविधिज्ञो विद्यादियुक्तश्च प्रतिग्रहसमर्थः । अर्थात् पुनः पुनः प्रवृत्तिः प्रसङ्गः ॥ स एव - 'नाध्यापनाद्याजनाद्वा गर्हिताद्वा प्रतिग्रहात् । दोषो भवति विप्राणां ज्वलनार्क(म्बु) समाहित' इति ॥ अगर्हितादपि प्रतिग्रहादप्रतिग्रह एव श्रेयानित्याह याज्ञवल्क्यः - 'प्रतिग्रहसमर्थोऽपि नादत्ते यः प्रतिग्रहम् । ये लोका दानशीलानां स तानाप्नोति पुष्कलानिति ॥ व्यासः - 'द्विजातिभ्यो धनं लिप्सेत् प्रशस्तेभ्यो द्विजोत्तमः । अपि वा जातिमात्रेभ्यो न तु शूद्रात् कथञ्चन ॥ प्रतिग्रहायारुचिः स्याद्यात्रार्थं तु समाहरेत् । स्थित्यर्थादधिकं गृह्णन् ब्राह्मणो यात्यधोगतिम् । अभ्युष्णात्सघृतादन्नादच्छिद्राच्चैव वाससः । अपरप्रेष्यभावाच्च भूय इच्छन्पतत्यध इति ॥

ப்ரதிக்ரஹத்தில் ஸமர்த்தனாலும், ப்ரதி க்ரஹத்தில் ஈடுபாட்டை விடவேண்டும். ப்ரதிக்ரஹத்தினால் பிராமண தேஜஸ்ஸு இவனுக்குச் சீக்கிரம் குறைந்துவிடும். ப்ரதிக்ரஹத்தின் விதியை அறிந்தவனும், வித்யாதிகளுடன் கூடியவனும் ப்ரதிக்ரஹ ஸமர்த்தனெனப்படுவான். அடிக்கடி ப்ரவர்த்தித்தல் ப்ரஸங்கமெனப்படும். மனுவே - அத்யயனம் செய்வித்தல், யாகம் செய்வித்தல், நிந்திதமான ப்ரதிக்ரஹம் இவைகளால் பிராமணர்களுக்கு ஆபத்காலத்தில் தோஷமுண்டாவ தில்லை. ஏனெனில், அவர்கள் அக்னிக்கும், ஸூர்யனுக்கும் ஸமமானவர்கள். ஸத்ப்ரதிக்ரஹத்தைவிட ப்ரதிக்ரஹம் செய்யாமலிருப்பதே மேலானது என்கிறார் யாக்ஞவல்க்யர் - ப்ரதிக்ரஹத்திற்குரியவனாயிருந்தும் எவன் ப்ரதிக்ரஹம் செய்வதில்லையோ அவன், தானம் செய்பவர்களுக்குரிய புண்யலோகங்கள் முழுவதையும் அடைகின்றான். வ்யாஸர் - ப்ராமணன் சிறந்த த்விஜர்களிடமிருந்து, அல்லது ஜாதிமாத்ர த்விஜாதிகளிடமிருந்து தனத்தைப்பெறலாம். எக்காலத்திலும் சூத்ரர்களிடமிருந்து பெறக்கூடாது. ப்ராமணன், ப்ரதிக்ரஹத்தில் ஆசையற்றவனாய் இருக்கவேண்டும். தேஹதாரணத்திற்கு மட்டில் ப்ரதிக்ரஹம் செய்யலாம். அதைவிட அதிகத்தை ப்ரதிக்ரஹித்தால் பதிதனாவான். உஷ்ணமாயும், நெய்யுடன் கூடியதுமான அன்னத்தைக்காட்டிலும், கிழியாத வஸ்த்ரத்தைக் காட்டிலும், பிறருக்கு அடிமையில்லாத் தன்மையைக் காட்டிலும் அதிகத்தை விரும்புகிறவன் பதிதனாவான்.

नारदः - 'धनमूलाः क्रियाः सर्वा अतस्तस्यार्जनं मतम्। वर्द्धनं रक्षणं भोग इति तस्य विधिः क्रमात्।। तत्पुनस्त्रिविधं ज्ञेयं शुक्लं शबलमेव च। कृष्णं च तस्य विज्ञेयः प्रभेदः सप्तधा पुनः ।। श्रुतशौर्यतपः कन्यायाज्यशिष्यान्वयागतम्। धनं सप्तविधं शुक्लमुदयोऽप्यस्य तद्विधः ।।

நாரதர் - ஸகலமான தர்மங்களும் தனத்தாலேயே உண்டாகின்றதால் அதை ஸம்பாதிக்கவேண்டும். ஸம்பாதித்த தனத்திற்கும் விருத்தி செய்தல், ரக்ஷித்தல், புஜித்தல் என்ற மூன்று விதிகளுண்டு, அந்தத் தனம் சுக்லம், சபளம், க்ருஷ்ணம் என மூன்றுவிதமாகும். இம்மூன்றிலும் ஒவ்வொன்றும் ஏழுவிதமாகும். சாஸ்த்ரம், சௌர்யம், தவம், கன்னிகை, யாஜ்யன், சிஷ்யன், தன்வம்சம் இவைகளால் கிடைத்தது சுக்லமெனப்படும்; இதன் உற்பத்தி சுத்தமானதால்.

कुसीदकृषिवाणिज्यशुल्कशिल्पानुवृत्तिभिः । कृतोपकारादाप्तं च शबलं समुदाहृतम् ।। पार्श्वगद्यूतदैन्यार्तिप्रतिरूपकसाहसैः । व्याजेनोपार्जितं यच्च तत्कृष्णं समुदाहृतम् ।। यथाविधेन द्रव्येण यत्किञ्चेह करोत्ययम् । तथाविधमवाप्नोति तत्फलं प्रेत्य चेह चे'ति ।।

வட்டி, க்ருஷி, வ்யாபாரம், தரகு, சில்பம், அனுஸரணம், பதிலுபகாரம் என இவ்வேழு வகைகளால் கிடைத்தது சபளம் எனப்படும். வேலைக்காரன், சூதாட்டம், கெஞ்சுதல், பீடித்தல், ப்ரதிரூபம், ஸாகஸம், கபடம் இவைகளால் கிடைத்தது க்ருஷ்ண மெனப்படும். எவ்விதமான தனத்தினுல் கர்மத்தை அனுஷ்டிக்கின்றுனே அதற்கு அனுகுணமாகவே இகபரவுலகங்களில் பலன் உண்டாகும்.

सप्तर्षिसंवादे - 'धर्मार्थं सञ्चयो यस्य द्रव्याणां स प्रशस्यते । तपः सञ्चय एवासौ विशिष्टो द्रव्यसञ्चयात् ।। यथा यथा न गृह्णाति ब्राह्मणोऽसत्प्रतिग्रहम् । तथा तथाऽस्य सन्तोषात् ब्रह्मतेजोऽभिवर्द्धते ।। आकिञ्चन्यं च राज्यं च तुलायां समतोलयत् । अकिञ्चनत्वमधिकं राज्यादपि जितात्मनः ।। यो राज्ञः प्रतिगृह्यैव शोचितव्ये प्रहृष्यति । स च संयाति मूढात्मा नरकानेकविंशतिमिति ।।

ஸப்தருஷி ஸம்வாதத்தில் - தர்மத்திற்காகத் தனங்களைச் சம்பாதிப்பது புகழப்படுகின்றது. இதைவிடத் தபஸ்ஸைச் சம்பாதிப்பதே ஶ்லாக்யமாகும். ப்ராமணன் தவறான வழியில் தானம் வாங்காமலிருப்பதற்குத் தகுந்தபடி அவன் ப்ரம்ம தேஜஸ்ஸானது வ்ருத்தியை அடைகின்றது. ப்ரும்மதேவர் தரித்ரத்தன்மையும், ராஜத்தன்மையையும் தராசில் வைத்து நிறுத்தார். ஜிதேந்த்ரியனுடைய தாரித்திரியம்ராஜத்தன்மையைவிட அதிகமாயிருந்தது.எவன்அரசனிடமிருந்து தானம்பெற்று, வருத்தமடையவேண்டியிருக்க ஸந்தோஷப்படு கின்றானோ அந்த மூடன் இருபத்தொரு நரகங்களை யுமடைவான்.

स्मृत्यन्तरे - 'तीर्थे पापं न कुर्वीत विशेषाच्च प्रतिग्रहम्। दुर्जरं पातकं तीर्थे दुर्जरश्च प्रतिग्रह इति ॥ मनुः - 'न राज्ञः प्रतिगृह्णीया दराजन्यप्रसूतितः । सूनाचक्रध्वजवतां वेशेनैव च जीवताम्' ॥ अक्षत्रि यजातस्य राज्ञः द्रव्यं न प्रतिगृह्णीयात्। सूना हिंसा, चक्रं तैलयन्त्रं तद्वान्, ध्वजवान् सुराकारी, वेशो वेशकर्म ॥ एतेषु तारतम्यमाह स एव - 'दशसूनासमं चक्रं दशचक्रसमो ध्वजः । दशध्वजसमो वेशो दशवेशसमो नृपः' इति ॥

வேறொரு ஸ்ம்ருதியில் - புண்யதீர்த்தத்தில் பாபத்தையும், ப்ரதிக்ரஹத்தையும் செய்யக் கூடாது. தீர்த்தத்தில் செய்யப்பட்டபாபமும், ப்ரதிக்ரஹமும் அழிக்கமுடியாது. மனு - க்ஷத்ரியனல்லாத அரசனிட மிருந்தும், மாம்ஸவிக்ரயம் செய்பவன், வாணியன், கள்விற்போன், வேசிகளுடன் கூட்டுறவு செய்விப்பவன் இவர்களிடமிருந்தும் ப்ரதிக்ரஹம் செய்யக் கூடாது. இவர்களிடமுள்ள தாரதம்யத்தைச் சொல்லுகிறார் மனு - மாம்ஸவிக்ரயிகனைவிட வாணியன் பத்து மடங்கும், வாணியனைவிட மத்யவிக்ரயிகன் பத்துமடங்கும் அவனைவிட வேசிக்கூட்டுறவு செய்விப்பவன்

பத்துமடங்கும், அவனைவிட அரசன் பத்து மடங்கும் பாபமுடையவர்கள்.

राजन्यप्रसूतेरपि लुब्धस्य प्रतिग्रहे दोषमाह स एव - 'यो राज्ञः प्रतिगृह्णाति लुब्धस्योच्छास्त्रवर्तिनः स पर्यायेण यातीमान्नरकानेक विंशतिम् ॥ एतद्विदन्तो विद्वांसो ब्राह्मणा ब्रह्मवादिनः । न राज्ञः प्रतिगृह्णन्ति प्रेत्य श्रेयोऽभिकाङ्क्षिण' इति ॥ याज्ञवल्क्यः - 'प्रतिग्रहे सूनिचक्रिध्वजिवेश्या नराधिपाः । दुष्टा दशगुणं पूर्वात्पूर्वादेते यथाक्रममिति ॥ स एव - 'राजान्तेवासियाज्येभ्यस्सीदन्नपि न च क्षुधा । डम्भिहैतुकपाषण्डिबकवृत्तींश्च वर्जयेदिति ॥

க்ஷத்ரியனானாலும் க்ருபணனான அரசனிடம் ப்ரதிக்ரஹத்தில் தோஷத்தைச் சொல்லுகிறார் மனு - க்ருபணனும் சாஸ்த்ரத்தை மீறி நடப்பவனுமான அரசனிடமிருந்து ப்ரதிக்ரஹம் செய்பவன் வரிசையாய் இந்த இருபத்தொரு நரகங்களையுமடைகிறான். இதையறிந்து வேதமறிந்த ப்ராமணர்கள் பரலோகத்தில் நன்மையை விரும்பியவர்களாய் அரசனிடமிருந்து ப்ரதிக்ரஹிப்பதில்லை. யாக்ஞவல்க்யர் - ப்ரதிக்ரஹ விஷயத்தில், மாம்ஸவிக்ரயீ, வாணியன், மத்யவிக்ரயீ, வேசி, அரசன் இவர்கள் க்ரமமாய் முந்தியவரைவிடப் பிந்தியவர் பத்துமடங்கு பாபிகளாவர். அவரே - பசியால் வருந்தினாலும், அரசன், சிஷ்யன், யாஜ்யன், டாம்பிகன், ஹைதுகன், பாஷண்டன். பகவ்ருத்தி இவர்களிடமிருந்து க்ரஹிக்கக்கூடாது.

कात्यायनः - 'उपन्यस्तेन यल्लब्धं विद्यया पणपूर्वकम् । शिष्यादार्त्विज्यतः प्रश्नात् सन्दिग्धप्रश्ननिर्णयात् ॥ विज्ञान-शंसनाद्वादाल्लब्धं प्राध्ययनाच्च यत् । धनमेवंविधं सर्वं विज्ञेयं धर्मसाधनम् ॥ अयाचितशिलोञ्छैश्च शिष्यदत्तैः क्रमागतैः । जीवेत् कर्मविशुद्धेभ्यः प्रतिगृह्यापि वा धनम् । याचितेनापि वर्तेत दैन्यं हित्वा शमस्थितः ॥

स्तोकादानेन वा नित्यं प्रतिगेहमतन्द्रितः ।। दधिक्षीरघृतादीनां लवणस्य पशोस्तथा। विक्रयिभ्योऽपि नादद्यादश्वविक्रयिणस्तथा।। कौसीदकात्तथा भोक्तुः श्राद्धस्य सततं तथा'' ।। कौसीदकः - वार्द्धुषिकः। न ग्रामयाजकेभ्यश्च नागम्यागामिनस्तथा। वणिग्भ्यश्च तथा शूद्राद्विसृष्टाग्नेर्न चाहरेदिति ।।

காத்யாயனர் - உபன்யாஸத்தாலும், பந்தயத்தை முன்னிட்டு வித்யையாலும், சிஷ்யனாலும், ருத்விக்கா யிருப்பதாலும், கேள்வியாலும், ஸந்தேஹங்களை நிர்ணயம் செய்வதாலும், சாஸ்த்ரங்களைக் கற்றுக்கொடுப்பதாலும், வாதத்தினாலும், ப்ராத்யயனத்தாலும் கிடைத்த தனம் தர்மத்திற்குரியது. யாசிக்காமல் கிடைத்ததனம், சிலம், உஞ்சம், சிஷ்யன் கொடுத்த பொருள், தன்வம்ஶத்தில் கிடைத்தது இவைகளாலும், கர்மானுஷ்டானத்தினால் சுத்தர்களிடமிருந்து ப்ரதிக்ரஹம் செய்தாவது ஜீவிக்கலாம். அடக்கமுள்ளவனாய் ஏழ்மையை விட்டு, யாசிப்பதா லாவது, வீடுகள் தோறும் கொஞ்சமாய்ப் பிச்சை எடுப்பதாலாவது ஜீவிக்கலாம். தயிர், பால் முதலியவைகளையும், உப்பு, பசு, குதிரை இவைகளையும் விக்ரயம்செய்பவர்களடமிருந்தும், வட்டி வியாபாரியினிட மிருந்தும், எப்பொழுதும் ஶ்ராத்த போஜனம் செய்பவனிட மிருந்தும், க்ராமயாஜகர்கள், அகம்யாகாமிகள், (வேசித்தொடர்புள்ளவர்கள்) வியாபாரிகள், சூத்ரன், அக்னியை விட்டவன் இவர்களிடமிருந்தும் வாங்கக்கூடாது.

मनुः - 'तथैव सप्तमे भक्ते भक्तानि षडनश्नता । अश्वस्तनविधानेन हर्तव्यं हीनकर्मण इति ।। त्र्यहमुपोष्य अन्यत्रालाभे चतुर्थदिने तद्दिनमात्रपर्याप्तं शूद्रतो गृह्णीयादित्यर्थः ।। (गृह्णन् गोभूहिरण्यादि तथा नैव विचारयेत् । कृतान्नं तु गृहीतव्यं बहुशः सुपरीक्षितात् ।।) स एव - 'वृद्धौ च मातापितरौ साध्वी भार्या शिशुस्सुतः)। अप्यकार्यशतं कृत्वा भर्तव्या मनुरब्रवी'दिति ।।

மனு - ஆறுவேளை உபவாஸமிருந்து ஒன்றும் கிடைக்காவிடில் ஒரு நாளைக்குப் போதுமான த்ரவ்யத்தைச் சூத்ரனிடமிருந்து பெறலாம். மனுவே - கிழவர்களான மாதாபிதாக்களையும், பதிவ்ரதையான பார்யையையும், பாலனான புத்ரனையும், அனேகம் இழிவான கார்யங்களைச் செய்தாவது ரக்ஷிக்கவேண்டும்.

हारीतः - 'विदितात् प्रतिगृह्णीयाद्गृहे धर्मप्रवृद्धये इति ॥ अङ्गिराः - 'यत्तु राशीकृतं धान्यं खले क्षेत्रेऽथवा भवेत् । शूद्रादपि गृहीतव्यमित्याङ्गिरसभाषित'मिति ॥ व्यासः - 'कुटुम्बार्थे तु सच्छूद्रात् प्रतिग्राह्यमयाचितम् । क्रत्वर्थमात्मने चैव न हि याचेत कर्हिचित् ॥ वृत्तिसङ्कोचमन्विच्छेन्नेहेत धनविस्तरे । धनलोभप्रवृत्तस्तु ब्राह्मण्यादेव हीयत'' इति ॥

ஹாரீதர் - வீட்டில் தர்மம் வ்ருத்தி யாவதற்காகத் தெரிந்தவனிடமிருந்தே வாங்கவேண்டும். அங்கிரஸ் - களத்திலாவது, வயலிலாவது குவிக்கப்பட்டிருக்கும் தான்யத்தைச் சூத்ரனிடமிருந்து க்ரஹிக்கலாம். வ்யாஸர் - குடும்பத்திற்காக ஸச் சூத்ரனிடமிருந்து யாசிக்காமல் கிடைத்ததைப்பெறலாம். யாகத்திற்கும், தனக்கும் ஒருகாலும் யாசிக்கக்கூடாது. ப்ராமணன் ஜீவனத்தைக் குறுக்கவேண்டும். பணத்தின் விஸ்தாரத்தை விரும்பக் கூடாது. விரும்பினால் ப்ராம்மண்யத்தையே இழப்பான்.

चतुर्विंशतिमते - 'सीदंश्चेत् प्रतिगृह्णीयात् ब्राह्मणेभ्यस्ततो नृपात्। ततस्तु वैश्यशूद्रेभ्यः शङ्खस्य वचनं यथा। आमं मांसं मधु घृतं धान्यं क्षीरं तथौषधम् । गुडतक्ररसा ग्राह्या निवृत्तेनापि शूद्रत' इति ॥ याज्ञवल्क्यः - 'देवातिथ्यर्चनकृते गुरुभृत्यार्थमेव च । सर्वतः प्रतिगृह्णीयादात्मवृत्त्यर्थमेव चेति ॥ अनापद्यधार्मिकराजप्रतिग्रहं निन्दति स एव - 'न राज्ञः प्रतिगृह्णीयाल्लुब्धस्योच्छास्त्रवर्तिन इति ॥ स्कान्दे - 'मरुदेशे निरुदके ब्रह्मरक्षस्त्वमागतः । राजप्रतिग्रहात् पुष्टः पुनर्जन्म न विन्दति' इति ॥

ब्रह्माण्डपुराणे - 'अनापद्यपि धर्मेण याज्यतश्शिष्यतस्तथा। गृह्णन् प्रतिग्रहं विप्रो न धर्मात्परिहीयत' इति ॥

சதுர்விம்பதிமதத்தில் - பசியால் வருந்தும் ப்ராமணன், பிராமணனிடமிருந்தும், க்ஷத்ரியன், வைம்யன், சூத்ரன் இவர்களிடமிருந்தும் க்ரஹிக்கலாம், முந்தியவனிடம் கிடைக்காவிடில் பிந்தியவனிடம் க்ரஹிக்கலாம். நிவ்ருத்தனானாலும், பாகஞ்செய்யாத மாம்ஸம், தேன், நெய், தான்யம், பால், ஔஷதம், வெல்லம், ரஸங்கள் இவைகளைச் சூத்ரனிடமிருந்து க்ரஹிக்கலாம். யாக்ஞவல்க்யர் - தேவர்கள் அதிதிகள் இவர்களின் பூஜைக்கும், குருவிற்காகவும், பார்யாபுத்ராதிகளுக் காகவும் தனது ஜீவனத்திற்காகவும் எல்லோரிடமிருந்தும் க்ரஹிக்கலாம். ஆபத்தில்லாத ஸமயத்தில் தர்மமிலாத அரசனிடமிருந்து ப்ரதிக்ரஹிப்பதை நிந்திக்கின்றார் யாக்ஞவல்க்யர் -கிருபணனாயும், சாஸ்த்ரத்தை அதிக்ரமித்தவனுமான அரசனிடம் ப்ரதிக்ரஹம் செய்யக்கூடாது. ஸ்காந்தத்தில் - அரசனிடமிருந்து ப்ரதிக்ரஹத்தால் வ்ருத்தியடைந்தவன், ஜலமில்லாத ப்ரதேசத்தில் ப்ரம்மராக்ஷஸனாய்ப் பிறப்பான்; மறுபடி வேறு பிறப்பை அடையமாட்டான். ப்ரம்மாண்ட புராணத்தில் - ஆபத்து இல்லாத காலத்திலும், யாஜ்யன், சிஷ்யன் இவர்களிடமிருந்து தர்மத்திற்காக ப்ரதிக்ரஹிப்பவன் தர்மத்தினின்றும் நழுவமாட்டான்.

आपद्विषये मनुराह - 'सर्वतः प्रतिगृह्णीयात् ब्राह्मणस्त्वनयं गतः। पवित्रं दुष्यतीत्येतद्धर्मतो नोपपद्यते' ॥ अनयं गतः = आपदं गतः ॥ 'जीवितात्ययमापन्नो योऽन्नमत्ति यतस्ततः। आकाशमिव पङ्केन न स पापेन लिप्यते ॥ अजीगर्तस्सुतं हन्तुमुपासर्पद्बुभुक्षितः। न चालिप्यत पापेन क्षुत्प्रतीकारमाचरन् ॥ श्वमांसमिच्छन्नार्तोऽत्तुं धर्माधर्मविचक्षणः। प्राणानां परिरक्षार्थं वामदेवो न लिप्तवान् ॥ भरद्वाजः क्षुधार्तस्तु सपुत्रो निर्जने वने। बह्वीर्गाः प्रतिजग्राह वृधोस्तक्ष्णः महातपाः ॥

क्षुधार्तश्चात्तुमभ्यागाद्विश्वामित्रः श्वजाघनीम् । चण्डालहस्तादादाय धर्माधर्मविचक्षण' इति ॥

*உயிராபத்துவிஷயத்தில் மனு சொல்வதாவது - ஆபத்தை அடைந்த ப்ராமணன் எல்லோரிடமிருந்தும் ப்ரதிக்ஹித்தாலும் தோஷத்தை அடைவதில்லை. பரிசுத்தமான வஸ்து தோஷத்தை அடையுமென்பது சாஸ்த்ர ந்யாயத்திற்கு ஒவ்வாது. ப்ராணாபத்தை அடைந்த ப்ராமணன் எவரிடமிருந்து அன்னத்தைப் புஜித்தாலும், பாபத்தினால், ஆகாசம் சேற்றினாற்போல் பற்றப்படுவதில்லை. அஜீகர்த்தர் என்ற ருஷி பசியால் வருந்தி, தம்புத்ரனை யக்ஞத்தில் கொல்வதற்கு முயன்றார். ஆயினும் அவர் பாபத்தோடு ஸம்பந்தப்படவில்லை. தர்மாதர்மங்களை அறிந்த வாமதேவர் பசியால் வருந்தி, ப்ராணன்களைக் காக்க நாயின் மாம்ஸத்தைச் சாப்பிட முயன்றார். அவர் பாபத்தை அடையவில்லை. பரத்வாஜர் என்ற ருஷி புத்ரர்களுடன் ஜனங்களில்லாத காட்டில் பசியால் வருந்தி வ்ருது என்னும் தச்சனிடமிருந்து அநேகம் பசுக்களைத் தானமாகப் பெற்றார். தர்மாதர்மங்களை நன்றாயறிந்த விஸ்வாமித்ரர் என்ற ருஷி பசியால் வருந்திச் சண்டாளன் கையினின்றும் நாயின் புட்ட மாம்ஸத்தை வாங்கிப் புஜிப்பதற்கு முயன்றார். இவர்களும் பாபத்தை அடையவில்லை.*

अनापद्यपि प्रतिग्राह्याण्याह मनुः - 'एधोदकं फलं मूलमन्नमभ्युद्यतं च यत् । सर्वतः प्रतिगृह्णीयान्मध्वथाभयदक्षिणाम्' ॥ अभयदक्षिणां - अभयप्रदानम् ॥ 'आहृताभ्युद्यतां भिक्षां पुरस्तादप्रचो(वे)दिताम् । मेने प्रजापतिर्भोज्यामपि दुष्कृतकर्मणः' ॥ भिक्षां - अन्नम् ॥ 'न तस्य पितरोऽश्नन्ति दश वर्षाणि पञ्च च । न च हव्यं वहत्यग्निर्यस्तामभ्यवमन्यते'। तस्य - तदीयां भिक्षाम् । अभ्यवमन्यते - प्रत्याख्याति - अन्यदप्यभ्युद्यतं प्रतिग्राह्यमाह स एव - 'शय्यां कुशान् गृहान् गन्धानपः पुष्पं मणिं दधि । धाना मत्स्यान्पयो मांसं शाकं चैव न निर्णुदेदिति ॥

ஆபத்து இல்லாதகாலத்திலும் க்ரஹிக்கக் கூடியவைகளைக் கூறுகின்றார் மனு -விறகு, ஜலம், பழம், கிழங்கு, அன்னம், தேன், அபயப்ரதானம் இவைகளை எவனிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். முன்னால் தெரிவிக்கப்படாததாயும், தானம் செய்பவனால் கொண்டு வரப்பட்டுத் தனக்கெதிரில் வைக்கப்பட்டது மான அன்னத்தைப் பாபியினிடமிருந்தும் க்ரஹிக்கலாம் என்று ப்ரம்மா ஸம்மதித்திருக்கின்றார். எவன் அந்த அன்னத்தை அவமதிக்கின்றானோ அவன் க்ருஹத்தில் பதினைந்து வர்ஷங்கள் வரையில் பித்ருக்கள் புஜிப்பதில்லை. அக்னியும் ஹவிஸ்ஸை க்ரஹிப்பதில்லை. யாசிக்காமல் கிடைத்த சில பொருள்களை க்ரஹிக்கலாமென்கிறார் மனுவே - படுக்கை, குசம், வீடு, கந்தம், ஜலம், புஷ்பம், ரத்னம், தயிர், பொரி, மத்ஸ்யம், பால், மாம்ஸம், சாகம் இவைகளை க்ரஹிக்கலாம்.

आपस्तम्बः - 'मध्वामं मार्गमांसं भूमिर्मूलफलानि रक्षा गव्यूतिर्निवेशनं युग्यघासश्चोग्रतः प्रतिग्राह्याणीति ।। आमं तण्डुलादि, मार्गं मांसं मृगमांसम्, भूमिः शालेयादि-क्षेत्रं रक्षा अभयदानं, गव्यूतिर्गोमार्गः, निवेशनं- गृहं युग्यो बलीवर्दः तस्य घासः भक्षणं ,पलं एतान्यनापदि उग्रतोऽपि प्रतिग्राह्याणीति ।। उग्रः वैश्याच्छूद्रायां जातः पापकर्मा वा, ततोऽपीत्यर्थः ।।

ஆபஸ்தம்பர் - தேன், ஆமம் (அரிசி முதலியவை) ம்ருகத்தின் மாம்ஸம், பூமி, மூலபலங்கள், அபயதானம், பசுவின் மார்க்கம், வீடு, மாட்டின் தீனியான புல் முதலியவை இவைகளை உக்ரனிடத்திலிருந்தும் க்ரஹிக்கலாம். உக்ரன் = வைஸ்யனுக்குச் சூத்ரியினிடம் பிறந்தவன், அல்லது பாபியான த்விஜன்.

स एव =- 'नात्यन्तमन्ववस्येद्वृत्तिं प्राप्य विरमे'दिति ।। अत्यन्तं नावसीदेद्यथाकथञ्चिज्जीवेत् । यदा तु विहिता वृत्तिर्लभ्यते तदा

निषिद्धाया वृत्तेर्विरमेदित्यर्थः ॥ गौतमः - 'प्रशस्तानां स्वकर्मसु द्विजातीनां गृहे ब्राह्मणो भुञ्जीत प्रतिगृह्णीयाच्चैधोदकयवसमूलफलमध्व-भयाभ्युद्यत-शय्यासनावसथयानपयोदधिधानाशफरीप्रियङ्गुस्रङ्मार्ग-शाकादीन्य-प्रणोद्यानि सर्वेषां पितृदेवगुरुभृत्यभरणेषु चान्यद्वृत्ति-श्चेन्नान्तरेण शूद्रादिति ॥ स्वकर्मसु वर्णाश्रमप्रवृत्तेषु ये प्रशस्तास्तेषामेव गृहे ब्राह्मणो भुञ्जीत । तेषामेव सकाशात् प्रतिगृह्णीयाच्च । एधोदकादीनि तु सर्वेषामप्रशस्तानामपि सकाशात् ग्राह्याणि । शफरी मत्स्यविशेषः, पितृभरणं श्राद्धकरणं, देवभरणमग्निहोत्रादि, गुरवः पित्रादयः, भृत्या पुत्रदासादयः, तेषां भरणं भक्तादिदानं, एतेषु निमित्तेषु अन्यदप्यप्रणोद्यं, सर्वं सर्वतः प्रतिग्राह्यम् । यदि शूद्रप्रतिग्रहमन्तरेण जीवनं न निर्वर्तेत तदा शूद्रादपि प्रतिगृह्णीयादित्यर्थः ॥

*ஆபஸ்தம்பரே - விஹிதமான வ்ருத்தி கிடைக்காவிடில் வேறு வ்ருத்தியினுலாவது ஜீவிக்கலாம். அதிகமாய் ஶ்ரமப்படக்கூடாது. தன் வருத்தி கிடைத்தால் நிஷித்தவ்ருத்தியைவிட்டு விலகவேண்டும். கௌதமர் - தங்கள் வர்ணாஶ்ரமத்திற்குரிய தர்மங்களை அனுஷ்டிப்பதிற் சிறந்த த்விஜர்களின் க்ருஹத்தில் ப்ராமணன் புஜிக்கலாம். அவர்களிடமிருந்து ப்ரதிக்ரஹிக்கலாம். விறகு, ஜலம், புல், கிழங்கு, பழம், தேன், அபயம், வலுவில் வந்த வஸ்து, படுக்கை, ஆஸனம், வீடு, வாஹனம், பால், தயிர், பொரி, மத்ஸ்யம், தான்யம், மாலை, வழி, சாகம் முதலியவைகளை ஸாதாரணமான த்விஜர்களிடமிருந்து க்ரஹிக்கலாம். ஶ்ராத்தம் தேவகார்யம், பிதா முதலிய குருக்களையும், பார்யை முதலிய ப்ருத்யர்களையும் போஷிப்பது இவைகளுக்காக ஸகல வஸ்துக்களையும் ஸகல த்விஜர்களிடமிருந்தும் க்ரஹிக்கலாம். சூத்ர ப்ரதிக்ரஹமின்றி ஜீவனம் ஏற்படாவிடில் சூத்ரனிடமிருந்தும் க்ரஹிக்கலாம்.*

आश्वलायनः - 'यया कयाऽपि वा वृत्त्या निजकर्मात्यजन् सदा। पितरौ बिभृयात् सम्यक्साध्वीं भार्यां शिशूनपि ॥ मोहाद्वा वृत्तिहेतोर्वा धर्मलोभाच्छठाच्च वा । पितरौ त्यजतो वृद्धौ गतिरूर्ध्वा न विद्यते ॥ अनाथौ पितरौ वृद्धौ साध्वीं भार्यां तथाऽऽत्मजान् । शक्तस्य त्यजतो मोहाद्गतिरूर्ध्वा न विद्यते ॥ गुर्वर्थमतिथीनां च भृत्यानां च विशेषतः ॥ शूद्रेभ्योऽपि समादद्याच्छुद्धेभ्य इति मे मतिरिति ॥

ஆம்ச்வலாயனர் - எப்பொழுதுமே தனது கர்மத்தைவிடாதவனாய், எந்த வ்ருத்தியினாலாவது மாதா பிதாக்களையும், ஸாத்வியான பார்யையையும், குழந்தைகளையும் நன்றாய்ப் போஷிக்கவேண்டும். அறியாமையினாலாவது, பிழைப்பிற்காகவாவது, தர்மத்திலாசையினாலாவது, கபடத்தினாலாவது மாதாபிதாக்களை விட்டவனுக்கு மேலான உலகம் கிடையாது. அநாதர்களாயும், கிழவர்களாயுமான மாதாபிதாக்களையும், பதிவ்ரதையான பார்யையையும், பிள்ளைகளையும், மக்தனாயிருந்தும் மோஹத்தால் விட்டவனுக்கு, மேலான உலகம் இல்லை. குருக்கள், அதிதிகள், பார்யாபுத்ராதிகள் இவர்களுக்காகச் சூத்ரான்னத்தையும் க்ரஹிக்கலாம். தான்மட்டில் புஜிக்கக்கூடாது. ஸச்சூத்ரர்களிடமிருந்தும் க்ரஹிக்கலாம் என்பது என் அபிப்ராயம்.

याज्ञवल्क्यः - 'अयाचिताहृतं ग्राह्यमपि दुष्कृतकर्मणः । अन्यत्र कुलटाषण्डपतितेभ्यस्तथा द्विष इति ॥ हारीतः - 'चिकित्सकस्य मृगयोर्वेश्यायाः कितवस्य च। षण्डसूतकयोश्चैव उद्यतामपि वर्जयेदिति ॥ मनुः - 'गुरून् भृत्यांश्चोज्जिहीर्षन्नर्चिष्यन्देवतातिथीन् । सर्वतः प्रतिगृह्णीयान्न तु तृप्येत् स्वयं ततः । गुरुष्वपि व्यतीतेषु विना वा तैर्गृहे वसन् । आत्मनो वृत्तिमन्विच्छन् गृह्णीयात्साधुतः सदेति ॥ तैर्विना- गुरुभिर्विना। स्वप्रतिगृहीतद्रव्यनिरपेक्षेषु गुरुष्वित्यर्थः ॥

யாஜ்ஞவல்க்யர்- யாசிக்காமலேயே வலிவில் வந்த சில வஸ்துக்களைத் துஷ்டவிருத்தி உள்ளவனிடமிருந்து கிரஹிக்கலாம். ஆனால் வ்யபிசாரிணீ, நபும்ஸகன், பதிதன், தன் ஶத்ரு இவர்களிடமிருந்து க்ரஹிக்கக்கூடாது. ஹாரீதர் - வைத்யன், வேடன், வேசி, நபும்ஸகன், ஸௌதகி, சூதாடுகிறவன் இவர்கள் வலுவில் கொண்டுவந்து கொடுத்தாலும் க்ரஹிக்கக்கூடாது. மனு - மாதாபிதா முதலிய குருக்களையும், பார்யா புத்ராதிகளையும் காப்பாற்றுவதற்கும், தேவபூஜை, அதிதிபூஜை இவைகளைச் செய்வதற்கும் எல்லோரிடமிருந்தும் க்ரஹிக்கலாம். அந்த த்ரவ்யத்தினால் தனக்கு த்ருப்தியைச் செய்துகொள்ளக் கூடாது. குருக்கள் இறந்த பிறகும், அவர்கள் ஜீவித்திருக்கும்போது தனியாயிருந்தாலும், தன்னுடைய ஜீவனத்திற்கு ஸாது ப்ரதிக்ரஹமே செய்யவேண்டும்.

हेमाद्रौ - 'असत्प्रतिग्रहः प्रोक्तो देशतः कालतस्तथा। स्वरूपतो जातितश्च कर्मतश्चेति पञ्चधे'ति ।।कालो ग्रहणादिः, देशः कुरुक्षेत्रादिः, स्वरूपं कृष्णाजिनादिकम्, जातिः शूद्रादिः, कर्म पतनीयवृत्तिः ।। तत्रैव - मेषीं च महिषीमाज्यं गामप्युभयतोमुखीम्। अजिनं करिणं कालपुरुषं च तिलाचलम् ।। अजाविकं त्वथाश्वं च मरणे चाद्यमासिकम्। दुर्दानान्याहु रेतानि प्रतिगृह्णन्ति ये द्विजाः ।। न तेषां वदनं पश्येद्दृष्ट्वा चक्षुर्निमीलयेत् ।। कृष्णाजिनं च महिषीं मेषीं चोभयतोमुखीम्। दासीं च प्रतिगृह्णानो न भूयः पुरुषो भवेत् ।। प्रेतान्नं प्रेतशय्यां च नग्नप्रच्छादनं भजन् । उत्क्रान्तिं कालरूपं च न भूयः पुरुषो भवेत् ।। बहुशो द्विजवित्तानामपि स्तेयं तरिष्यति। आतुराद्यद्गृहीतं तु तत्कथं निस्तरिष्यति ।। तथाऽलङ्कारवस्त्राणि प्रतिगृह्य मृतस्य तु । नरकान्न निवर्तेत धेनुं तिलमयीं तथा ।। कालं च महिषीमाज्यमेकोद्दिष्टमृतुत्रये । दाता प्रतिग्रहीतारं पश्येच्चेत्पुण्यनाशन' मिति ।।

ஹேமாத்ரியில் - அஸத்ப்ரதிக்ரஹமென்பது, தேசம், காலம், ஸ்வரூபம், ஜாதி, கர்ம என்பவைகளால் ஐந்து விதமாகும். தேசம் குருக்ஷேத்ரம் முதலியன. காலம் க்ரஹணம் முதலியன. ஸ்வரூபம் க்ருஷ்ணாஜினம் முதலியன. ஜாதி சூத்ரஜாதி முதலியன. கர்ம பாதகச் தொழில். அதிலேயே - பெண்ணாடு, எருமை, நெய், இருபுறம் முகமுள்ளபசு, முதல்மாஸிகம் இவைகளைத் துர்த்தானங்களென்பார்கள். இவைகளை ப்ரதிக்ரஹிப்ப வர்களின் முகத்தைப் பார்க்கக்கூடாது. பார்த்தால் உடனே கண்ணை மூடிக்கொள்ளவேண்டும். க்ருஷ்ணாஜினம், எருமை, இருபுறம் முகமுடைய ஆடு, வேலைக்காரி இவைகளை ப்ரதிக்ரகிப்பவன் மறுபடி புருஷ ஜன்மத்தை அடையமாட்டான். ப்ரேதான்னம், ப்ரேதத்தின் படுக்கை, நக்னப்ரச்சாதனம், உத்க்ராந்தி, காலபுருஷன் இவைகளை வாங்குகிறவனும் மறுபடி புருஷஜன்மத்தை அடைவதில்லை. அநேகம் தடவை ப்ராமணன் தனங்களைத் திருடிய பாபத்தைத் தாண்டலாம்; சாகும் தருவாயிலுள்ளவனிடமிருந்து தானம் வாங்கிய பாபத்தைத் தாண்ட முடியாது. இறந்தவனுடைய அலங்காரம், வஸ்த்ரம் இவைகளையும், திலதேனுவையும் ப்ரதிக்ரகித்தவன் நரகத்தினின்றும் திரும்பமாட்டான். காலபுருஷன், எருமை, நெய், ஏகோத்திஷ்டம் இவைகளை வாங்கியவனை, ஆறு மாஸத்திற்குள் தானம் கொடுத்தவன் பார்த்தால் புண்யம் நசித்துவிடும்.

मनुः - 'आविकं त्वधिकं वस्त्रं तूलं तूलपटं तथा। काञ्चनं शिबिकां गां च भूमिं धान्यं धनं स्त्रियः ॥ दासीदासौ गृहं यानं रसद्रव्यं तथा पशून्। प्रतिगृह्य यतिश्चैतान्पतते नात्र संशय' इति ॥ जाबालिः - 'यतिहस्तगतं द्रव्यं गृह्णीयात् ज्ञानतो यदि। अधस्स नयते मूढः कुलानामेकविंशति-मिति ॥

மனு - கம்பளி, வஸ்த்ரம், பஞ்சு, பஞ்சாடை, பொன், பல்லக்கு, பசு, பூமி, தான்யம், தனம், ஸ்த்ரீகள்,

வேலைக்காரி, வேலைக்காரன், வீடு, வாஹனம், பால் முதலிய ரஸத்ரவ்யங்கள், பசுக்கள் இவைகளை ப்ரதிக்ரகிப்பவன், யதியானாலும் பதிதனாவான்; ஸந்தேஹமில்லை. ஜாபாலி - யதியின் கையிலுள்ள தனத்தை அறிந்தும் வாங்கிய மூடன் தன் இருபத்தொரு குலங்களை நரகத்தில் சேர்ப்பான்.

याज्ञवल्क्यः - 'विद्यातपोभ्यां हीनेन न तु ग्राह्यः प्रतिग्रहः । गृह्णन् प्रदातारमधो नयत्यात्मानमेव चेति ।। मनुः - न द्रव्याणामविज्ञाय विधिं धर्म्यं प्रतिग्रहे । प्राज्ञः प्रतिग्रहं कुर्यादवसीदन्नपि क्षुधेति ।। यत्किञ्चित् प्रतिगृह्णीयात् तत्सर्वं प्रतिग्रहविधिना उत्तानस्त्वाङ्गीरसः प्रतिगृह्णात्विति मन्त्रेण प्रतिगृह्णीयात् । अयमेव प्रतिग्रहविधिः ।। विशेषतो हिरण्यादिकमविदुषा न प्रतिग्राह्यमित्याह स एव - 'हिरण्यं भूमिमश्वं गा मन्नं वासस्तिलान् घृतम् । प्रतिगृह्णन्नविद्वांस्तु भस्मीभवति दारुवत् ।। हिरण्यमायुरन्नं च भूर्गौश्चाप्योषतस्तनुम् । अश्वश्चक्षुस्त्वचं वासो घृतं तेजस्तिलाः प्रजाः' ।। ओषतः दहतः । दाहश्चात्र रोगः ।।

யாக்ஞவல்க்யர் - வித்யை, தவம் இவ்விரண்டுமில்லாதவன் தானத்தை வாங்கக்கூடாது. வாங்குகிறவன் கொடுப்பவனையும் தன்னையும் அதோகதிக்கு ஆளாக்குவான். மனு - புத்தியுள்ளவன் பசியால் வருந்தினாலும், த்ரவ்யங்களின் ப்ரதிக்ரஹ விதியைத் தெரிந்து கொள்ளாமல் ப்ரதிக்ரஹம் செய்யக்கூடாது. எந்த த்ரவ்யத்தை ப்ரதிக்ரகித்தாலும் 'உத்தாநஸ்த்வா' என்ற மந்த்ரத்தைச் சொல்லி க்ரஹிக்கவேண்டும். இதுவே ப்ரதிக்ரஹவிதி என்பது. ப்ரதிக்ரஹவிதி தெரியாதவன் ஹிரண்யாதிகளை க்ரஹிக்கவே கூடாதென்கிறார் மனுவே - தங்கம், பூமி, அம்வம், பசு, அன்னம், வஸ்த்ரம், எள்ளு, நெய் இவைகளை அறியாதவன் க்ரஹித்தால் கட்டைபோல் சாம்பலாகிறான். பொன், அன்னம் இவைகள் ஆயுளையும், பூமி, பசு இவைகள் சரீரத்தையும், குதிரை கண்ணையும், வஸ்த்ரம், தோலையும்,

स्वप्रवरे तावतीः शिखा निदधाति। एकार्षेयस्यैका शिखा, द्व्यार्षेयस्य द्वे इत्यादि। अथवा येन प्रकारेण येषां कुलजानां कुलधर्मः प्रवर्तते तथा शिखा कर्तव्येत्यर्थः ॥

லோகாக்ஷி - 3-வது வர்ஷத்தில் அதிக பாகம் சென்ற பிறகு சௌளம் செய்யவேண்டும். கமுஜர், வாஸிஷ்டர் இவர்களுக்கு வலது புறத்திலும், பாரத்வாஜர்களுக்கு இடதுபுறத்திலும், ஆத்ரேயர்களுக்கும் காஶ்யபர்களுக்கும் இரண்டு புறத்திலும், குடுமி. ப்ருகு கோத்ரிகள் மொட்டையர். ஆங்கிரஸர்களுக்கு ஐந்து குடுமிகள், சிலர் மயிர்ப்பத்தியை உடையவர். மங்களத்திற்காகச் சிகையை தலையின் எங்கேயாவது வைத்துக்கொள்ளலாம் என்பர் சிலர். அவரவர் குலாசாரப்படியாவது சிகையை வைத்துக்கொள்ளலாம். ஆபஸ்தம்பர் - தன் ப்ரவரத்தில் எவ்வளவு ருஷிகளோ அவ்வளவு சிகைகளை வைக்கவேண்டும். அல்லது தன் குலாசாரப்படி சிகை வைக்கலாம்.

अत्र च जन्मप्रभृति वर्षसङ्ख्या वेदितव्या। यथाऽऽह स एव — 'जन्मनोऽधि तृतीये वर्षे चौलं पुनर्वस्वो'रिति ॥ अधितृतीये अर्द्धाधिकतृतीये ॥ अत्र पुनर्वसुग्रहणं विहितनक्षत्रोपलक्षणार्थम् ॥ अत एव व्यासः — 'अश्विनी श्रवणः स्वाती चित्रा पुष्यः पुनर्वसू। धनिष्ठा रेवती ज्येष्ठा मृगहस्तेषु कारयेत् ॥ नक्षत्रे तु न कुर्वीत यस्मिन् जातो भवेन्नरः। न प्रोष्ठपदयोः कार्यं नैवाग्नेये च भारत। तिथिं प्रतिपदं रिक्तां विष्टिं चैव विवर्जयेत् ॥ वारे शनैश्चरादित्यभौमानां रात्रिमेव चेति ॥

இதில் பிறந்தது முதல் வர்ஷங்களைக் கணக்கிட வேண்டும். ஆபஸ்தம்பர் - பிறந்தது முதல் 3-வது வர்ஷம் பாதிக்குமேல் சென்ற பிறகு புனர்வஸுநக்ஷத்ரத்தில் சௌளம் செய்யவேண்டும். புனர்வஸு என்றதால் விஹிதநக்ஷத்ரங்களும் கிரகிக்கப்படுகின்றன. வ்யாஸர் - அசுவினீ, ச்ரவணம், ஸ்வாதீ, சித்ரை, புஷ்யம், புனர்வஸு, அவிட்டம், ரேவதீ, கேட்டை, ம்ருகஶீர்ஷம்,

ஹஸ்தம் இவைகளில் செய்யலாம். ஜன்ம நக்ஷத்ரம், பூரட்டாதி, உத்திரட்டாதி, க்ருத்திகை இவைகளில் கூடாது. ப்ரதமை, சதுர்த்தீ, நவமீ, சதுர்தசீ, விஷ்டி, இந்தத் திதிகளையும், சனி, ஞாயிறு, செவ்வாய், இந்த வாரங்களையும், ராத்ரியையும் தவிர்க்கவேண்டும்.

गर्गः — 'पुत्रचूडाकृतौ माता यदि सा गर्भिणी भवेत् । शस्त्रेण मृत्युमाप्नोति तस्मात् क्षौरं विवर्जयेदिति ॥ नारदः — 'सूनोर्मातरि गर्भिण्यां चूडाकर्म न कारयेत् । पञ्चाब्दात् प्रागथोर्ध्वे तु गर्भिण्यामपि कारयेत् ॥ आरभ्याधानमाचौलात् कालातीतौ तु कर्मणाम् । आज्यं व्याहृतिभिर्हुत्वा प्रायश्चित्तमथाचरेत् ॥ एतेष्वेकैकलोपे तु पादकृच्छ्रं समाचरेत् । चौलकेऽर्धं तु सर्वत्र मत्या तु द्विगुणं चरेदिति ॥

கர்கர் - தாயார் கர்ப்பிணியாய் இருக்கும்பொழுது குழந்தைக்குச் சௌளம் செய்தால் ஆயுதத்தால் மரண மேற்படுமாகையால் அது கூடாது. நாரதர் - குழந்தையின் தாய் கர்ப்பிணியாயிருந்தால் 5 -வயதிற்குட்பட்ட குழந்தைக்குச் சௌளம் கூடாது. அதற்குமேல் கர்ப்பிணியாயிருந்தாலும் செய்யலாம். கர்ப்பாதானம் முதல் சௌளம் வரையுள்ள கர்மங்கள் முக்ய காலத்தில் செய்யப்படாவிடில் வ்யாஹ்ருதிகளால் ஆஜ்யஹோமம் செய்து பிறகு ப்ராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். இவைகளுள் ஒவ்வொன்றின் லோபத்திற்கும் கால்க்ருச்ரமும், சௌளத்திற்கு அரை க்ருச்ரமும் செய்யவேண்டும். ஞானபூர்வமாய் அதிக்ரமித்தால் இரண்டு மடங்கு ப்ராயச்சித்தம் செய்யவேண்டும்.

## स्त्रीणां जातकर्मादि

तत्र याज्ञवल्क्यः — 'तूष्णीमेताः क्रियाः स्त्रीणां विवाहस्तु समन्त्रक' इति ॥ एताः - जातकर्मादिचूडाकरणपर्यन्ताः क्रियाः तूष्णीं विना मन्त्रेण कार्याः ॥ मनुरपि– 'अमन्त्रिका तु कार्येयं स्त्रीणामावृदशेषतः । संस्कारार्थं शरीरस्य यथाकालं यथाक्रममिति ॥

आवृत् - जातकर्मादिक्रिया ।। गोबिलस्तु विशेषमाह — 'तूष्णीमेताः क्रियाः स्त्रीणाममन्त्रेण तु होमत' इति ।।

**பெண்களின் ஜாதகர்மம் முதலியன**

யாக்ஞவல்க்யர் - *ஸ்த்ரீகளுக்கு ஜாதகர்மம் முதல் சௌளம் வரையுள்ள இந்தக் கிரியைகளை மந்த்ர மில்லாமலும், விவாஹத்தை மந்த்ரத்துடனும் செய்ய வேண்டும்.* மனு - *ஸ்த்ரீகளுக்கு இந்த ஜாதகர்மாதிகளை மந்த்ரமில்லாமல் முழுவதும் காலம் தவறாமல் முறைப்படி செய்யவேண்டும்.* கோபிலர் - *ஸ்த்ரீகளுக்கு இந்தக் கிரியைகளை மந்த்ரமில்லாமல் செய்வதுடன் மந்த்ரமில்லாமல் ஹோமத்தையும் செய்யவேண்டும்.*

स्त्रीणामप्युक्तकालातिक्रमे प्रायश्चित्तमाह कात्यायनः — 'संस्कारा अतिपद्येरन् स्वकालाच्चेत् कथञ्चन । हुत्वैतदेव कर्तव्या ये तूपनयनादय' इति ।। एतदेव — सर्वप्रायश्चित्तमेव । सर्वप्रायश्चित्तमपि ते नैवोक्तम् — 'सर्वप्रायश्चित्तं पञ्चभिः प्रत्यृचं त्वन्नो अग्न इति द्वाभ्यां अयाश्चाग्ने ये ते शतमुदुत्तममिति चेति ।

*ஸ்த்ரீகளுக்கும் இவைகள் முக்யகாலத்தில் செய்யப்படாவிடில் ப்ராயச்சித்தம் உண்டென்கிறார்* காத்யாயனர் - *உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் காலத்தில் செய்யப்படாவிடில் இந்த ஸர்வ ப்ராயச்சித்தத்தை ஹோமம் செய்து பிறகு செய்யவேண்டும். ஐந்து மந்த்ரங்களால் தனித்தனியாய் செய்யப்படும் ஹோமம் ஸர்வப்ராயச்சித்தம் எனப்படும்.*

स्त्रीणामुपनयनकालातिपत्तौ व्रात्यप्रायश्चित्तं भवत्येवेति चन्द्रिकायाम् ।। स्त्रीणां विवाह एवोपनयनमित्याह मनुः — 'वैवाहिको विधिः स्त्रीणां औपनायनिकः स्मृतः। पतिसेवा गुरौ वासो गृहार्थोऽग्निपरिक्रियेति ।। तत्र गुरुकुलवासोऽग्निकार्यं चोत्तरार्धेनोक्ते पतिसेवा गुरुशुश्रूषा । गृहकृत्यकरणमग्निपरिचर्येत्यर्थः ।। अतश्चात्रापि अत

ऊर्ध्वं कामचारादिवर्जनं प्रागुपनयनात् कामचारवादेत्यादि च समानम् ॥

உபநயனகாலம் அதிக்ரமித்தால் ஸ்த்ரீகளுக்கும் வ்ராத்யப்ராயச்சித்தம் செய்யவேண்டும் என்று சந்த்ரிகையில். ஸ்த்ரீகளுக்கு விவாஹம் தான் உபநயனம் என்கிறார் மனு - ஸ்த்ரீகளுக்கு விவாஹமே உபநயனம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பதியை ஸேவிப்பதே குருகுலவாஸம். வீட்டிலுள்ள வேலைகளைச் செய்வதே அக்னிகார்யம். ஆகையால் ஸ்த்ரீகள் விஷயத்திலும் 'உபநயனத்திற்கு முன் இஷ்டப்படி இருத்தல், பேசுதல், பக்ஷித்தல் இவைகள் இருக்கலாம்; பிறகு கூடாது' என்ற சாஸ்த்ரம் ஸமானம்.

यत्तु हारीतेनोक्तम् — 'द्विविधाः स्त्रियो ब्रह्मवादिन्यः सद्योवध्वश्च तत्र ब्रह्मवादिनामुपनयनमग्नीन्धनं वेदाध्ययनं स्वगृहे च भिक्षाचर्येति । सद्योवधूनां तूपस्थिते विवाहे कथञ्चिदुपनयनं कृत्वा विवाहः कार्य इति, तत्कल्पान्तराभिप्रायम् ॥ तथा च यमः - 'पुरा कल्पे तु नारीणां मौञ्जीबन्धनमिष्यते । अध्यापनं च वेदानां सावित्रीवचनं तथा ॥ पिता पितृव्यो भ्राता वा नैनामध्यापयेत् परः । स्वगृहे चैव कन्याया भैक्षा चर्यं विधीयते ॥ वर्जयेदजिनं चीरं जटाधारणमेव चेति ॥ स्मृत्यर्थसारे — 'एते संस्कारा बीजगर्भदोषापनुत्तये यथास्वाचारं कार्याः स्त्रीणां तूष्णीं, विवाहस्तु समन्त्रकःस्वकालातिक्रमे व्याहृतिहोमपूर्वकं कार्यमेतेषामेकैकलोपे पादकृच्छ्रो मत्या लोपे द्विगुण' इति ॥

'ஸ்த்ரீகள் ப்ரம்மாவாதினிகள் என்றும் ஸத்யோவதூக்கள் என்றும் இரண்டு விதமுடையவராவர். அவர்களுள் ப்ரம்மவாதினிகளுக்கு உபநயனம், அக்னிகார்யம், வேதாத்யயனம், தன் வீட்டிலேயே பிக்ஷாசரணம் இவை உண்டு. ஸத்யோவதூக்களுக்கு விவாஹஸமயத்தில் எவ்விதமாயாவது உபநயனம் செய்து விவாஹம் செய்யவேண்டும்' என்று ஹாரீதர் சொல்லியிருப்பது முந்திய கல்பத்திலுள்ள தர்மத்தைச்

சொல்லியதாம். அவ்விதமே யமன் - முந்திய கல்பத்தில் ஸ்த்ரீகளுக்கும் உபநயனம், வேதாத்யயனம், காயத்ரீ ஜபம் இவைகள் விஹிதமாயிருந்தன. பிதா, அவரது ஸஹோதரன், ப்ராதா, இவர்களைத்தவிர மற்றவர், இவர்களுக்கு அத்யயனம் செய்விக்கக்கூடாது. இவர்கள் தம் வீட்டிலேயே பிக்ஷாசரணம் செய்யவேண்டும். மான்தோல், மரவுரி, ஜடை இவைகளைத் தரிக்கக்கூடாது. ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - இந்த ஸம்ஸ்காரங்கள் பீஜத்தாலும் கர்ப்பத்தாலும் உண்டாகும் தோஷங்களைப் பரிஹரிப்பதற்காகத் தங்கள் குலாசாரப்படி செய்யப்படவேண்டும். ஸ்த்ரீகளுக்கு மந்த்ரமில்லாமல் செய்யவேண்டும். விவாஹத்தை மந்த்ரத்துடன் செய்யவேண்டும். முக்யகாலம் தாண்டினால் வ்யாஹ்ருதி ஹோமத்தைச் செய்து செய்யவேண்டும். இவைகளுள் ஒன்று தவறினால் கால் க்ருச்ரமும், ஞானபூர்வமாய் தவறினால் இருமடங்கும் ப்ராயச்சித்தம்.

### अक्षराभ्यासः

तत्र मार्कण्डेयः — 'प्राप्ते तु पञ्चमे वर्षे ह्यप्रसुप्ते जनार्दने । षष्ठीं प्रतिपदं चैव वर्जयित्वा तथाऽष्टमीम् ।। रिक्तां पञ्चदशीं चैव सौरभौमदिने तथा । एवं सुनिश्चिते काले विद्यारम्भं तु कारयेदिति ।। सायणीये — 'उत्तरायणगे सूर्ये कुम्भमासं विवर्जयेत् । बालस्य पञ्चमे वर्षे प्राप्ते भानौ कुलीरगे । आरभेताक्षरं तत्र शुभकाले यथोदिते । वारे दिने शभृगुपुत्रबृहस्पतीनां विद्वानसौ भवति योऽपि विमूढबुद्धिः । चन्द्रे च चन्द्रतनये च भृशं च सत्वविघ्नं करोत्यवनिजो रविजो विनाशम् ।। वैष्णवादित्यतिष्येन्दु श्रविष्ठास्वातिवारुणाः । मैत्रेन्द्रहस्तचित्राश्च विद्यारम्भेषु पूजिता' इति ।।

### அக்ஷராப்யாஸம்

மார்க்கண்டேயர் - ஐந்தாவது வயது வந்தபிறகு, விஷ்ணு விழித்திருக்கும், ஸமயத்தில், ஷஷ்டி, ப்ரதமை,

அஷ்டமீ, ரிக்ததிதிகள், பர்வங்கள், சனிவாரம், குஜவாரம் இவைகளைத் தள்ளி, சுபமான காலத்தில் வித்யாரம்பத்தைச் செய்விக்கவேண்டும். ஸாயணீயத்தில் - உத்தராயணத்தில் கும்பமாஸமல்லாத மாஸத்தில், குழந்தைக்கு ஐந்தாவது வயது வந்த பிறகு ஸூர்யன் கடகத்திலிருக்கும்போது, சாஸ்த்ரவிஹிதமான சுப காலத்தில் அக்ஷராரம்பம் செய்யவேண்டும். ஸூர்யன், சுக்ரன், குரு இவர்களின் வாரங்களிலானால் மூடனும் வித்வானாக ஆவான். சந்த்ரன், புதன் இவர்களின் வாரங்களிலானால் பலத்திற்குக்குறைவும், அங்காரகன், ஶநி இவர்களின் வாரங்களிலானால் விநாசமும் ஏற்படும். ஶ்ரவணம், புனர்வஸு, புஷ்யம், ரோகிணி, அவிட்டம், ஸ்வாதி, ஶதயம், அனுஷம், கேட்டை, ஹஸ்தம், சித்திரை இந்த நக்ஷத்ரங்கள் ஶ்லாக்யமானவை.

मार्कण्डेयः — 'पूजयित्वा हरिं लक्ष्मीं देवीं चैव सरस्वतीम् । स्वविद्यासूत्रकारांश्च स्वां विद्यां च विशेषतः ।। एतेषामेव देवानां नाम्ना तु जुहुयाद्धृतम् । दक्षिणाभिर्द्विजेन्द्राणां कर्तव्यं चात्र पूजनम् ।। प्राङ्मुखो गुरुरासीनो वारुणाभिमुखं शिशुम् । अध्यापयेत्तु प्रथमं द्विजाशीर्भिस्सुपूजितम् ।। ततः प्रभृत्यनध्यायान् वर्जनीयान् विवर्जयेत् । अष्टमीद्वितयं चैव पक्षान्ते च दिनद्वयमिति ।।

மார்க்கண்டேயர் - விஷ்ணு, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, தனது வித்யைக்கு ஸூத்ரமியற்றியவர்கள், தனது வித்யை இவர்களைப்பூஜித்து, இவர்களின் பெயர்களினாலேயே, ஆஜ்யஹோமம் செய்து, தக்ஷிணைதானத்தினால் ப்ராமணாசீர்வாதம் பெற்று, ப்ராமணர்களைப்பூஜித்து, கிழக்குமுகமாய் உட்கார்ந்தகுரு மேற்கு முகமாயிருக்கும் சிசுவுக்கு அக்ஷராரம்பம் செய்விக்கவேண்டும். அது முதல் அனத்யயன தினங்களையும், இரண்டு அஷ்டமீகள், பக்ஷத்தின் முடிவிலுள்ள சதுர்த்சீ, பூர்ணிமை அல்லது அமாவாஸ்யை, பிரதமை இவைகளையும் தவிர்க்கவேண்டும்.

## अनुपनीतधर्माः

तत्र आपस्तम्बः — 'आन्नप्राशनाद्गर्भा नाप्रयता भवन्त्यापरिसंवत्सरादित्येके। यावता वा दिशो न प्रजानीयुरोपनयनादित्यपरमत्र ह्यधिकारः शास्त्रैर्भवति सा निष्ठा स्मृतिश्चेति ।। अन्नप्राशनात् प्राक् गर्भाः बालाः अप्रयता न भवन्ति रजस्वलादिस्पर्शेऽपि। यावत्संवत्सरो न परिपूर्यते तावन्नाप्रयता इत्येके मन्यन्ते । यावद्वा दिग्विभागज्ञानं नास्ति तावन्नाप्रयताः । उपनयनादर्वाङ्नाप्रयता इत्यपरं दर्शनम्। अत्रोपपत्तिरत्र ह्यधिकार इति। हि - यस्मात् अत्र ह्युपनयने सति विधिनिषेधशास्त्राधिकारो भवति। सा निष्ठा - तदुपनयनमवसानमधिकारस्य। अस्मिन्नर्थे स्मृतिश्चास्तीत्यर्थः ।।

### உபநயனமாகாதவனின் நியமங்கள்

*ஆபஸ்தம்பர் - குழந்தைகள் அன்னப்ராசனத்திற்கு முன் ரஜஸ்வலாதிகளின் ஸ்பர்சத்தினுல் அசுத்தர்களாவதில்லை. ஒருவர்ஷம் முடிவதற்குள் என்று சிலர். திக்குக்களைத் தெரிந்துகொள்ளாத வரையில் என்று சிலர். உபநயனத்திற்குமுன் வரையில் என்று சிலர். உபநயனம் செய்த பிறகே இவனுக்கு விதி நிஷேத சாஸ்த்ராதிகாரம் ஏற்படுகிறது. உபநயனமே அதிகாரத்திற்கு எல்லையாகின்றது. இது விஷயத்தில் ஸ்ம்ருதியும் இருக்கின்றது.*

तथा च दक्षः — 'जातमात्रः शिशुस्तावद्यावदष्टसमावयाः । सोऽपि गर्भसमो ज्ञेयो व्यक्तिमात्रप्रकाशितः ।। भक्ष्याभक्ष्ये तथाऽपेये वाच्यावाच्ये तथाऽऽनृते । अस्मिन्काले न दोषः स्यात् स यावन्नोपनीयते ।। उपनीते च दोषोऽस्ति क्रियमाणैर्विगर्हितैरिति ।। न चापेय इत्यनेन मद्यादिपाने न दोष इति शङ्कनीयम् । वर्जयेदित्यनुवृत्तौ 'नित्यं मद्यं ब्राह्मण' इति गौतमस्मरणात्। तत्र नित्यग्रहणमनुपनीतस्यापि प्रतिषेधार्थम्।

*தக்ஷர் - சிசு பிறந்தது முதல் எட்டு வயது வரையில் சிசுவாகவே பாவிக்கப்படுவான். ஆஹாரத்திலும், பானத்திலும், வார்த்தையிலும், பொய் பேசுவதிலும்*

அவனுக்குத் தோஷமில்லே; உபநயனம் ஆகும் வரையில். உபநயனத்திற்குப் பிறகு நிஷித்தகார்யங்களைச் செய்தால் தோஷமுண்டு. இதனுல் மத்யம் முதலியவற்றின் பானத்திலும் நிஷேதமில்லே என்று சங்கிக்கக்கூடாது; ப்ராமணன் மத்யத்தை நித்யம் எப்பொழுதும் தள்ளவேண்டும்' என்று கௌதமர் சொல்லியிருப்பதால். 'நித்யம்' என்பது அனுபநீதனுக்கும் மத்யத்தை விலக்குகிறது.

न च प्रागुपनयनात् ब्राह्मण्यमेव नास्तीति शङ्कनीयम्। 'ब्राह्मण्यां ब्राह्मणेनैव ह्युत्पन्नो ब्राह्मणः स्मृतः । सवर्णेभ्यस्सवर्णासु जायन्ते हि सजातयः' इति हारीतयाज्ञवल्क्याभ्यामुत्पत्तिमात्रेण साजात्यस्याभि-धानात्, 'गर्भाष्टमेऽब्दे कुर्वीत ब्राह्मणस्योपनायन'मिति मनुना ब्राह्मणस्य सत उपनयनविधानाच्च ॥

உபநயனத்திற்குமுன் ப்ராம்மண்யமே இல்லே என்று சங்கிக்கலாகாது. 'ப்ராமணியினிடத்தில் ப்ராமணனிடமிருந்து பிறந்தவன் ப்ராமணன்' என்று ஹாரீத யாக்ஞவல்க்யர்களால் உத்பத்தியினுலேயே ஜாதி சொல்லப்பட்டிருப்பதாலும், 'கர்பாஷ்டம வர்ஷத்தில் ப்ராமணனுக்கு உபநயனம் செய்யவேண்டும்' என்று மனு ப்ராமணனுயிருப்பவனுக்கே உபநயனத்தை விதிப்பதாலும்.

गौतमः — 'प्रागुपनयनात् कामचारवादभक्षोऽहुताद्ब्रह्मचारी यथोपपादमूत्रपुरीषो भवति। नास्याचमनकल्पो विद्यतेऽन्यत्रावमार्जन प्रधावनावोक्षणेभ्यो न तदुपस्पर्शनादशौचं नत्वेवैनमग्निहवनबलिहरणयोः नियुञ्ज्यान्न ब्रह्माभिव्याहारयेदन्यत्र स्वधानिनयनादुपनयनादिर्नियम' इति कामचार इच्छाचरणं, कामवादोऽश्लीलानृतादिभाषणं, कामभक्षः पर्युषितादिभक्षणम्। एतेषु प्रागुपनयनान्न दोषः।

கௌதமர் - உபநயனத்திற்குமுன் இஷ்டப்படி நடத்தையும், பொய் முதலியவற்றைப்பேசுவதும், பழைய அன்னம் முதலியவற்றைப்பக்ஷிப்பதும் தோஷமாகாது. ஹோமார்ஹமானதை பக்ஷிக்கக்கூடாது. ஸ்த்ரீகளிடம் ப்ரஸக்தி கூடாது. திக்கு நியமமில்லாமல் மூத்ர புரீஷோத்ஸர்ஜனம் செய்தாலும் தோஷமில்லை. ஆசமனம் விதிப்படி வேண்டியதில்லை. எச்சிலை அலம்புவது, குதசோதனம், ரஜஸ்வலாதிகள் தீண்டினால் ப்ரோக்ஷித்தல் இவைகளுண்டு. அசுத்தனை அவனை ஸ்பர்சிப்பதால் பிறருக்கு அசுத்தி இல்லை. ஹோமத்திலும், பலிஹரணத்திலும் இவனை ஏவக்கூடாது. வேதத்தை உச்சரிக்கும்படி செய்யக்கூடாது. ப்ரேதகர்மத்தில் மட்டில் உச்சரிக்கச் செய்யலாம். உபநயனம் முதல் நியமங்களுண்டு.

एतच्च महापातकव्यतिरिक्तविषयम्। 'स्यात् कामचारभक्षोक्तिर्महतः पातकादृत इति स्मरणात्। तत्करणे प्रयश्चित्तं भवत्येव। 'अशीतिर्यस्य वर्षाणि बालो वाऽप्यूनषोडशः। प्रायश्चित्तार्धमर्हन्ति स्त्रियो रोगिण एव च॥ ऊनैकादशवर्षस्य पञ्चवर्षात् परस्य च। चरेद्गुरुः सुहृच्चैव प्रायश्चित्तं विशुद्धये। अतो बालतरस्यास्य नापराधो न पातकम्। राजदण्डश्च नास्यातः प्रायश्चित्तं च नेष्यत' इति॥ 'अत्र यद्यपि सामान्येन प्रागुपनयनादित्युक्तं, तथाऽपि षष्ठाद्वर्षात् प्रागेव कामचारादि द्रष्टव्यम्। ततः परं पित्रादिभिर्वर्णधर्मेषु नियोक्तव्यः। अनियुञ्जानास्तु प्रायश्चित्तिनो दण्ड्याश्चेति मिताक्षरायाम्। क्वचित्कामभक्षणस्यापवादमाह - अहुतात् - हुतशिष्टं च पुरोडाशादि तदत्तीति हुतात् - न हुतात् अहुतात्। यथाऽयमहुतात् स्यात् तथा पित्रा नियुज्येतेत्यर्थः। तथा च यमः — 'वैश्वदेवं पुरोडाश मग्निमध्याच्च यद्धुतम्। यो ह्यद्याच्छिशुराकृष्य मात्रा रक्ष्यः प्रयत्नतः' इति॥ वैश्वदेवशिष्टम्॥

இஷ்டப்படி நடப்பதென்பது முதலியவை மகாபாதகம். தவிர. மகாபாதகம் செய்தால் ப்ராயச்சித்தமுண்டு. 80 வயதான கிழவனும், 16

வயதிற்குட்பட்ட பாலனும், ஸ்த்ரீகளும், ரோகிகளும், ப்ராயச்சித்தத்தில் அரைப்பாகம் அனுஷ்டிக்கவேண்டும். 5-வயதிற்கு மேற்பட்டவனும், 11-வது வயது முடியாதவனுமான பாலனுக்குப் பாபம் ஏற்பட்டால் அவன், பிதா, அல்லது ஆப்தன் அவனுக்காகப் பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்கவேண்டும். இவனைவிடச் சிறுவனுக்குக் குற்றம், பாபம், ராஜதண்டனை ஒன்றுமில்லை. ஆகையால் ப்ராயச்சித்தமுமில்லை. இங்கு ஸாமான்யமாய் 'உபநயனத்திற்கு முன்' என்றிருந்தாலும், 6-வது வயதிற்குமுன் வரையில் தான் காமசாராதிகள் என்பது அறியத்தக்கது. பின்பு பாலனைப்பிதா முதலியவர்கள் வர்ணதர்மங்களில் ஏவ வேண்டும். அவ்விதம் செய்யாவிடில் அவர்களே ப்ராயச்சித்தத்திற்கும், தண்டனைக்கும் உரியவர்கள்என்பது மிதாக்ஷரையிலிருக்கிறது. ஹோமசிஷ்டமான புரோடாசம், வைஶ்வதேவ சிஷ்டம் இவைகளை சிசு எடுத்துப் பக்ஷிக்கச் சென்றாலும் மாதா பிதா முதலியவர் தடுக்கவேண்டும்.

कामचारस्यापवादः ब्रह्मचारीति। गर्भाष्टमादावुपनयनातिक्रमेऽपि स्त्रीषु न प्रसजेत्। न च ब्रह्मचारीत्येतत् ब्रह्मचारिधर्मप्राप्त्यर्थमिति शङ्कनीयम्। 'न ह्यस्य विद्यते कर्म किञ्चिदामौञ्जिबन्धनात्। वृत्त्या शूद्रसमस्तावद्याव-द्वेदेन जायत' इति वसिष्ठस्मरणात्।। यथोपपादेति। मूत्रपुरीषे यथोपपद्येते तिष्ठतः प्राङ्मुखस्य पथि कृष्टादौ वा तथैव तौ कुर्यात्। नास्येति। अस्य - अनुपनीतस्य। कल्पप्रतिषेधात् आचमनमात्रमनुज्ञायते। तच्च 'स्त्रीशूद्रौ तु सकृत्सकृदिति। 'स्त्रीशूद्रेण समस्तावद्यावद्वेदेन जायत इति स्मरणात्।। अन्यत्रेति। अवमार्जन मुच्छिष्टलिप्तस्य हस्तादेः सोदकेन पाणिना शोधनम्। प्रधावनं गुदशोधनम्। अवोक्षणं रजस्वलादिस्पृष्टस्य प्रोक्षणम्। यद्यप्यवमार्जनादय आचमनकल्पे नान्तर्भवन्ति। तथाऽपि पर्युदासमुखेन ते विधीयन्ते। एतत्त्रयं षष्ठवर्षात् प्रागतिबालस्य भूतपिशाचादिभ्यो रक्षार्थं कुर्यात्।।

காலத்தில் உபநயனமாகாதிருந்தாலும் ஸ்த்ரீகளிடத்தில் ப்ரஸங்கம் கூடாது; ப்ரம்மசாரியாக இருக்கவேண்டும். 'ப்ரம்மசாரீ' என்ற பதம் ப்ரம்மசாரி தர்மங்களைச் சொல்லுகின்றது என்ற சங்கைக்கு இடமில்லை. உபநயனம் ஆகும் வரையில் சூத்ரனுக்குச் சமனானதால் இவனுக்கு அதுவரை எந்தக்கர்மமுமில்லை என்று வஸிஷ்ட ஸ்ம்ருதி இருப்பதால். நின்றுகொண்டும், வழிமுதலிய நிஷித்தஸ்தலங்களிலும், திக்குநியமமில்லாமலும் மூத்ரபுரீஷ விஸர்ஜனம் செய்வதால் தோஷமில்லை. 'ஸ்த்ரீ, சூத்ரன் இவர்கள் ஒரு தடவை ஆசமனம் செய்யவேண்டும்' என்ற விதிப்படி ஒருதடவை ஆசமனம் மட்டிலுண்டு. 6-வது வயதிற்குட்பட்ட பாலனுக்கும், எச்சில்பட்ட இடத்தை ஜலத்துடன் கூடிய கையினால் துடைப்பது, மலவிஸர்ஜனத்திற்குப் பிறகு குதத்தை அலம்புவது, ரஜஸ்வலை முதலியவர்களின் ஸ்பர்மத்தில் ப்ரோக்ஷிப்பது இவைகளைப் பூத பிசாசாதிகளினின்றும் ரக்ஷைக்காகச் செய்ய வேண்டும்.

तदाह शातातपः —'बालानां पञ्चमाद्वर्षाद्रक्षार्थं शौचं कुर्याच्छुद्ध्यर्थं परतः स्वयमेव कुर्यात्' इति ॥ पञ्चवर्षादूर्ध्वं चण्डालादिस्पर्शे स्नापयितव्यः ॥ तत्र गौतमः — 'न तदुपस्पर्शनादशौचम्' ॥ षष्ठवर्षात् प्राक् चण्डालादिस्पृष्टस्य तस्यानुपनीतस्य अशुचित्वं न। तस्योपस्पर्शने न स्नानम्। भुक्तोच्छिष्टस्य कृतमूत्रपुरीषस्य चोपस्पर्शनेऽपि नाचमनमिति हरदत्तः ॥

இதைச் சாதாதபரும் விதிக்கின்றார். '6-வது வயது முதல் தானாகவே செய்துகொள்ளவேண்டும்; ரஜஸ்வலாதி ஸ்பர்சத்தில் ஸ்நானமுமுண்டு' என்று. இதில் கௌதமர் 'அவனைத்தொடுவதால் அசுத்தி இல்லை' என்கிறார். 6-வது வயதிற்குமுன் சண்டாளாதி ஸ்பர்மத்தால் அனுபநீதனுக்கு அசுத்தி இல்லை. ஆகையால் அவனைத் தொடுவதால் ஸ்நானமுமில்லை. சாப்பிட்ட பிறகும், மூத்ரபுரீஷ விஸர்க்கம் செய்தபிறகும் பாலனைத் தொட்டாலும் ஆசமனம் வேண்டுவதில்லை என்றார் ஹரதத்தர்.

स्मृतिचन्द्रिकायां तु विशेषो दर्शितः — 'आचमनकल्पप्रतिषेधात् स्त्रीशूद्रवदाचमनमात्रमवमार्जनादिकं चास्ति । तावन्मात्रेण तस्य प्रयतत्वात्तदुपस्पर्शनात् पित्रादेरशुचिर्नास्ति । न तु चण्डालादिस्पृष्टस्य तस्य स्पर्शेऽपि । गौतमवादे चण्डालादेरप्रकृत्वात्, पतितचण्डाल सूतिकोदक्याशवस्पृष्टितत्स्पृष्ट्युपस्पर्शने सचेलस्नानमित्यत्र वयोविशेषानभिधानाच्चेति ॥ 'नत्वेवैनमग्निहवन बलिहरणयोर्नियुञ्ज्यादिति। एनमनुपनीतमग्निहवने औपासनहोमादौ वैश्वदेवे यद्बलिहरणं तत्र च न नियुञ्जीत । तस्य मन्त्रविहीनत्वादित्यभिप्रायः । न च मन्त्रान् ग्राहयित्वा नियोग इत्याह — 'न ब्रह्माभिव्याहारयेदन्यत्र स्वधानिनयना'दिति ॥ स्वधानिनयनं प्रेतकर्म, तत्रानुपनीतस्यापि मन्त्राध्ययनमविरुद्धमित्यर्थः ॥ मनुरपि — 'नह्यस्मिन् युज्यते कर्म किञ्चिदामौञ्जिबन्धनात् । नाभिव्याहारयेद् ब्रह्म स्वधानिनयनादृत इति ॥

ஸ்ம்ருதிசந்த்ரிகையில் விசேஷம் காண்பிக்கப் பட்டிருக்கிறது - 'சண்டாளாதி ஸ்பர்ஶத்தில் சிசுவை ஸ்பர்சிப்பவர்களுக்கு அசுத்தியுண்டு. 'சண்டாளன். ஸூதிகை, ரஜஸ்வலை, சவம் இவர்களை ஸ்பர்சித்தவனுக்கும் அவனை ஸ்பர்சித்தவனுக்கும் ஸசேல ஸ்நானம் உண்டு' என்றவாக்யத்தில் வயதைப்பற்றி ஒன்றும் சொல்லாததால் என்று. ஔபாஸனஹோமம், வைஶ்வதேவபலிஹரணம் இவைகளிலும் இவனை ஏவக்கூடாது. மந்த்ரமில்லாதவனானதால். அக்காலத்தில் மந்த்ரங்களை உச்சரிக்கச் செய்யவும் கூடாது. ப்ரேதகர்மத்தில் மட்டில் மந்த்ரத்தை உச்சரிக்கலாம். இவ்விதம் மனுவும் விதித்திருக்கிறார்.

स्मृत्यर्थसारे — 'उपनयनात् प्रागुच्छिष्टादावप्रयता न स्युर्महापातकवर्जं तेषां चण्डालादिस्पर्शे सचेलस्नानं प्रागन्नप्राशनादभ्युक्षणं प्राक्चौलादाचमनं पश्चात् स्नानमित्येके पित्रोः स्वधानिनयनादृते च मन्त्रान्न ब्रूयु'रिति ॥ आपस्तम्बः — 'आन्नप्राशनाद्गर्भा नाप्रयता भवन्त्या

परिसंवत्सरादित्येके यावता वा दिशो न प्रजानीयुरोपनयनादित्यपरमत्र ह्यधिकारः शास्त्रैर्भवति सा निष्ठेति, 'पित्रोः स्वधानि नयनादृते च मन्त्रान्न ब्रूयुरिति ॥ वसिष्ठः — 'अन्यत्रोदककर्मस्वधापितृसंयुक्तेभ्य इति ॥ इत्यनुपनीतधर्माः ॥

*முன் சொல்லியவை ஸ்ம்ருத்யர்த்தஸாரத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆபஸ்தம்பரும் இவ்விதமே விதிக்கிறார். வஸிஷ்டர் - உதகதானம், ப்ரேதகார்யம், பித்ருகார்யம் இவைகள் தவிர மற்றவிடங்களில் மந்த்ரத்தை உச்சரிக்கக்கூடாது.*

## उपनयनम् ।

तत्र मनुः — 'गर्भाष्टमेऽब्दे कुर्वीत ब्राह्मणस्योपनायनम् । गर्भादेकादशे राज्ञो गर्भात्तु द्वादशे विश इति ॥ गर्भाष्टमे - गर्भादारभ्याष्टमे । उपनयनमेवोपनायनम् । लब्धसङ्ख्यानियमस्यायमभिप्रायः । ब्रह्मक्षत्रविशां गायत्रत्रैष्टुभजागतैश्छन्दोभिः सहजत्वं श्रूयते — 'गायत्री छन्दो रथन्तरꣳ साम ब्राह्मणो मनुष्याणा मजःपशूनां तस्मात्ते मुख्या मुखतो ह्यसृज्यन्तेति, 'त्रिष्टुप्छन्दो बृहत्साम राजन्यो मनुष्याणामविः पशूनामिति 'जगती छन्दो वैरूपꣳ साम वैश्यो मनुष्याणां गावः पशूनामिति ॥ गायत्र्यादिभिरेव तेषामुपनयनं च स्मर्यते — 'गायत्र्या ब्राह्मणमुपनयीत त्रिष्टुभा राजन्यं जगत्या वैश्य'मिति ॥ ततश्चोपनयनाब्दा अपि स्वच्छन्दोऽक्षरसमसङ्ख्या भवितुमर्हन्तीति ॥ छन्दसां चाक्षरसङ्ख्या श्रूयते — 'अष्टाक्षरा गायत्री, एकादशाक्षरा त्रिष्टुप्, द्वादशाक्षरा जगतीति ॥ एकैकपादाभिप्रायं चैतत् । तथा च श्रुतिः 'चतुर्विंꣳशत्यक्षरा गायत्री, चतुश्चत्वारिंशदक्षरा त्रिष्टुप्, अष्टाचत्वारिंशदक्षरा जगती'ति ॥ हारीतः— 'छन्दस्सु पादाक्षरसमुदायवदब्द समूह उपनयन'मिति ॥ गायत्र्यादिपादाक्षर-संमितेऽब्दे कार्यमित्यर्थः । ततश्चाष्टमैकादशद्वादशेष्वब्देषु ब्राह्मणक्षत्रिय-वैश्यानां मुख्यमुपनयनमिति ॥

உபநயனம்

மனு - கர்ப்பத்தினின்றும் 8-வது வயதில் ப்ராமணனுக்கும் 11-வது வயதில் க்ஷத்ரியனுக்கும், 12-வது வயதில் வைஶ்யனுக்கும் உபநயனம் செய்யவேண்டும். வர்ஷங்களை நியமம் செய்வதன் அபிப்ராயமிதுவாம். 'காயத்ரீ, த்ரிஷ்டுப், ஜகதீ என்று மூன்று சந்தஸ்ஸுகளுடன் முறையே ப்ராமணன், க்ஷத்ரியன், வைஶ்யன் என்ற மூன்று வர்ணங்களும் பிறந்ததாக ஶ்ருதியிருப்பதாலும், மூன்று சந்தஸ்ஸுகளாலேயே மூன்று வர்ணத்தார்களுக்கும் உபநயனம் விதிக்கப்பட்டிருப்பதாலும், உபயனத்திற்குரிய வர்ஷங்களும் அவரவர் சந்தஸ்ஸின் அக்ஷரங்களுக்குச் சமமான எண்ணை உடையவைகளாய் இருப்பது ஶ்லாக்ய மென்பதாம். சந்தஸ்ஸுகளின் அக்ஷரஸங்க்யையைப்பற்றி ஶ்ருதியில் 'காயத்ரீ 8-அக்ஷரங்களுடையது, த்ரிஷ்டுப் 11-அக்ஷரங்களுடையது, ஜகதீ 12- அக்ஷரங்களுடையது' எனப்படுகிறது. ஒவ்வொரு பாதத்திற்கு என்பது இதன் கருத்து. ஶ்ருதியே வேறிடத்தில் '24- அக்ஷரங்களுடையது காயத்ரீ, 44- அக்ஷரங்களுடையது த்ரிஷ்டுப், 48-அக்ஷரங்களுடையது ஜகதீ' என்று சொல்லியிருக்கிறது. ஹாரீதர் - அவரவர் சந்தஸ்ஸின் பாதத்திலுள்ள அக்ஷரங்களின் கணக்குக்குச்சரியான வர்ஷத்தில் உபநயனம் செய்யவேண்டும். ஆகையால் 8-11-12 வது வர்ஷங்களில் முறையே 3-வர்ணங்களுக்கும் உபநயனம் முக்யமென்பதாம்.

याज्ञवल्क्यः— 'गर्भाष्टमेऽष्टमे वाब्दे ब्राह्मणस्योपनायनम्। राज्ञामेकादशे सैके विशामेके यथाकुल'मिति । राज्ञामेकादशे सैके विशामेके यथाकुल'मिति ।। गर्भाज्जन्मनो वा आरभ्याष्टमे । विशः - वैश्यस्य । सैके एकादशे - द्वादश इत्यर्थः । कुलस्थित्या केचिदुपनयनमिच्छन्ति । श्रुतिरपि — 'अष्टवर्षं ब्राह्मणमुपनयीते'ति ।। आपस्तम्बः - 'गर्भाष्ट मेषु ब्राह्मण-मुपनयीत गर्भैकादशेषु राजन्यं गर्भद्वादशेषु वैश्यं वसन्तो ग्रीष्मश्शरदित्यृतवो वर्णानुपूर्व्येणे' ति ।। गर्भः अष्टमो येषामिति गर्भाष्टमाः । जननप्रभृति सप्त

गृह्यन्ते । एवं यद्यपि सप्तस्वप्युपनयनं प्राप्तं, तथाऽपि जन्मादिषु त्रिषु चौलान्तसंस्कारैरवरुद्धत्वाच्चतुर्थेऽप्यक्षराभ्यासाभावेनासामर्थ्यात् न क्रियते । अतोऽत्रोपादेयगता बहुत्वसङ्ख्या कपिञ्जलन्यायेन षष्ठसप्तमाष्टमेषु त्रिष्वेवावतिष्ठते । एवं च वर्षत्रयं मुख्यकाल इत्यापस्तम्बरीतिरिति वदन्ति । अन्ये तु 'गर्भाष्टम एव वर्षे न तु षष्ठसप्तमयोः, तयोर्गर्भाष्टमत्वाभावात्, बहुवचनं छान्दस'मिति वदन्ति । अत्र यथाकुलाचारं व्यवस्था ।।

யாக்ஞவல்க்யர் - *கர்ப்பம், அல்லது ஜனனம் முதல் 8-வது வயதில் ப்ராமணனுக்கும் கர்ப்பம் முதல் 11-வது வயதில் க்ஷத்ரியனுக்கும், கர்ப்பம் முதல் 12-வது வயதில் வைஶ்யனுக்கும் உபநயனம் செய்யவேண்டும். அவரவர் குலாசாரப்படி வர்ஷக்கணக்கு என்று சிலர். ஶ்ருதி - 8 வயதுள்ள ப்ராமணனுக்கு உபநயனம் செய்யவேண்டும்.* ஆபஸ்தம்பர் - *கர்ப்பாஷ்டமங்களில் ப்ராமணனுக்கு, கர்பைகாதசங்களில் க்ஷத்ரியனுக்கும், கர்ப்பத்வாதசங்களில் வைஶ்யனுக்கும் உபநயனம். வஸந்தம், க்ரீஷ்மம், சரத் என்ற ருதுக்களும் முறையே. இங்கு கர்ப்பத்தை 8-வதாக உடையவைகள் என்றதால் ஜனனம் முதலுள்ள 7-வது வருஷம் எனச் சொல்லப்படுவதால் அவைகளில் உபநயனம் ப்ராப்தமாகின்றது; ஆனாலும் ஜன்மம் முதல் 3-வர்ஷங்கள் சௌளசம் வரையுள்ள ஸம்ஸ்கார காலங்களானதாலும், 4-வது வயதில் அக்ஷராப்யாஸமே இல்லாததால் ஸாமர்த்யமில்லாததாலும் அவைகளில் செய்யப்படுவதில்லை. ஆகையால் இங்குள்ள பன்மை கபிஞ்ஜலாதிகரண ந்யாயத்தால் 6-7-8 என்ற மூன்று வர்ஷங்களைக்குறிக்கின்றது. இப்படியானதால் இம்மூன்று வர்ஷங்களும் முக்யகாலம் என்பது ஆபஸ்தம்பரின் மதம் என்கிறார்கள். சிலர், கர்ப்பாஷ்டமமே முக்யகாலம்; மற்றவைகளல்ல; அங்குள்ள பன்மை சாந்தஸம் என்கின்றனர். இங்கு அவரவர் குலாசாரப்படி வ்யவஸ்தை என்றறியவும்.*

गौतमः — 'उपनयनं ब्राह्मणस्याष्टमे, एकादशद्वादशयोः क्षत्रिय वैश्ययोः, गर्भादिः सङ्ख्या वर्षाणामिति च ॥ काम्योपनयनमाह स एव — 'नवमे पञ्चमे वा काम्य'मिति ॥ यथाऽऽहाङ्गिराः — 'ब्रह्मवर्चसकामस्य पञ्चमेऽब्देऽग्रजन्मनः । आयुष्कामस्य नवमे कार्यं मौञ्जीनिबन्धनमिति ॥

கௌதமர் - 8, 11, 12, இந்த வர்ஷங்களில் முறையே மூன்று வர்ணங்களுக்கும் உபநயனம்; கர்ப்பம் முதல் வர்ஷங்களுக்குக் கணக்கு. காம்யமான உபநயனத்தைப் பற்றிக் கௌதமரே 9, அல்லது 5-வது வயதில் காம்ய உபநயனம். அங்கிரஸ் - ப்ரம்மதேஜஸ்ஸில் ஆசையுடைய ப்ராமணனுக்கு 5-வது வயதிலும், ஆயுஸ்ஸை விரும்புவோனுக்கு 9-வது வயதிலும் உபநயனம் செய்ய வேண்டும்.

मनुः — 'ब्रह्मवर्चसकामस्य कार्यं विप्रस्य पञ्चमे । राज्ञो बलार्थिनः षष्ठे वैश्यस्यार्थार्थिनोऽष्टम इति ॥ अङ्गिराः — 'षष्ठे तथा द्वादशे च राज्ञो वृद्धिर्बलायुषोः । ईहायुषोस्तु वैश्यस्य ह्यष्टमे च चतुर्दशे' इति ॥ ईहा - कृष्यादिविषया चेष्टा । स्मृतिरत्ने — 'सप्तमे चाष्टमे वर्षे नवमे दशमे तथा। एकादशे द्वादशे च ह्युपनीयुर्द्विजातयः ॥ ब्रह्मवर्चसमायुष्यं तेजोऽन्नाद्यं तथेन्द्रियम् । पशूंश्च कामयाना वै प्राप्नुवन्ति यथाक्रममिति ॥ बोधायनोऽपि - 'सप्तमे ब्रह्मवर्चसकाममष्टम आयुष्कामं नवमे तेजस्कामं दशमेऽन्नाद्यकाम मेकादश इन्द्रियकामं द्वादशे पशुकामं त्रयोदशे मेधाकामं चतुर्दशे पुष्टिकामं पञ्चदशे भ्रातृकामं षोडशे सर्वकाममिति ॥

மனு :- ப்ரம்மவர்ச்சஸத்தை அபேக்ஷிக்கும் ப்ராமணனுக்கு 5-வது வயதிலும், பலத்தை விரும்பும் க்ஷத்ரியனுக்கு 6-வது வயதிலும், தனத்தை விரும்பும் வைஶ்யனுக்கு 8-வது வயதிலும் உபநயனம் செய்யவேண்டும். அங்கிரஸ் - க்ஷத்ரியனுக்கு 6, அல்லது 12-வது வயதில் உபநயனம் செய்தால் பலம், ஆயுஸ்

இவைகளின் வ்ருத்தி உண்டாகும். 8 அல்லது 14-வது வயதில் வைச்யனுக்கு க்ருஷி முதலியவைகளும், ஆயுஸ்ஸும் வ்ருத்தியாகும். ஸ்ம்ருதிரத்னத்தில் 7-8 வது வயதில் ப்ராமணன் ப்ரம்மவர்ச்சஸம், ஆயுஸ் இவைகளையும், 9-10 வது வயதில் க்ஷத்ரியன் தேஜஸ், அன்னாத்யம் (உணவுப்பொருள் நிறைவு) இவைகளையும், 11-12ல் வைச்யன் இந்த்ரியம், பசுக்கள் இவைகளையும் உபநயனத்தால் அடைகின்றனர். போதாயனர் - ப்ரம்மவர்ச்சஸம், ஆயுஸ், தேஜஸ், அன்னாத்யம், இந்த்ரியம், பசு, மேதை, புஷ்டி, ப்ராதா, ஸகலமும் இவைகளை விரும்புவனுக்கு முறையே 7-வது முதல் 16-வது முடிய உள்ள வர்ஷங்களில் உபநயனம் செய்யவேண்டும்.

तथा च भरद्वाजः — 'वसन्ते ब्राह्मणमुपनयीत ग्रीष्मे (हेमन्ते वा) राजन्यं शरदि वैश्यं वर्षासु रथकारं शिशिरे वा सर्वा'निति ।। चन्द्रिकायाम् - 'ऋतुर्वसन्तः शुभदोऽग्रजन्मनां ग्रीष्मो नृपाणां च शरद्विशां च । व्रतस्य बन्धे यदि वाऽखिलानां माघादयः पञ्च भवन्ति मासा' इति ।। ज्योतिश्शास्त्रे च — 'माघादिषु च मासेषु मौञ्जी पञ्चसु शस्यत' इति ।। धर्मसारसुधानिधौ — 'विप्रं वसन्ते क्षितिपं निदाघे वैश्यं घनान्ते व्रतिनं विदध्यात् । माघादिशुक्रान्तकपञ्चमासाः साधारणं वा सकलं द्विजाना'मिति ।। वृद्धवसिष्ठः — 'विप्रस्य क्षत्रियस्यापि मौञ्जी स्यादुत्तरायणे । दक्षिणे तु विशां कुर्यान्नानध्याये न संक्रमे ।। अनध्यायेऽपि कुर्वीत यस्तु नैमित्तिको भवेत् । ज्येष्ठे मासि विशेषेण सर्वज्येष्ठस्य चैव हि ।। उपनीतस्य पुत्रस्य जडत्वं मृत्युरेव चेति ।।

பரத்வாஜர் - வஸந்தத்தில் ப்ராமணனுக்கும், க்ரீஷ்மத்தில் க்ஷத்ரியனுக்கும் சரத்தில் வைச்யனுக்கும், வர்ஷருதுவில் ரதகாரனுக்கும், அல்லது சிசிரத்தில் எல்லோருக்கும் உபநயனம் செய்யலாம். சந்த்ரிகையில் - ப்ராமணருக்கு வஸந்தமும், க்ஷத்ரியருக்கு க்ரீஷ்மமும், வைச்யருக்கு ஶரத்தும் உபநயநத்தில் சுபங்களாகும்.

அல்லது எல்லோருக்கும் மாகம் முதலுள்ள ஐந்து மாதங்களும் சுபங்களாகும். ஜ்யோதிச்சாஸ்த்ரத்திலும் - மாகம் முதலான ஐந்து மாதங்களிலும் உபநயனம் சிலாக்யமாகும். தர்மஸார ஸுதாநிதியில் - வஸந்தத்தில் விப்ரனையும், க்ரீஷ்மத்தில் க்ஷத்ரியனையும், சரத்தில் வைச்யனையும் உபநயிக்கலாம். அல்லது எல்லோருக்கும் மாகம் முதல் 5 மாஸங்கள் விஹிதங்களாம். வ்ருத்த வஸிஷ்டர்- ப்ராமணர்களுக்கும் க்ஷத்ரியர்களுக்கும் உத்தராயணத்திலும், வைஶ்யர்களுக்கு தக்ஷிணாயனத்திலும் உபநயனம் செய்யவேண்டும். அனத்யாயதினத்திலும் ஸங்க்ரமணத்திலும் கூடாது. நைமித்திகமான உபநயனத்தை அனத்யயனத்திலும் செய்யலாம். ஸீமந்தஜனபுத்ரனுக்கு ஜ்யேஷ்டமாஸத்தில் உபநயனம் செய்தால், அவன் அறிவில்லாதவனாவான்; ம்ருத்யுவையும் அடைவான்.

वृद्धगार्ग्यः — 'स्वाध्यायवियुजो घस्राः कृष्णप्रतिपदादयः । प्रायश्चित्तनिमित्ते तु मेखलाबन्धने मता' इति ।। घस्राः - वासराः । 'विप्रश्चातीतकालश्चेच्छस्ता शुक्लचतुर्दशी । कृष्णे तु प्रतिपच्चेष्टा प्रायश्चित्तोपनायन' इति ।। अपरार्के — 'नष्टे चन्द्रेऽष्टमे शुक्रे निरंशे चैव भास्करे । कर्तव्यं नोपनयनं नानध्याये गलग्रहे । राशेः प्रथमभागस्थो निरंशस्सूर्य उच्यते । त्रयोदशीचतुष्कं तु सप्तम्यादित्रयं तथा ।। चतुर्थ्येकादशी प्रोक्ता नव चैते गलग्रहाः ।। गुरुर्भृगुसुतो धात्रीपुत्रश्शशधरात्मजः । स्युरेते ऋग्यजुस्सामाथर्वणामधिपाः क्रमादिति ।। धात्रीपुत्रः - अङ्गारकः । शशधरात्मजो बुधः । तद्वासरे तच्छाखीयस्योपनयनं कर्तव्यमित्यर्थः । तथा सायणीये - 'गुरोः कवेर्लोहितस्य बुधस्यैव च वासराः । ऋग्यजुस्सामाथर्वाणां शस्ताः स्युर्व्रतबन्धने' इति ।।

வ்ருத்த கார்க்யர் - அனத்யாயதினங்களும் க்ருஷ்ணப்ரதமை முதலியவையும் ப்ராயச்சித்தத்திற்காகவான உபநயனத்தில் விஹிதங்களாகும். முக்யகாலம்

தாண்டிய பிறகு செய்யும் உபநயனத்தில் சுக்லசதுர்த்தசியும், புனருபநயனத்தில் க்ருஷ்ணப்ரதமையும் சிலாக்யமாம். அபரார்க்கத்தில் - சந்த்ரன் க்ஷீணனாயிருக்கையிலும், சுக்ரன் அஷ்டமத்திலிருக்கையிலும், ஸூர்யன் நிரம்சனாயிருக்கையிலும், அனத்யயன தினத்திலும், களக்ரஹத்திலும் உபநயனம் கூடாது. ராசியின் முதல் பாகத்திலிருக்கும் ஸூர்யன் நிரம்சன் எனப்படுவான். த்ரயோதசீ முதல் 4-திதிகளும் ஸப்தமீ முதல் 3 - திதிகளும், சதுர்த்தீ, ஏகாதசீ இந்த 9-திதிகளும் களக்ரஹங்களெனப்படும். குரு, சுக்ரன், அங்காரகன், புதன் இவர்கள், ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற நான்கு வேதங்களுக்கும் முறையே அதிபதிகள். தன் சாகாதிபதியின் வாரத்தில் உபநயனம் செய்யவேண்டும். ஸாயணீயத்தில் - குரு, சுக்ரன், அங்காரகன், புதன் இவர்களுடைய வாரங்கள், முறையே ருக் யஜுஸ் ஸாம அதர்வவேதிகளின் உபநயனத்தில் சிறந்தவை.

वृद्धगार्ग्योऽपि— 'बुधत्रयेन्दुवाराणि शस्तानि व्रतबन्धने' इति ॥ स एव — 'शाखाधिपे बलिनि केन्द्रगते तु मौञ्जीबन्धस्तदीयदिवसे च सुखाय क्लृप्तः । अस्मिन् बलेन रहिते तु पुनर्द्विजानां स्याद्वर्णसङ्कर इति प्रवदन्ति तज्ज्ञाः ॥ हस्तत्रये पुष्यधनिष्ठयोश्च पौष्णाश्विसौम्यादिति विष्णुभेषु। शस्ते तिथौ चन्द्रबलेन युक्ते कार्यौ द्विजानां व्रतबन्धमोक्षाविति ॥ द्विजत्वकारणमाह याज्ञवल्क्यः — 'मातुर्यदग्रे जायन्ते द्वितीयं मौञ्जीबन्धनात्। ब्राह्मणक्षत्रियविशस्तस्मादेते द्विजाः स्मृता' इति ॥

வ்ருத்தகார்க்யர் - புதன் முதல் 3 வாரங்களும், சந்த்ரனின் வாரமும் உபநயனத்தில் நல்லவை. சாகாதீசன் பலிஷ்டனாய் கேந்த்ரத்திலிருக்கையில் அவனுடைய வாரத்தில் உபநயனம் ஸுககரமாகும். அவன் பலமில்லாவிடில் வர்ணஸாங்கர்யம் உண்டாகுமென்று ஶாஸ்த்ரக்ஞர்கள் சொல்லுகின்றனர். ஹஸ்தம் முதல் மூன்று நக்ஷத்ரங்கள், புஷ்யம், அவிட்டம், ரேவதீ, அஶ்வினீ, ம்ருகசீர்ஷம், புனர்வஸு, ஶ்ரவணம் இந்த

*நக்ஷத்ரங்களிலும், ஶ்லாக்யமான திதியிலும், சந்த்ர பலமுள்ள காலத்திலும் மூன்று வர்ணங்களுக்கும் வ்ரதத்தின் ஆரம்ப ஸமாபநங்கள் செய்யத் தகுந்தவை. த்விஜத்தன்மைக்குக் காரணத்தைப்பற்றி யாக்ஞவல்க்யர் - மாதாவினிடமிருந்து முதலில் பிறப்பதாலும், உபநயனத்தினுல் இரண்டாவது தடவை பிறப்பதாலும், ப்ராமண க்ஷத்ரிய வைஶ்யர்கள் 'த்விஜர்கள்' எனப்படுகிருர்கள்.*

वसिष्ठोऽपि — 'मातुरग्रेऽधिजननं द्वितीयं मौञ्जीबन्धन' मिति ॥ मनुरपि — 'मातुरग्रेऽधिजननं द्वितीयं मौञ्जिबन्धने। तृतीयं यज्ञदीक्षायां द्विजस्य विधिचोदितम्॥ तत्र यद्ब्रह्मजननं मौञ्जीबन्धनचिह्नितम्। तत्रास्य माता सावित्री पिता त्वाचार्य उच्यते' इति ॥ आचार्यस्य पितृत्वे हेतुमाह स एव — 'वेदप्रदानादाचार्यं पितरं प्रतिचक्षते। न ह्यस्य विद्यते कर्म किञ्चिदामौञ्जिबन्धना' दिति ॥ वेदप्रदानात् - सर्ववेदस्वरूपसावित्रीप्रदानात्, उपनयनाख्यजन्मप्रदानादिति यावत्। आपस्तम्बः — 'स हि विद्यातस्तं जनयति तच्छ्रेष्ठं जन्म शरीरमेव मातापितरौ जनयत' इति ॥

வஸிஷ்டரும் - *தாயினிடமிருந்து முதற்பிறப்பு, உபநயனத்தில் இரண்டாவது பிறப்பு.* மனு - *தாயினிடம் முதற்பிறப்பு, இரண்டாவது உபநயனத்தில், மூன்ருவது யாகதீக்ஷையில். உபநயனம் என்னும் 2-வது ஜனனத்தில் ஸாவித்ரியே மாதா, ஆசார்யனே பிதா எனப்படுகிறது. ஸர்வவேதஸ்வரூபமான ஸாவித்ரியைக்கொடுப்பதால் ஆசார்யனையே பிதா என்கிருர்கள். உபநயனம் பெறுவதற்கு முன் இவனுக்கு வைதிக கார்யம் ஏதுமில்லை யாதலால். ஆபஸ்தம்பர் - ஆசார்யனல்லவோ வித்யையினின்றும் மாணவகனைப்பிறப்பிக்கின்ருன். அந்தப் பிறப்பே சிறந்தது. மாதாபிதாக்கள் சரீரத்தைமட்டில் பிறப்பிக்கின்றனர்.*

उपनयने गौणकालः

तत्र मनुः — 'आषोडशाद्ब्राह्मणस्य सावित्री नातिवर्तते । आद्वाविंशात् क्षत्रबन्धोराचतुर्विंशतेर्विश' इति ॥ सावित्री - उपनयनम् । क्षत्रबन्धोः - क्षत्रियस्य । आकारोऽत्राभिविधिवचनः । मुख्यकल्प सङ्ख्याद्वैगुण्यानुगुण्यात् ॥ तदाह व्यासः — 'औपनायनिकः कालः परः षोडशवार्षिकः । द्वाविंशतिः परोऽन्यस्य स्याच्चतुर्विंशतिः पर इति ॥ परः - अन्तिमः । तत ऊर्ध्वं गौणकालोऽपि नास्तीत्यर्थः ॥

**உபநயனத்தில் கௌணகாலம்**

மனு - *கர்ப்பம் முதல் 16-வது வர்ஷம் (முடியும்) வரையில் ப்ராமணனுக்கும், 22-வது வரையில் க்ஷத்ரியனுக்கும், 24-வது வரையில் வைப்யனுக்கும், உபநயனம் காலம் கடந்ததாக ஆவதில்லை. இங்கு 'ஆ' என்பது அபிவிதியைச் சொல்லுகின்றது. முக்ய கல்பத்திலுள்ள வர்ஷக்கணக்கை இரட்டிப்பதற்கு அனுகுணமானதால். எல்லையாய்ச் சொல்லிய வர்ஷங்களையும் சேர்த்துக் கணக்கிடவேண்டுமென்பது பொருள்.* வ்யாஸர் - *மூன்று வர்ணங்களுக்கும், முறையே உபநயனத்தின் கௌணகாலம் 16, 22, 24 வர்ஷங்கள் வரையில். அதற்குப்பிறகு கௌணகாலமும் இல்லை என்பது பொருள்.*

याज्ञवल्क्यः — 'आषोडशादाद्वाविंशाच्चतुर्विंशाच्च वत्सरात् । ब्रह्मक्षत्रविशां काल औपनायनिकः पर' इति ॥ आपस्तम्बः — 'आषोडशाद् ब्राह्मणस्यानात्यय आद्वाविंशात् क्षत्रियस्याचतुर्विंशाद्वैश्य-स्येति। गौतमोऽपि — 'आषोडशाद् ब्राह्मणस्यापतिता सावित्रीति ॥

யாக்ஞவல்க்யர் - *16,22, 24-வது வர்ஷம் வரையில் மூன்று வர்ணங்களுக்கும் முறையே உபநயநத்தின் கௌணகாலம்.* ஆபஸ்தம்பர் - *16, 22, 24-வது வர்ஷம் வரையில் மூன்று வர்ணங்களுக்கும் முறையே*

உபநயனகாலம் தாண்டுவதில்லை. கௌதமர் - 16-வது வயது வரையில் ப்ராமணனுக்கு உபநயனகாலம் தாண்டுவதில்லை.

मनुः — 'अत ऊर्ध्वं त्रयोऽप्येते यथाकालमसंस्कृताः । सावित्रीपतिता व्रात्या भवन्त्यार्यविगर्हिता' इति ॥ अतः - षोडशादिभ्यः, असंस्कृताः - अनुपनीताः । सावित्रीपतिताः - सावित्र्युपदेशहीनाः । व्रात्यनामानः ॥ स एव — 'नैतैरपूतैर्विधिवदापद्यपि कदाचन । ब्राह्मान् यौनांश्च संबन्धानाचरेद् ब्राह्मणः सहेति ॥ अपूतैः - अकृतप्रायश्चित्तैः । ब्राह्मान् - अध्ययनाध्यापनादीन् । यौनान् - कन्यादान प्रतिग्रहादीन् ॥

மனு - கௌணகாலத்திலும் உபநயனம் செய்யப்படாத இம்மூன்று வர்ணங்களும் ஸாவித்ரியின் உபதேசமில்லாததால் வ்ராத்யர் என்று பெயருடையவர்களாய், சிஷ்டர்களால் நிந்திக்கப்பட்டவராய் ஆகின்றனர். விதிப்படி ப்ராயச்சித்தம் செய்துகொள்ளாத இவருடன் அத்யயனம், அத்யாபனம், கன்யாகாதானம், ப்ரதிக்ரஹம் முதலிய ஸம்பந்தங்களை ஆபத்காலத்திலும் செய்யக் கூடாது.

चन्द्रिकायाम् — 'व्रात्यस्याकृतचित्तस्य न कार्यमुपनायनम् । अध्यापनं याजनं च विवाहादि विवर्जयेदिति ॥ यमः — 'समतिक्रान्त-कालाश्च पतिताः सर्व एव ते । ब्राह्मणक्षत्रियविशां कालश्चेदत्यगादयम् ॥ सावित्रीपतिता व्रात्याः परिहार्याः प्रयत्नत इति ॥ बोधायनोऽपि - 'अत ऊर्ध्वं पतितसावित्रीका भवन्ति नैतानुपनयेयुर्नाध्यापयेयुर्नयाजयेयुर्न विवाहयेयु'रिति ॥ एतान् अकृत प्रायश्चित्तानिति शेषः ॥

சந்த்ரிகையில் - ப்ராயச்சித்தம் செய்துகொள்ளாத வ்ராத்யனுக்கு உபநயனம், அத்யாபனம், யாஜனம், விவாஹம் இவைகளைச் செய்விக்கக்கூடாது. யமன் - கௌணகாலத்திலும் உபநயனமாகாத எல்லா வர்ணங்களும் பதிதர், வ்ராத்யர்; ஆகையால் இவர்

சிஷ்டர்களால் விலக்கத்தகுந்தவர். போதாயனர் - கௌணகாலத்திற்குப்பிறகு இவர் பதிதராகையால் இவருக்கு உபநயனம், அத்யாபனம், யாஜனம், விவாஹம் இவைகளைச் செய்விக்கக்கூடாது. யமன்- கௌண காலத்திலும் உபநயனமாகாத எல்லாவர்ணங்களும் பதிதர், வ்ராத்யர்; ஆகையால் இவர் சிஷ்டர்களால் விலக்கத் தகுந்தவர். போதாயனர் - கௌணகாலத்திற்குப்பிறகு இவர் பதிதராகையால் இவருக்கு உபநயனம், அத்யாபனம், யாஜனம், விவாஹம் இவைகளைச் செய்விக்கக்கூடாது. இங்கு 'ப்ராயச்சித்தமில்லாவிடில்' என்பது சேர்க்கப்படவேண்டும்.

गौणकालेऽप्यनुपनीतस्य प्रायश्चित्तं याज्ञवल्क्येनोक्तम् — 'अत ऊर्ध्वं पतन्त्येते सर्वकर्मबहिष्कृताः । सावित्रीपतिता व्रात्या व्रात्यस्तोमादृते क्रतो'रिति ॥ व्रात्यस्तोमः - व्रात्यानां प्रायश्चित्तार्थः क्रतुः । तं विहायान्यत्र नाधिकारः । तत्र त्वपत्नीकस्य अनधीतवेदस्य अकृताधानस्य च वचनप्राबल्यादधिकारः । वसिष्ठस्तु प्रायश्चित्तान्तरमप्याह — 'पतितसावित्रीक उद्दालकव्रतं चरेद्द्वौ मासौ यावकेन वर्तयेन्मासं पयसाऽर्धमासमामिक्षयाऽष्टरात्रं घृतेन षड्रात्रमयाचितं त्रिरात्रमब्भक्षोऽहोरात्रमुपवसेदश्वमेधावभृथं वा गच्छेद्व्रात्यस्तोमेन वा यजेतेति ॥ उद्दालकमुनिना दृष्टं व्रतमुद्दालकव्रतम् । तत्स्वरूपमेवाह द्वौ मासावित्यादिना । यावको यवकृता यवागूः ॥ तयैव मासद्वयं वर्तेत । अयाचितं तु सर्वव्रतसाधारणं हविष्यम् । तच्च सकृदेव । उपवासे तूदकस्यपि न प्रसक्तिः । पूर्वमब्भक्षणेनैव त्रिरात्रविधानात् ॥

*கௌணகாலத்திலும் உபநயனமில்லாதவனுக்கு ப்ராயச்சித்தத்தை யாக்ஞவல்க்யர் விதிக்கின்றார் - கௌண காலத்திற்குப் பிறகு இவர் பதிதராய், ஸர்வ தர்மங்களிலும்அதிகாரமற்றவராய். ஸாவித்ரீதானத்திற்கு அயோக்யராய், வ்ராத்யர் எனப்படுவர். இவருக்கு ப்ராயச்சித்தமான 'வ்ராத்யஸ்தோமம்' என்னும் க்ரதுவைத்*

தவிர மற்றவைகளில் அதிகாரமில்லை. அந்த க்ரதுவில்மட்டும் பத்னி வேதாத்யயனம் ஆதானம் இவைகளில்லாவிடினும், சாஸ்த்ர பலத்தால் இவருக்கு அதிகாரமுண்டு. வேறு ப்ராயச்சித்தத்தை விதிக்கின்றார் வஸிஷ்டர் - கௌணகாலத்திலும்உபநயனமில்லாதவன் உத்தாலகவ்ரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். அதனுடைய முறை - இரண்டு மாஸம் யவைக் கஞ்சியைமட்டும் புஜித்தும், ஒரு மாஸம் க்ஷீரத்தையும், அரை மாஸம் ஆமிக்ஷையையும், எட்டுநாள் நெய்யையும், ஆறுநாள் யாசிக்காமல் கிடைத்ததையும், மூன்றுநாள் ஜலத்தையும் சாப்பிட்டு, ஒருநாள் ஜலபானமுமில்லாமல் உபவாஸமிருக்க வேண்டும். அல்லது அச்வமேத யாகத்தின் அவப்ருதத்திற்காவது செல்லவேண்டும்; வ்ராத்யஸ்தோம மென்ற யாகத்தையாவது செய்ய வேண்டும். அயாசிதம் என்பது எல்லா வ்ரதங்களிலுமுள்ள ஹவிஷ்யமே. அதை ஒருவேளைதான் புசிக்கலாம்.

आपस्तम्बः — 'यथा व्रतेषु समर्थः स्याद्यानि वक्ष्यामोऽतिक्रान्ते सावित्र्याः काल ऋतुं त्रैविद्यकं ब्रह्मचर्यं चरेदथोपनयनं ततः संवत्सरमुदकोपस्पर्शनमथाध्याप्य इति ॥ अस्यार्थो हरदत्तेनाभिहितः । यथा व्रतेषु समर्थः स्यात्तथा तावान् कालः प्रतीक्ष्यः । पूर्वमेव तु सामर्थ्ये सत्यष्टमवर्षाद्यतिक्रमेऽपि प्रायश्चित्तं भवति । एवं षोडशादिभ्य ऊर्ध्वं कियन्तं चित्कालमसमर्थानां पश्चात् सामर्थ्ये सति प्रायश्चित्तं भवत्येव । तच्च प्रायश्चित्तमाहातिक्रान्ते सावित्र्या इति । यस्सावित्र्याः काल उक्तः तदतिक्रमे त्रैविद्यकं त्र्यवयवा विद्या त्रिविद्या तामधीयते त्रैविद्याः तेषामिदं त्रैविद्यकम् । एवं भूतं ब्रह्मचर्यं अग्निपरिचर्यामध्ययनं गुरुशुश्रूषामिति परिहाप्य सकलं ब्रह्मचारिधर्मं चरेत् । कियन्तं कालम्? ऋतुम् । 'कालाध्वनोरत्यन्त-संयोग' इति द्वितीया । अथोपनयनं - एवं चरितव्रत उपनेतव्यः । ततस्संवत्सरमुदकोपस्पर्शनं - स्नानं कर्तव्यम् । शक्तस्य त्रिषवणं स्नानं, अन्यस्य यथाशक्ति । अथाध्याप्यः - एवं चरितव्रतः पश्चादध्याप्य इति ॥

ஆபஸ்தம்பர் - ப்ரம்மசாரிக்குரிய நியமங்களை அனுஷ்டிக்கச் சக்திவரும் வரையில் ப்ரதீக்ஷித்து உடனே உபநயனம் செய்யவேண்டும். ஸமர்த்தனுக்கு 8-வது வயது முதல் அதிக்ரமத்தில் ப்ராயச்சித்தமுண்டு. கௌணகாலமும் அதிக்ரமித்தபிறகு ஸமர்த்தனாயின் ப்ராயச்சித்தமுண்டு. அக்னி பரிசரணம், அத்யயனம், குரு சுச்ரூஷை இவைகள் தவிர மற்ற ப்ரம்மசாரிதர்மத்தை 2-மாஸம் அனுஷ்டிக்கவேண்டும். பிறகு உபநயனம் செய்யலாம். பிறகு ஒரு வர்ஷபர்யந்தம் மூன்று காலமும் ஸ்நானம் செய்யவேண்டும். சக்தியில்லாதவன் தனது சக்திக்குத் தகுந்தபடி செய்யலாம். பிறகு அத்யயனம் செய்விக்கவேண்டும்.

यत्तु जैमिनिनोक्तम् — 'नातिषोडशमुपनयीत प्रस्रस्तवृषणो ह्येष वृषलीभूत' इति, तदकृतप्रायश्चित्तविषयम् ॥ स्मृत्यर्थसारे — 'उपनयनं गर्भाज्जन्मनो वाऽष्टमे वर्षे एकादशे द्वादशे वा विप्रादीनां क्रमात् कार्यमाषोडशादाद्वाविंशादा चतुर्विंशाच्च विप्रादीनां क्रमात् कार्यमत ऊर्ध्वं सावित्री पतिता व्रात्याःस्युस्तेषां चीर्णप्रायश्चित्ताना मुपनयनादयः स्युरिति ॥

'16- வயதுக்கு மேற்பட்டவனுக்கு உபநயனம் கூடாது; அவன் வ்ருஷளன்' என்று ஜைமினி சொல்லியது, ப்ராயச்சித்த மனுஷ்டிக்காதவன் விஷயம். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - மூன்று வர்ணங்களுக்கும் முறையே கர்ப்பம் அல்லது ஜனனத்திலிருந்து, 8, 11, 12-வது வயதில் உபநயனம் செய்யவேண்டும். தவறினால் 16, 22, 24-வது வயது வரையில் கௌணகாலம். அதிலும் உபநயனமில்லாதவர் ஸாவித்ரீ தானத்திற்கு அனர்ஹர், வ்ராத்யர் எனப்படும். அவர் ப்ராயச்சித்தம் அனுஷ்டித்தால் உபநயனம் முதலியவைகள் செய்விக்கலாம்.

## यज्ञोपवीतनिर्माणधारणादि।

तत्र मनुः — 'कार्पासमुपवीतं स्याद्विप्रस्योर्ध्ववृतं त्रिवृत्। शाणसूत्रमयं राज्ञो वैश्यस्याविकसूत्रकमिति॥ कार्पासविकारः कार्पासं, सूत्रमिति यावत्। ऊर्ध्ववृतं - सव्यहस्ततले न्यस्य दक्षिणहस्ततलेनोर्ध्वमावर्तितम्। आविकसूत्रकं - अविरोमनिर्मितसूत्रम्। गृह्यपरिशिष्टेऽपि — 'उपवीतमयुग्मसरं विषमतन्तुकं त्रिवृद्यज्ञोपवीत' मिति॥ अयुग्मसरं = अयुग्मगुणम्। एकैकगुणो विषमतन्तुकस्त्रितन्तुकः। अन्यथा नवतन्तुत्वव्याघातात्॥

### பூணூல் செய்வது தரிப்பது முதலியவை

மனு - *ப்ராமணனுக்குப் பருத்தியின் நூலும், க்ஷத்ரியனுக்குச் சணல் நூலும், வைஶ்யனுக்கு ஆட்டுமயிர் நூலும் உபவீதமாம். அது மூன்றாய் மடிக்கப்பட்டு இடதுகையில் வைத்து வலதுகையால் உயர்த்தி திரிக்கப்பட்டதாய் இருக்கவேண்டும். க்ருஹ்யபரி சிஷ்டத்தில் - உபவீதம் மூன்றுஸரங்களுடையது. ஒவ்வொரு ஸரத்திற்கும் மூன்று நூல்கள். சேர்ந்து ஒன்பது நூல்களுடையது யக்ஞோபவீதமாம்.*

तदाह देवलः — 'यज्ञोपवीतं कुर्वीत सूत्रेण नवतन्तुकमिति॥ श्रुतिरपि — नव वै त्रिवृ'दिति॥ कात्यायनः — 'त्रिवृदूर्ध्ववृतं कार्यं तन्तुत्रयमधोवृत'मिति॥ बृहस्पतिः — 'कार्पासकं सदा दद्याच्छुचिक्षेत्रे विशोधितम्। जीवभर्तृकया नार्या ब्राह्मण्या सूत्रकं कृतमिति॥ स्मृतिसारे — 'छेदे विनाशे वा स्नातः कन्यया निर्मितं शुभम्। विधवाद्याभिरथ वा सूत्रं गृह्णीत वै शुचिरिति। माधवीये - यज्ञोपवीतं कुर्वीत सूत्रं तु नवतन्तुकम्। त्रिवृदूर्ध्ववृतं कार्यं तन्तु त्रयमधोवृत'मिति॥

தேவலர் - *ஒன்பது நூல்களுடையதாய் யக்ஞோபவீதத்தைச் செய்யவேண்டும். ஶ்ருதியும்*

ஒன்பதுள்ளது த்ரிவ்ருத் என்கிறது. காத்யாயனர் - மூன்று நூலேயுடையது கீழாகவும், ஒன்பது நூலேயுடையது மேலாகவும் திரிக்கப்படவேண்டும். ப்ருஹஸ்பதி - சுத்தமான பூமியில் விளைந்த பருத்தியை கிரகிக்கவேண்டும். ஸுவாஸினியான ப்ராமணஸ்த்ரீ திரித்த நூலே கிரஹிக்கவேண்டும். ஸ்ம்ருதிஸாரத்தில் - உபவீதம் அறுந்தாலும், காணுமற்போனுலும், ஸ்நானத்தால் சுத்தனுகிக் கன்னிகை அல்லது விதவை முதலியவர்களால் செய்யப்பட்ட நூலே கிரகிக்கவேண்டும். மாதவீயத்தில் - உபவீதத்தை ஒன்பது நூல்களுள்ளதாய்ச் செய்யவேண்டும். மூன்று நூல்களைக் கீழாகவும், ஒன்பது நூல்களை மேலாகவும் முறுக்கவேண்டும்.

ऊर्ध्ववृतस्य लक्षणमुक्तं चन्द्रिकायाम् — 'करेण दक्षिणेनोर्ध्वं गतेन त्रिगुणीकृतम् । वलितं वा त्रितं सूत्रं त्रिवृदूर्ध्ववृतं स्मृतमिति ।। ऊर्ध्वगतेन दक्षिणेन करेण यद्वलितं तदूर्ध्ववृतमित्यर्थः ।।

சந்த்ரிகையில் உயரச் செல்வதான வலது கையினுல் மூன்ருய் மடித்து முறுக்கப்பட்டது ஊர்த்வ வ்ருதம் - மேனேக்கி முறுக்கப்பட்டது.

प्रतितन्तु देवताभेदमाह देवलः — 'ओंकारः प्रथमस्तन्तु-र्द्वितीयोऽग्निस्तथैव च । तृतीयो भगदेवत्यश्चतुर्थः सोमदेवतः । पञ्चमः पितृदेवत्यः षष्ठश्चैव प्रजापतिः । सप्तमो विष्णु(वसु) देवत्यो धर्मश्चाष्टम एव च ।। नवमः सर्वदेवत्य इत्येते नवतन्तवः । ग्रामान्निष्क्रम्य सङ्ख्याय षण्णवत्यङ्गुलीषु तत् । तावत्त्रिगुणितं सूत्रं प्रक्षाल्याब्लिङ्गकैस्त्रिभिः। देवागारेऽथवा गोष्ठे नद्यां वाऽन्यत्र वा शुचौ । सावित्र्या त्रिविधं कुर्यान्नवसूत्रं तु तद्भवेत् ।। अथ त्रिवेष्टितव्यं स्यात् पितॄणां तृप्तिदं हि तत् । त्रिस्ताडयेत् करतलं देवानां तृप्तिदं हि तत् ।। सव्ये मृदं गृहीत्वाऽस्मिन् स्थापयेद्भूरिति ब्रुवन् ।। पत्रं पुष्पं फलं वाऽपि व्याहृतीभिः प्रतिक्षिपेत् ।। अभिमन्त्र्याथ भूरग्निश्चेति त्रिवृत्त्रयं (वर्गत्रयं) त्रिभिः । हरिब्रह्मेश्वरेभ्यश्च प्रणम्यावेदये-

दिति ।। यज्ञोपवीतमित्यादि मन्त्रस्स्यात्तस्य धारणे । हृज्ञोपवीतमन्त्रेण व्याहृत्या वाऽपि धारयेदिति ।।

ஒவ்வொரு தந்துவுக்கும் தேவதையைப்பற்றி தேவலர் - 1- முதல் 9-வரையுள்ள தந்துக்களுக்குத் தேவதைகள் முறையே ஓங்காரம், அக்னி, பகன், ஸோமன், பித்ருக்கள், ப்ரஜாபதி, விஷ்ணு, தர்மன் ஸகலதேவதைகள் எனப்படுகிறது. க்ராமத்திற்கு வெளியில் தேவாலயம், மாட்டுக்கொட்டில், நதிதீரம் இவைகளுள் ஒன்றில் அல்லது வேறு சுத்தப்ரதேசத்தில், நாலு விரல்களில் 96 தடவை நூலைச் சுற்றி, அதை மூன்று நூல்களுடையதாய்ச் செய்து 'ஆபோஹிஷ்டா' என்ற மூன்று மந்த்ரங்களால் அலம்பி, காயத்ரியால் மூன்றாய் மடித்தால் அது ஒன்பது நூல்களுடையதாகும். அதை மூன்றுவளையமாய்ச் செய்யவேண்டும். அதனுல் பித்ருக்களுக்குத்திருப்தி உண்டாகிறது. உள்ளங்கையை மூன்று தடவை அடிக்கவேண்டும். இது தேவர்களுக்குத் திருப்தியை அளிக்கின்றது. இடதுகையில் ம்ருத்திகையை க்ரஹித்து அதில் 'பூ:' என்று சொல்லி வைத்து வ்யாஹ்ருதிகளால், பத்ரம், புஷ்பம், பலம் எதையாவது அதன்மேல் வைக்கவேண்டும். பிறகு 'பூரக்னிம்' என்ற மூன்று மந்த்ரங்களால் அபிமந்த்ரித்து ஹரி, ப்ரம்மா; ஈஶ்வரன் இவர்களின் பொருட்டு நமஸ்கரிக்கவேண்டும். அதைத் தரிப்பதற்கு 'யக்ஞோபவீதம்' என்ற மந்த்ரம் விதிக்கப்பட்டிருக்கிறது. அந்த மந்த்ரத்தினுலாவது வ்யாஹ்ருதியினுலாவது தரிக்கலாம்.

गृह्यपरिशिष्टे — 'यज्ञोपवीतं परमं पवित्रं प्रजापतेर्यत्सहजं पुरस्तात्। आयुष्यमग्र्यं प्रतिमुञ्च शुभ्रं यज्ञोपवीतं बलमस्तु तेजः इति धारणमन्त्रोऽभिहितः ।। बोधायनोऽपि — 'यज्ञोपवीतं प्रतिमुञ्चन् वाचयति यज्ञोपवीतं परमं पवित्रमिति ।। ग्रन्थिनियममाह देवलः — 'एकेन ग्रन्थिना तन्तुः द्विगुणस्त्रिगुणोऽपि वे' ति ।। परिमाणान्तरमप्याह कात्यायनः — 'त्रिवृतं

चोपवीतं स्यात्तस्यैको ग्रन्थिरिष्यते । पृष्ठवंशे च नाभ्यां च धृतं यद्विन्दते कटिम् । तद्धार्यमुपवीतं स्यान्नातिलम्बं न चोच्छ्रितमिति ॥

க்ருஹ்யபரிசிஷ்டத்தில் இம்மந்த்ரம் படிக்கப்பட்டிருக்கிறது. போதாயனரும் இம்மந்த்ரத்தை விதிக்கின்றார். முடிச்சின் நியமத்தைப்பற்றி தேவலர் - தந்துவை 2-அல்லது மூன்று தடவை சுற்றி ஒரே தடவை முடியவேண்டும். காத்யாயனர் - 9 நூலுடையது உபவீதம். அதற்கு முடிச்சு ஒன்று. முதுகின் எலும்பிலும், நாபியிலும் பிடித்தால் இடுப்பில் சேரும்படி உள்ள அளவுள்ள உபவீதத்தைத் தரிக்கவேண்டும். இதைவிடக் குட்டையாகவாவது, நீண்டதாகவாவது இருக்கக்கூடாது.

वसिष्ठशातातपौ — 'नाभेरूर्ध्वमनायुष्यमधोनाभेस्तपःक्षयः । तस्मान्नाभिसमं कुर्यादुपवीतं विचक्षण' इति ॥ एतदलाभे परिमाणान्तरमाह देवलः - स्तनादूर्ध्वमधो नाभेः नातिलंबं न चोच्छ्रितम् इति । एतदलाभे परिमाणान्तरमाह देवलः - स्तनादूर्ध्वमधो नाभेः न कर्तव्यं कथञ्चनेति ॥

வஸிஷ்டரும் சாதாதபரும் - உபவீதம் நாபிக்கு மேலிருந்தால் ஆயுளுக்கும், கீழிருந்தால் தவத்திற்கும் குறைவு ஏற்படும். ஆகையால் நாபிக்குச்சமமாகத்தரிக்க வேண்டும். இவ்விதம் கிடைக்காவிடில் வேறு பரிமாணத்தைப்பற்றி தேவலர் - ஸ்தனத்திற்குமேலும், நாபிக்குக் கீழுமாயுள்ளதை எவ்விதத்தாலும் தரிக்கக் கூடாது.

भृगुः — 'उपवीतं वटोरेकं द्वे तथेतरयोः स्मृते । एकमेव यतीनां स्यादिति शास्त्रस्य निश्चय' इति ॥ देवलः — 'ब्रह्मचारिण एकं स्यात् स्नातस्य द्वे बहूनि वा । तृतीयमुत्तरीयं स्याद्वस्त्राभावे तदिष्यत इति ॥ स्मृतिसारे — 'एकवेदस्य चैकं स्यादथवा वेदसङ्ख्यया । बहूनि चायुष्कामस्य त्र्यादि काम्यं प्रचक्षत' इति ॥

ப்ருகு - ப்ரம்மசாரிக்கு உபவீதம் ஒன்று, க்ருஹஸ்தனுக்கும் வாநப்ரஸ்தனுக்கும் இரண்டு, யதிக்கு ஒன்று என்பது சாஸ்த்ரத்தின் நிச்சயம். தேவலர் - ப்ரம்மசாரிக்கு ஒன்று, ஸ்நாதகனுக்கு இரண்டு, அல்லது மூன்று. உத்தரீயவஸ்த்ரம் இல்லாவிடில் அதற்காக மூன்றாவது உபவீதம் விதிக்கப்படுகிறது. ஸ்ம்ருதிஸாரத்தில் - ஒரு வேதத்தைக்கற்றவனுக்கு உபவீதம் ஒன்று. எவ்வளவு வேதம் கற்றிருக்கின்றானோ அவ்வளவுஉபவீதங்களைத் தரிக்கலாம். ஆயுளைவிரும்பு வோன்அநேகங்களைத் தரிக்கலாமென்கின்றனர்.

भरद्वाजः — 'मन्त्रं सदैवमुच्चार्य ब्रह्मसूत्रं गले क्षिपेत् । दक्षिणं बाहुमुद्धृत्य शिरसैव सह द्विजः ।। गृहस्थस्य वनस्थस्य सूत्रं प्रति पुनः पुनः। मन्त्रोच्चारणमाचामो द्वितयं क्रमशः स्मृतम् ।। यज्ञोपवीते द्वे धार्ये श्रौते स्मार्ते च कर्मणि । तृतीयमुत्तरीयं तु वस्त्राभावे तदिष्यते ।। एकैकमुपवीतं स्यादाद्यन्ताश्रमिणोर्द्वयोः । दशाष्टौ वा गृहस्थस्य चत्वारि वनवासिनः ।। विना यज्ञोपवीतेन दिनमेकमपि द्विजः । स्थितः शूद्रत्वमायाति पुनः श्वानो भविष्यति । क्रोधाद्वा यदि वा लोभाद्ब्रह्मसूत्रं छिनत्ति यः । स कुर्यात् त्रीणि कृच्छ्राणि कृच्छ्रमेकमथापि वे'ति ।।

பரத்வாஜர் - தேவதையையும், மந்த்ரத்தையும் உச்சரித்து உபவீதத்தை, வலது கையையும், தலையையும் நுழைத்துக்கழுத்தில் போட்டுக்கொள்ளவேண்டும். க்ருஹஸ்தனுக்கும், வாநப்ரஸ்தனுக்கும், ஒவ்வொரு உபவீத தாரணத்திலும், மந்த்ரத்தை உச்சரித்தலும், ஆசமனமும் வரிசையாய் விதிக்கப்பட்டிருக்கிறது. ஶ்ரௌதஸ்மார்த்த கர்மங்களில் இரண்டு உபவீதங் களையும், உத்தரீயத்திற்காக மூன்றாவது உபவீதத்தையும் தரிக்க வேண்டும். அது வஸ்த்ரமில்லாவிடில் விதிக்கப் படுகிறது. ப்ரம்மசாரிக்கும், ஸந்யாஸிக்கும், ஒவ்வொரு உபவீதமும், க்ருஹஸ்தனுக்குப் பத்து அல்லது எட்டு உபவீதங்களும், வானப்ரஸ்தனுக்கு நான்கும்,

விதிக்கப்படுகின்றன. உபவீதமின்றி ஒரு நாளிருந்தாலும் த்விஜன் சூத்ரனாகிறான். மறு பிறப்பில் நாயாய்ப் பிறப்பான். கோபத்தினாலோ, லோபத்தினாலோ உபவீதத்தைச் சேதித்தவன் மூன்று க்ருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டும். அசக்தன் ஒரு க்ருச்ரத்தையாவது அனுஷ்டிக்கவேண்டும்.

भृगुः — 'सदोपवीतिना भाव्यं सदा बद्धशिखेन च । विशिखोऽनुपवीतश्च यत्करोति न तत्कृत'मिति ।। न चैतेन सदोपवीतित्वं कर्मकाल एवेति संकोचनीयम् । यतः स एवाह — 'मन्त्रपूतं स्थितं काये यस्य यज्ञोपवीतकम् । नोद्धरेत्तु ततः प्राज्ञो यदीच्छेच्छ्रेय आत्मनः ।। कायस्थमेव तत्कार्यमुत्थाप्यं न कदाचन । सकृदुद्धरणात्तस्य प्रायश्चित्तीयते द्विज' इति ।।

ப்ருகு - எப்பொழுதும் உபவீதியாயும், கட்டிய சிகையுடையவனாயும் இருக்கவேண்டும். அவ்விதமின்றி எக்கார்யத்தைச் செய்தாலும், அது செய்ததாக ஆகாது. இதனால் கர்மகாலத்தில்தான் அந்த நியமம் என்று ஸங்கோசம் செய்யக்கூடாது. ஏனெனில், ப்ருகுவே 'மந்த்ரத்தால் சுத்தமானதும் சரீரத்திலிருப்பதுமான உபவீதத்தை சரீரத்தைவிட்டு எடுக்கக்கூடாது; தனக்கு நன்மையை விரும்பினால்; உபவீதத்தை சரீரத்திலேயே இருக்கச் செய்யவேண்டும். ஒரு பொழுதும் எடுக்கக் கூடாது; ஒரு தடவை எடுத்தாலும் த்விஜன் ப்ராயச்சித்தம் செய்யவேண்டும்.' என்று சொல்லியிருப்பதால்.

व्यासः — 'विना यच्छिखया कर्म विना यज्ञोपवीततः । राक्षसं तद्धि विज्ञेयं समस्ता निष्फलाः क्रिया' इति ।। अतोऽग्नीन्धनादेः पूर्वमेव यज्ञोपवीतं धार्यमुपनयने ।। भृगुः — 'सूत्रं सलोमकं चेत् स्यात्ततः कृत्वा विलोमकम् । सावित्र्या दशकृत्वोऽद्भिः मन्त्रिताभिस्तदुक्षयेत् ।। विच्छिन्नं वाऽप्यधोयातं भुक्त्वा निर्मितमुत्सृजेत् । उपानहौ च वासश्च धृतमन्यैर्न धारयेत् । उपवीतमलङ्कारं स्रजं करकमेव चेति ।।

வ்யாஸர் - சிகையும் உபவீதமும் இல்லாமல் செய்யும் கார்யம் ராக்ஷஸமாகும். எக்கார்யங்களும் பலனற்றன வாகும். ஆகையால் உபநயனத்தில் அக்னிஸந்தானம் முதலியவைகளுக்கு முன்பே உபவீதம் தரிக்கப்பட வேண்டும். ப்ருகு - உபவீதத்தில் ரோமம் சேர்ந்திருந்தால் அந்த ரோமத்தை எடுத்துவிட்டு, காயத்ரியைப்பத்துத் தடவை உச்சரித்து அபிமந்த்ரித்த ஜலத்தால் உபவீதத்தை நனைக்கவேண்டும். அறுந்ததும், கீழேவிழுந்ததும், போஜனத்திற்குப் பிறகு செய்யப்பட்டதுமான உபவீதத்தைத் தள்ள வேண்டும். பிறனுல் உபயோகிக்கப் பட்ட பாதரக்ஷை, வஸ்த்ரம், உபவீதம், அலங்காரம், புஷ்பமாலை, கமண்டலு இவைகளை உபயோகிக்கக்கூடாது.

मनुस्तु धृतयज्ञोपवीतादिविनाशे प्रतिपत्तिमाह — 'मेखलामजिनं दण्डमुपवीतं कमण्डलुम्। अप्सु प्रास्य विनष्टानि गृह्णीतान्यानि मन्त्रत इति ॥ पितामहः — 'य एतन्नाभिजानाति यज्ञसूत्रसमुद्भवम्। वेदोक्तं निष्फलं तस्य स्नानदानजपादिकम्॥ ब्राह्मणो यो न जानाति ह्युपवीतस्य संस्थितिम्। मोहात्मा वहते भारं पशुर्गौरिव सर्वदेति ॥

மனு - மேகலை, மான்தோல், தண்டம், உபவீதம், கமண்டலு இவைகளுக்குக் கெடுதியுண்டானுல் அவைகளை ஜலத்தில் போட்டுவிட்டுப் புதியவைகளை மந்த்ரத்துடன் க்ரஹிக்க வேண்டும். பிதாமஹர் - இந்த உபவீதத்தின் விதியை அறியாதவன் செய்யும் ஸ்நானம், தானம், ஜபம் முதலிய வேதோக்தகர்மம் பயனற்றதாகும். எவன் உபவீதத்தின் விதியை அறியவில்லையோ அந்த மூடன், பசு கயிற்றைத் தரிப்பதுபோல் பாரமான பூணூலை வீணுகத் தரிக்கிருன்.

उक्तोपवीतालाभेऽपि देवलः — 'कार्पास क्षौम गोवाल शण वल्क तृणोद्भवम्। सदा संभवता धार्यमुपवीतं द्विजातिभिरिति ॥ तृणोद्भवं - कुशनिर्मितम्॥ तथा च गोभिलः - 'यज्ञोपवीतं कुरुते सूत्रं वस्त्रं कुशरज्जुं वेति ॥ सूत्रमपि वस्त्राभावे वेदितव्यम्। 'वाससा यज्ञोपवीतार्थान् कुर्यात्

तदभावे त्रिवृता सूत्रेणे'ति ऋश्यशृङ्गस्मरणात्, 'नित्यमुत्तरं वासः कार्यमपि वा सूत्रमेवोपवीतार्थे इत्यापस्तम्बेन वाससोऽसम्भवेऽनुकल्पत्वेन सूत्रस्याभिधानाच्च ॥

சொல்லியவிதிப்படி உபவீதம் கிடைக்காவிடில், தேவலர் - பருத்தி, பட்டுநூல், பசுவின் வால் மயிர், சணல், பட்டைநார், புல் இவைகளுள் கிடைத்ததினுல் உபவீதத்தை த்விஜர்கள் தரிக்கவேண்டும். கோபிலர் - நூல், வஸ்த்ரம், குசக்கயிறு இவைகளிலொன்றை உபவீதமாகச் செய்துகொள்ளலாம். வஸ்த்ரமில்லாவிடில்தான் ஸூத்ரத்தை க்ரகிக்கலாம். ''உபவீதமில்லாவிடில் வஸ்த்ரத்தை வைத்துகொண்டு கர்மங்களை செய்யலாம். வஸ்த்ரமில்லாவிடில் த்ரிவ்ருத்தான ஸூத்ரத்தை வைத்துக் கொண்டு'' என்று ருஶ்யச்ருங்கர் விதித்திருக்கிறார். ''எப்பொழுதும் உத்தரீயவஸ்த்ரத்தைத் தரிக்கவேண்டும்; அல்லது அதற்காக ஸூத்ரத்தையாவது தரிக்கவேண்டும்'' என்று ஆபஸ்தம்பர் வஸ்த்ரத்திற்கு அனுகல்பமாய் ஸூத்ரத்தை விதித்திருக்கிறார்.

हारीतः — 'मुक्तामयोपवीतं च चामीकरमथापि वा । धार्यं तत् सर्ववर्णानां महादानादिकर्मस्विति ॥ स्मृत्यर्थसारे — 'वस्त्रं यज्ञोपवीतार्थे त्रिवृत् सूत्रं च कर्मसु । शुचौ देशे शुचिस्तत्र संहताङ्गुलिमूलके ॥ आवेष्ट्य षण्णवत्या तत्त्रिगुणीकृत्य यत्नतः । अब्लिङ्गैस्तु त्रिभिः सम्यक् प्रक्षाल्योर्ध्ववृतं तु तत् ॥ अप्रदक्षिणमावर्तं सावित्र्या त्रिगुणीकृतम् ॥ अथ प्रदक्षिणावर्तं नवं स्यान्नवसूत्रकम् ॥ त्रिरावेष्ट्य दृढं बध्वा हरिब्रह्मेश्वरान्न-मेदिति ॥

ஹாரீதர் - முத்துக்களால் செய்த, அல்லது ஸ்வர்ணமயமான உபவீதத்தை, மஹாதானம் முதலிய கர்மங்களில் எல்லாவர்ணத்தாரும் தரிக்கலாம். ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - கர்மானுஷ்டானகாலத்தில் உபவீதத்திற்காக, வஸ்த்ரத்தை, அல்லது ஒன்பது

தந்துக்களுடைய ஸூத்ரத்தை தரிக்கவேண்டும். சுத்தனாய், சுத்தமான ஸ்தலத்திலிருந்து வலதுகையின் நாலுவிரல் களையும் சேர்த்து அவைகளின் அடியில் 96 தடவை நூலைச்சுற்றி, அதை மூன்று நூல்களையுடையதாய்ச் செய்து, 'ஆபோஹிஷ்டா' என்று 3 மந்த்ரங்களால் ஜலத்தால் அலம்பி உயரநோக்கி அப்ரதக்ஷிணமாய் முறுக்கி, காயத்ரியால் மூன்றாய் மடித்து பிரதக்ஷிணமாய் முறுக்கி 9 நூலாலாகிய இந்த ஸூத்ரத்தை மூன்று வளையமாய்ச் சுற்றி நன்றாய் முடிந்து மும்மூர்த்திகளை நமஸ்கரிக்கவேண்டும்.

बोधायनः — 'ब्राह्मणकन्यकया ब्राह्मणविधवया वा शुद्धस्नातया कृताचान्तया निर्मितं सूत्रं गृहीत्वा प्राचीमुदीचीं वा दिशमुपनिष्क्रम्य चतुरङ्गुलमात्रं षण्णवतिसूत्रपरिमण्डलमिति स एव — 'चतुर्वेदस्य चत्वारि त्रिवेदस्य त्रिकं भवेत्। द्वे स्यातां वै द्विवेदस्य एकमेवैकवेदिन' इति ॥

போதாயனர் - ஸ்நானம் ஆசமனம் இவைகளைச் செய்து சுத்தையான ப்ராமண கன்னிகையினாலாவது, பிராமண விதவையாலாவது செய்யப்பட்ட நூலைக் கிரஹித்து கிழக்கு அல்லது வடக்குத்திக்கில் க்ராமத்திற்கு வெளியிற்சென்று நாலங்குல அளவில் 96 தடவை சுற்றிவளயத்தை என்கிறார். அவரே - 4- வேதங்களைக் கற்றவன் 4-உபவீதங்களும், 3-வேதக்காரன் மூன்றும், 2-வேதி, 2-ம், ஒரு வேதி ஒரு உபவீதமும் தரிக்க வேண்டும்.

कथं सन्निवेश्यमुपवीतमित्याकाङ्क्षायां मनुराह — 'उद्धृते दक्षिणे पाणावुपवीत्युच्यते द्विजः। सव्ये तु प्राचीनावीति निवीती कण्ठसज्जने इति। सूत्रस्य कण्ठसज्जने निवीतमिति संज्ञा। तदस्यास्तीति निवीती। निवीतस्य मध्ये दक्षिणे पाणावुद्धृते यः सन्निवेशविशेषः तदुपवीतं नाम, तदस्यास्तीति उपवीती। सव्ये पाणावुद्धृते यस्सन्निवेशविशेषस्तत् प्राचीनावीतमिति संज्ञा, तदस्यास्तीति प्राचीनावीतीति चार्थः ॥

மனு :- பூணூலைக் கழுத்தில் மாலை போல் தரித்தல் நிவீதம் எனப்படும், அதற்குள் வலது கையைக்கோத்து

எடுத்தல் உபவீதம் எனப்படும், இடதுகையை அவ்விதம் செய்தல் ப்ராசீனாவீதம் எனப்படும்.

तथा च श्रुतिः — 'दक्षिणत उपवीय दक्षिणं बाहुमुद्धरतेऽवधत्ते सव्यमिति यज्ञोपवीतमेतदेव विपरीतं प्राचीनावीतꣳ संवीतं मानुषमिति। विषयविशेषं चोपवीतादीनां दर्शयति श्रुतिरेव — 'निवीतं मनुष्याणां प्राचीनावीतं पितृणामुपवीतं देवानामिति ॥ निवीतं मनुष्याणां स्वम्। मनुष्यकार्येषु ऋषितर्पणादिषु प्रशस्तम्। प्राचीनावीतं पितॄणां कर्मणि - पितृयज्ञादौ प्रशस्तम्। यज्ञोपवीतं देवानां कर्मणि अग्निहोत्रादौ प्रशस्तमित्यर्थः ॥

ச்ருதியும் இவ்விதமே சொல்லுகிறது. உபவீதாதிகளுக்கு விஷயங்களையும் தெரிவிக்கின்றது - மனுஷ்யகார்யங்களானருஷிதர்ப்பணம் முதலியவைகளில் நிவீதமும், பித்ருகார்யங்களான பித்ருயக்ஞம் முதலியவைகளில் ப்ராசீனாவீதமும், தேவகார்யங்களான அக்னி ஹோத்ராதிகளில் உபவீதமும் ச்லாக்யமாகும்.

व्यासः — 'उद्धृत्य दक्षिणं बाहुं सव्यांसे तु समर्पितम्। उपवीतं भवेन्नित्यं निवीतं कण्ठसज्जितम्॥ सव्यं बाहुं समुद्धृत्य दक्षिणे तु धृतं द्विजैः। प्राचीनावीतमित्याहुः पित्र्ये कर्मणि योजयेत्॥ देवागारे गवां गोष्ठे होमे जप्ये तथैव च। स्वाध्याये भोजने नित्यं ब्राह्मणानां च सन्निधौ॥ उपासने गुरूणां च सन्ध्ययोः साधुसङ्गमे। उपवीती भवेन्नित्यं विधिरेष सनातन इति ॥ आपस्तम्बः — 'उपासने गुरूणां वृद्धानामतिथीनां होमे जप्यकर्मणि भोजन आचामे स्वाध्याये च यज्ञोपवीती स्यादिति ॥

வ்யாஸர் - இடதுதோளில் உபவீதமிருந்து வலதுகை அதில் எடுக்கப்பட்டிருந்தால் உபவீதம் எனப்படும். வலது தோளில் உபவீதமிருந்து இடதுகை அதில் எடுக்கப்பட்டிருந்தால் ப்ராசீனாவீதம் எனப்படும். கழுத்தில் தொங்கியிருந்தால் நிவீதம் எனப்படும். தேவாலயம்,

கோஷ்டம், ஹோமம், ஜபம், அத்யயனம், போஜனம், ப்ராமணர்களின் ஸன்னிதி, குருக்களை உபாஸித்தல், ஸந்த்யைகள், ஸாதுக்களின் சேர்க்கை இவைகளில் அவச்யம் உபவீதமாய் இருக்க வேண்டும். இது நெடுநாளைய விதி. ஆபஸ்தம்பர் - குருக்கள், பெரியோர்கள், அதிதிகள் இவர்களை உபாஸிக்கும் போதும், ஹோமம், ஜபம், போஜனம், ஆசமனம், அத்யயனம் இவைகளிலும் யக்ஞோபவீதியாய் இருக்க வேண்டும்.

एतेषु कर्मसु यज्ञोपवीतविधानात् कालान्तरे नावश्यंभाव इति केचिद्व्याचक्षते ।। कायस्थमेव तत् कार्यमुत्थाप्यं न कदाचन । सदोपवीतिना भाव्यं सदा बद्धशिखेन चेत्यादिबहुस्मृतिविरोधाच्छिष्टाचारविरोधाच्च तदनादरणीयमित्यन्ये ।।

இவ்விதம் இவைகளில் விதித்திருப்பதால் மற்றக் காலங்களில் உபவீதம் ஆவச்யகமல்ல என்று சிலர் வ்யாக்யானம் செய்கின்றனர். 'உபவீதத்தை ஒருகாலும் எடுக்கக் கூடாது; அதை ஶரீரத்திலேயே இருக்கச் செய்யவேண்டும்' 'எப்பொதும் உபவீதியாயும் கட்டிய குடுமியுடையவனுயுமிருக்கவேண்டும்' என்பதுபோன்ற அநேக ஸ்ம்ருதிகளுக்கும் சிஷ்டாசாரத்திற்கும் விரோதமாவதால், அந்த வ்யாக்யானம் ஆதரிக்கத் தகுந்ததன்று என்று மற்றவர் கூறுகின்றனர்.

उपनयनदीक्षामध्ये उपवीतहानौ - उपनयनानन्तरं दिनचतुष्टयमध्ये यज्ञोपवीतस्य हानौ — 'गार्ह्येषु कर्मस्वपराधदृष्टावब्राह्मणोक्तेषु तु निष्कृतिः स्यात् । एकाहुतिं व्याहृतिभिश्च हुत्वा स्मार्तेष्वनादेश इवासुयामः इति न्यायेन सर्वप्रायश्चित्तं हुत्वाऽनाज्ञातत्रयं च जपित्वा पुनश्च यज्ञोपवीतं धार्यमित्याहुः ।।

உபநயனத்திற்குப்பிறகு நாலு நாட்களுக்குள் உபவீதத்திற்கு ஹானி வந்தால், ஸர்வப்ராயச்

சித்தஹோமமும், அனுக்ஞாதாதி மந்த்ரஜபமும் செய்து மறுபடி யக்ஞோபவீதத்தைத் தரிக்கவேண்டுமெனச் சொல்லுகின்றனர்.

## दण्डनिरूपणम्।

तत्र मनुः — 'ब्राह्मणो बैल्वपालाशौ क्षत्रियो वाटखादिरौ। पैप्पलोदुम्बरौ वैश्यो दण्डानर्हन्ति धर्मत' इति ॥ पैप्पलः - आश्वत्थः। धर्मतः - समानधर्मयोगादित्यर्थः। ब्राह्मणो बैल्वदण्डं धर्मतोऽर्हति। उभयोरपि ब्रह्मवर्चससम्बन्धसामान्यात्। ब्रह्मवर्चसाधिकरणं ब्राह्मणः। बिल्वस्तु ब्रह्मवर्चसविकारः। 'असौ वा आदित्यो यतोऽजायत ततो बिल्व उदतिष्ठत् सयोन्येव ब्रह्मवर्चसमवरुन्ध इति श्रुतेः। ब्राह्मणः पालाशं चार्हति। उभयोर्गायित्रत्वात्। 'गायत्रो वै ब्राह्मणः, गायत्रो वै पर्ण' इति च श्रूयते॥

## தண்ட நிரூபணம்

மனு - பில்வம், பலாசம் இவைகளின் தண்டத்தைப் ப்ராமணனும், ஆல், கருங்காலி இவைகளின் தண்டத்தை க்ஷத்ரியனும், அரசு, அத்தி இவைகளின் தண்டத்தை வைப்யனும் தரிக்க அர்ஹராகின்றனர்; ஸமான தர்மமிருப்பதால். ப்ராமணன் ப்ரம்ம வர்ச்சஸத்திற்கு அதிகரணமாகிறான், பில்வம் ப்ரம்மவர்ச்சஸத்தின் உருவம், 'ஸூர்யனுண்டாகிய இடத்தினின்று பில்வம் உண்டாகியது' என்று ப்ருதியால். இருவருக்கும் ப்ரம்மவர்ச்சஸ ஸம்பந்தமிருக்கின்றது. ப்ராமணன் காயத்ரன்; பலாசம் காயத்ரம்; என்று ப்ருதி இருப்பதால் இருவருக்கும் காயத்ரத் தன்மையிருக்கின்றது. ஆகையால் இவ்விரண்டிற்கும் ப்ராமணன் உரியவன்.

वाटं दण्डं क्षत्रियो धर्मतोऽर्हति। उभयोरेकवर्णत्वात्। तदुक्तं ऐतरेयब्राह्मणे — 'क्षत्रं वा एतद्वनस्पतीनां यन्यग्रोधः क्षत्रं राजन्य इति। खादिरं चार्हति। उभयोर्बलिष्ठत्वसामान्यात्।

*வடமும் (ஆலும்) க்ஷத்ரியனும் ஒரே வர்ணமாம். 'வ்ருக்ஷங்களுள் ஆல் க்ஷத்ரியன், அரசன் க்ஷத்ரியன்' என்ற ஶ்ருதியால். கருங்காலியும் பலிஷ்டம், க்ஷத்ரியனும் பலிஷ்டன், இவ்விருவருக்கும் பலத்தால் ஸாம்யமிருப்பதால் இவ்விரண்டிற்கும் க்ஷத்ரியன் உரியவன்.*

वैश्यः पैप्पलमर्हति । अश्वत्थस्य वैश्यौजस्सम्बन्धात् । मरुतां वा एतदोजो यदश्वत्थः, मरुतो वै देवतानां विश इति हि श्रूयते । औदुम्बरं चार्हति । उभयोः पशुसम्बन्धसामान्यात् । पशुपालो वैश्यः प्रसिद्धः । पशुविकार उदुम्बरः । देवा वा ऊर्जं व्यभजन्त । तत उदुम्बर उदतिष्ठत्, ऊर्क्पशव इति च श्रुतेरिति बैल्वपालाशाविति द्वन्द्वनिर्देशेऽपि विकल्प एव विवक्षितः ॥ यथाऽऽह यमः - 'विप्रस्य दण्डः पालाशो बैल्वो वा धर्मतः स्मृतः । आश्वत्थः क्षत्रियस्याथ खादिरो वाऽपि धर्मतः ॥ औदुम्बरोऽथ वैश्यस्य प्लाक्षो वा दण्ड उच्यते । एतेषामप्यलाभे तु सर्वेषां सर्वयज्ञिया' इति ॥

*அரசுக்கு வைஶ்யரின் ஓஜஸ் (தாதுஸாரம்) ஸம்பந்தமுளது. 'அஶ்வத்தமென்பது மருத்துகளின் ஒஜஸ்ஸாகும்' மருத்துகள் தேவர்களுள் வைஶ்யர் என்னும் ஶ்ருதிகளால். அத்திக்கும் வைஶ்யனுக்கும் பசுஸம்பந்த முள்ளது. வைச்யன் பசு பாலன் எனப் ப்ரஸித்தன். அத்தி பசுவின் மறுதோற்றம். இதுவும் ச்ருதியால் சொல்லப் படுகிறது. ஆகையால் இவ்விரண்டிற்கும் வைஶ்யன் உரியவன். த்வந்த்வஸமாஸத்தால் சொல்லியிருந்தாலும் விகல்பமே. எப்படியெனில் - யமன் -ப்ராமணனுக்கு தண்டம் புரசு, அல்லது பில்வம்; க்ஷத்ரியனுக்கு அரசு, அல்லது கருங்காலி; வைஶ்யனுக்கு அத்தி, அல்லது இச்சி தண்டமாகும்; தர்மஸாம்யத்தால். இவைகள் கிடைக்கா விடில், எல்லோருக்கும் யக்ஞார்ஹமான வ்ருக்ஷங்களில் ஏதாவது ஒன்று தண்டமாகலாம்.*

गौतमोऽपि — 'यज्ञियो वा सर्वेषा'मिति ॥ आपस्तम्बोऽपि — 'पालाशो दण्डो ब्राह्मणस्य नैयग्रोधस्कन्धजोऽवाङ्ग्रो राजन्यस्य बादर औदुम्बरो वा वैश्यस्य वार्क्षो दण्ड इत्यवर्णसंयोगेनैक उपदिशन्ती'ति ॥ वार्क्ष्यः - यज्ञार्हवृक्षसंभूतः । स सर्ववर्णसाधारणः ॥

கௌதமரும் - எல்லாவர்ணங்களுக்கும் *யக்ஞார்ஹமான ஏதாவது விருக்ஷம் தண்டமாகலாம்.* ஆபஸ்தம்பர் - *ப்ராமணனுக்குப் பலாசத்தின் தண்டம். க்ஷத்ரியனுக்கு ஆலின்கிளையிலுண்டாகியதும், தலைகீழாய் உள்ளதுமான தண்டம். வைச்யனுக்கு இலந்தை, அல்லது அத்தியின் தண்டம். யக்ஞார்ஹ விருக்ஷமே எல்லோருக்கும் தண்டமென்று வர்ணபேதமின்றிச் சிலர் விதிக்கின்றனர்.*

मनुः —'केशान्तिको ब्राह्मणस्य दण्डः कार्यः प्रमाणतः । ललाटसंमितो राज्ञः स्यात्तु नासान्तिको विशः ॥ ऋजवस्ते तु सर्वे स्युरव्रणाः सौम्यदर्शनाः । अनुद्वेगकरा नृणां सत्वचोऽनग्निदूषिता' इति ॥ गौतमः — 'अपीडिता यूपवक्राः सशल्का ऊर्ध्वललाटनासाग्रप्रमाणा इति ॥ अपीडिताः वल्लीवेष्टनादिभिः । यूपवक्राः - यूपवन्नताग्रा इत्यर्थः ॥

மனு - *ப்ராமணனுக்குத் தலைவரையிலும், க்ஷத்ரியனுக்கு நெற்றி வரையிலும், வைச்யனுக்கு மூக்கு வரையிலும் உயரமுள்ள தண்டம் விஹிதமாகும். தண்டங்கள் கோணலின்றியும், காயமின்றியும், பார்வைக்கு அழகுள்ளவைகளும், மனிதர்களுக்கு பயமளிக்காதவைகளும், தோலுள்ளவைகளும், நெருப்பால் கெடுக்கப் படாதவைகளாகவுமிருக்க வேண்டும்.* கௌதமர் - *கொடி முதலியவைகளால் தொந்த தரையடையாதவைகளும், யூபம் போல் தலைவணங்கிவைகளாயும், பட்டை உடையவைகளும், தலை, நெற்றி, மூக்கின் நுனி இவைகளை ப்ரமாணமாக உடையவைகளாயும் தண்டங்கள் இருக்கவேண்டும்.*

व्यासः — 'शिरोललाटनासाग्र प्रमाणा यूपवन्नता' इति ।। शङ्खः — 'केशावधि ललाटांसतुल्याः प्रोक्ताः क्रमेण ते' इति ।। वसिष्ठस्तु विशेषमाह — 'प्राणसंमितो ब्राह्मणस्य ललाटसंमितः क्षत्रियस्य केशसंमितो वैश्यस्येति ।। कूर्मपुराणे — 'धारयेद्बैल्वपालाशौ दण्डौ केशान्तिकौ द्विजः । यज्ञार्हवृक्षजं वाऽथ सौम्यमव्रणमेव चेति ।। बोधायनः — 'मूर्द्धललाटनासाग्रप्रमाणा यज्ञियस्य वृक्षस्य दण्डा' इति ।।

வ்யாஸர் - தலை, நெற்றி, மூக்கின் நுனி இவைகளின் அளவுள்ளவையும், யூபம்போல் வணங்கியவையும். ஶங்கர் - தலை, நெற்றி, தோள் இவைகளை ப்ரமாணமாக உடைய தண்டங்கள், முறையே மூன்றுவர்ணங்களுக்கும். வஸிஷ்டர் -மார்பு, நெற்றி, தலை இவைகளின் ப்ரமாணமுள்ளவை மூன்று வர்ணங்களுக்கும் முறையே தண்டங்களாகும். கூர்மபுராணத்தில் - தலைக்குச் சரியான பில்வம், புரசு இவைகளின் ஒன்றைத் தண்டமாக த்விஜன் தரிக்க வேண்டும். அல்லது வேள்விக்குரிய வ்ருக்ஷத்தில் உண்டாகியதும், அழகியதும் காயமற்றதுமான தண்டத்தைத் தரிக்கலாம். போதாயனர் - தலை, நெற்றி, மூக்கின் நுனி இவைகளுக்குச் சரியாயுள்ளவையும், யக்ஞார்ஹ வ்ருக்ஷத்தினுடையவையும் தண்டங்களாம்.

## अजिननिरूपणम्

तत्र गौतमः — 'कृष्णरुरुबस्ताजिनानी'ति ।। कृष्णः = कृष्णमृगः। रुरुः - पृषतमृगः । बस्तः - छागविशेषः । एतेषामजिनानि चर्माणि ब्राह्मणक्षत्रियविशां क्रमेणोत्तरीयाणि भवन्ति ।। मनुरपि — 'कार्ष्णरौरव-बास्तानि चर्माणि ब्रह्मचारिण इति ।। आपस्तम्बः — 'अजिनमेवोत्तरं धारयेदिति ।। उत्तरं - उत्तरीयम् ।। पारस्करः — 'ऐणेयमजिनमुत्तरीयं ब्राह्मणस्य रौरवं राजन्यस्य बास्तं (गव्यं वा) वैश्यस्य सर्वेषां वा गव्यमिति ।। बृहस्पतिरपि —'ब्राह्मणस्याजिनं कार्ष्णं रौरवं क्षत्रियस्य तु । बस्ताजिनं तु वैश्यस्य सर्वेषां वा गवाजिनमिति ।। शङ्खः — 'कृष्णरुरुबस्ताजिनान्युत्तरीयाणीति ।।

அஜின நிரூபணம்

கௌதமர் - க்ருஷ்ணமான், ருருமான், ஆடு இவைகளின் தோல்கள் முறையே மூன்று வர்ணங்களுக்கும் உத்தரீயங்கள். மனுவும் இவ்விதமே விதிக்கின்றார். ஆபஸ்தம்பர் - தோலையே உத்தரீயமாகத் தரிக்க வேண்டும். பாரஸ்கரர் - ஏணம்ருகத்தின் தோல் ப்ராமணனுக்கும், ருரும்ருகத்தின் தோல் க்ஷத்ரியனுக்கும், ஆட்டின் தோல், அல்லது பசு தோல் வைஶ்யனுக்கும் உத்தரீயம். அல்லது எல்லோருக்குமே பசு தோல் உத்தரீய மாகலாம். ப்ருஹஸ்பதியும் - க்ருஷ்ணம்ருகம், ருரு ம்ருகம், (மான் வகை) ஆடு இவைகளின் தோல்கள் முறையே மூன்று வர்ணங்களுக்கும் உத்தரீயம். அல்லது எல்லோருக்கும் பசு தோலே உத்தரீயமாகலாம். ஶங்கர் - க்ருஷ்ணம்ருகம், ருரும்ருகம், ஆடு இவைகளின் தோல்கள் உத்தரீயங்கள்.

वासोनिरूपणम्

तत्र गौतमः — 'वासांसि शाणक्षौमचीरकुतपास्सर्वेषां कार्पासं चाविकृतमिति ।। शणविकारः शाणम् । क्षुमा अतसी तद्विकारः क्षौमम् । श्वेतपट्ट इत्यन्ये । कुतपः पार्वतीयाजरोमनिर्मितः कम्बलः । कार्पासं च वासःसर्वेषाम्। तत् अविकृतं - कुसुम्भादिरागद्रव्यैररक्तमित्यर्थः । स एव — 'काषायमप्येके वार्क्षं ब्राह्मणस्य माञ्जिष्ठहारिद्रे इतरयोरिति ।। एके आचार्याः कषायेण रक्तमपि धार्यं मन्यन्ते । तत्र विशेषः । वार्क्षं ब्राह्मणस्य वृक्षकषायेण रक्तं वार्क्ष्यम् । मञ्जिष्ठया रक्तं माञ्जिष्ठम् । हरिद्रया रक्तं हारिद्रम् । ते इतरयोः - क्षत्रियवैश्ययोर्वाससी इत्यर्थः ।।

வஸ்த்ர நிரூபணம்

கௌதமர் - ஶாணம், க்ஷௌமம், சீரம், குதபம் இவைகளும், சாயமிடாத பருத்தி வஸ்த்ரமும் எல்லோருக்கும் வஸ்த்ரங்களாம். ஶாணம் என்பது

சணலால் நெய்தது. க்ஷௌமம் = அதஸீ, க்ஷுமா என்ற குசும்பாப்பட்டு நூலால் நெய்தது வெண்பட்டு என்று சிலர். சீரம் = தர்ப்பை முதலியவையால் நெய்தது. குதபம் = மலையிலுள்ள ஆட்டின் ரோமத்தால் நெய்யப்பட்ட கம்பளம். கௌதமரே - சாயமிட்டதும் அர்ஹமென்று சிலர். அதில் விசேஷம் மரத்தின் சாயமிட்டது ப்ராமணனுக்கு. மஞ்சிட்டியின் சாயமுடையது க்ஷத்ரியனுக்கு. மஞ்சள் சாயமுடையது வைஶ்யனுக்கு.

आपस्तम्बः — 'वासः शाणीक्षौमाजिनानि काषायं चैके वस्त्रमुपदिशन्ति माञ्जिष्ठं राजन्यस्य हारिद्रं वैश्यस्ये'ति ॥ वस्यते कौपीनमाच्छाद्यते येन तद्वासः । तद्वक्ष्यते । शाणीक्षौमाजिनानि त्रीण्येतानि वर्णानुपूर्व्येण वासांसीति हरदत्तेन व्याकृतम् । मनुरपि — 'वसीरन्नानुपूर्व्येण शाणक्षौमाविकानि चेति ॥ वसिष्ठः — 'शुक्लमहतं वासो ब्राह्मणस्य कार्पासं माञ्जिष्ठं क्षौमं क्षत्रियस्य पीतं कौशेयं वैश्यस्ये'ति।

ஆபஸ்தம்பர் - வஸ்த்ரம் சொல்லப்படுகிறது - ஶாணம், க்ஷௌமம், அஜினம் இவைகள் முறையே மூன்று வர்ணங்களுக்கும் வஸ்த்ரங்கள். கஷாயத்தால் சாயமுள்ள பருத்தி வஸ்த்ரம் ப்ராமணனுக்கும், மஞ்சிட்டியால் சாயமுள்ள பருத்தி வஸ்த்ரம் க்ஷத்ரியனுக்கும், மஞ்சள் சாயமுள்ள பருத்தி வஸ்த்ரம் வைஶ்யனுக்கும் உரியதென்று சிலர் சொல்லுகின்றனர். மனு - மூன்று வர்ணங்களும் முறையே ஶாணம், க்ஷௌமம், ஆவிகம் இவைகளைத் தரிக்கவேண்டும். ஆவிகம் = ஆட்டின் ரோமத்தால் நெய்தது. வஸிஷ்டர் - வெளுப்பாயும், அஹதமாயும் உள்ள பருத்தி வஸ்த்ரம் ப்ராமணனுக்கும், மஞ்சிஷ்டையின் சாயமுள்ள க்ஷௌமம் க்ஷத்ரியனுக்கும், மஞ்சள் சாயமுள்ள கௌசேயம் வைஶ்யனுக்கும் உரியது.

अहतस्य लक्षणमाह प्रचेताः — 'ईषद्धौतं नवं वस्त्रं सदशं यन्न धारितम्। अहतं तद्विजानीयात्सर्वकर्मसु पावनमिति ।। उपनयने प्रथमतः कौपीनं धार्यम् । ततोऽहतेन वाससा परिधापनीयमुत्तरीयं च कृष्णाजिनमिति व्यवस्था ।। तथा च यमः — 'कार्पासिक्षौमकुतपाश्मर्बल्बजकम्बलाः । सर्वं तु धारयेच्छुक्लं वासस्तत्परिधानिक' मिति ।। न च 'वासःसद्यः कृत्तोतमुत्तराभ्यामभिमन्त्र्योत्तराभिस्तिसृभिः परिधाप्येत्यापस्तम्बवचनात् परिहितवस्त्रैकदेशेनाच्छादनीयमिति मन्तव्यम् । 'वासश्चतुर्थीमुत्तरयाऽऽदत्तेऽन्यत् परिधाप्ये'ति वचनात् चतुर्थदिनेऽपि विनैव कौपीनं कटिवेष्टितवस्त्रैकदेशेनैवाच्छादनप्रसङ्गात् । तस्मात्तद्वचनं कौपीनादुपरि मन्त्रतो वेष्टनीयमित्येवंपरम् । तथा सरण्याख्ये स्मृतिसङ्ग्रहे — 'कौपीनाच्छन्नं कृतशौचं कुमारं दक्षिणत उपवेश्येति ।।

*அஹதத்தின் லக்ஷணத்தைப்பற்றி ப்ரசேதஸ் - கொஞ்சம்வெளுத்ததும், புதியதும், தலைப்புகளுடையதும், இதற்குமுன் தரிக்கப்படாததுமான வஸ்த்ரத்தை 'அஹதம்' என்று அறியவும். ஸகல கர்மங்களிலும் சுத்திகரமானது. உபநயனத்தில் முதலில் கௌபீனத்தைத் தரிக்கச் செய்யவேண்டும். பிறகு அஹதமான வஸ்த்ரத்தைக் கட்டவேண்டும். பிறகு க்ருஷ்ணஜினத்தை உத்தரீயமாய்த் தரிக்கச் செய்ய வேண்டும் என்பது முறை. அவ்விதமே யமன் - பருத்தி வஸ்த்ரம், க்ஷௌமம், குதபம், தோல், பல்பஜம், கம்பளம் இவைகளிலொன்றைத் தரிக்க வேண்டும். அந்தரீயம் (உள்ளாடை - கீழாடை) மட்டில் வெளுப்பான வஸ்த்ரமாக இருக்கவேண்டும். 'அன்றைக்கே தறியிலிருந்து அறுத்து எடுக்கப்பட்ட வஸ்த்ரத்தை மந்த்ரங்களால் கட்டவேண்டும்' என்ற ஆபஸ்தம்ப ஸூத்ரத்திலுல் 'கட்டிய வஸ்த்ரத்தின் ஒரு பாகத்தைக் கௌபீனமாகச் செய்யலாம்' என்று நினைக்கக்கூடாது; 'நாலாவது நாளில் வேறு வஸ்த்ரத்தைக்*

கட்டி முன் வஸ்த்ரத்தை மந்த்ரத்துடன் எடுத்துக் கொள்ள வேண்டும்' என்ற இடத்திலும் இந்த ந்யாயம் ப்ரவர்த்திக்குமாவதால். ஆகையால் அந்த வஸ்த்ரத்தைக் கௌபீனத்திற்கு மேல் மந்த்ரத்துடன் சுற்றவேண்டும் என்பது பொருள். அவ்விதமே ஸரணி என்கிற ஸ்ம்ருதி ஸங்க்ரஹத்தில் - 'கௌபீனம் தரித்தவனும் சுத்தனுமான குமாரனை வலது புறத்தில் உட்கார்த்தி எனப்படுகிறது.

तथा च त्रिकाण्डी — 'तदेवं कुमारस्य कौपीनधारणमाचमनं परिषेचनमापोशनं प्राणाहुतिरित्यादीनि भवेयुरिति ॥ भारद्वाजोऽपि — 'यज्ञोपवीतमजिनं मौञ्जीं दण्डं कमण्डलुम् । स्वोक्तं वासश्च कौपीनं धारयेत् प्रथमाश्रमी ॥ परेऽह्नि मेखलां दण्डमजिनं चोपवीतकम् । धारयेत्तु पुराणानि त्यजेद्वस्त्राणि वा नवेति ॥ परेऽह्नि - चतुर्थदिवस इत्यर्थः ॥

த்ரிகாண்டியிலும் . ஆகையால் குமாரனுக்குக் கௌபீனம் தரித்தல், ஆசமனம், பரிஷேசனம், ஆபோசனம், ப்ராணாஹுதி என்றவை முதலியவை உண்டு. பாரத்வாஜர் - உபவீதம், அஜினம், மேகலை, தண்டம், கமண்டலு, தன் வர்ணத்திற்குரிய வஸ்த்ரம், கௌபீனம் இவைகளை ப்ரம்மசாரி தரிக்க வேண்டும். நான்காவது தினத்தில் மேகலை, தண்டம், தோல், உபவீதம் இவைகளைப் புதிதாய்த் தரித்துப் புராதனங்களை விட்டுவிடவேண்டும். வஸ்த்ரங்களை விடாமலுமிருக்கலாம்.

तथा च शातातपः — 'चतुर्थेऽहनि संप्राप्ते सुस्नातः कृतमङ्गलः । त्रिभिर्विप्रैः समायुक्तो गुरुर्गच्छेत् सशिष्यकः ॥ ग्रामात् प्राचीमुदीचीं वा दिशं नान्यदिशं व्रजेत् ॥ उक्ताशासु ब्रह्मवृक्षो नास्ति चेद्धर्मयोग्यकः । यत्र यत्र ब्रह्मवृक्षस्तां दिशं वा व्रजेद्गुरुः ॥ ब्रह्मवृक्षमथासाद्य द्विजैः पुण्याहवाचनम् । वाचयेदुक्षयेन्मूलं मार्जयेद्गोमयोदकैः । वृक्षे चतुर्मुखं यष्ट्वा नमस्कुर्यात् प्रदक्षिणम् ॥ कौपीनं दण्डमजिनमुपवीतं च मेखलाम् । नवानि धारयित्वाऽथ पुराणानि परित्यजेत् ॥ वृक्षाग्रे स्थापयेद्यत्नात्

कौपीनाजिनमेखलाः । वासः प्रदद्याद्गुरवे ब्राह्मणेभ्यस्तु दक्षिणामिति ॥ एतच्च पालाशकर्म स्मृतिसिद्धं गृह्यभाष्यादौ च लिखितम् ॥

*சாதாதபர் - நான்காவது தினத்தில் ஸ்நானம் செய்து மங்களங்களைச் செய்து கொண்டு, மூன்று ப்ராமணர்களுடனும், சிஷ்யனுடனும் குரு க்ராமத்திற்குக் கிழக்கு அல்லது வடக்குத் திக்கை நோக்கிச் செல்லவேண்டும். வேறு திக்கிற் போகக்கூடாது. சொல்லிய திக்குக்களில் புரசுமரமில்லாவிடில் அது இருக்கும் திக்கிற்சென்று புரசு மரத்தை அடைந்து ப்ராமணர்களால் புண்யாஹ வாசனம் செய்வித்து, வ்ருக்ஷத்தின் அடியை ப்ரோக்ஷித்து, கோமயஜலங்களால் மெழுகி, மரத்தில் ப்ரும்மாவைப் பூஜித்துப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, கௌபீனம், தண்டம், அஜினம், உபவீதம், மேகலை இவைகளைப் புதியதாய் சிஷ்யனுக்குத் தாரணம் செய்வித்து முன் தரித்திருந்த கௌபீனாதிகளைப் பரிஹரிக்கச் செய்து அவைகளை மரத்தின் நுனியில் நன்றாய்க்கட்டுவிக்கச் செய்யவேண்டும். சிஷ்யன் குருவுக்கு வஸ்த்ரத்தைத் தானம் செய்து ப்ராமணர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும். இந்தப் பாலாசகர்மம், ஸ்ம்ருதிகளால் கூறப்பட்டும். க்ருஹ்ய பாஷ்யம் முதலியவைகளில் எழுதப்பட்டுமுளது.*

स्मृत्यर्थसारे च — 'दण्डाः पलाशन्यग्रोधपिप्पला यज्ञवृक्षजाः । ते केशफालनासान्तप्रमाणाश्च क्रमाद्विजैः । धार्याः श्लक्ष्णाः सदा धार्यं कौपीनं कटिसूत्रकम् । कौपीनमहतं धार्यं खण्डवासश्च पार्श्वयुगिति ॥ उपनयनान्तरं त्रिरात्रं क्षारलवणादिवर्जमधश्शायी ब्रह्मचार्युपनयनव्रतं चरेत्। चतुर्थेऽह्नि कौपीनदण्डाजिनमेखलोप वीतानि पूर्वाणि त्यजेत् । वस्त्राणां त्यागेऽनियम इति ॥ एवं च प्रथमदिने कौपीनधारणस्य बहुस्मृतिसिद्धत्वादावश्यकं तत् प्रतीयते परिहितवस्त्रैकदेशेनाच्छादने प्रमाणं मृग्यम् ॥

ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலும் - மூன்று வர்ணங்களும் முறையே புரசு, ஆல், அரசு இவைகளின் தண்டங்களை, அல்லது வேள்விக்குரிய மரங்களின் தண்டங்களையாவது தலை, நெற்றி, மூக்குவரை உயரமுள்ளவைகளாகத் தரிப்பதுடன், கௌபீனம் கடிஸூத்ரம் இவைகளையும் தரிக்க வேண்டும். இவைகள் புதியனவாக இருக்க வேண்டும். உபநயனத்தற்குப் பிறகு மூன்று நாள்வரை உறைப்புகளைத் தள்ளி, பூமியிற்படுத்து, ப்ரம்மசர்யத்துடன் வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். நான்காவது தினத்தில் கௌபீனம், தண்டம், தோல், மேகலை, உபவீதம் இவைகளை விடவேண்டும். வஸ்த்ரங்களை விடுவதில் நியமமில்லை. இவ்விதம் உபநயனத்திலேயே கௌபீனம் தரிக்க வேண்டுமென்பது அநேக ஸ்ம்ருதிகளால் ஸித்திப்பதால், அது ஆவச்யகமெனத் தோன்றுகிறது. மேலேகட்டின வஸ்த்ரத்தின் ஒரு பாகத்தால் கௌபீனம் தரிப்பதில் ப்ரமாணம் துர்லபமாகும்.

## मेखलानिरूपणम्

तत्र मनुः — 'मौञ्जी त्रिवृत् समश्लक्ष्णा कार्या विप्रस्य मेखला । क्षत्रियस्य तु मौर्वी ज्या वैश्यस्य शणतान्तवी ।। मुञ्जालाभे तु कर्तव्या कुशाश्मन्तकबल्बजैः । त्रिवृतग्रन्थिनैकेन त्रिभिः पञ्चभिरेव वेति ।। अनयोरयमर्थः — 'त्रिवृत् - त्रिगुणा । समा - समगुणा । श्लक्ष्णा - परिघर्षणेन सुस्पर्शा । मूर्वाविकारो मौर्वी । मौर्वीति ज्याविशेषणम् । मुञ्जालाभ इति । मुञ्जाग्रहणं मूर्वाशणतन्त्वोरप्युपलक्षणम् । कुशादयो विप्रादीनां यथासङ्ख्यम् । अश्मन्तकस्तरुविशेषत्वक् । बल्बजस्तृण-विशेषः । त्रिवृता - त्रिगुणेन एकेन ग्रन्थिना त्रिभिः पञ्चभिर्वोपलक्षिता ।। त्रयाणां वर्णानामनियमेनायं ग्रन्थिविकल्पः । नात्र यथासङ्ख्यम् । वाशब्देनैकविषयत्वावगमादिति ।।

## மேகலா நிரூபணம்

*மனு - ப்ராமணனுக்கு மேகலை முஞ்சப்புற்களால் திரிக்கப்பட்டதும், மூன்று புரியுள்ளதும், ஸமமானதும், ம்ருதுவானதுமாகச் செய்யப்பட வேண்டும். க்ஷத்ரியனுக்கு மூர்வா (பெருங் குரும்பை) என்ற புற்களால் ஏற்பட்ட 'நாண்' என்பதே மேகலை. வைஸ்யனுக்குச் சணல் நூல்களால் திரிக்கப்பட்ட மேகலை. முஞ்சப்புல் கிடைக்காவிடில் குசம் அல்லது அச்மந்தகம், பல்பஜம் இவைகளால் திரிக்கப்பட்டும், மும்முறை சுற்றப்பட்ட முடிச்சு ஒன்று அல்லது மூன்று, ஐந்து உள்ளதுமான மேகலை 3- வர்ணங்களுக்கும் விஹிதமாம். முஞ்சப்புல் கிடைக்காவிடில்' என்றவிடத்தில் 'மூர்வா, சணல்' என்பவையும் சேர்க்கவும். முடிச்சில் வர்ணக்ரமமாய் என்பதில்லை. அஶ்மந்தகம் என்பது ஓர் மரம். பல்பஜம் என்பது ஓர் புல்.*

व्यासोऽपि — 'मौञ्जी त्रिवृत् समा श्लक्ष्णा कार्या विप्रस्य मेखला। मुञ्जाभावे कुशानाहुः ग्रन्थिनैकेन वा त्रिभिरिति ।। यमः — 'विप्रस्य मेखला मौञ्जी ज्या मौर्वी क्षत्रियस्य तु । शाणसूत्री तु वैश्यस्य मेखला धर्मतः स्मृताः ।। एतासामप्यलाभे तु कुशाश्मन्तकबल्बजैः । मेखला त्रिवृता कार्या ग्रन्थिनैकेन वा त्रिभिरिति ।। पैठीनसिः — 'मौञ्जी मेखलाऽऽश्मन्तकी च ब्राह्मणस्य बाल्बजी मौर्वी वा राजन्यस्य शाणी क्षौमी वा वैश्यस्ये'ति ।। वसिष्ठः — 'मौञ्जी मेखला ब्राह्मणस्य धनुर्ज्या क्षत्रियस्य तान्तवी वैश्यस्येति ।। प्रचेताः — 'त्रिगुणं प्रदक्षिणा मेखला' इति ।। गौतमः — 'मौञ्जी ज्यामौर्वी सौत्र्यो मेखलाः क्रमेण'ति ।। बोधायनः — 'एषां क्रमेण मौञ्जी धनुर्ज्या शाणीति मेखला' इति ।। आपस्तम्बः — 'मौञ्जी मेखला त्रिवृद्ब्राह्मणस्य शक्तिविषये दक्षिणावृत्तानामिति ।। शक्तिविषये - शक्तौ सत्यां दक्षिणावृत्तानां मुञ्जानां कर्तव्या ।।

*வ்யாஸர் - ப்ராமணனுக்கு முஞ்சப்புற்களால் மேகலை செய்ய வேண்டும். முஞ்சம் கிடைக்காவிடில் குமங்களால் செய்யலாம். முடிச்சு ஒன்று அல்லது மூன்று இருக்கலாம். யமன் (மனு வசனத்தில் சொல்லியபடி) பைடீநஸி, வஸிஷ்டர், ப்ரசேதஸ், கௌதமர், போதாயனர், ஆபஸ்தம்பர் இவர்களும் முன் சொல்லியபடியே விதித்திருக்கின்றனர்.*

कटिसूत्रमपि धार्यमित्याह संवर्तः — 'कटिसूत्रं विना कर्म श्रौतं स्मार्तं करोति यः। सर्वं तन्निष्फलं विद्यात् सोऽपि नग्न इति श्रुति'रिति ॥ इदञ्च ब्रह्मचारिगृहस्थसाधारणम्। कटिसूत्रस्य धारणाभावे कर्ममात्रस्य निष्फलत्वावगमात् (धृतवस्त्रेऽपि नग्नत्वावगमाच्च) ॥

*கடிஸூத்ரமும் தரிக்க வேண்டுமென்கிறார் ஸம்வர்த்தர் - கடிஸூத்ரமில்லாமல் ச்ரௌதஸ்மார்த்த கர்மம் எது செய்தாலும் அது முழுவதும் நிஷ்பலமாகும். அவனும் நக்னன் என்று ச்ருதி சொல்லுகின்றது. இது ப்ரம்மசாரிக்கும் க்ருஹஸ்தனுக்கும் ஸமானமானது; கடிஸூத்ரம் தரிக்காவிடில் எக்கர்மமும் நிஷ்பலமாகு மென்று தெரிவதாலும் வஸ்த்ரம் தரித்திருந்தாலும் நக்னனுவான் என்றிருப்பதாலும்.*

## भिक्षाचरणम्

तत्र मनुः — 'प्रतिगृह्येप्सितं दण्डमुपस्थाय च भास्करम्। प्रदक्षिणं परीत्याग्निं चरेद्भैक्षं यथाविधि ॥ भवत्पूर्वं चरेद्भैक्षमुपनीतो द्विजोत्तमः। भवन्मध्यं तु राजन्यो वैश्यस्तु भवदुत्तर'मिति ॥ भवत्पूर्वं भवतिशब्दपूर्वम्। गौतमः — 'आदिमध्यान्तेषु भवच्छब्दः प्रयोज्यो वर्णानुपूर्व्येणेति ॥ प्रयुज्यैव दर्शयति बोधायनः — 'भवति भिक्षां देहीति ब्राह्मणो भिक्षेत भिक्षां भवति देहीति राजन्यो देहि भिक्षां भवतीति वैश्य इति ॥ उपनयनाङ्गत्वेनोक्तोऽप्ययं भिक्षाचर्यविधिः सार्वत्रिकः प्रत्येतव्यः ॥

பிக்ஷாசரணம்

மனு - இஷ்டமான தண்டத்தை வஹித்து, ஸூர்யோபஸ்தானம் செய்து, அக்னியைப் பிரதக்ஷிணம் செய்து, பிறகு விதிப்படி பிக்ஷாசரணம் செய்ய வேண்டும். உபநயனமடைந்த ப்ராமணன் 'பவதி பிக்ஷாம் தேஹி' என்றும், க்ஷத்ரியன் 'பிக்ஷாம் பவதி தேஹி' என்றும், வைஶ்யன் 'தேஹி பிக்ஷாம் பவதி' என்றும் யாசிக்க வேண்டும். கௌதமர் - மூன்று வர்ணங்களிடமும் முறையே ஆதியிலும், நடுவிலும், முடிவிலும், 'பவதி' என்ற சப்தத்தை ப்ரயோகிக்க வேண்டும். போதாயனர் - 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று ப்ராமணனும், ''பிக்ஷாம் பவதி தேஹி'' என்று க்ஷத்ரியனும், 'தேஹி பிக்ஷாம் பவதி' என்று வைஶ்யனும் பிக்ஷிக்கவேண்டும். உபநயனாங்கமாய் விதிக்கப்பட்டிருப்பினும் இந்த பிக்ஷாசரணவிதி எப்பொழுதும் உள்ளது என்று அறியத் தகுந்தது.

उपनयनाङ्गभिक्षायां नियममाह मनुः — 'मातरं वा स्वसारं वा मातुर्वा भगिनीं निजाम्। भिक्षेत भिक्षां प्रथमं या चैनं न विमानयेदिति। विमाननं प्रत्याख्यानम् । गौतमः — 'अग्रे भिक्षेत जननी मप्रत्याख्यायिनी च या। ब्राह्मणं तादृशं वाऽपि स्त्रियमग्रे च याचयेत्॥ गर्भिणीं नैव याचेत विधवां मतिमान्न चेति॥ कारिकाकारः — 'अग्रे भिक्षेत जननीमप्रत्याख्यायिनी च या। पश्चात् पितरमन्यांश्च ह्याचार्यं बांधवांस्तथेति॥

உபநயனாங்கமான பிக்ஷையில் நியமத்தைப் பற்றி மனு - தாய் அல்லது சகோதரி, தாயின் சகோதரி, அல்லது எவள் மறுக்காமற் கொடுப்பாளோ அவளிடம் முதலில் பிக்ஷிக்க வேண்டும். கௌதமர் - முதலில் தாயினிடம், அல்லது அவமதியாமல் கொடுப்பவளிடம், அல்லது அவ்விதமான ப்ராமணனிடம் பிக்ஷிக்கவேண்டும். முதலில் ஸ்த்ரீயி னிடம் யாசிக்க வேண்டும்.

*கர்ப்பிணியினிடமும், விதவையினிடமும் யாசிக்கக் கூடாது. காரிகாகாரர் - முதலில் தாயினிடம், அல்லது மறுக்காமல் கொடுப்பவளிடம், பிறகு பிதா, அன்னியர்கள், ஆசார்யன், பந்துக்கள் இவர்களிடமும் பிக்ஷிக்கவேண்டும்.*

वसिष्ठः — 'अप्रत्याख्यायिनं पूर्वं स्त्रियं वा तादृशीं पुनः । भिक्षेत भिक्षां प्रथमं भवान् भिक्षां ददात्विति ॥ भवति भिक्षां देहीति स्त्रियं वाऽग्रेऽपि मातरम् । मौञ्जीकर्मविसानान्तमामभैक्षं समाहरेत् ॥ पक्वान्नमाहरेन्नित्यमासमावर्तनाद्वटुरिति ॥

*வஸிஷ்டர் - முதலில் அவமதிக்காத புருஷன், அல்லது அவ்விதமான ஸ்த்ரீ இவர்களிடம் பிக்ஷிக்க வேண்டும். புருஷனிடம் 'பவான் பிக்ஷாம் ததாது' என்றும், ஸ்த்ரீயினிடம் 'பவதி பிக்ஷாம் தேஹி' என்றும் சொல்ல வேண்டும். மாதாவினிடம் முதலில் பிக்ஷிக்க வேண்டும். மௌஞ்ஜீகர்மம் முடியும் வரையில் ஆமத்தைப் (சமைக்காத அரிசி முதலியதை) பிக்ஷிக்க வேண்டும். பிறகு ஸமாவர்த்தனம் வரையில் (முதல்) பக்வமான (சமைத்த அரிசி முதலியதை) பிக்ஷிக்க வேண்டும்.*

गृह्यतात्पर्यदर्शनेऽप्यामभैक्षमुक्तम् 'त्रीण्यहानि प्रत्यहमामभैक्षं चरेत् । चतुर्थेऽहन्यन्नसंस्कारेण संस्कृतस्येति ब्रह्मचारिणो नित्यभिक्षामाह व्यासः — 'गृह्योक्तविधिनोपेतं परिवर्त्योत्तरीयकम् । दण्डं पात्रं समादाय नमस्कृत्य रविं गुरुम् ॥ भिक्षार्थं तु ततो मौनी द्विजवेश्म तथा व्रजेदिति ॥ मनुः — 'वेदयज्ञैरहीनानां प्रशस्तानां स्वकर्मसु । ब्रह्मचार्याहरेद्भैक्षं गृहेभ्यः प्रयतोऽन्वहम् ॥ गुरोः कुले न भिक्षेत न ज्ञातिकुलबन्धुषु । अलाभे त्वन्यगेहानां पूर्वं पूर्वं परित्यजेत् । सर्वं वाऽपि चरेद्ग्रामं पूर्वोक्तानामसंभवे । नियम्य प्रयतो वाचमभिशस्तांस्तु वर्जयेदिति ॥

க்ருஹ்ய தாத்பர்ய தர்சனத்திலும் ஆம பிக்ஷையைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது — 'மூன்று நாட்கள்வரை தினந்தோறும் ஆமபிக்ஷையும், பிறகு அன்னபிக்ஷையும் அனுஷ்டிக்க வேண்டும்' என்று. ப்ரம்மசாரியின் நித்ய பிக்ஷயின் விதியைப்பற்றி வ்யாஸர் - க்ருஹ்யத்திற் கூறிய விதியுடன் கூடிய உத்தரீயத்தைத் தரித்து, தண்டம், பாத்ரம் இவைகளை எடுத்துக்கொண்டு, ஸூர்யன், குரு இவர்களை நமஸ்கரித்து மௌனியாய்ப் பிக்ஷக்காக த்விஜர்களின் க்ருஹத்தைக் குறித்துச் செல்ல வேண்டும். மனு - வேதம், யாகம் இவைகளுடன் கூடியவர்கள், ஸ்வகர்மானுஷ்டானத்திற் சிறந்தவர்கள் க்ருஹங்களிலிருந்து, ப்ரம்மசாரீ ப்ரதிதினமும் சுத்தனாய்ப் பிக்ஷையை யாசித்துப் பெற்று வரவேண்டும். குருவின் வீட்டிலும், தனது ஞாதி, பந்துக்கள் க்ருஹத்திலும் பிக்ஷிக்கக்கூடாது. வேறு க்ருஹங்களில்லாவிடில் பந்துக்கள் க்ருஹத்திலும், பந்துக்களில்லாவிடில் தன் ஞாதிகள் க்ருஹத்திலும், அவர்களுமில்லாவிடில் குருவின் ஞாதிகள் க்ருஹத்திலும் பிக்ஷிக்கலாம், முன் சொல்லியபடி வேதயக்ஞாதி ஸம்பன்னர்கள் இல்லாவிடில், மற்ற எவர் க்ருஹத்திலாவது பிக்ஷிக்கலாம். மகாபாதகாதிகளால் தூஷிக்கப்பட்டவர்கள் க்ருஹங்களில் பிக்ஷிக்கக் கூடாது.

याज्ञवल्क्यः — 'ब्राह्मणेषु चरेद्भैक्षमनिन्द्येष्वात्मवृत्तये ॥ आदिमध्यावसानेषु भवच्छब्दोपलक्षिता । ब्राह्मणक्षत्रियविशां भैक्षचर्या यथाक्रममिति ॥ यत्तु — 'सार्ववर्णकं भैक्षचरणमभिशस्तपतितवर्जमिति गौतमवचनं, यदपि व्यासवचनम्— 'ब्राह्मणक्षत्रियविशश्चरेयुर्भैक्षमन्वहम् । सजातीयगृहेष्वेव सार्ववर्णिकमेव वेति, तत्र सर्वशब्दः प्रकृतवर्णत्रयपरः । एतच्च पूर्वोक्तसजातीयालाभविषयम् । तथा च भविष्यत्पुराणे — 'सर्वं वापि चरेद् ग्रामं पूर्वोक्तानामसंभवे । अन्त्यवर्जं महाबाहो इत्याह भगवान् प्रभुरिति ॥ अन्त्यः - शूद्रः ॥

யாக்ஞவல்க்யர் - ப்ரம்மசாரீ தன் ஜீவனத்திற்காகக் குற்றமற்றவர்களான ப்ராமணர்களிடம் பிக்ஷாசரணம்

செய்ய வேண்டும். மூன்று வர்ணங்களுக்கும் முறையே, பிக்ஷையை யாசிக்கும் வாக்யத்தில் 'பவத் என்ற பதம் ஆதியிலும், நடுவிலும், முடிவிலும் இருக்கவேண்டும். 'அபிஶஸ்தன், பதிதன் இவர்களைத் தள்ளி மற்ற எல்லா வர்ணத்தாரிடமும் பிக்ஷை எடுக்கலாம்' என்ற கௌதமவசனத்திலும், ''மூன்று வர்ணத்தார்களும் தங்கள் ஸமான வர்ணத்தார் க்ருஹங்களிலேயே, அல்லது எல்லா வர்ணங்களிலுமாவது பிக்ஷை எடுக்கலாம்'' என்ற வ்யாஸ வசனத்திலுமுள்ள ஸர்வசப்தம் முன் கூறிய வர்ணங்கள் கிடைக்காவிடில் தான். அவ்விதமே பவிஷ்ய புராணத்தில் - முன் சொல்லிய ஸவர்ணர்கள் கிடைக்காவிடில் சூத்ரனைத்தவிர மற்ற எல்லோரிடத்திலும் பிக்ஷிக்கலாம் என்று பகவான் சொன்னார்.

'चातुर्वर्ण्यं चरेद्भैक्षमलाभे व्रतिको द्विज इत्येतदप्यापद्विषयम् । तथा च विष्णुः — 'क्षत्रवैश्यगृहेष्वेव क्रियावर्तिषु साधुषु । चातुर्वर्ण्यं चरेद्भैक्षमापत्काल उपस्थित'इति।।अङ्गिराः — 'आममेवाददीता-स्मादवृत्तावेकरात्रकमिति ।। पराशरः — 'यस्तु वेदमधीयानः शूद्रान्नमुपभुञ्जते । शूद्रो वेदफलं याति शूद्रत्वं याति स द्विज इति ।। एकान्ननिषेधमाह याज्ञवल्क्यः — 'ब्रह्मचर्ये स्थितो नैक मन्नमद्यादनापदि । ब्राह्मणः काममश्नीयात् श्राद्धे व्रतमपीडयन्निति ।। अपीडयन् मधुमांसादिपरिहारेण ।।

'பிக்ஷை கிடைக்காவிடில் நான்கு வர்ணங்களிலும் பிக்ஷிக்கலாம்' என்பதும் ஆபத்விஷயத்தில். அவ்விதமே விஷ்ணு - அனுஷ்டானபரர்களும் ஸாதுக்களுமான க்ஷத்ரிய வைஶ்யர்களிடத்தில் தான் பிக்ஷிக்கலாம். ஆபத்காலத்தில் நான்கு வர்ணங்களிலும் பிக்ஷிக்கலாம். அங்கிரஸ் - ஆகாரம் கிடைக்காவிடில் சூத்ரனிடமிருந்து ஒரு வேளைக்குப் போதுமான ஆமத்தைத்தான் க்ரஹிக்கலாம். பராசரர் - வேதாத்யயனம் செய்யும் த்விஜன் சூத்ரான்னத்தைப் புஜித்தால், சூத்ரன் வேதபலனை

*அடைவான் த்விஜன் சூத்ரனுவான். யாக்ஞவல்க்யர் - ப்ரம்மசாரியான ப்ராமணன் ஆபத்காலம் தவிர மற்றக்காலத்தில் ஏகான்னத்தை (ஒரே ஒருவனுடைய அன்னத்தைப்) புஜிக்கக்கூடாது. ஶ்ராத்தத்தில் மட்டில் ப்ரம்மசர்ய நியமத்திற்கு லோபமில்லாமல் (மது மாம்ஸாதிகளைத் தள்ளி) புஜிக்கலாம்.*

मनुरपि — 'भैक्षेण वर्तयेन्नित्यं नैकान्नाशी भवेद्व्रती । भैक्षेण व्रतिनो वृत्तिरुपवाससमा स्मृता ॥ व्रतवद्देवदैवत्ये पित्र्ये कर्मण्यथर्षिवत् । काममभ्यर्थितोऽश्नीयाद्व्रतमस्य न लुप्यत इति ॥ अत्रिः - 'शाकभक्षाः पयोभक्षाः ये चान्ये यावकाशिनः । सर्वे ते भैक्षभक्षस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ तप्तकाञ्चनवर्णेन गवां मूत्रेण यावकम् । पिबेद्द्वादशवर्षाणि न तद्भैक्षसमं भवेदिति ॥

*மனுவும் - ப்ரம்மசாரீ பிரதிதினமும் பிக்ஷான்னத்தையே புஜிக்க வேண்டும்; ஏகான்னத்தைப் புஜிக்கக் கூடாது. பிக்ஷான்னத்தைப் புஜிப்பது உபவாஸத்திற்குச் சமமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தேவர்களையும், பித்ருக்களையும் உத்தேசித்துச் செய்யப் படும் கர்மங்களில் ப்ரார்த்திக்கப்பட்டால், யதிபோல் மது மாம்ஸாதிகளைத் தள்ளிப் புஜிக்கலாம். இதனுல் ப்ரம்மசர்ய வ்ரதத்திற்கு லோபமில்லை. அத்ரி - சாகத்தை மட்டில் பக்ஷிப்பவரும், ஜலத்தை மட்டில் குடிப்பவரும், யவைக்கஞ்சியை மட்டில் குடிப்பவருமான தபஸ்விகள் கூட பிக்ஷான்னம் புஜிக்கும் ப்ரம்மசாரியின் 16 -ல் ஒரு பாகமான பெருமைக்கு அர்ஹர்களாகார். பசுவின் மூத்ரத்தைத் தங்கநிறமாய்க் காய்ச்சி அதையே உட்கொண்டு 12 வர்ஷம் செய்யும் தபஸ்ஸும் பிக்ஷான்ன போஜனத்திற்குச் சமமாகாது.*

न चात्र फलश्रवणादनियतं भिक्षाचरणमिति वाच्यम् । 'अकृत्वा भैक्षचरणमसमिध्य च पावकम् । अनातुरः सप्तरात्रमवकीर्णिव्रतं चरेदिति। यमः — 'आहारमात्रादधिकं न क्वचिद्भैक्षमाहरेत् । युज्यते स्तेयदोषेण

कामतोऽधिकमाहरन् ।। माधूकरीं य आदाय ब्राह्मणेभ्यः प्रयच्छति ।। स याति नरकं घोरं भोक्ता भुञ्जीत किल्बिषम् ।। तस्मान्नापहरेद्भैक्षमतिरिक्तं कदाचने' ति ।। स्मृतिसंग्रहे – 'ब्रह्मचारी तु भैक्षान्नमुच्छिष्टं न समाचरेत् । अशक्तौ निखनेद्भूमावप्सु वाऽपि प्रवेशये' दिति ।।

*இதில் பலன் சொல்லியிருப்பதால் பிக்ஷாசரணம் நித்யமல்லவென்று சொல்லக்கூடாது. செய்யாவிடில் ப்ராயச்சித்தத்தை மனு விதிப்பதால். மனு - ப்ரம்மசாரியானவன் ரோகமில்லாதிருக்கும் போது பிக்ஷாசரணம், ஸமிதா தானம் இவைகளைச் செய்யாமல் 7 - நாளிருந்தால் அவகீர்ணி வ்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். யமன் - தன் ஆஹாரத்திற்குப் போதுமானதைவிட அதிகமாகப் பிக்ஷிக்கக்கூடாது. ஆசையால் அதிகமாய் பிக்ஷிப்பவன் திருடனின் பாபத்தை அடைவான். பிக்ஷித்த அன்னத்தைப் ப்ராமணனுக்குக் கொடுப்பவன் கோரமான நரகத்தை அடைவான். புசித்தவனும் பாபத்தை அடைவான். ஆகையால் ஒருகாலும் அதிகமாகப் பிக்ஷிக்கக் கூடாது. ஸ்ம்ருதி ஸங்க்ரஹத்தில் - ப்ரம்மசாரியானவன் பிக்ஷான்னத்தை முழுவதும் உச்சிஷ்டமாக்கக் கூடாது. போஜன பாத்ரத்தில் வைத்துக் கொண்ட அன்னத்தை முழுவதும் சாப்பிட சக்தியில்லாவிடில் அதைப் பூமியில் புதைத்து விடவேண்டும்; ஜலத்திலாவது போடவேண்டும்.*

अकामतोऽधिकाहरणे तस्य प्रतिपत्तिनियममाहापस्तम्बः — 'न चोच्छिष्टं कुर्यादशक्तौ भूमौ निखनेदप्सु वा प्रवेशयेदार्याय वा पर्यवदध्यादन्तर्द्धिने वा शूद्रायेति ।। अन्तर्द्धिने - आचार्यस्य दासायेत्यर्थः ।। स एव — 'सायं प्रातरमत्रेण भिक्षाचर्यं चरेद्भिक्ष-माणोऽन्यत्रापपात्रेभ्योऽभिशस्ताच्च स्त्रीणां प्रत्याचक्षाणानां समाहितो ब्रह्मचारीष्टं दत्तं हुतं प्रजां पशून् ब्रह्मवर्चसमन्नाद्यं वृङ्क्ते तस्मादुह वै ब्रह्मचारिसङ्घं चरन्तं न प्रत्याचक्षीतेति ।। अमत्रेण — पात्रेण न

हस्तादिना । भिक्षाप्रत्याख्यानं निन्दति स्त्रीणामिति ॥ वृङ्क्ते - आच्छिनत्तीत्यर्थः ॥

*பிக்ஷை எடுத்த அன்னம் தற்செயலாய் அதிகமாயிருந்தால் அதைப்பற்றி ஆபஸ்தம்பர் பிக்ஷான்னம் முழுவதையும் உச்சிஷ்டமாகச் செய்யக் கூடாது. போஜன பாத்ரத்திலுள்ளதை முழுவதும் புஜிக்க முடியாவிடில் பூமியில் புதைக்க வேண்டும்; ஜலத்திலாவது போடவேண்டும்; ஆர்யனுக்காவது (சூத்ரனல்லாதவன்) கொடுக்க வேண்டும்; ஆசார்யனுக்குத் தாஸனான சூத்ரனுக்காவது கொடுக்க வேண்டும். ஆபஸ்தம்பரே - மாலையிலும் காலையிலும் பாத்ரத்தில் பிக்ஷை எடுக்கவேண்டும். ப்ரதிலோம ஜாதிகளிடத்திலும், பதிதர்களிடத்திலும் பிக்ஷிக்கக் கூடாது. ஸமாஹிதனான ஜாதிகளிடத்திலும், பதிதர்களிடத்திலும் பிக்ஷிக்கக் கூடாது. ஸமாஹிதனான (விஹிதப்ரதிஷித்தங்களில் கவனமுடைய) ப்ரம்மசாரிக்குப் பிக்ஷை இல்லை என்று மறுதளிக்கும் ஸ்த்ரீகள் யாகம், தானம், ஹோமம் இவைகளால் உண்டாகிய தர்மத்தையும், ப்ரஜை, பசுக்கள், ப்ரம்மதேஜஸ், அன்னம் இவைகளையும், அந்த ப்ரம்மசாரி அழிப்பான்; ஆகையால் ப்ரம்மசாரிகள் பிக்ஷித்தால் மறுதளிக்கக் கூடாது.*

एतच्च व्रताध्यायनादियुक्तब्रह्मचारिविषयम् । अत एव वसिष्ठ पराशरौ — 'अव्रता ह्यनधीयाना यत्र भैक्षचरा द्विजाः । तं ग्रामं दण्डयेद्राजा चोरभक्तप्रदो हि स' इति ॥ अत्रिः - 'हस्तदत्ता तु या भिक्षा लवणव्यञ्जनानि च । भुक्त्वा ह्यशुचितां याति दाता स्वर्गं न गच्छती' ति ॥ मनुः — 'समाहृत्य तु तद्भैक्षं यावदर्थममायया । निवेद्य गुरवेऽश्नीया दाचम्य प्राङ्मुखः शुचिरिति ॥ गुर्वसन्निधाने तत्पुत्रभार्यादिभ्यो निवेदयेदित्याह गौतमः — 'असन्निधौ तद्भार्यापुत्रसब्रह्मचारिसद्भ्यः' इति ॥ सब्रह्मचारी - सहाध्यायी । सन्तः - श्रोत्रियाः । तथा च

आपस्तम्बः — 'तत्समाहृत्योपनिधायाचार्याय प्रब्रूयात्तेन प्रदिष्टं भुञ्जीत विप्रवासे गुरोराचार्यकुलाय तैर्विप्रवासेऽन्येभ्योऽपि श्रोत्रियेभ्यो नात्मप्रयोजनश्चरेद्भुक्त्वा स्वयममत्रं प्रक्षालयीतेति ॥

இது வ்ரதாத்யயனங்களுடன் கூடிய ப்ரம்மசாரியைப் பற்றியதாகும். வஸிஷ்ட பராசரர்கள் - வ்ரதானுஷ்டானம், வேதாத்யயனம் இவைகளில்லாமல் த்விஜர்கள் எந்த க்ராமத்தில் பிக்ஷையெடுத்து ஜீவிக்கின்றனரோ அந்த க்ராமத்தை அரசன் தண்டிக்க வேண்டும். (ஏனெனில்) அது திருடர்களுக்கு அன்னமளிப்பதாம். அத்ரி - கையினுல் (கரண்டி முதலியவையில்லாமல்) கொடுக்கப்படும் பிக்ஷை, உப்பு, வ்யஞ்ஜனங்கள் இவைகளைப் புஜித்தால் புஜிப்பவன் அசுத்தனுகிறுன். கொடுத்தவனும் ஸ்வர்க்கத்தை அடைவதில்லை. மனு - பிக்ஷை எடுத்து அந்த அன்னத்தைக் கபடமின்றி குருவுக்கு வேண்டிய அளவு கொடுத்து விட்டுப் பிறகு ஆசமனம் செய்து சுத்தனுய்க் கிழக்கு முகமாய்ப் புஜிக்க வேண்டும். கௌதமர் - குரு ஸமீபத்தில் இல்லாவிடில், அவரின் பார்யை, புத்ரன், தன்னுடன் அத்யயனம் செய்பவன், ய்ரோத்ரியன் இவர்களிலொருவரிடம் தெரிவித்துப் புஜிக்க வேண்டும். ஆபஸ்தம்பர் - பிக்ஷான்னத்தைக் கொண்டு வந்து ஆசார்யனின் ஸமீபத்தில் வைத்துத் தெரிவிக்க வேண்டும். அவரால் கொடுக்கப்பட்டதைப் புஜிக்க வேண்டும். ஆசார்யன் ஸமீபத்தில் இல்லாவிடில் அவரின் பார்யா புத்ராதிகளிடம் தெரிவிக்க வேண்டும்; அவர்களும் இல்லாவிடில் இதரர்களான ய்ரோத்ரியர்களிடம் தெரிவித்து அவர்கள் கொடுத்ததைப் புஜிக்க வேண்டும். தனக்காக என்று பிக்ஷாசரணம் செய்யக் கூடாது. புஜித்த பிறகு போஜன பாத்ரத்தை ஸ்வயமாகவே அலம்ப வேண்டும். பிக்ஷா பாத்ரத்தை அன்யர் அலம்பலாம். 2 பாத்ரங்களையும் ஸ்வயமே அலம்ப வேண்டும் என்று சிலர்.

हारीतः — 'भैक्षमपेक्षितं पर्यग्निकृतमादित्यदर्शितमनुज्ञात ममृतसंमितं प्राहुस्तदश्नन् ब्रह्मचारी ब्रह्मसिद्धिमवाप्नोति इति ॥

याज्ञवल्क्यः — 'कृताग्निकार्यो भुञ्जीत वाग्यतो गुर्वनुज्ञया । आपोशन क्रियापूर्वं सत्कृत्यान्नमकुत्सयन्निति ॥

ஹாரீதர் - தனக்கு வேண்டுமளவுள்ள பிக்ஷான்னத்தைப் பர்யக்னிகரணம் செய்து (அக்னிக்குச் சுற்றிக் காட்டி) ஸூர்யனுக்குக் காண்பித்துக் குருவின் அனுக்ஞை பெற்றால் அது அம்ருதத்திற்குச் சமமாகும். அதைப் புஜிக்கும் ப்ரம்மசாரீ ப்ரம்ம (வேத) ஸித்தியை அடைவான். யாக்ஞவல்க்யர் - பிக்ஷான்னத்தைக் குருவினிடம் தெரிவித்து அவர் அனுக்ஞை பெற்று, அக்னிகார்யம் (ஸமிதாதானம்) செய்து (காலையில் செய்யாவிடில்,) ஆபோசனம் செய்து ஆதரவுடன் நிந்திக்காதவனாய் அன்னத்தைப் புஜிக்க வேண்டும்.

चन्द्रिकायाम् — 'लोहे मृण्मये वा पात्रे भुञ्जीतैतच्च भुक्त्वा स्वयं प्रक्षालयीते'ति ॥ वसिष्ठः — 'अष्टौ ग्रासा मुनेर्भक्ष्याः षोडशारण्यवासिनः । द्वात्रिंशतं गृहस्थस्य ह्यमितं ब्रह्मचारिण इति ॥ आपस्तम्बः — 'आहिताग्निरनड्वांश्च ब्रह्मचारी च ते त्रयः । अश्नन्त एव सिध्यन्ति नैषां सिद्धिरनश्नता'मिति ॥

சந்த்ரிகையில் - லோஹபாத்ரம் அல்லது மண்பாத்ரத்தில் போஜனம் செய்ய வேண்டும். பிறகு போஜனபாத்ரத்தைத் தானாகவே அலம்ப வேண்டும். வஸிஷ்டர் - ஸன்யாஸி எட்டுக்கபளங்களும், வானப்ரஸ்தன் பதினாறு கபளங்களும், க்ருஹஸ்தன் 32 கபளங்களும் (மட்டில்) பக்ஷிக்க வேண்டும். ப்ரம்மசாரி யானவன் இஷ்டப்படி புஜிக்கலாம். ஆபஸ்தம்பர் - ஆஹிதாக்னி, எருது, ப்ரம்மசாரீ இவர்கள் மூவரும், இஷ்டப்படி உண்வால் தான் கார்யஸித்தியை பெறு கின்றனர். இல்லாவிடில் இவர்களுக்குக் கார்யஸித்தி இல்லை.

सन्ध्योपक्रमः

तत्र व्यासः — 'गायत्रीं तु गुरोर्लब्ध्वा सायं सन्ध्यामुपक्रमेत्। कालयोरग्निपूजां च कालयोर्भैक्षमाहरेत्।। निमन्त्रणादिना भुक्त्वा गुर्वर्थं भैक्षमाहरेदिति ।। गौतमः — 'सन्ध्यात्रयं न कर्तव्यं यावन्मौञ्जी न बध्यते। सन्ध्यात्रयं तु कर्तव्यं सायमादि ततः परमिति ।। प्रचेताः — 'मौञ्जीबन्धदिने तिष्ठेत् सावित्रीमभ्यसन् गुरोः। सूर्येऽस्तशिखरं प्राप्ते सायंसन्ध्यां समभ्यसेत्।। सावित्रीं प्राप्य गुरुणा मन्त्राध्यायाद्यथोदितात्। अभ्यस्योपासयेत् सन्ध्यां सायमादि यथाक्रममिति ।।

ஸந்த்யாவந்தனத் தொடக்கம்

வ்யாஸர் - குருவினிடமிருந்து காயத்ரியைப் பெற்று ஸாயங்காலம் முதல் ஸந்த்யா வந்தனத்தை ஆரம்பிக்க வேண்டும். இரண்டு காலங்களிலும் ஸமிதாதானம், பிக்ஷாசரணம் இவைகளைச் செய்ய வேண்டும். சிராத்த போஜனம் நேர்ந்தாலும் அன்று குருவுக்காகப் பிக்ஷாசரணம் செய்யவேண்டும். கௌதமர் - உபநயனம் ஆகாத வரையில் ஸந்த்யா வந்தனம் கூடாது. உபநயனமான பிறகு, அன்று ஸாயங்காலம் முதல் பிரதி தினமும் மூன்று ஸந்த்யைகளும் செய்ய வேண்டும். ப்ரசேதஸ் - உபநயன தினத்தில் குருவினிடமிருந்து காயத்ரியை அப்யஸிக்க வேண்டும். ஸூர்யன் அஸ்தமித்த பிறகு ஸந்த்யா வந்தனத்தைச் செய்ய வேண்டும். குருவினிடமிருந்து காயத்ரியைப் பெற்று ஸந்த்யா வந்தனத்திற்குரிய மந்த்ரங்களுடன் ஸாயங்கால முதல் கிரமமாய் ஸந்த்யையைச் செய்யவேண்டும்.

स्मृत्यन्तरे — 'उपायनेऽह्नि कर्तव्यं सायं सन्ध्याद्युपासनम्। आरभेद् ब्रह्मयज्ञं तु मध्याह्ने तु परेऽहनि।। अनुपाकृतवेदस्य ब्रह्मयज्ञः कथं भवेत्। वेदस्थाने तु गायत्री गद्यतेऽन्यत् समं भवेदिति ।। जैमिनिस्तु विशेषमाह — 'यावद् ब्रह्मोपदेशस्तु तावत् सन्ध्यादिकं च न। ततो मध्याह्नसन्ध्यादि सर्वकर्म समाचरेदिति ।।

வேறு ஸ்ம்ருதியில் - உபநயன தினத்தில் ஸாயங்கால முதல் ஸந்த்யோபாஸனம் செய்ய வேண்டும். ப்ரம்மயக்ஞத்தை மறுநாள் மத்யான்ஹத்தில் ஆரம்பிக்க வேண்டும். வேதாத்யயன ஆரம்பமில்லாதவனுக்கு ப்ரம்மயக்ஞம் எப்படி எனில் வேதஸ்தானத்தில் காயத்ரி உச்சரிக்கப்படுகிறது. மற்றவை ஸமமேயாகும். ஜைமினி விசேஷம் சொல்லுகிறார் - ப்ரம்மோபதேசம் வரையில் ஸந்த்யை முதலியவை இல்லை. ப்ரம்மோபதேசத்திற்குப் பிறகு மத்யான்ஹ ஸந்த்யா வந்தன முதல் ஸகல கர்மத்தையும் அனுஷ்டிக்க வேண்டும்.

## समिदाधानम्

तत्र याज्ञवल्क्यः—'अग्निकार्यं ततः कुर्यात् सन्ध्ययोरुभयोरपीति ॥ मनुः — 'अग्नीन्धनं भैक्षचर्यामधः शय्यां गुरोर्हितम् । आसमावर्तनात् कुर्यात् कृतोपनयनो द्विजः ॥ दूरादाहृत्य समिधः सन्निदध्याद्विहायसि ॥ सायं प्रातश्च जुहुयात्ताभिरग्निमतन्द्रित इति ॥ भूमिष्ठजन्तुसंक्रान्तिर्माभूदिति विहायसीत्युक्तम् । आकाशे रज्ज्वादिषु स्थापयेदित्यर्थः ॥ सुमन्तुरपि ब्रह्मचर्यं तपो भैक्षं सन्ध्ययोरग्निकर्म चेति ॥ केचित् सायमेवाग्निकार्यमिच्छन्ति ।

### ஸமிதாதானம்

யாக்ஞவல்க்யர் - பிறகு இரண்டு ஸந்த்யைகளிலும் ஸமிதா தானம் செய்ய வேண்டும். மனு - உபநீதனான த்விஜன், ஸமிதாதானம் பிக்ஷாசரணம், கீழேபடுத்தல், குருசுச்ரூஷை இவைகளை ஸமாவர்த்தனம் வரையில் செய்ய வேண்டும். தூரத்திலிருந்து ஸமித்துகளைக் கொண்டு வந்து உயரத்தில் வைக்க வேண்டும். அவைகளால் மாலையிலும் காலையிலும் சோம்பலின்றி ஹோமம் செய்யவேண்டும். பூமியிலுள்ள ஜந்துக்கள் பற்றாமலிருப்பதற்காக உயரத்தில் கயிறு முதலியவைகளில் வைக்க வேண்டுமென்பது பொருள்.

ஸுமந்து - *ப்ரம்மசர்யம், தவம், பிக்ஷாசரணம், இரண்டு ஸந்த்யைகளிலும் அக்னிகார்யம் இவைகள் செய்யப்படவேண்டும். சிலர் ஸாயங்காலத்தில் மட்டில் அக்னிபூஜை என்கின்றனர்.*

तदाहापस्तम्बः – 'सायं प्रातर्यथोपदेशं सायमेवाग्निपूजेत्येक' इति ।। लोकाक्षिः – 'सायमेवाग्निमिन्धीतेत्येक इति ।। समिदाहरणे नियममाह बैजावापः – 'पुराऽस्तमयात् प्रागुदीचीं दिशं गत्वाऽहिंसन्नरण्यात् समिध आहरेदिति ।। आपस्तम्बोऽपि – 'नास्तमिते समिद्धारो गच्छे'दिति ।। व्यासः – 'पालाश्यस्समिधः कार्याः खादिर्यस्तदलाभतः । शमीरौहितकाश्वत्थास्तदलाभेऽर्कवेतसा' विति ।।

*அதைப்பற்றி ஆபஸ்தம்பர் - மாலையிலும், காலையிலும் க்ருஹ்யத்திற் சொல்லியபடி ஸமிதா தானம் செய்யவேண்டும். ஸாயம் காலத்தில் மட்டும் என்று சிலர். லோகாக்ஷி -ஸாயங்காலத்தில் மட்டில் அக்னிபூஜை என்று சிலர். ஸமித்தைக் கொண்டு வரும் நியமத்தைப் பற்றி பைஜாவாபர் - அஸ்தமயத்திற்குமுன் ஈசானதிக்கிற் சென்று பிறரைத் துன்புறுத்தாமல் காட்டினின்று ஸமித்துக்களைக் கொண்டு வரவேண்டும். ஆபஸ்தம்பர் - அஸ்தமித்த பிறகு ஸமித்துக்களைக் கொண்டு வருவதற்குப் போகக்கூடாது. வ்யாஸர் - ஸமித்துக்கள் பலாச மரத்தினுடையவைகளாக இருக்க வேண்டும். அவை கிடைக்காவிடில் கருங்காலி, வன்னி, செம்மரம், அரசு, எருக்கு, வஞ்சி இவையினுடையவை இருக்கலாம்.*

समित्प्रमाणमाह कात्यायनः — 'नाङ्गुष्ठादधिका कार्या समित् स्थूलतया क्वचित् । न वियुक्ता त्वचा चैव न सकीटा न पाटिता ।। प्रादेशान्नाधिका न्यूना तथा न स्याद्विशाखिका । नासपर्वा न निर्वीर्या होमेषु तु विजानता ।। विशीर्णा विदला ह्रस्वा वक्रा ससुषिरा कृशा । दीर्घा स्थूला व्रणैर्दुष्टा कर्मसिद्धिविनाशिकेति ।। सार्वत्रिकं नियमविशेष-माहापस्तम्बः — 'नाप्रोक्षितमिन्धनमग्नावादध्यादिति ।।

*ஸமித்தின் அளவைக் குறித்துக் காத்யாயனர் - ஸமித்தின் பருமன் கட்டைவிரலை விட அதிகமாயிருக்கக் கூடாது. தோலில்லாததும், புழுவுடன் கூடியதும், பிளக்கப்பட்டதும், ஒட்டை அளவுக்கு அதிகம் அல்லது குறைவு உள்ளதும், இரண்டு கிளைகள் உள்ளதும் கணுவில்லாததும், வீர்யமற்றதுமான ஸமித்தை ஹோமங்களில் உபயோகிக்கக் கூடாது. சிதறியதும், பிளந்ததும், குட்டையும், வக்ரமும், துளையுள்ளதும், மெல்லியதும், நீண்டதும், பருத்ததும், காயமுள்ளதுமான ஸமித்தானது கார்ய ஸித்தியை நாசம் செய்யும். ஆபஸ்தம்பர் - ப்ரோக்ஷிக்கப்படாத ஸமித்தை அக்னியில் ஹோமம் செய்யக்கூடாது.*

अग्निकार्याकरणे प्रत्यवायमाह हारीतः — 'पुरा जग्राह वै मृत्युर्हिंसयन् ब्रह्मचारिणम्। अग्निस्तं मोक्षयामास तस्मात् परिचरेद्धि तम्। ब्रह्मचारी यदा त्वग्रावादध्यात् समिधं न हि ॥ गृह्णीयात्तं ततो मृत्युरादध्यात् समिधस्तत' इति ॥ बोधायनः — 'ब्रह्म वै मृत्यवे प्रजाः प्रायच्छत्तस्मै ब्रह्मचारिणमेव न प्रायच्छत् सोऽब्रवीदस्तु मह्यमप्येतस्मिन् भाग इति यामेव रात्रिं समिधं नाहराता इति तस्माद् ब्रह्मचारी यां रात्रिं समिधन्नाहरत्यायुष एव तामवदाय वसति तस्माद् ब्रह्मचारी समिधमाहरेदिति ॥ ब्रह्म - जगत्कारणम्। ईश्वरः प्रजाः मारयितुं मृत्यवे प्रायच्छत्। ब्रह्मचारिणं न प्रददौ। अथ मृत्युराह — मह्यं मम एतस्मिन् ब्रह्मचारिण्यपि भागः - अंशोऽस्त्विति। ततो ब्रह्माऽब्रवीत्। सा रात्रिः तवावसरः यामेव रात्रिं समिधं नाहराता इति - नाहरतीति। आयुष इति द्वितीयार्थे षष्ठी। तस्यां रात्र्यामायुर्गृह्णातीत्यर्थः ॥

*ஹாரீதர் - முற்காலத்தில் ம்ருத்யு என்ற தேவன் ஹிம்ஸிப்பதற்காக ப்ரம்மசாரியைப் பிடித்துக் கொண்டான். அவனை அக்னிதேவன் விடுவித்தான். ஆகையால் அக்னியைப் பூஜிக்க வேண்டும். ப்ரம்மசாரி யானவன் என்றைக்கு ஸமிதாதானம் செய்யவில்லையோ*

அன்று ம்ருத்யு அவனைப் பிடிப்பான். ஆகையால் ஸமிதாதானம் செய்ய வேண்டும். போதாயனர் - ஜகத்காரணனான ஈச்வரன் ப்ரஜைகளை ம்ருத்யுவினிடம் கொடுத்தார். ப்ரம்மசாரியை மட்டில் கொடுக்கவில்லை. பிறகு ம்ருத்யு 'ப்ரம்மசாரியிலும் எனக்குப் பாகம் வேண்டும்' என்றான். ஈசன், 'எந்த ராத்ரியில் ஸமிதாதானம் செய்யவில்லையோ அது உனக்கு ஸமயம்' என்றான். ஆகையால் ப்ரம்மசாரி என்று ஸமிதா தானம் செய்யவில்லையோ அந்த ராத்ரியில் அவனுடைய ஆயுஸ்ஸை ம்ருத்யு க்ரஹிக்கின்றான். ஆகையால் ப்ரம்மசாரியானவன் ஸமிதாதானம் செய்ய வேண்டும்.

गौतमः — 'अग्नीन्धनभैक्षाचरणादीनि सप्तरात्रमकृत्वाऽऽज्यहोम इति ।। बृहस्पतिरपि — 'अवकीर्णिव्रतं कुर्यात् सप्तरात्रमसंशयमिति ।। मनुरपि — 'अकृत्वा भैक्षचरणमसमिध्य च पावकम् । अनातुरः सप्तरात्रमवकीर्णिव्रतं चरेदिति ।।

கௌதமர் - ஸமிதா தானம் பிக்ஷாசரணம் முதலியவைகளை ஏழு நாள் செய்யாவிடில் ஆஜ்யஹோமம் செய்ய வேண்டும். ப்ருஹஸ்பதி - ஏழு நாள் ப்ரம்மசார்ய நியமமில்லாதிருப்பவன் அவகீர்ணிவ்ரதம் செய்ய வேண்டும். மனு - இடையூறில்லாதவன், ஏழு நாள் பிக்ஷாசரணம், ஸமிதா தானம் இவைகளைச் செய்யாவிடில் அவகீர்ணி வ்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

## जातकर्मादिकालातिपत्तिप्रायश्चित्तम्

जातकर्मादिकालातिपत्तिप्रायश्चित्तमाह कात्यायनः — 'कालातीतेषु कार्येषु प्राप्तवत्स्वपरेषु च । कालातीतानि कृत्वाऽथ विदध्यादुत्तराणि च ।। लुप्ते कर्मणि सर्वत्र प्रायश्चित्तं विधीयते । प्रायश्चित्ते कृते पश्चाल्लुप्तं कर्म समाचरेत् ।। गर्भाधानादिचौलान्ते स्वकाले विधिनाऽकृते। प्रत्येकं पादकृच्छ्रं स्यात् द्विगुणं स्यादनापदि ।। आषोडशाद् ब्राह्मणस्य ह्यष्टकाद्व्रतहायने । आज्याहुतीश्च जुहुयादिमं मे वरुणद्वयम् ।।

त्वन्नः स त्वन्नोमन्त्रौ द्वौ त्वमग्ने तु प्रजापते । ये ते शतमुदुत्तमं व्याहृतीर्जुहुयात्ततः ॥ आभ्युदीकं तु तन्त्रेण सर्वकर्माण्यनुक्रमात् । उपायनव्रतं कुर्या च्छूद्रतुल्योऽन्यथा भवेदिति ॥

### ஜாதகர்மாதிகள் உரிய காலத்தில் செய்யப்படாவிடில் ப்ராயச்சித்தம்

காத்யாயனர் - *சில கர்மங்களுக்கு காலம் தாண்டினால் காலம் வந்துவிடில் மேல் கர்மங்கள் செய்யவேண்டிய காலம் தாண்டியவைகளான முந்திய கர்மங்களைச் செய்த பிறகு பிந்திய கர்மங்களைச் செய்ய வேண்டும். எந்தக் கர்மமும் ஸ்வகாலத்தில் செய்யப்படாவிடில் அதற்கு ப்ராயச்சித்தம் விதிக்கப்படுகின்றது. விஹிதமான ப்ராயச்சித்தத்தைச் செய்து பிறகு லுப்தமான கர்மத்தைச் செய்ய வேண்டும். கர்ப்பாதானம் முதல் சௌளம் வரையுள்ள கர்மங்கள் ஸ்வகாலத்தில் விதிப்படி செய்யாபடாவிடில் ஆபத்விஷயத்தில் பாதக்ருச்ரமும், அநாபத்விஷயத்தில் அரைக்ருச்ரமும், ஒவ்வொன்றிற்கும் விதிக்கப்படுகிறது. ப்ராமணனுக்கு 8-வது வயதுமுதல் 16-வது வயதிற்குள் உபநயனம் செய்யப்படாவிடில் 'இமம்மே' என்பது முதலான 8 மந்த்ரங்களாலும் வ்யாஹ்ருதிகளாலும் ஆஜ்ய ஹோமம் செய்ய வேண்டும். நாந்தியை ஒன்றாய்ச் செய்ய வேண்டியது. ஜாதகர்மம் முதலியவைகளைக் கிரமமாய்ச் செய்து உபநயனத்தைச் செய்யவேண்டியது. இவ்விதமில்லாவிடில் சூத்ரனுக்குச் சமானனுவான்.*

### ब्राह्मणभोजनसङ्ख्या

ब्राह्मणभोजनसङ्ख्यामाह भास्करः — 'दश द्वादश वाऽऽधतौ प्रत्यृतौ च द्वयं द्वयम् । सीमन्ते पुंसवे नाम्नि भूरि ब्राह्मणभोजनम् ॥ ब्राह्मणांश्चैव पञ्चाशच्चौले तूपायने शतम् । विवाहे तु यथाशक्ति ह्याधाने शतभोजनम् ॥ भोजयित्वा शतं विप्रान् कुर्यादेवोपनायनम् । अशक्तोऽपि

यथाशक्ति कृत्वा कर्म समाचरेत् ।। प्रतिगृह्योपनीत्यर्थमिति तेनाचरेद्यदि। ब्राह्मणत्वफलं सर्वं दातारमधिगच्छति ।। शूद्रात्तु प्रतिगृह्णीयात्स मूढो नरकं व्रजेदिति ।।

ப்ராமணபோஜனக்கணக்கு

பாஸ்கரர் - *முதல் ருதுவில் 10, அல்லது 12 ப்ராமணர்களேயும், ஒவ்வொரு ருதுவிலும் 2- ப்ராமணர்களேயும், ஸீமந்தம் பும்ஸவனம், நாமகரணம் இவைகளில் அநேகம் ப்ராமணர்களேயும், சௌளத்தில் 50, உபநயனத்தில் 100 விவாஹத்தில் தன் ஶக்திக்குத் தகுந்தபடி, ஆதானத்தில் 100, உபநயனத்தில் 100 ப்ராமணர்களேயும் போஜனம் செய்விக்க வேண்டும். அசக்தனுனல் தன் சக்திக்குத்தகுந்தபடி போஜனம் செய்வித்துப்பிறகு கர்மத்தைச் செய்யவேண்டியது. உபநயனத்திற்கென்று ப்ரதிக்ரஹித்து அந்த த்ரவ்யத்தால் செய்தால் ப்ராமணத்தன்மையின் பலன் முழுவதும் பணம் கொடுத்தவனே அடைகின்றது. சூத்ரனிடமிருந்து ப்ரதி க்ரஹிக்கும் மூடன் நரகத்தை அடைவான்.*

मातरि रजस्वलायां गर्भिण्यां च कर्मनिषेधः

प्रयोगपारिजाते — 'न विवाहोपनयने गर्भिणी मलिनी प्रसूः । गर्भस्यापि विपत्तिः स्याद्दंपत्योश्च शिशोस्तथेति ।। प्रसूः — माता । सा गर्भिणी वा, मलिनी मलवद्वासा वा भवेद्यदि पुत्रस्य विवाहोपनयने न कर्तव्ये। करणे दोषः - गर्भस्य दम्पत्योः सुतस्य च विपत्तिः स्यादिति ।। वरदराजीये — 'ईडाकरणपूर्वं तु जननी चेद्रजस्वला ।। न कर्तव्या चोपनीतिरिति स्मृतिविदां मतमिति ।। ईडाकरणं - नान्दीश्राद्धकरणम् । ततः पूर्वं रजस्वला चेदित्यर्थः ।। तत्रैव -करणे व्रात्यतां यायादकर्मण्यो भवेद्बटुः। वेदपाठे व्रतादौ च ह्यनर्हो दारकर्मणि ।। उपनीतिश्च कर्तव्या पुनश्च ब्राह्मणैः सह ।। अनुज्ञां प्राप्य विदुषां पीत्वा च ब्रह्मकूर्चकम् ।। कर्मण्यो जायते वर्णी नात्र कार्या विचारणा ।।

### தாய் ரஜஸ்வலை அல்லது கர்ப்பிணியாய் இருந்தால் உபநயனம் முதலியவை செய்யத்தடை

ப்ரயோகபாரிஜாதத்தில் - *தாய் கர்ப்பிணி, அல்லது ரஜஸ்வலையாய் இருந்தால் புத்ரனுக்கு விவாஹம், உபநயனம் இவைகளைச் செய்யக்கூடாது. செய்தால், கர்ப்பத்திற்கும், புத்ரனுக்கும், தம்பதிகளுக்கும் ஆபத்து உண்டாகும்.* வரதராஜீயத்தில் - *நாந்தீச்ராத்தத்திற்குமுன் தாயார்ரஜஸ்வலையாயிருந்தால் உபநயனம் செய்யக் கூடாதென்பர் ஸ்ம்ருதி அறிந்தவர். இந்த விதியை மீறிச் செய்தால் வடுவானவன் வ்ராத்யனுவான். கர்மங்களுக்கு அர்ஹனுகான். வேதாத்யயனம், வ்ரதம், விவாஹம் இவைகளுக்கும் அர்ஹனுவதில்லை. ப்ராமணர்களின் உத்தரவு பெற்று ப்ரம்மகூர்ச்ச பஞ்சகவ்யபானம் செய்து புநருபநயனம் செய்தால் கர்மார்ஹனுக ஆவான். ஸந்தேஹமில்லை.*

वटोर्माता गर्भिणी स्यान्न कुर्याच्चौलकर्म च । पञ्चमासादधः कुर्यादत ऊर्ध्वं न कारयेत् ।। कर्तृभार्या गर्भिणी चेद्वास्तु कर्मोपनायनम् । षण्मासात् परतः सोऽपि न कुर्यादिति शौनकः ।। गर्भिणी यदि पत्नी स्यान्न कुर्यादुपनायनम् । पञ्चमासादधः कुर्यादत ऊर्ध्वं न कारयेदिति ।।

*வடுவின் மாதா கர்ப்பிணியாய் இருந்தால் சௌளமும் செய்யக்கூடாது. ஐந்தாவது மாஸத்திற்கு முன் செய்யலாம்; பிறகு செய்யக்கூடாது. கர்த்தாவின் பார்யை கர்ப்பிணியாய் இருந்தால் க்ருஹநிர்மாணம், உபநயனம் இவைகளை 6- வது மாஸத்திற்குமேல் செய்யக்கூடாது என்றுர் சௌனகர். பார்யை கர்ப்பிணியாய் இருந்தால் 5 மாஸத்திற்குமுன் உபநயனம் செய்யலாம்; பிறகு செய்யக்கூடாது.*

### उपनयनकर्तृनिरूपणम् ।

उपनयनकर्तारमाह व्यासः — 'वेदैकनिष्ठं धर्मज्ञं कुलीनं च कुटुम्बिनम् । स्वशाखाढ्यमनालस्यं विप्रमक्रुद्धमत्वरम् ।। कर्तारमीप्सेद्विप्रं

वा चतुर्थाश्रमिणं न त्विति ॥ विष्णुः — 'कृच्छ्रत्रयं चोपनेता त्रीन् कृच्छ्रांश्च परश्चरेत् । सावित्रीमभ्यसेन्नित्यं पवित्राणि च संस्मरन्निति ॥ वृद्धवसिष्ठः — 'पिता पितामहो भ्राता ज्ञातयो गोत्रजाग्रजाः । उपायनेऽधिकारास्स्युः पूर्वाभावे परः पर इति ॥ आपस्तम्बः — 'तमसो वा एष तमः प्रविशति यमविद्वानुपनयते यश्चाविद्वानिति हि ब्राह्मणं तस्मिन्नभिजनविद्यासमुदेतं समाहितं संस्कर्तारमीप्सेदिति ॥ यं माणवकं अविद्वान् - अजानानः उपनयते, तथा यश्च स्वयमविद्वान् सन्नुपनयते, सोऽपि तमसः सकाशात्तम एव प्रविशति । समाहितं - विधिप्रतिषेधेष्ववहितमित्यर्थः ॥

**உபநயன கர்த்தா**

வ்யாஸர் - வேதத்திலேயே பற்றுள்ளவனும், தர்மமறிந்தவனும், நற்குலத்திற் பிறந்தவனும், குடும்பமுள்ளவனும், தனது வேதத்தால் நிறைந்தவனும், சோம்பலில்லாதவனும், கோபமில்லாதவனும், பரபரப் பற்றவனும் ஆன ப்ராமணனை உபநயனம் செய்விப்பவனாக அடையவேண்டும். ஸன்யாஸியை விரும்பக்கூடாது. விஷ்ணு - உபநயனம் செய்பவன் மூன்று க்ருச்ரங்களும் மாணவகன் மூன்று க்ருச்ரங்களும் அனுஷ்டிக்க வேண்டும். உபநேதா ப்ரதிதினமும் காயத்ரியை ஜபிக்கவேண்டும். சுத்திகரமான மந்த்ரங்களை ஸ்மரித்துக் கொண்டிருக்க வேண்டும். வ்ருத்த வஸிஷ்டர் - பிதா, பிதாமஹன், ப்ராதா, ஞாதிகள், ஸகோத்ரர்களான பெரியோர்கள் இவர்கள் உபநயனத்தில் அதிகாரிகளாவர். இவர்களுள் முந்தியவர் இல்லாவிடில் பிந்தியவர் அதிகாரிகள். ஆபஸ்தம்பர் - அறியாதவன் எவனுக்கு உபநயம் செய்கின்றானோ அந்த வடுவும், உபநயனம் செய்வித்த அந்த அவித்வானும், இருட்டினின்றும் இருட்டுள்ள இடத்தையே அடைகின்றனர். (ஆகையால்) அந்த உபநயனத்தில் நற்குலத்தில் பிறந்தவனும், வேதவித்யையுடன் கூடியவனும், தக்கது-தகாததான

செயலில் கவனமுள்ளவனுமான ஆசார்யனைத் தேடி அடையவேண்டும்.

बोधायनः — 'जातकर्मादिसंस्कारे पिता श्रेष्ठतमः स्मृतः । अभावे स्वकुलीनः स्याद्बान्धवो वाऽन्यगोत्रजः ॥ आर्यावर्तसमुद्भूतस्तस्याभावे स्वसूत्रकः ॥ ब्राह्मणः सर्ववर्णानां श्रोत्रियो वा स्ववर्णजः ॥ गृहस्थः सर्ववर्णेषु श्रेष्ठ इत्यभिधीयते । अभार्यस्त्वधमो ज्ञेय उपकुर्वाणनैष्ठिकौ ॥ आचार्यौ मध्यमौ ज्ञेयौ सगोत्रौ व्रतिनावपि ॥ वानप्रस्थयतीनां तु कर्तृत्वं नेष्यते सदा ॥ जितेन्द्रियो जितद्वन्द्वस्तपोदानपरायणः । सत्यवागूर्जितः प्राज्ञो मेधावी नियतः शुचिः ॥ निःसन्दिग्धः कुलीनश्च श्रौतकर्मणि तत्परः ॥ निग्रहानुग्रहे दक्षः सर्वदोषविवर्जितः । गायत्रीमन्त्रकुशल आचार्यः समुदाहृतः ॥ कुलद्वये तथोत्सन्ने प्राप्ते गर्भाष्टमे वटुः । मौञ्जीबन्धनकर्मार्थं स्वशाखाध्यायिनं द्विजम् । सगोत्रप्रवरं नो चेदाश्रयेदन्यगोत्रजमिति ॥

போதாயனர் - ஜாதகர்மம்முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்வதில் பிதா மிகச் சிறந்தவனாகின்றான். பிதா இல்லாவிடில் தன் குலத்திற் பிறந்தவன். அன்ய கோத்ரியான பந்து, ஆர்யாவர்த்தத்திற் பிறந்த ஸ்வஸூத்ரி, எல்லா வர்ணங்களுக்கும் ப்ராமணன், ஸவர்ணனான ப்ரோத்ரியன் இவர்கள் உரியவராவர். எல்லாவர்ணங்களிலும் க்ருஹஸ்தனே சிறந்தவனாவான். பார்யையில்லாதவன் அதமன். ஸகோத்ரிகளான உபகுர்வாணன், நைஷ்டிகன் என்ற இருவகையான ப்ரம்மசாரிகள் மத்யமர்கள். வானப்ரஸ்தர்களுக்கும், ஸந்யாஸிகளுக்கும் உபநயனத்தில் அதிகாரமில்லை. ஜிதேந்த்ரியனும், சீதோஷ்ணாதிகளை ஜயித்தவனும், தபஸ், தானங்களுடையவனும், ஸத்யவாதியும், பேரறிஞனும், மேதாவியும், நியமமுடையவனும், சுத்தனும், ஸந்தேஹமற்றவனும், நற்குலத்திற் பிறந்தவனும், ப்ரௌதகர்மத்தை அனுஷ்டிப்பவனும் அடக்கவும்

அருளவும் சக்தனும், தோஷங்களெல்லாமற்றவனும், காயத்ரீ மந்த்ரத்தில் ஸமர்த்தனுமானவன் ஆசார்யன் எனப்படுகிருன். இரண்டு குலங்களிலும் உபநேதா இல்லாவிடில் கர்ப்பாஷ்டமம் வந்தவுடன் வடுவானவன் உபநயனத்திற்காக ஸமானசாகியான ஸமானகோத்ரனை, அல்லது ஸமானப்பிரவரனை, அல்லது அன்யகோத்ரஜனை ஆம்ரயிக்கவேண்டும்.

## यमलाद्युपनयनम्

संग्रहे — 'एकगर्भप्रसूतौ चेदेकवेदीमवाप्य च । एकाचार्यैकलग्ने च कुर्यान्मौञ्जीव्रतं यतः ।। चौलोपनयने चैव जातकर्मणि नाम्नि च । चतुर्व्रतोपाकरणे यमलानां समं भवेदिति ।। कालादर्शे — 'भ्रातृद्वये स्वसृयुगे स्वसृभ्रातृयुगे तथा । समानाऽपि क्रिया कार्या मातृभेदे तथैव च' ।। पुंयुग्मे स्त्रीयुग्मे स्त्रीपुंयुग्मेऽपि समकाले क्रिया कार्या । मातृभेदेऽपि तथैवेत्यर्थः ।।

## இரட்டையர் முதலியவரின் உபநயனம்

ஸங்க்ரஹத்தில் - ஒரே கர்ப்பத்திலிருந்து பிறந்த இரட்டைப்பிள்ளைகளுக்கு ஒரே வேதியில் ஒரே ஆசார்யன் ஒரே லக்னத்தில் உபநயனம் செய்யவேண்டும், சௌளம், உபநயனம், ஜாதகர்மம், நாமகரணம், நான்கு வேத வ்ரதங்கள், உபாகர்மம் இவைகள் ஒரே ஸமயத்தில் இருவருக்கும் செய்யப்படவேண்டும். காலாதர்ஸத்தில் - இரட்டையாய்ப் பிறந்தவர் 2- பிள்ளைகளாஞலும் 2- பெண்களாஞலும், ஒரு பெண் ஒரு பிள்ளையாஞலும், ஜாத கர்மாதிகளை ஒரே ஸமயத்தில் செய்யவேண்டும். மாதாவின் பேதமிருந்தாலும் ஒரே லக்னத்தில் பிறந்தால் 2 குழந்தைகளுக்கும் ஒரே லக்னத்தில் ஜாதகர்மாதிகளைச் செய்யவேண்டும். மாதா வேருயின் விசேஷம் சொல்லப்படுகிறது - இரட்டைப்பிள்ளைகளுக்கு ஒரே லக்னத்தில் உபநயனம் செய்வது சுபமாகும். ஆஞல்

இரண்டு வேதிகளில் இரண்டு ஆசார்யர்கள் தனித்தனியே செய்யவேண்டும். நாந்தியில் தன் பித்ருக்களைப் பூஜிக்கவேண்டும். ஒரே லக்னத்தில் இரண்டு மாதாக்களுக்குப் பிறந்த ஸஹோதரர்களுக்கும் ஒரே லக்னத்தில் உபநயனம் செய்யவேண்டும். ஆசார்யன் ஒருவனுக்கும் பிதா ஒருவனுக்கும் உபநயனம் செய்யலாம். அல்லது ப்ராதா, அல்லது தகப்பனின் ப்ராதா செய்யலாம்.

## मूकोन्मत्ताद्युपनयनादि।

स्मृतिरत्ने — 'षण्डान्धबधिरस्तब्ध जडगद्गदपङ्गुषु। कुब्जवामनरोगार्तशुष्काङ्गविकलाङ्गिषु ॥ मत्तोन्मत्तेषु मूकेषु शयनस्थे निरिन्द्रिये। ध्वस्तपुंस्त्वेषु चैतेषु संस्काराः स्युर्यथोचितम् ॥ मूर्खोन्मत्तौ न संस्कार्याविति केचित् प्रचक्षते। कर्मस्वनधिकराच्च पातित्यं नास्ति च द्वयोः ॥ तदपत्यं च संस्कार्यमपरे त्वाहुरन्यथे'ति ॥ स्मृत्यन्तरे — 'मूकोन्मत्तौ न संस्कार्यौ कर्मस्वनधिकारतः। तदपत्यं तु संस्कार्यं यज्ञार्हमिति च श्रुतिः ॥ ब्राह्मण्यां ब्राह्मणाज्जातो ब्राह्मणस्तु श्रुतेर्बलात्। कर्मस्वनधिकारोऽपि संस्कारार्ह इति श्रुतिः ॥ मूकोन्मत्तादिसंस्कारे त्वाचार्यः सर्वमाचरेत्। सुमुहूर्ते निरीक्षेत गायत्रीं स्पृश्य वा जपेत् ॥ मूकान्धादिषु चोद्वाहे कन्यास्वीकरणं विना ॥ पाणिग्रहं विना सप्तपदादिक्रमणं विना ॥ विप्रेण कारयेत् सर्वं पङ्गोः सप्तपदान्यपि ॥

### ஊமை, பித்தன் முதலியவர்களின் உபநயனம்

ஸ்ம்ருதிரத்னத்தில் - நபும்ஸகன், குருடன், செவிடன், செயலற்றவன், ஜடன், உளறுவாயன், நொண்டி, கூனன், குள்ளன், தீர்க்கரோகி, இளைத்தவன், அங்கஹீனன், மத்தன், பித்தன், ஊமை, படுத்தே இருப்பவன், இந்த்ரியமற்றவன், ஆண்மையில்லாதவன் இவர்களுக்கும் உசிதப்படி ஸம்ஸ்காரங்கள் உண்டு. ஊமை, பித்தன் இவர்களுக்கு ஸம்ஸ்காரங்களில்லை என்று சிலர்சொல்லுகின்றனர். கர்மங்களில் அதிகாரமில்லாத

தால். இவர்களுக்குப் பாதித்யமில்லே. இவர்களுக்குப் பிறந்தவர்கள் ஸம்ஸ்காரத்திற்கும், யாகத்திற்கும் அர்ஹமானவர். சிலர் இதை வேறுவிதமாய்ச் சொல்லு கின்றனர். வேறு ஸ்ம்ருதியில் - ஊமை, பித்தன் இவர்களுக்கு உபநயனம் கூடாது. கர்மங்களில் அதிகார மில்லாதால். இவர்களின் ப்ரஜை ஸம்ஸ்காரத்திற்கும், யாகத்திற்கும் அர்ஹமாகும் என்று ஶ்ருதி. 'பிராமணஸ்த்ரீயினிடத்தில் ப்ராமணனுக்குப் பிறந்தவன் ப்ராமணன்' என்ற ஶ்ருதியின் பலத்தால், கர்மங்களில் அதிகாரமில்லாவிடினும், ஸம்ஸ்காரத்திற்கு அர்ஹனுகிறுன் என்பது ச்ருதியின் கருத்து. ஊமை, பித்தன், இவர்களின் உபநயனத்தில் ஆசாரியனே, எல்லாவற்றையும் செய்யவேண்டும். நல்ல முகூர்த்தத்தில் அவனைப் பார்க்க வேண்டும். அவனை ஸ்பர்சித்துக் கொண்டாவது காயத்ரியை ஜபிக்கலாம். ஊமை, குருடு, முதலியவர்களின் விவாஹத்தில் கன்யையை ஸ்வீகரித்தல், பாணிக்ரஹனம், ஸப்தபதீ இவைகளைத் தவிர மற்றவைகளைப் ப்ராமணன் முகமாய்ச் செய்விக்கவேண்டும். நொண்டிக்கு ஸப்தபதியையும் ப்ராமணஞல் செய்விக்கலாம்.

केचिदाहुर्द्विजाज्जातौ संस्कार्यौ कुण्डगोलकौ । अमृते जारजः कुण्डो मृते भर्तरि गोलकः ।। द्विजातिप्रतिलोमानां केचिदाहुः पुराणगा' इति ।। व्यासः — 'विद्याग्रहणशक्तस्य होमकर्मक्षमस्य च । उपायनेऽधिकारोऽस्ति मूकादीनां कृताकृतमिति ।। आपस्तम्बः — 'उपनयनं विद्यार्थस्य श्रुतितः संस्कारः सर्वेभ्यो वै वेदेभ्यः सावित्र्यनूच्यत इति हि ब्राह्मण'मिति ।। विद्यया अर्थः प्रयोजनं यस्य सः विद्यार्थः । तस्यायं श्रुतिविहितः संस्कारः उपनयनं नाम । विद्यार्थस्येति वचनान्मूकादेर्न भवति । अनेन वेदाध्यायिनां वेदव्रतवदुपनयनमपि भेदेन कर्तव्यमिति प्राप्ते उच्यते सर्वेभ्य इति । ततश्च सावित्र्यनुवचनेन सर्वे वेदा अनूक्ता भवन्तीत्येकमेवोपनयनं सर्वार्थम् ।।

த்விஜனிடமிருந்து பிறந்த குண்டன், கோளகன் இவர்களுக்கும் ஸம்ஸ்காரமுண்டென்று சிலர் சொல்லுகின்றனர். பர்த்தா உயிருடனிருக்கும் போது ஜாரனுக்குப் பிறந்தவன் குண்டன்; இறந்தபிறகு ஜாரனுக்குப் பிறந்தவன் கோளகன். த்விஜர்களின் ப்ரதிலோமஜாதிகளுக்கும் ஸம்ஸ்காரங்கள் உண்டென்று சில பௌராணிகர்கள் சொல்லுகின்றனர். வ்யாஸர் - வித்யையை க்ரஹிப்பதற்கும், ஹோமம் செய்வதற்கும் தகுதி உள்ளவன் உபநயனத்திற்கு அர்ஹனுவான். ஊமை முதலியவர்களுக்கு உபநயனம் செய்தாலும் செய்யலாம், செய்யாமலுமிருக்கலாம். ஆபஸ்தம்பர் - வேதத்தைக் கற்க அபேக்ஷிப்பவனுக்கு வேதத்தினுல் விதிக்கப்பட்ட ஸம்ஸ்காரம் உபநயனமென்பது. இதனுல் ஊமை முதலியவர்களுக்கு இது ஏற்படாது. 'ஒவ்வொரு வேதத்தின் அத்யயனத்திலும் தனித்தனியே வ்ரதங்கள் அனுஷ்டிக்கப்படுவதுபோல் உபநயனமும் தனித்தனியே அனுஷ்டிக்கப்படவேண்டும்' எனில், அதில்லை. எல்லா வேதங்களுக்குமாகவே காயத்ரீ உபதேசிக்கப்படுகிறது என்கிறது ப்ருதி. ஆகையால் காயத்ரீயை உபதேசித்தால் எல்லாவேதங்களும் உபதேசிக்கப்பட்டவைகளாய் ஆகின்றன என்பதால் ஒரே உபநயனம் எல்லா வேதங்களுக்குமாகின்றது.

आथर्वणस्तु वेदस्य पृथगुपनयनं कर्तव्यम् । तथा च श्रूयते — 'नान्यत्र संस्कृतो भृग्वङ्गिरसोऽधीयीत' इति ।। पतितानामुपनयनाभावमाहापस्तम्बः – 'अशूद्राणामदुष्टकर्मणा मुपायनमिति ।। 'प्रागुपनयनात् कामचारवादभक्ष' इति तु गौतमस्मरणं ब्रह्महत्यादिपातकव्यतिरिक्तविषयमिति पूर्वमेवोक्तम् । स्मृत्यर्थसारे — 'षण्डान्धादिषु यथोचितं संस्कारो मूकोन्मत्तावसंस्कार्यावित्येके । कर्मस्वनधिकारात् । पातित्यं नास्ति । तदपत्यं संस्कार्यम् । ब्राह्मण्यां ब्राह्मणोत्पन्नो ब्राह्मण एव भवतीति स्मृतेः ।। अन्येन संस्कार्यावित्याहुः । होमं तावदाचार्यः कुर्यात् । उपनयनं च विधिना आचार्यसमीपनयनम् । सावित्रीसमीपनयनं,

सावित्रीवाचनं वा। अन्यदङ्गं यथाशक्ति कार्यमिति। जडबधिरमूकादीन-मुपनयनकल्पो बोधायनादिभिरुक्तस्तत एव ग्राह्यः।

அதர்வண வேதத்திற்குமட்டில் தனியாய் உபநயனம் செய்யப்படவேண்டும். அவ்விதம் ஸ்பஷ்டமாக ஶ்ருதி யிருப்பதால். பதிதர்களுக்கு உபநயனம் இல்லை என்கிறார் ஆபஸ்தம்பர் - சூத்ரர்களல்லாதவர்களுக்கும் பதிதர்களா யில்லாதவருக்குமே உபநயனம். 'உபநயனத்திற்கு முன் இஷ்டப்படி இருக்கலாம்' என்ற கௌதம சாஸ்த்ரம் மஹாபாதகங்களைத் தவிர மற்றவிஷயத்தில் என்பது முன்னமே சொல்லப்பட்டது. ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - நபும்ஸகன் குருடன் முதலியவர் விஷயத்தில் உசிதப்படி ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். ஊமை, பித்தன் இவர்கள் ஸம்ஸ்காரத்திற்கு அர்ஹரல்லர் என்று சிலர். கர்மங்களில் அதிகாரமில்லாததால், பாதித்யமில்லை. அவர்களின் ப்ரஜைக்கு ஸம்ஸ்காரம் செய்யலாம். 'ப்ராமணியி னிடத்தில் ப்ராமணனுக்குப் பிறந்தவன் ப்ராமணனே' என்ற ஸ்ம்ருதியினால். அன்யன் ஸம்ஸ்காரம் செய்ய வேண்டும் என்கிறார்கள். ஹோமத்தை ஆசார்யன் செய்யவேண்டும். உபநயனமென்பது விதியுடன் ஆசார்ய ஸமீபத்திற்கொண்டு விடுவது, அல்லது ஸாவித்ரியின் ஸமீபத்திற்சேர்ப்பது, அல்லது ஸாவித்ரியை உச்சரிக்கச் செய்வது. மற்ற அங்கங்களை ஶக்திக்குத்தகுந்தபடி செய்யலாம் என்று. ஜடன், செவிடு, ஊமை முதலிய வர்களின் உபநயனவிதியை போதாயனர் முதலியவர்கள் சொல்லி இருக்கின்றனர். அதை அங்கிருந்தே தெரிந்து கொள்ளவும்.

## औरसादि द्वादशविधपुत्रनिरूपणम्

तत्र स्मृतिरत्ने 'औरसः पुत्रिकापुत्रः क्षेत्रजो गूढजस्तथा ॥ कानीनश्च पुनर्भूजो दत्तः क्रीतश्च कृत्रिमः ॥ दत्तात्मा च सहोढश्च ह्यपविद्धः सुतस्तथा। एते द्वादश पुत्राश्च संस्कार्याः स्युर्द्विजातय' इति ॥

## ஔரஸன் முதலான் புத்ரர்களின் நிருபணம்

*ஸ்ம்ருதிரத்னத்தில் - ஔரஸன், புத்ரிகாபுத்ரன், க்ஷேத்ரஜன், கூடஜன், கானீனன், புனர்ப்பூஜன், தத்தன், க்ரீதன், க்ருத்ரிமன், தத்தாத்மா, ஸஹோடன், அபவித்தன் என்ற பன்னிரண்டுவிதப் புத்திரர்களும் மூன்று வர்ணத்தார்களாலுல் உபநயனாதி ஸம்ஸ்காரங்களுக்கு அர்ஹர்கள் ஆகின்றனர்.*

औरसादीनां लक्षणमाह मनुः — 'स्वक्षेत्रे संस्कृतायां तु स्वयमुत्पादयेद्धि यम् । तमौरसं विजानीयात् पुत्रं प्रथमकल्पितम् ॥ यस्तल्पजः प्रमीतस्य क्लीबस्य व्याधितस्य वा । स्वधर्मेण नियुक्तायां स पुत्रः क्षेत्रजः स्मृतः ॥ माता पिता वा दद्यातां यमद्भिः पुत्रमापदि । सदृशं प्रीतिसंयुक्तं स ज्ञेयो दत्तिमस्सुतः ॥ सदृशं तु प्रकुर्याद्यं गुणदोषविचक्षणम् । पुत्रं पुत्रगुणैर्युक्तं स विज्ञेयश्च कृत्रिमः ॥ उत्पद्यते गृहे यस्य न च ज्ञायेत कस्य सः । स गृहे गूढ उत्पन्नस्तस्य स्याद्यस्य तल्पजः ॥ मातापितृभ्यामुत्सृष्टं तयोरन्यतरेण वा । यं पुत्रं परिगृह्णीयादपविद्धः स उच्यते ॥ पितृवेश्मनि कन्या तु यं पुत्रं जनयेद्रहः । तं कानीनं वदेन्नाम्ना वोढुः कन्यासमुद्भवम् ॥ या गर्भिणी संस्क्रियते ज्ञाताऽज्ञाताऽपि वा सती । वोढुः स गर्भो भवति स होढ इति चोच्यते ॥ क्रीणीयाद्यस्त्वपत्यार्थं मातापित्रोर्यमन्तिकात् । स क्रीतस्सुतस्तस्य सदृशोऽसदृशोऽपि वा । या पत्या वा परित्यक्ता विधवा वा स्वयेच्छया । उत्पादयेत् पुनर्भूत्वा स पौनर्भव उच्यते ॥ मातापितृविहीनो यस्त्यक्तो वा स्यादकारणात् । आत्मानं स्पर्शयेद्यस्मै स्वयं दत्तस्तु स स्मृत इति ॥

*ஔரஸாதிகளின் லக்ஷணத்தைப்பற்றி மனு - கன்யகையாய் இருக்கும்போதே விவாஹ ஸம்ஸ்காரம் பெற்ற ஸஜாதீயையான தனது பார்யையினிடத்தில் தன்னால் உத்பன்னனான புத்ரன் ஔரஸன் எனப்படுவான். இவன் புத்ரர்களுள் சிறந்தவன்.*

இறந்தவனுடைய, அல்லதுநபும்ஸகனுடைய, அல்லது வ்யாதியுடையவ னுடைய பார்யையினிடத்தில் பெரியோர்களின் கட்டளையால் பிறந்தவன் க்ஷேத்ரஜன் எனப்படுவான். மாதா அல்லது பிதா, வாங்கிக்கொள்பவனுக்குப் புத்ரனில்லாத ஆபத்காலத்தில் ஸமானஜாதியான எவனை ஸந்தோஷத்துடன் ஜலபூர்வமாய்க் கொடுப்பார்களோ அவன் தத்திமன் எனப்படுவான். ஸமானஜாதீயனும், குணதோஷங்களை அறிந்தவனும், புத்ரனைப் போல் சுப்ரூஷை முதலிய குணங்களுடன் கூடியவனுமான எவனைத் தன் புத்ரனுகக்கற்பித்துக்கொள்கின்றனே அவன் க்ருத்ரிமன் எனப்படுவான். வீட்டிலேயே இருக்கும் பார்யையினிடத்தில் பிறனுக்கு உண்டானவன், ஸஜாதீயன் என்று நிச்சயமிருந்தாலும் இன்னனுக்குப் பிறந்தவன் என்று தெரியாவிடில் அவன் 'கூடஜன்' எனப்படுவான். அவன் பெற்றவளின் பர்த்தாவைச் சேர்ந்தவன். மாதாபிதாக்களால், அல்லது அவர்களுள் ஒரு வரால் விடப்பட்டவனைப் புத்ரனுகப் பரிக்ரஹித்தால் அவன் அபவித்தன் எனப்படுவான். தகப்பன் வீட்டில் விவாஹமாகாதபெண் ரஹஸ்யத்தில் எவனைப் பெறுவாளோ அவன் கானீனன் எனப்படுவான். அவன், அப்பெண்ணை விவாஹம் செய்துகொள்கின்றவனைச் சார்ந்தவன். தெரிந்தோ தெரியாமலோ இருக்கும் கர்ப்பத்துடன் கூடிய பெண்ணை விவாஹம் செய்து கொடுத்தால் பிறகு பிறக்கும் பிள்ளை ஸஹோடன் எனப்படுவான். அவன், விவாஹம் செய்து கொண்டவனின் புத்ரனுவான். தனக்குப்புத்ரன் வேண்டு மென்பதற்காக மாதாபிதாகளினிடமிருந்து ஒருவனை விலைக்கு வாங்கினல் அவன் 'க்ரீதன்' எனப்படுவான்; அவன் குணங்களால் தனக்கு ஸமனுனலும், ஸமனுய் இல்லாவிடினும். எவளாவது பதியினுல் தள்ளப்பட்டோ, பதி மரித்ததினுலோ பிறனைமணந்து அவனிடம் புத்ரனைப்பெற்ருல், அவன் 'பௌநர்ப்பவன்'

எனப்படுகிறான். மாதா பிதாக்கள் இல்லாமல், அல்லது அவர்களால் காரணமின்றித் தள்ளப்பட்டு ஒருவன் தானாகவே தன்னைப் பிறனுக்கு ஒப்புவித்தால் 'ஸ்வ்யம் தத்தன்' எனப்படுவான்.

याज्ञवल्क्योऽपि — 'औरसो धर्मपत्नीजस्तत्समः पुत्रिकासुतः । क्षेत्रजः क्षेत्रजातस्तु सगोत्रेणेतरेण वा ।। गृहे प्रच्छन्न उत्पन्नो गूढजस्तु सुतः स्मृतः । कानीनः कन्यकाजातो मातामहसुतो मतः ।। अक्षतायां क्षतायां वा जातः पौनर्भवः सुतः । दद्यान्माता पिता वा यं स पुत्रो दत्तको भवेत् ।। क्रीतश्च ताभ्यां विक्रीतः कृत्रिमः स्यात् स्वयं कृतः । दत्तात्मा तु स्वयं दत्तो गर्भे विन्नस्सहोढजः । उत्सृष्टो गृह्यते यस्तु सोऽपविद्धो भवेत् सुत' इति ।।

யாக்ஞவல்க்யர் - ஸவர்ணையான தர்மபத்னியி னிடத்தில் பிறந்தவன் ஔரஸன் எனப்படுவான். புத்ரிகாபுத்ரனும் அவனுக்குச் சமனாவான். தன் பத்னியினிடத்தில் தேவரனாலாவது ஸபிண்டனாலாவது உண்டானவன் 'க்ஷேத்ரஜன்' எனப்படுவான். தன் க்ருஹத்திலேயே தன் பத்னியினிடத்தில் ஸவர்ணனான அன்யனால் உத்பத்தி செய்யப்பட்டுப் பிறந்தவன் 'கூடஜன்' எனப்படுவான். விவாஹமாகாத கன்யகைக்குப் பிறந்தவன் கானீனன். இவன் மாதாமகனின் புத்ரனாவான். விவாஹமான பிறகு பிறந்தால் விவாஹம் செய்து கொண்டவனின் புத்ரன். இரண்டாவது தடவை விவாஹம் செய்துகொண்டவளிடம் பிறந்தவன் 'பௌனர்ப்பவன்' எனப்படுவான்; அவள் அக்ஷதையானாலும். க்ஷதை யானாலும் இது ஸமமே. மாதா பிதாக்கள், அல்லது மாதா, அல்லது பிதா புத்ரனைத்தானம் செய்தால் அவன் 'தத்தன்' எனப்படுவான். மாதா பிதாக்களால் விற்கப்பட்டவன் 'க்ரீதன்' எனப்படுவான். தானாகவே இவன் என் புத்ரன் என்று கற்பித்துக்கொண்டால் அவன் 'ஸ்வயம்க்ருதன்' எனப்படுவான். நான் உனக்குப் புத்திரன் என்று தானாகவே தன்னைத் தானம் செய்துகொண்டவன் 'ஸ்வயம் தத்தன்' எனப்படுவான். கர்ப்பத்துடன் விவாஹம் செய்யப்பட்டவ

ளிடம் பிறந்தவன் 'ஸஹோடஜன்' எனப்படுவான். மாதாபிதாக்களால் கைவிடப்பட்டு அபுத்ரனால் க்ரஹிக்கப்படுகிறவன் அபவித்தன் எனப்படுவான்.

मनुः — 'क्षेत्रजादीन् सुतानेतानेकादश यथोदितान् । पुत्रप्रतिनिधीनाहुः क्रियालोपान्मनीषिण' इति ॥ एतानि गौणपुत्रपरिग्रहसंस्कारवचनानि युगान्तरविषयाणि कलौ तत्परिग्रहस्य निषिद्धत्वात् ॥ 'अनेकधा कृताः पुत्रा ऋषिभिर्यैः पुरातनैः । न शक्यन्तेऽधुना योक्तुं शक्तिहीनैः कलौ द्विजैरिति वचनात् ॥

மனு - முன்சொல்லிய இந்த 11-புத்ரர்களையும் ச்ராத்தாதி க்ரியைகள் லோபமடையாமலிருக்கப் புத்ரனுக்குப் பதிலாகப் புத்திமான்கள் சொல்லுகின்றனர். இவ்விதம் கௌணபுத்ரர்களைப் பரிக்ரஹிக்கவும் அவர்களுக்கு உபநயனாதிகள் செய்யவும் ஆதாரமான வசனங்கள் யுகாந்தர தர்மத்தைப்பற்றியவை. கலியில் அதை நிஷேதித்திருப்பதால்; "முற்காலத்திலுள்ள முனிகளால் அநேகப்ரகாரர்களான புத்ரர்கள் ஸ்வீகரிக்கப் பட்டார்கள்; இக்கலியில் சக்தியற்ற த்விஜர்கள் அத்தகைய புத்ரர்களை பரிக்ரஹிப்பது முடியாது" என்ற வசனத்தால்.

अत्र क्षेत्रजपुत्रोत्पादनाय सप्रकारं सापवादं च नियोगमुक्त्वा पुनरेव निषेधति मनुः — 'देवराद्वा सपिण्डाद्वा स्त्रिया सम्यङ्नियुक्तया । प्रजेप्सिताऽधिगन्तव्या सन्तानस्य परिक्षये ॥ विधवायां नियुक्तस्तु घृताक्तो वाग्यतो निशि । एकमुत्पादयेत् पुत्रं न द्वितीयं कथञ्चन ॥ विधवायां नियोगार्थे निर्वृत्ते तु यथाविधि । गुरुवच्च स्नुषावच्च वर्तेयातां परस्परम् । नोद्वाहिकेषु मन्त्रेषु नियोगः कीर्त्यते क्वचित् । न विवाहविधावुक्तं विधवावेदनं पुनः ॥ अयं द्विजैर्हि विद्वद्भिः पशुधर्मो विगर्हितः । मनुष्याणामपि प्रोक्तो वेने राज्यं प्रशासति ॥ स महीमखिलां भुञ्जन् राजर्षिप्रवरः पुरा । वर्णानां सङ्करं चक्रे कामोपहतचेतनः ॥ ततः

प्रभृति यो मोहात् प्रमीतपतिकां स्त्रियम्। नियोजयत्यपत्यार्थं तं विगर्हन्ति साधव' इति ॥

க்ஷேத்ரஜ புத்ரனைப் பெறுவதற்கு நியோகத்தைப் பிரகாரத்துடனும் அபவாதத்துடனும் சொல்லிப்பிறகு நிஷேதிக்கின்றார் மனு - புத்ரனில்லாவிடில் பதிமுதலான பெரியோர்களின் நியோகத்தால் ஸ்த்ரீ, தன் தேவரன் (மைத்துனன்) அல்லது ஸபிண்டனிடமிருந்து இஷ்டமான ப்ரஜையை அடையலாம். நியோகத்தை அடைந்த புருஷன் நெய்யால் தேஹம் முழுவதும் பூசிக்கொண்டு மௌனியாய் இரவில் ஒரு புத்ரனை உற்பத்தி செய்யலாம், இரண்டாவது புத்ரனை உற்பத்தி செய்யக்கூடாது. அந்த ஸ்த்ரீயினிடத்தில் கர்ப்பம் உண்டாகிவிட்டால் பிறகு இருவரும் பரஸ்பரம் மாமனார் போலவும் மாட்டுப்பெண்போலவும் இருக்கவேண்டும். நியோகமென்பது விவாஹ மந்த்ரங்களில் ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை. விவாஹவிதியிலும் ஸ்த்ரீக்கு மறுவிவாஹம் சொல்லப்படவில்லை. பசுக்களுக்குரிய இக்கார்யம் மனிதர்களுக்கு உரியதல்லவென்று நிந்திக்கப்பட்டிருக்கிறது. வேனன் என்ற அரசன் ராஜ்யமாளும்போது ஏற்பட்டது இது. இப்பூமி முழுவதும் அனுபவித்த அவ்வரசன் காமத்தால் மதிகெட்டு வர்ணங்களுக்குக் கலப்பைச் செய்தான். அதுமுதல் எவன் புத்ரனில்லாதவளை தேவராதிகளிடம் சேரும்படி செய்கின்றானோ அவனை ஸாதுக்கள் நிந்திக்கின்றனர்.

अत्र मनोरभिप्रायमाह बृहस्पतिः — 'उक्तो नियोगो मनुना निषिद्धः स्वयमेव तु ॥ युगह्रासादशक्योऽयं कर्तुमन्यैर्विधानतः ॥ तपोज्ञानसमायुक्ताः कृते त्रेतायुगे नराः । द्वापरे च कलौ नृणां शक्तिहानिर्हि निर्मिता ॥ सङ्कल्पेन (अनेकधा) कृताः पुत्रा ऋषिभिश्च पुरातनैः । न शक्यन्तेऽधुना कर्तुं शक्तिहीनैः नरैरिति ॥ क्षेत्रजो गर्हितः सद्भिस्तथा पौनर्भवस्सुतः ॥ कानीनश्च सहोढश्च गूढजः पुत्रिकासुतः । दत्तोऽपविद्धः क्रीतश्च कृत्रिमो दत्तिमस्तथेति ॥

*இவ்விஷயத்தில் மனுவின் அபிப்ராயத்தைப்பற்றி ப்ருஹஸ்பதி - மனுவானவர் நியோகத்தைச் சொல்லி அதைத் தானே நிஷேதிக்கின்றார். கலியுகத்தில் மக்தி குறைவதால் அன்யர்களால் இது செய்யமுடியாதது. க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம் இவைகளில் மனிதர்கள் தபம் ஞானம் இவைகளால் மிகுந்திருந்தனர். கலியில் உள்ள மனிதர்கட்கு அச்சக்தி குறைந்துவிட்டது. முன்யுகங்களிலிருந்தமஹர்ஷிகள் இஷ்டப்படி புத்ரர்களைக் கற்பித்துக்கொண்டனர். இக்கலியில் மக்தியற்ற மனிதர்கள் அவ்விதம் கற்பித்துக் கொள்ளமுடியாது. க்ஷேத்ரஜனையும், பௌநர்ப்பவனையும் ஸாதுக்கள் நிந்திக் கின்றனர். கானீனன், ஸஹோடன். கூடஜன், புத்ரிகா புத்ரன், தத்தன், அபவித்தன், க்ரீதன், க்ருத்ரிமன், தத்திமன் என்றவர்களையும் நிந்திக்கின்றனர்.*

## स्वीकारविषयः

अत्र दत्तनिषेधस्तु सगोत्राभिप्रायः । यथाऽऽह शौनकः- 'ब्राह्मणानां सपिण्डेषु कर्तव्यः पुत्र सङ्ग्रहः । तदलाभे सगोत्रे वा न चान्यत्र तु कारयेत् ।। क्षत्रियाणां सजातौ वा गुरुगोत्रसमेऽपि वा । वैश्यानां वैश्यजातेषु शूद्राणां शूद्रजातिषु ।। सर्वेषां चैव वर्णानां ज्ञातिष्वेव च नान्यतः ।। दौहित्रं भागिनेयं वा शूद्राणां त्वापदो यदीति ।। सर्वेषां ज्ञातिष्वेव पुत्रपरिग्रहः। दौहित्रं भागिनेयं वा गृह्णीयात्। शूद्राणां तु आपदि दौहित्रादिग्रहणमित्यर्थः ।। अत एव कलियुगधर्मान् वदद्भिर्मुनिभिः 'दत्तौरसेतरेषां तु पुत्रत्वेन परिग्रह' इति दत्तपर्युदासनेन गौणपुत्रपरिग्रहनिषेधः कृतः । अतः सति संभवे सगोत्रादेव दत्तपरिग्रहः कर्तव्यः ।।

## ஸ்வீகார விஷயம்

*இங்கு தத்தனை நிஷேதித்தது ஸகோத்ரனல்லாதவன் விஷயமாம். சௌனகர் - ப்ராமணர்கள்ஸபிண்டர்களிட*

மிருந்து புத்ரனை க்ரஹிக்கவேண்டும். அங்கு கிடைக்கா விடில் ஸகோத்ரனிடமிருந்தாவது க்ரஹிக்கலாம். மற்றவரிடமிருந்து கூடாது. க்ஷத்ரியர்கள் ஸஜாதியிலாவது, குருவின் கோத்ரத்திற்குச் சமானகோத்ரனிடமாவது க்ரஹிக்கவேண்டும். வைஶ்யர்கள்வைஶ்யஜாதியிலும், சூத்ரர்கள் சூத்ரஜாதியிலும்க்ரஹிக்கவேண்டும். எல்லா வர்ணங்களும் ஞாதிகளிமிடமிருந்தே க்ரஹிக்க வேண்டும். மற்றவரிடமிருந்து க்ரஹிக்கக் கூடாது. சூத்ரர்கள் மட்டில் ஆபத்காலத்தில் தௌஹித்ரன், அல்லது மருமானைக்ரஹிக்கலாம். ஆகையால்தான் கலியுகத்திற் குரிய தர்மங்களைச் சொல்லும் முனிவர்கள் 'தத்தன் ஔரஸன் தவிர மற்றவர்களைப் புத்ரனாய் பரிக்ரஹித்தால்' என்று தத்தனை விலக்கி மற்ற கௌணபுத்ரர்களை க்ரஹித்தல்கூடாதென்றனர். ஆகையால் கிடைக்குமாகில் ஸகோத்ரனிடமிருந்தே தத்தனை க்ரஹிக்கவேண்டும்.

तथा च मनुः — 'भ्रातॄणामेकजातानामेकश्चेत् पुत्रवान् भवेत् । सर्वे ते तेन पुत्रेण पुत्रिणो मनुरब्रवी'दिति ॥ सति भ्रातृपुत्रे अन्यस्मात् पुत्रपरिग्रहो न कर्तव्य इति मानवे व्याख्याने ॥ अत्र विज्ञानेश्वरोऽपि — 'यत्तु भ्रातॄणामेकजातानामिति मानवं वचनं तदपि भ्रातृपुत्रस्य पुत्रीकरणसंभवे अन्येषां पुत्रीकरणनिषेधार्थं न पुनः पुत्रत्वप्रति-पादनाये'ति ॥ कालादर्शेऽपि — 'अपुत्रो भ्राता भ्रातृपुत्रसम्भवे तेनैव तावत् पुत्रीकुर्यान्नान्येनेति भ्रातॄणामेकजातानामिति मनुवचनस्यार्थः । अन्यथा 'पत्नी दुहितर इति न्यायस्यासामञ्जस्य प्रसङ्गादिति ॥

அவ்விதமே மனு - ஒரே தாயினிடத்தில் ஒரே பிதாவுக்குப் பிறந்த அநேகம் ஸஹோதரர்களுள் ஒருவன் புத்ரனுடையவனானால் அந்தப் புத்ரனால் மற்றவர்களும் புத்ரனுடைவர்களாய் ஆகின்றனர் என்றார். மனு. ப்ராதாவுக்குப்புத்ரன் இருக்கும் பொழுது அன்யனிட மிருந்து புத்ரனைஸ்வீகரிக்கக்கூடாதென்று மானவீய வ்யாக்யானத்தில். இதில் விக்ஞானேஶ்வரர்சொல்வது

-''ப்ராத்ரூணுமேகஜாதாநாம்'' என்ற மனுவசனம், ப்ராதாவின் புத்ரன் ஸ்வீகாரத்திற்கு உசிதமாயிருக்கையில் அன்யனைப் புத்ரனுக்கிக் கொள்வதை நிஷேதிப்ப தற்காகவேயன்றி புத்ரத்தன்மையைச் சொல்வதற்கல்ல. காலாதர்ஶத்திலும் - புத்ரனில்லாதவன், தன் ப்ராதாவுக்குப் புத்திரனிருந்தால் அவனையே புத்ரனுக ஸ்வீகரிக்க வேண்டும்; மற்றவனைக்கூடாது என்பது மனுவசத்தின் பொருள். இல்லாவிடில் 'பத்னீ துஹிதர:' என்ற ந்யாயம் பொருந்தாமல் போகும்.

यत्तु 'गोत्रान्तरप्रविष्टानां दाय आशौचमेव च । ज्ञातित्वं च निवर्तन्ते तत्कुले सर्वमिष्यत इति, यदपि मनुवचनम्— 'उपपन्नो गुणैस्सर्वैः पुत्रो यस्य तु दत्तिमः । स हरेतैव तद्रिक्थं सम्प्राप्तोऽप्यन्य-गोत्रतः ॥ गोत्ररिक्थे जनयितुर्न हरेद्दत्तिमस्सुतः । गोत्ररिक्थानुगः पिण्डो व्यपेति ददतः स्वधा' इति यदपि स्मृत्यन्तरम् — 'गोत्रान्तरप्रविष्टास्तु संस्कार्यास्तत्कुलेन तु । जननेनैव पितरो दानेनैव निवर्तिताः । दत्तस्य परिवेत्तृत्वमाशौचं दाय एव च । श्रितगोत्रात्तु संग्राह्यं श्रौतं स्मार्तं तथैव चे'ति, तत्सर्वं सगोत्रजालाभविषयम् ।

'வேறு கோத்ரத்திற் புகுந்தவர்க்குத் தன்கோத்ரத்தில் சொத்தின் பங்கு, ஆஶௌசம், ஞாதித்தன்மை இம்மூன்றும் நிவர்த்திக்கும். புகுந்த கோத்ரத்தில் இம் மூன்றும் ஏற்படுகின்றன' என்ற வசனமும், ''தத்தபுத்ரன் அன்யகோத்ரத்தினின்றுவந்தவனுயினும் ஸகலகுணங்க ளுடனும் கூடியிருந்தால் ஸ்வீகரித்த பிதாவின் தனத்தை அவனே அடைவான்; தத்தனுன புத்ரன் ஜநகபிதாவின் கோத்ரம், தனம் இவைகளை அடைவதில்லை; ஜனகனுக்கு ஶ்ராத்தாதிகளும் செய்வதற்கில்லை; பிண்டதானமென்பது கோத்ரம் தனம் இவைகளை அனுஸரித்தது; புத்ரனைக் கொடுத்தவனுடைய ஶ்ராத்தாதிகள் நிவர்த்திக்கின்றன'' என்ற மனு வசனமும், ''வேறு கோத்ரத்திற் புகுந்த வர்களுக்குப் புகுந்த கோத்ரத்தின்படியே ஜாதகர்மாதிகள்

செய்யப்பட வேண்டும்; தானம் செய்ததினாலேயே ஜனககோத்ரம் நிவர்த்திக்கின்றது. தத்தனுக்குப் பரிவேத்தாவின் தன்மை, பங்கு, ஆசௌசம், ச்ரௌத ஸ்மார்த்த கர்மங்கள் இவைகள் புகுந்த கோத்ரத்தின்படி க்ரஹிக்கவேண்டும்'' என்ற வேறு ஸ்ம்ருதியிலுள்ள வசனமும் (அன்யகோத்ர ஸ்வீகாரத்தைக் தெரிவிக்கின்றனவே எனில்) ஸகோத்ரன் கிடைக்காத விஷயத்தில் சொல்லப்பட்டதாம்.

तथा च स्मर्यते — 'स्ववंश्यानामभावे तु प्रशस्ता मातृवंशजाः । तदभावे सुतो दत्तो विहितो विधिनेतरः । ज्ञातीनां कुलजातानामुत्तमः परिकीर्तितः । मध्यमा मातृकुलजा अधमाः परग्रोत्रजाः ॥ स्वकल्पोक्तविधानेन दत्तपुत्रपरिग्रह इति ॥ कात्यायनः — 'दत्ताऽनूढा च या कन्या पत्नीत्वं सप्तमे पदे ॥ तथैव दत्तपुत्रस्य पुत्रत्वं जातकादिभिः ॥ यः प्रदत्तोऽपि पुत्रार्थं जातकर्मादिवर्जितः । नासौ गच्छति पुत्रत्वं कथं वा रिक्थभाग्भवेदिति ॥ प्रजापतिः — 'पुत्रं गृहीत्वा संस्कृत्य वयोवस्थाश्रितः पिता । नामगोत्रादि तत्सर्वं कुर्यादौरसवत्ततः ॥ पञ्चमे सप्तमे वर्षे त्वष्टमे नवमेऽथवा । दद्यातां पितरौ पुत्रं गृह्णीयातां च दम्पती इति ॥ संग्रहे च — 'उत्तमं द्वादशाहेषु दत्तस्य ग्रहणं शिशोः । आचौलान्मध्यमं हीनमूर्ध्वमामौञ्जिबन्धनात् । कृतोद्वाहस्य पुत्रत्वं कुलक्षयकरं भवेत् । साश्रमं नैव दद्यात्तु दद्यादापद्यनाश्रमम् ॥ आपद्यपि च दद्यातां द्वितीयं ब्रह्मचारिणमिति ॥

அவ்விதமே ஸ்ம்ருதி வசனம் - தன் வம்சத்திற் பிறந்தவர்கள் இல்லாவிடில் மாதாவின் வம்சத்திற் பிறந்தவர்கள் சிறந்தவர்கள். அங்குமில்லாவிடில் அன்யனை விதிப்படி தத்தபுத்ரனாக ஸ்வீகரிக்கலாம். தன் வம்சத்திலுள்ள ஞாதிகள் புத்ரன் உத்தமன். மாதாவின் குலத்திற் பிறந்தவன் மத்யமன். அன்யகோத்ரத்திற் பிறந்தவன் அதமன். தன் ஸூத்ரத்திற் சொல்லிய

விதிப்படி தத்தபுத்ரனை ஸ்வீகரிக்கவேண்டும். காத்யாயனர் - தானம் மட்டில் செய்யப்பட்டு விவாஹமாகாமலிருக்கும் கன்யகைக்குப் பத்னி என்னும் தன்மை இல்லை; அது ஸப்தபதிக்குப் பிறகு தான். அதுபோல் தத்தனுக்குப் புத்ரத்தன்மை ஜாதகர்மாதிகள் செய்தபிறகு தான். ஜனகனால் தானம் செய்யப்பட்டிருந்தாலும் ஜாத கர்மாதிகள் செய்யப்படாத தத்தன் புத்ரத்தன்மையை அடைவதில்லை. எப்படி தனத்தை அடைய உரியவனாவான்? ப்ரஜாபதி - ஸ்வீகரிக்கப்படும் புத்ரனுக்குப் பிதாவாக இருக்கக்கூடிய வயதுள்ளவன் புத்ரனை ஸ்வீகரித்து ஔரஸனுக்குப்போல் பெயர், கோத்ரம் முதலியவைகளை ஏற்படுத்தவேண்டும். அல்லது 7, 8, 9 வது வர்ஷத்தில் மாதா பிதாக்கள் கொடுக்க வேண்டும். தம்பதிகள் க்ரஹிக்கவேண்டும். ஸங்க்ரஹத் திலும் - பிறந்ததுமுதல் 12- நாட்களுக்குள் சிசுவை ஸ்வீகரிப்பது உத்தமம். சௌளம் வரையில் மத்யமம். உபநயனத்திற்குமேல் அதமம். விவாஹமானவனை ஸ்வீகரிப்பது குலத்தை நசிக்கச் செய்யும். ஆம்ரமத்துடன் கூடியவனைக் கொடுக்கக்கூடாது.ஆபத்காலத்தில் ஆம்ரம மில்லாதவனைக்கொடுக்கலாம். ஆபத்காலத்திலும் ப்ரம்மசாரியான இரண்டாவது புத்திரனைக் கொடுக்கலாம் -

स्मृत्यन्तरेऽपि — 'भर्तुरूर्ध्वं तु या नारी पुत्रं दातुं न साऽर्हति । ग्रहीतुं वाऽग्रजं तातो बोधायनवचो यथेति ।। दक्षः — 'आपद्यपि च कष्टायां न दद्यादग्रजं सुतम् । भर्तृहीना तथा पत्नी दद्याच्चेन्नरकं व्रजेत् ।। अप्रजा विधवा नारी पितृभ्रात्राद्यनुज्ञया । पुत्रं तु प्रतिगृह्णीयादन्यथा नरकं व्रजेदिति । तथा — आपद्यनग्रजं दद्यात् ब्रह्मचर्याश्रमं सुतम् । द्वादशाब्दं धर्मपत्नी शुनःशेपवदेव वेति ।।

வேறுஸ்மிருதியில் - விதவையானவள் புத்திரனைக் கொடுக்கவும் ஸ்வீகரிக்கவும் உரிமையுள்ளவளல்ல. ஜ்யேஷ்ட புத்ரனைக் கொடுக்கத் தகப்பனும் உரியவனல்ல தக்ஷர் - பெரிய ஆபத்திலும் ஜ்யேஷ்ட புத்ரனைக்

கொடுக்கக்கூடாது. விதவையும் கொடுக்கக் கூடாது. கொடுப்பவர் நரகத்தை அடைவர். ஸந்ததி இல்லாத விதவை தகப்பன் ப்ராதா முதலியவர்களின் அனுமதியினுல் புத்ரனை ஸ்வீகரிக்கலாம். வேறுவிதமாய்ச் செய்தால் நரகத்தை அடைவாள். ஆபத்காலமாயிருந்தால் தர்மிஷ்டையான மாதாவும், முதல்வனல்லாதவனும் ப்ரம்மசாரியும், 12 - வயதுள்ளவனுமான புத்ரனையும் சுனச்சேபனைப்போல் கொடுத்தாலும் கொடுக்கலாம்.

यत्तु — 'दानं क्रयधर्मश्चापत्यस्य न विद्यत' इत्यापस्तम्ब-स्मरणम्, यदपि 'स्वकुटुम्बाविरोधेन देयं दारसुतादृत' इति याज्ञवल्क्य-वचनम्, तत्सर्वं ज्येष्ठ पुत्रविषयम् ।। तथा च 'वसिष्ठः — 'न ज्येष्ठं पुत्रं दद्यात् प्रतिगृह्णीयाद्वा न चैकं पुत्रं स हि सन्तानाय पूर्वेषां न स्त्री पुत्रं दद्यात् प्रतिगृह्णीयाद्वाऽन्यत्रानुज्ञानाद्भर्तुः; पुत्रं प्रतिग्रहीष्यन् बन्धूनाहूय राजनि चावेद्य निवेशनस्य मध्ये व्याहृतिभिर्हुत्वा अदूरबान्धवं सन्निकृष्टमेव प्रतिगृह्णीयादिति ।।

"புத்ரனைத்தானம் செய்வதும், ப்ரதிக்ரஹிப்பதும், புத்ரனை விற்பதும், விலைக்கு வாங்குவதும் கூடாது" என்ற ஆபஸ்தம்பவசனமும், "தன்குடும்பத்திற்கு விரோதமின்றி பத்னி, பிள்ளை இவர்களைத்தவிர மற்றதைத் தானம் செய்யலாம்" என்ற யாக்ஞவல்க்யவசனமும் ஜ்யேஷ்ட புத்ர விஷயமாம்; ஏக புத்ரவிஷயமுமாம். அவ்விதமே வஸிஷ்டர் - ஜ்யேஷ்ட புத்ரனைத்தானம் செய்யக்கூடாது. ப்ரதிக்ரஹிக்கவும் கூடாது. ஏகபுத்ரனையுமப்படியே. அவன் முன்னோர்களின் வம்சத்திற்கானவன். பர்த்தாவின் அனுமதி இல்லாவிடில் ஸ்த்ரீயானவள் புத்ரனை கொடுக்கவும். ஸ்வீகரிக்கவும் கூடாது. புத்ரனை ஸ்வீகரிக்கின்றவன் பந்துக்களை அழைத்து அரசனிடமும் தெரிவித்துத் தன்வீட்டிற்குள் வ்யாஹ்ருதிகளால் ஹோமம் செய்து ஸமீபபந்துவாயும் அருகிலிருப்பவனுமான புத்ரனை ஸ்வீகரிக்கவேண்டும்.

बह्वृचब्राह्मणेऽपि शुनःशेपाख्याने — 'ज्येष्ठं पुत्रं न प्रयच्छेदिति। शौनकोऽपि — 'नैकपुत्रेण कर्तव्यं पुत्रदानं कदाचन। बहुपुत्रेण कर्तव्यं पुत्रदानं प्रयत्नत इति ॥ बोधायनश्च — 'शोणितशुक्लसम्भवो मातापितृनिमित्तस्तस्य प्रदानपरित्यागविक्रयेषु मातापितरौ विभवतो न त्वेकं पुत्रं दद्यात् प्रतिगृह्णीयाद्वा स हि सन्तानाय पूर्वेषां, न तु स्त्री पुत्रं दद्यात् प्रतिगृह्णीया द्वाऽन्यत्रानुज्ञानाद्भर्तुरिति ॥

பஹ்வ்ருசப்ராம்மணத்திலும் சுனச்சேபாக்யானத்தில் - ஜ்யேஷ்ட புத்ரனைக் கொடுக்கக்கூடாது. சௌனகர் - ஒரே புத்ரனையுடையவன் புத்ரதானம் செய்யக் கூடாது. அநேகபுத்ரர்களையுடையவனே புத்ரதானம் செய்யலாம். போதாயனரும் - மாதா பிதாக்கள், தனது சோணித சுக்லங்களிலிருந்து உண்டான புத்ரனின் தானத்திலும், த்யாகத்திலும், விக்ரயத்திலும் அதிகாரிகளா கின்றனர். ஒரே புத்ரனுயிருப்பின் அவனைக்கொடுக்கவும் வாங்கவும் கூடாது. அவன் முன்னோர்களின் வம்சத்திற் கானவன். பர்த்தாவின் அனுமதியின்றி ஸ்த்ரீயானவள் புத்ரனைக்கொடுக்கவும் ஸ்வீகரிக்கவும் கூடாது.

'माता पिता वा दद्यातां यमद्भिः पुत्रमापदी'ति मनुवचनं भर्तुरनुज्ञया मातुरपि दानयोग्यताविषयं न विधवाविषयम्। एवं कृते औरस उत्पद्येत यदि स तुर्यांशभाग्भवति ॥ पुत्रपरिग्रहफलं दर्शयति जाबालिः — 'पुत्रस्वीकारमात्रेण पितरं त्रायते सुतः। दत्तः पुत्रत्वमाप्नोति ग्रहीता मुच्यते ऋणादिति ॥ तथा मन्त्रलिङ्गमपि — 'धर्माय त्वा गृह्णामि सन्तत्यै त्वा गृह्णामीति ॥ यत्तु वचनं — 'स्वकुलं पृष्ठतः कृत्वा यो वै परकुलं व्रजेत्। तेन दुश्चरितेनासौ काण्डपृष्ठ इति स्मृतः ॥ त्यक्तं पितृकुलं यस्मादनर्हः सर्वकर्मस्विति तत् स्वयं दत्तविषयं विवाहानन्तरदत्तविषयं वा ॥ एतत्पुत्रप्रतिग्रहकल्पस्तु शौनकबोधायनादिभिरभिहितः ॥

*"ஆபத்காலத்தில் மாதா, அல்லது பிதா ஜலபூர்வமாய்க் கொடுக்கும் புத்ரன் தத்தன்" என்ற மனுவசனம், பர்த்தாவின் அனுமதியினால் மாதாவும் கொடுக்கலாமென்ற விஷயம்; விதவாவிஷயமல்ல. இவ்விதம் ஸ்வீகாரம் செய்துகொண்டபிறகு ஔரஸன் பிறந்தால், தத்தன் நாலிலொரு பாகத்தையடைய அர்ஹனாகிறான். புத்ர ஸ்வீகாரபலத்தைத் தெரிவிக்கின்றார் ஜாபாலி - புத்ரனை ஸ்வீகாரம் செய்து கொண்டதினாலேயே தத்தபுத்ரன் ஸ்வீகரித்த பிதாவைக் காக்கிறான். தத்தன் புத்ரனாக ஆகிறான். ஸ்வீகரித்த பிதாவும் பித்ருருணத்தி னின்றும் விடுபடுகிறான். அப்படியே ஸ்வீகார மந்த்ரத்தில் லிங்கமிருக்கின்றது. 'உன்னைத்தர்மத்திற்காகவும் வம்ஶ வ்ருத்திக்காவும் ஸ்வீகரிக்கின்றேன்' என்று. "தன்குலத்தைத் தள்ளி எவன் பிறர்குலத்திற் புகுந்தானோ அவன் அந்தப் பாபத்தால் 'காண்டப்ருஷ்டன்' எனப்படு கிறான்; பித்ருகுலத்தை விட்டதால் ஸகலகர்மங்களிலும் யோக்யதையற்றவன்" என்ற வசனம் ஸ்வயம்தத்தனின் விஷயம்; அல்லது விவாஹத்திற்கப் பிறகு தத்தன் விஷயம். புத்ரஸ்வீகாரவிதி சௌனகர் போதாயனர் முதலியவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.*

## गुर्वादिनिरूपणम्

तत्र मनुः — 'निषेकादीनि कर्माणि यः करोति यथाविधि । सम्भावयति चान्नेन स विप्रो गुरुरुच्यते' ।। निषेकः गर्भाधानम् । निषेकग्रहणादन्नग्रहणाच्च पितैवायम् ।। स एव — 'उपनीय तु यः शिष्यं वेदमध्यापयेद्द्विजः । सकल्पं सरहस्यं च तमाचार्यं प्रचक्षते ।। एकदेशं तु वेदस्य वेदाङ्गान्यापि वा पुनः । योऽध्यापयति वृत्त्यर्थमुपाध्यायः स उच्यते ।। उपाध्यायान् दशाचार्य आचार्याणां शतं पिता । सहस्रं तु पितॄन् माता गौरवेणातिरिच्यत' इति ।। याज्ञवल्क्यः — 'स गुरुर्यः क्रियाः कृत्वा वेदमस्मै प्रयच्छति । उपनीय ददद्वेदमाचार्यः स उदाहृतः ।।

एकदेशमुपाध्याय ऋत्विग्यज्ञकृदुच्यते । एते मान्या यथापूर्वमेभ्यो माता गरीयसी'ति ॥

குருமுதலியவர்களின் நிருபணம்

*மனு - கர்ப்பாதானம் முதலிய கர்மங்களை விதிப்படி செய்து அன்னத்தாலும் போஷிக்கும் பிதா 'குரு' எனப்படுவான். எவன் சிஷ்யனுக்கு உபநயனம் செய்து, கல்பஸூத்ரங்களுடனும் உபநிஷத்துகளுடனும் கூடிய வேதத்தையும் கற்பிக்கின்றானோ அவனை 'ஆசார்யன்' என்கிறார்கள். வேதத்தின் ஒரு பாகத்தையாவது, வ்யாகரணம் முதலியவேதாங்கங்களையாவது பிழைப்புக் காகக்கற்பிப்பவன்'உபாத்யாயன்' எனப்படுகிறான். பத்து உபாத்யாயர்களைவிட ஆசார்யனும், நூறு ஆசார்யர் களைவிடப் பிதாவும், ஆயிரம் பிதாக்களைவிட மாதாவும் கௌரவத்தால் மிகுந்தவராய் ஆகின்றனர். யாக்ஞவல்க்யர் - கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங் களைச் செய்து வேதத்தையும் கற்பித்தவன் 'குரு' எனப்படுவான். உபநயனம் மட்டில் செய்து வேதத்தைக் கற்பிப்பவன், ஆசார்யன் எனப்படுவான். வேதத்தின் சிலபாகத்தைக் கற்பிப்பவன் 'உபாத்யாயன்' எனப்படுவான். யாகத்தைச் செய்விப்பவன் 'ருத்விக்' எனப்படுவான். இவர்களுள் முந்தியவர் பிந்தியவரை விடச்சிறந்தவர். இவர் எல்லோரையும்விட மாதா சிறந்தவள்.*

पितुरेव मुख्यमुपनयनादिकर्तृत्वम् । तदभावे पितृसमत्वात्ः ज्येष्ठस्य । तयोर्द्वयोरभावे अयोग्यतायां वाऽन्यस्योपनयनादिकर्तृत्वम् । यथाऽऽह बृहस्पतिः — 'एवं दण्डादिभिर्युक्तं संस्कृत्य तनयं पिता । वेदमध्यापयेद्यत्नाच्छास्त्रं मन्वादिकं तथेति ॥ ज्येष्ठस्य पितृसमत्वं मनुना स्मर्यते — 'पितृवत् पालयेत् पुत्रान् ज्येष्ठो भ्रातॄन् यवीयसः । पुत्रवच्चापि वर्तेरन् ज्येष्ठभ्रातरि धर्मत इति ॥ पितुरयोग्यतायां यमः — 'नाध्यापयति

नाधीते पतनीयेषु वर्तते । इत्येतैर्लक्षणैर्युक्तः कर्तव्यो न पिता गुरुरिति ॥ गुरुरत्रोपनेता ॥

உபநயனம் செய்வதில் பிதாவே முக்யனுவான். அவன் இல்லாவிடில் பிதாவுக்குச் சமமானதால் ஜ்யேஷ்டனே முக்யன். அவர்கள் இருவரும் இல்லா விடினும் இருவருக்கும் யோக்யதை இல்லாவிடினும் அன்யன் உபநயனகர்த்தாவாக ஆகலாம். ப்ருஹஸ்பதி - இவ்விதம் தண்டம் முதலியவைகளுடன் கூடிய புத்ரனுக்குப் பிதா உபநயனம் செய்து, வேதத்தையும், மன்வாதி தர்மசாஸ்த்ரங்களையும் கற்பிக்கவேண்டும். ஜ்யேஷ்டன் பிதாவுக்குச் சமானன் என்பது பற்றி மனு - பிதா புத்ரர்களைக் காப்பதுபோல் ஜ்யேஷ்டன் கனிஷ்டர்களைப் போஷிக்கவேண்டும், கனிஷ்டர்களும் ஜ்யேஷ்டனிடத்தில் பிதாவினிடத்திற் போல் இருக்க வேண்டும். பிதாவுக்கு யோக்யதை இல்லாவிடில் யமன் - வேதத்தைக் கற்காமலும் கற்பிக்காமலும் பதனீயமான (தாழ்த்துகிற) கர்மங்களைச் செய்துவரும் பிதா புத்ரனுக்கு உபநயனம் செய்யக்கூடாது.

आपस्तम्बः — 'यस्माद्धर्मानाचिनोति स आचार्यस्तस्मै न द्रुह्येत् कदाचनेति ॥ शङ्खः — 'भृतकाध्यापको यस्तु स उपाध्याय उच्यते इति ॥ विष्णुः — 'यस्त्वेनं मूल्येनाध्यापयेत् स उपाध्याय' इति ॥ मनुः — 'अग्न्याधेयं पाकयज्ञानग्निष्टोमादिकान् मखान् । यः करोति वृतो यस्य स तस्यर्त्विगिहोच्यत' इति ॥

ஆபஸ்தம்பர் - எவனிடமிருந்து தர்மங்களைக் கற்கின்றானோ அவன் ஆசார்யன். அவனுக்கு ஒருபொழுதும் துரோஹம் செய்யக்கூடாது. ஶங்கர் - கூலி பெற்று வேதத்தைக் கற்பிப்பவன் 'உபாத்யாயன்' எனப்படுகிறான். விஷ்ணு - விலைவாங்கிக் கொண்டு கற்பிப்பவன் உபாத்யாயன். மனு - ஆதானம், பாகயக்ஞங்கள், அக்னிஷ்டோமம் முதலிய யாகங்கள்.

*இவைகளை வரிக்கப்பட்டுச் செய்பவன் ருத்விக் எனப்படுகிறுன்.*

देवलः — 'उपाध्यायः पिता ज्येष्ठो भ्राता चैव महीपतिः । मातुलः श्वशुरस्त्राता मातामहपितामहौ । वर्णज्येष्ठः पितृव्यश्च पुंस्येते गुरवः स्मृताः ।। माता माताही गुर्वी पितुर्मातुश्च सोदराः । श्वश्रूः पितामही ज्येष्ठा धात्री च गुरवः स्त्रियाम् ।। इत्युक्तो गुरुवर्गोऽयं मातृतः पितृतो द्विधा ।

*தேவலர் - உபாத்யாயன், பிதா, ஜ்யேஷ்டப்ராதா, அரசன், அம்மான், மாமஞர், காப்பவன், மாதாமஹன், பிதாமஹன், மேல்வர்ணத்தான், பிதாவின் ப்ராதா இவர்கள் புருஷர்களுள், 'குருக்கள்' எனப்படுவர். தாய், தாயின்தாய், குருவின்பத்னீ, பிதாவின் ஸஹோதரீ, மாதாவின் ஸஹோதரீ, மாமியார், பிதாவின் தாய், தமக்கை, செவிலித்தாய் இவர்கள் ஸ்த்ரீகளுள் குருக்கள். இவ்விதம் மாதாபிதாக்களால் ஏற்படும் குருக்கள் இரண்டுவிதமாய்ச் சொல்லப்பட்டனர்.*

गुरूणामपि सर्वेषां पूज्याः पञ्च विशेषतः । यो भावयति यः सूते येन विद्योपदिश्यते । ज्येष्ठभ्राता च भर्ता च पञ्चैते गुरवः स्मृताः ।। तेषा माद्यास्त्रयः श्रेष्ठाः तेषां माता सुपूजितेति । स्मृतिरत्ने - पिता माता तथाऽऽचार्यः तज्जाया चाग्रजस्तथा । पितामहश्च तत्पत्नी गुरवः प्रथमा मताः । ऋचं वा यदि वाऽर्धर्चं पदं वा यदि वाऽक्षरम् । सकाशाद्यस्य गृह्णीयान्नियतं तत्र गौरवमिति ।।

*ஸகலமானகுருக்களிலும் ஐந்துபேர் மிகப் பூஜ்யராவர்; தன்னைச் சிறப்பிப்பவனும், தன்னைப்பெற்றவனும், வித்யையை உபதேசிப்பவனும், ஜ்யேஷ்டப்ராதாவும், அன்னதானத்தால் போஷிப்பவனுமாம். இவர்களிலும் முந்திய மூவர் சிறந்தவர். அவர்களைவிட மாதா மிகப் பூஜ்யையாகிறுள். ஸ்ம்ருதிரத்னத்தில் - பிதா, மாதா,*

ஆசார்யன், ஆசார்யபத்னீ, ஜ்யேஷ்ட ப்ராதா, பிதாமஹன், பிதாமஹீ இவர்கள் சிறந்த குருக்கள். எவனிடமிருந்து ஒரு ருக், அல்லது ருக்கின்பாதி, ஒரு பதம், ஒரு அக்ஷரமாவது க்ரஹித்தானோ அவனிடமும் குருபாவனை அவசியம் இருக்கவேண்டும்.

व्यासोऽपि — 'मातामहो मातुलश्च पितृव्यः श्वशुरो गुरुः । पूर्वजः स्नातकश्चर्त्विग्घ्यङ्गान्यास्ते गुरवस्तथा ॥ मातृष्वसा मातुलानी स्वसा धात्री पितृष्वसा । पितामही पितृव्यस्त्री गुरुस्त्री मातृवच्चरेदिति ॥ मनुः — 'पितुर्भगिन्यां मातुश्च ज्यायस्यां च स्वसर्यपि । मातृवद्वृत्तिमातिष्ठेन्माता ताभ्यो गरीयसी'ति ॥

வ்யாஸர் - மாதாமஹன், மாதுலன், பிதாவின் ப்ராதா, மாமனார், ஆசார்யன், ஜ்யேஷ்டப்ராதா, ஸ்நாதகன், ருத்விக், இவர்கள் குருவைப் போல் பூஜ்யர்களாவர். மாதாவின் பகினீ, மாதுலபத்னீ, தமக்கை, செவிலித்தாய், அத்தை, பிதாமஹீ, பித்ருவ்யனின்பத்னீ, குருவின் பத்னீ இவர்களிடத்தில் மாதாவினிடத்திற்போல் நடந்துகொள்ள வேண்டும். மனு - பிதாவின் பகினீ, மாதாவின் பகினீ, தமக்கை இவர்களிடத்தில் மாதாவினிடத்திற்போல் மர்யாதையுடன் நடக்கவேண்டும். இவர்களைவிட மாதா கௌரவத்திற் சிறந்தவள்.

माता पूज्यतमेत्यत्र हेतुमाह व्यासः — 'मासान् दशोदरस्थं या धृत्वा शूलैस्समाकुला । वेदनाविविधैर्दुःखैः प्रसूयेत विमूर्च्छिता ॥ प्राणैरपि प्रियान् पुत्रान् मन्यते सुतवत्सला । कस्तस्या निष्कृतिं कर्तुं शक्तो वर्षशतैरपीति ॥ निष्कृतिरनृणत्वम् ॥ तत्र शङ्खः — 'न पुत्रः पितुर्मुच्येतान्यत्र सौत्रामणीयागात् जीवन्नृणान्मातुरिति ॥

மாதாவின் கௌரவத்திற்குக் காரணத்தைப்பற்றி வ்யாஸர் - பத்து மாதம் வயிற்றில் தரித்து வலிகளையும் வேதனைகளையும் அடைந்து மூர்ச்சித்து ப்ரஸவித்துப்

பிறகும் புத்ரர்களைத் தன் ப்ராணன்களைவிட ப்ரியமாய் நினைக்கும் மாதாவுக்கு, அநேகவர்ஷங்கள் பணிவிடை செய்தாலும் அக்கடனைத் தீர்க்க எவன் சக்தனுவான் ? ஶங்கர் - 'ஸௌத்ராமணீ' என்னும் யாகம் செய்தாலன்றி பிதாவின் ருணத்தினின்றும், ஜீவனுள்ளவரை மாதாவின் ருணத்தினின்றும் புத்ரன் விடுபடுகிறதில்லை.

यत्तु पौराणिकवचनम् — 'द्वौ गुरू पुरुषस्येह पिता माता च धर्मतः । तयोरपि पिता श्रेयान्बीजप्राधान्यदर्शनात् ।। अभावे बीजिनो माता तदभावे तु पूर्वजः इति, तन्महागुरुविषयम् ।। तथा च स्मर्यते — 'उत्पाद्य पुत्रं संस्कृत्य वेदमध्याप्य यः पिता । कुर्याद्वृत्तिं च स महान् गुरुः पूज्यतमः स्मृत' इति ।। अथ ब्रह्मचारिणो जनकमात्रपेक्षया आचार्यो गरीयानित्याह मनुः — 'उत्पादकब्रह्मदात्रोर्गरीयान् ब्रह्मदः पिता । ब्रह्मजन्म हि विप्रस्य प्रेत्य चेह च शाश्वतम् ।। कामान्माता पिता चैनं यदुत्पादयतो मिथः । संभूतिं तस्य तां विद्याद्यद्योनावधिजायते ।। आचार्यस्त्वस्य यां जातिं विधिवद्वेदपारगः । उत्पादयति सावित्र्या सा सत्या साऽजरामरेति ।। जातिं - जन्म ।।

''மனிதனுக்கு மாதா பிதா இருவர்களும் தர்மத்தால் குருக்களாவர்; அவர்களுள் பிதா சிறந்தவன், பீஜம் ப்ரதானம் என்பதைக்காண்பதால்; பிதா இல்லாவிடில் மாதா, அவளில்லாவிடில் ஜ்யேஷ்டப்ராதா'' என்ற புராணவசனம் மஹாகுருவிஷயமாகும். அவ்விதமே ஸ்ம்ருதி வசனம் - புத்ரனை உற்பத்தி செய்து, உபநயனம் செய்து, வேதத்தைக் கற்பித்து, ஜீவனத்தையும் கற்பித்தவன் 'மஹாகுரு' எனப்படுவான். இவன் பூஜ்யர்களுள் சிறந்தவன். ப்ரம்மசாரிக்கு மாதா பிதாக்களை விட ஆசார்யன் சிறந்தவன். என்கிறார் மனு - ஜனகன், ஆசார்யன் இவ்விருவர்களும் பிதாக்கள். இவர்களுள் ஆசார்யனே சிறந்த பிதா. அவனால் செய்யப்பட்ட உபநயனம் என்னும் ஜன்மம் ப்ராமணனுக்கு இகபர

*உலகங்களில் சாச்வதமாய் உள்ளது. மாதா பிதாக்கள் காமவசத்தால் உத்பத்தி செய்த பின் மாதாவின் கர்ப்பத்தில் அவயவயங்களை அடைந்து பிறப்பது பசுக்களுக்குப்போல் ஸாதாரணமானதென்று அறியவும். வேதங்கள் முற்றுமறிந்த ஆசார்யன் விதிப்படி காயத்ரியால் எந்த ஜன்மத்தைச் செய்கின்ருனே அதுவே ஸத்யமானது. அதுவே ஜராமரணங்களற்றது.*

आचार्यगरीयस्त्वमेव प्रकारान्तरेण प्रतिपादयति स एव — 'अल्पं वा बहु वा यस्य श्रुतस्योपकरोति यः । तमपीह गुरुं विद्यात् श्रुतोपक्रियया तयेति ॥ अल्पविद्याप्रदमपि गुरुं विद्यात् बहुविद्याप्रदं किं पुनरिति मनोरभिप्रायः ॥ गौतमः — 'आचार्यः श्रेष्ठो गुरूणां मातेत्येक इति ॥ यस्तु बालो वृद्धमध्यापयति सोऽपि तस्य गरीयानित्याह विष्णुः — 'बाले समानवयसि वाऽध्यापके गुरुवद्वर्तेतेति ॥

*ஆசார்யனின் பெருமையையே வேறு ப்ரகாரத்தால் சொல்லுகிருர் மனு - எவன் சாஸ்த்ரத்தைக் கற்பிப்பதால் அல்பமாகவோ அதிகமாகவோ உபகரிக்கின்ருனோ அவனையும் இங்கு குருவென அறியவேண்டும். அல்பவித்யையைக் கொடுத்தவனையும் குருவாய் பாவிக்கவேண்டுமெனில், அதிகவித்யாப்ரதனைப்பற்றிச் சொல்வதேன் என்பது மனுவசத்தின் அபிப்ராயம். கௌதமர் - குருக்களுள் ஆசார்யன் சிறந்தவன், மாதா என்று சிலர். வயதிற்சிறியவனுனலும் கற்பிப்பவன் பெரியவன் என்கிருர் விஷ்ணு - கற்பிப்பவன் வயதிற் சிறியவனுயினும் ஸமானனுயினும் அவனிடத்தில் குருவினிடத்திற்போல் இருக்கவேண்டும்.*

इममेवार्थमितिहासपूर्वमाह मनुः — 'ब्राह्मस्य जन्मनः कर्ता स्वधर्मस्य च शासिता । बालोऽपि विप्रो वृद्धस्य पिता भवति धर्मतः ॥ अध्यापयामास पितॄन् शिशुराङ्गिरसः कविः । पुत्रका इति होवाच ज्ञानेन परिगृह्य तान् । ते तमर्थमपृच्छन्त देवानागतमन्यवः । देवाश्चैतान्

समेत्योचुर्न्याय्यं वः शिशुरुक्तवान् ।। अज्ञो भवति वै बालः पिता भवति मन्त्रदः । अज्ञं हि बालमित्याहुः पितेत्येव च मन्त्रदम् ।। न हायनैर्न पलितैर्न वित्तैर्न च बन्धुभिः । ऋषयश्चक्रिरे धर्मं योऽनूचानस्स नो महान् ।। न तेन वृद्धो भवति येनास्य पलितं शिरः । यो वै युवाप्यधीयानस्तं देवाः स्थविरं विदुः ।। आचार्यश्च पिता चैव माता भ्राता च पूर्वजः । नार्तेनाप्यवमन्तव्या ब्राह्मणेन विशेषतः ।।

இந்த விஷயத்தையே கதையுடன் சொல்லுகிறார் மனு - உபநயனம் செய்தவனும் தர்மத்தை உபதேசிப்பவனும் ஆன விப்ரன் வயதால் சிறியவனாயினும், வயதால் பெரியவனை தன்னிடம் கற்பவனுக்குப் பிதா போல் ஆகிறான். அங்கிரஸ் என்பவரின் புத்ரனும், வித்வானுமான ஓர் சிறுவயதான ப்ராமணன், தனது பித்ருக்களுக்கு (பித்ருவ்யர் முதலானவர்களுக்கு) வித்யையைக்கற்பித்தார். அவர்களைக் சிஷ்யர்களாக க்ரஹித்து 'பிள்ளைகளே' என்று அழைத்தார். கோபமடைந்த அந்தப் பித்ருக்கள் தேவர்களிடம் அந்த விஷயத்தைப்பற்றி வினவினர். தேவர் சொல்லியதாவது - சிறுவன் சொல்லியது ந்யாயமே. அறிவில்லாதவன் பாலன் ஆவான். மந்த்ரத்தை உபதேசிப்பவன் பிதா ஆகிறான். இவ்விதம் முனிகளும் சொல்லியிருக்கின்றனர் - வர்ஷங்கள் அதிகமானதாலும், மயிர்கள் நரைத்ததாலும், தனங்களாலும், நெருங்கிய பந்துத்தன்மையாலும் பெரியவன் ஆகான். அங்கங்களுடன் கூடிய வேதத்தைக் கற்றவனே நமக்குப் பெரியவன் என்று இந்தத்தர்மத்தை முனிகள் கற்பித்தனர். தலை வெளுத்திருப்பதினால் வ்ருத்தன் ஆவதில்லை. எவன் சிறுவனாயினும் வேதத்தைக்கற்றவனோ அவனை வ்ருத்தனென்று தேவர்கள் அறிகின்றனர். ஆசார்யன், பிதா, மாதா, ஜ்யேஷ்டப்ராதா இவர்களை தான் கஷ்டப்பட்டாலும் ப்ராமணன் அவமதிக்கக்கூடாது.

आचार्यो ब्रह्मणो मूर्तिः पिता मूर्तिः प्रजापतेः । माता पृथिव्या मूर्तिस्तु भ्राता स्वो मूर्तिरात्मनः ।। यं मातापितरौ क्लेशं सहेते संभवे नृणाम्। न तस्य निष्कृतिः शक्या कर्तुं वर्षशतैरपि ।। तयोर्नित्यं प्रियं कुर्यादाचार्यस्य च सर्वदा । तेष्वेव त्रिषु तुष्टेषु तपस्सर्वं समाप्यते ।। तेषां त्रयाणां शुश्रूषा परमं तप उच्यते । न तैरनभ्यनुज्ञातो धर्ममन्यं समाचरेत् ।। त एव हि त्रयो लोकास्त एव त्रय आश्रमाः । त एव हि त्रयो वेदास्त एवोक्तास्त्रयोऽग्नयः ।। त्रिष्वप्रमाद्यन्नेतेषु त्रीन् लोकान् विजयेद्गृही । दीप्यमानः स्ववपुषा देववद्दिवि रोचते' इति ।। न केवलमयं ब्रह्मचारिणां धर्मः, किन्तूत्तरेषामपीति प्रदर्शितो गृहीति ।।

*ஆசார்யன் பரமாத்மாவின் உருவம். பிதா ஹிரண்கர்ப்பனின் உருவம், மாதா பூமியின் உருவம். ப்ராதா தனது க்ஷேத்ரத்தின் உருவம். புத்ரர்களின் பிறப்பில் மாதாபிதாக்கள் பொறுத்த க்லேசத்திற்குப்பரிஹாரத்தைப் புத்ரர்கள் அநேக வர்ஷங்களாலும் செய்யமுடியாது. மாதாபிதாக்களுக்கும், ஆசார்யனுக்கும் ப்ரீதியை எப்பொழுதும் செய்யவேண்டும். அம்மூவர்களும் ஸந்தோஷத்துடனிருந்தால் ஸகல தபங்களும் பலிக்கின்றன. அம்மூவர்களுக்கும் பணிவிடை செய்வதே சிறந்த தவம் எனப்படுகிறது. அவர்களின் அனுமதியின்றி வேறு தர்மத்தை அனுஷ்டிக்கக்கூடாது. அம்மூவர்களே மூன்று உலகங்களும், மூன்று ஆப்ரமங்களும், மூன்றுவேதங்களும், மூன்று அக்னிகளுமாவர். இம்மூவர்களிடத்திலும் தவறுதலின்றி இருப்பவன் மூன்று உலகங்களையும் ஜயிப்பான். தன் சரீரத்தால் ப்ரகாசிப்பவனாய் ஸ்வர்க்கத்தில் தேவன்போல் ப்ரகாசிப்பான். 'இந்தத் தர்மம் ப்ரம்மசாரிகளுக்கு மட்டுமல்ல, க்ருஹஸ்தர்களுக்கும்' என்பது 'க்ருஹீ' என்ற பதத்தால் காண்பிக்கப்பட்டது.*

स एव — 'इमं लोकं मातृभक्त्या पितृभक्त्या तु मध्यमम् । गुरुशुश्रूषया त्वेवं ब्रह्मलोकं समश्नुते ।। सर्वे तस्यादृता धर्मा यस्यैते त्रय

आदृताः । अनादृतास्तु यस्यैते सर्वास्तस्याफलाः क्रियाः ॥ यावत्त्रयस्ते जीवेयुस्तावन्नान्यं समाचरेत् । तेष्वेव नित्यं शुश्रूषां कुर्यात् प्रियहिते रतः । त्रिष्वेतेष्वितिकृत्यं हि पुरुषस्य समाप्यते । एष धर्मः परः साक्षादुपधर्मोऽन्य उच्यत इति ॥

மனுவே - இந்த லோகத்தை மாத்ருபக்தியாலும், பித்ரு பக்தியால் அந்தரிக்ஷலோகத்தையும், குரு சுச்ரூஷையால் ப்ரம்மலோகத்தையும் அடைகிறுன். எவன் இம்மூவர்களிடமும் ஆதரவுடனிருப்பவனே அவனுக்கு ஸகல தர்மங்களும் பலனுள்ளவையாய் ஆகின்றன. இவர்களிடம் ஆதரவில்லாதவனின் ஸகல தர்மகார்யங்களும் பலனற்றவை. அம்மூவர்களும் ஜீவித்திருக்கும் வரையில் (அவர்கள் அனுமதியின்றி) வேறு தர்மத்தைச் செய்யக் கூடாது. அவர்களிடமே சுய்ரூஷையைச் செய்ய வேண்டும். அவர்களுக்கு ப்ரியத்தையும், ஹிதத்தையும் செய்வதில் கவன முள்ளவனாய் இருக்க வேண்டும். இம்மூவர்களுக்கும் சுச்ரூஷை செய்வதினுலேயே மற்ற ஸகல தர்மமும் அனுஷ்டிக்கப்பட்டதாய் ஆகின்றது. இது சிறந்த தர்மம். மற்றது தாழ்ந்த தர்மம்.

व्यासोऽपि — 'उपाध्यायं पितरं मातरं वा ये द्रुह्यन्ति मनसा कर्मणा वा । तेषां पापं भ्रूणहत्त्याविशिष्टं नान्यस्तेभ्यः पापकृदस्ति लोक' इति । देवलः — 'यावत् पिता च माता च द्वावेतौ निर्विकारिणौ । तावत् सर्वं परित्यज्य पुत्रः स्यात्तत्परायणः । माता पिता च सुप्रीतौ स्यातां पुत्रगुणैर्यदि । स पुत्रः सकलं धर्मं प्राप्नुयात्तेन कर्मणेति ॥ विकारः मरणम् ॥ स एव - 'नास्ति मातृसमं दैवं नास्ति पित्रा समो गुरुः । तयोः प्रत्युपकारोऽपि न कथञ्चन विद्यत' इति ॥ व्यासः - 'परित्यजन्ति ये रागादुपाध्यायं गुरुं तथा । न मानयन्ति मोहाद्वा ते यान्ति नरकान् बहून् ॥ यो भ्रातरं पितृसमं ज्येष्ठं मूर्खोऽवमन्यते । तेन दोषेण स प्रेत्य निरयं घोरमृच्छतीति ॥

வ்யாஸர் - உபாத்யாயர், பிதா, மாதா இவர்களுக்கு எவர்கள் மனதினாலாவது, செயலாலாவது த்ரோகம் செய்கின்றனரோ, அவர்களுக்கு ப்ரூணஹத்தியை விட அதிகமான பாபம் ஏற்படும். அவர்களைவிட வேறு பாபி உலகில் இல்லை. தேவலர் - பிதாவும் மாதாவும் ஜீவித்திருக்கும் வரையில் புத்ரன் எல்லாவற்றையும் விட்டு அவர்கள் சுச்ரூஷையிலேயே இருக்கவேண்டும். மாதாபிதாக்கள் புத்ரகுணங்களால் மிகப்ரீதியை அடைந்தால், புத்ரன் ஸகல தர்மத்தையும் பெறுவான். மாதாவுக்குச்சமமான தைவம் இல்லை. பிதாவுக்குச்சமமான குரு இல்லை. அவ்விருவருக்கும் பதிலுபகாரம் எவ்விதத்திலும் இல்லை. வ்யாஸர் - ராகத்தினால், அல்லது மோஹத்தினால் எவர்கள் உபாத்யாயன், குரு இவர்களை விடுகின்றார்களோ, அல்லது மதிக்காமலிருக்கின்றனரோ அவர்கள் வெகு நரகங்களை அடைகின்றனர். பிதாவுக்குச் சமமான ஜ்யேஷ்டப்ராதாவை அவமதிப்பவன். அந்தப்பாபத்தால் பரலோகத்தில் பயங்கரமான நரகத்தை அடைகின்றான்.

मनुः — 'आचार्यं च प्रवक्तारं पितरं मातरं गुरुम् । न हिंस्यात् ब्राह्मणं गां च सर्वांश्चैव तपस्विन इति ।। न हिंस्यात् - न कुप्यात् ।। अत्रापवादमाह स एव — 'गुरोरप्यवलिप्तस्य कार्याकार्यमजानतः । उत्पथं प्रतिपन्नस्य परित्यागो विधीयत' इति ।। दोषयुक्तोऽपि पिता न त्याज्य इत्याह यमः — 'अशुद्धौ तु परित्यागः पातकेऽयाज्ययाजने । उपाध्यायेऽथ वा याज्ये न पितुस्त्याग उच्यत इति ।। मनुः — 'बालः समानजन्मा वा शिष्यो वा यज्ञकर्मणि । अध्यापयन् गुरुसुतो गुरुवन्मानमर्हतीति ।। व्यासः — 'गुरुरग्निर्द्विजातीनां वर्णानां ब्राह्मणो गुरुः । पतिरेव गुरुः स्त्रीणां सर्वस्याभ्यागतो गुरुरिति ।। मनुः — 'ब्राह्मणं दशवर्षं च शतवर्षं च भूमिपम् । पितापुत्रौ विजानीयात्तयोस्तु ब्राह्मणः पितेति ।।

மனு - ஆசார்யன், ப்ரவக்தா, (வேதார்த்தத்தைக் கற்பித்தவன்) பிதா, மாதா, குரு, ப்ராமணன், பசு, தாபஸன் இவர்களுக்குப் பிரதிகூலம் செய்யக்கூடாது. இதற்கே அபவாதத்தை மனு சொல்கிறார் - குருவானாலும், கர்விதனாய் கார்யாகார்யங்களை அறியாதவனாய் துர்மார்க்கத்தை அடைந்தவனாயின் அவனை விட்டு விடலாம். குற்றங்கள் உடையவனாயினும் பிதாவை விடக்கூடாது என்கிறார் யமன் - பாதகத்தாலும், அயோக்யர்களுக்கு யாகம் செய்விப்பதாலும் அசுத்தி ஏற்பட்டால், உபாத்யாயன், சிஷ்யன் இவர்களை விடலாம். பிதாவை விடக்கூடாது. மனு - சிறியவன் ஆனாலும், ஸமானவயதுடையவன் ஆனாலும், சிஷ்யனானாலும், வேதத்தைக்கற்ற குருபுத்ரன், யாகத்தில் ருத்விக்காகவோ தர்ஶனத்திற்காகவோ நேர்ந்தால், அவன் குருவைப்போல் ஸம்மானிக்கத் தகுந்தவன் ஆகிறான். வ்யாஸர் - த்விஜர்களுக்கு அக்னி குரு, வர்ணங்களுக்குப் ப்ராமணன் குரு. ஸ்த்ரீகளுக்குப்பதி குரு. எல்லோருக்கும் அப்யாகதன் (விருந்தினன்) குரு ஆவான். மனு - பத்து வயதுள்ள ப்ராமணனும், நூறுவயதுள்ள க்ஷத்ரியனும் பிதா புத்ரர்கள் என்று அறியவும். அவர்களுள் பிராமணனே பிதா, அவனிடத்தில் க்ஷத்ரியன் மர்யாதையுடன் நடக்க வேண்டும்.

## मान्यतानिमित्तानि

मान्यतानिमित्तमाह याज्ञवल्क्यः — 'विद्याकर्मवयो बन्धुवित्तैर्मान्या यथाक्रमम्। एतैः प्रभूतैः शूद्रोऽपि वार्द्धके मानमर्हतीति। विद्या - श्रुतिस्मृती। कर्म - यज्ञादि। वयः - आत्मनोऽतिरिक्तम्। बन्धुः - स्वजनसंपत्तिः। वित्तं - धनम्। एतैर्युक्ताः क्रमेण मान्याः - पूजनीयाः। एतैः (विद्या) कर्मबन्धुवित्तैः प्रभूतैः - प्रवृद्धैः युक्तः शूद्रोऽपि वार्द्धके नवते (अशीते) रूर्ध्वं मानमर्हतीत्यर्थः ॥

மதித்தலுக்குத் தகுதி

யாக்ஞவல்க்யர் - ஶ்ருதி ஸ்ம்ருதி முதலிய வித்யைகள், யாகம் முதலிய கர்மங்கள், அதிகமான வயது, பந்துத்வம், தனம் இவைகளுடன் கூடியவர்களை க்ரமமாய்ப் பூஜிக்கவேண்டும். இவைகள் அதிகமாய் இருந்தால் தொண்ணூறு எண்பது வயதிற்குமேல் சூத்ரனும் மர்யாதைக்கு அர்ஹன் ஆகிறான்.

मनुरपि — 'वित्तं बन्धुर्वयः कर्म विद्या भवति पञ्चमी । एतानि मान्यस्थानानि गरीयो यद्यदुत्तरम् ।। पञ्चानां त्रिषु वर्णेषु भूयांसि गुणवन्ति च । यत्र स्युः सोऽत्र मानार्हः शूद्रोऽपि दशमीं गत' इति ।। पञ्चानां वित्तादीनां मध्ये त्रिषु वर्णेषु यस्मिन् भूयां सि वित्तादीनि स्युः, यस्मिन्वा गुणवन्ति श्रेष्ठानि विद्यादीनि स्युः, सः मानार्हः । वर्षशतस्यान्तिमो दशमो भागः दशमी । नवतिहायनातीत इत्यर्थः ।। गौतमोऽपि — 'वित्तबन्धुजातिकर्मविद्यावयांसि मान्यानि परबलीयांसि । श्रुतं तु सर्वेभ्यो गरीयस्तन्मूलत्वाद्धर्मस्येति ।।

மனு - தனம், பந்துத்வம், வயது, யாகாதி கர்மம், வித்யை இவ்வைந்தும் மர்யாதைக்கு (மதித்தலுக்கு)ரிய தகுதிகள். இவைகளுள் முந்தியதைவிடப் பிந்தியது சிறந்ததாகும். மூன்று வர்ணத்தார்களில் எவனிடத்தில் இவ்வைந்து குணங்களுள் சில அதிகங்களாயும் சிறந்தவைகளாயும் இருக்கின்றனவோ அவன் பூஜார்ஹன். தொண்ணூறு வயதிற்கு மேற்பட்ட சூத்ரனும் ஸம்மானத்திற்கு அர்ஹன். கௌதமர் - தனம், பந்துத்வம், ஜாதி, கர்மம், வித்யை, வயது இவைகள் மர்யாதைக்கு காரணங்கள். இவைகளுள் முந்தியதைவிடப் பிந்தியதுபலிஷ்டமாம். வேதார்த்தக்ஞானம் எல்லா வற்றிலும் பலமானது. தர்மத்திற்கு அது மூலமானதால்.

## मार्गप्रदानार्हाः

मार्गप्रदानार्हानाह मनुः — 'चक्रिणो दशमीस्थस्य भारिणो रोगिणः स्त्रियाः । स्नातकस्य च राज्ञश्च पन्था देयो वरस्य च ।। तेषां तु समवेतानां मान्यौ स्नातकपार्थिवौ । राजस्नातकयोश्चैव स्नातको नृपमानभाक्' इति ।। चक्रं अनोरथाद्युपलक्षणम्, तेन यो गच्छति स चक्री । तस्य निर्गुणस्यापि पन्था देयः । एवं दशमीस्थस्य - वृद्धतरस्य । भारिणः - भारवाहकस्य स्नातकस्य (विवाहोद्युक्तस्य) गृहस्थस्य ब्राह्मणस्य । वरस्य - श्रेष्ठस्य । समवेतानां - मार्गे समागतानां मान्यौ मार्गदानेन । नृपमानभाक् - नृपदत्तमार्गभागित्यर्थः ।।

### வழி விடுவதற்கு தகுதி

மனு - சக்ரமுடைய வண்டி, ரதம் முதலியவைகளில் ஏறியிருப்பவனுக்கும் 90 - வயதுக்கு மேற்பட்டவனுக்கும், ரோகமுடையவனுக்கும், சுமை சுமக்கிறவனுக்கும், ஸ்த்ரீக்கும், க்ருஹஸ்தனான ப்ராமணனுக்கும் (ஸமீப காலத்தில் ஸமாவர்த்தனம் செய்து கொண்டவனுக்கும்) தேசாதிபதியான அரசனுக்கும், (சிரேஷ்டனுக்கும் விவாஹத்திற்காகப் புறப்பட்ட வனுக்கும்) வழிவிட வேண்டும். அவர்கள் எல்லோரும் மார்க்கத்தில் சேர்ந்தால் அவர்களுள் ஸ்நாதகனும் அரசனும் பூஜ்யர்கள். இவ்விருவர்களும் சேர்ந்தால் அரசன் ஸ்நாதகனுககு வழியைவிட்டு விலகவேண்டும்.

याज्ञवल्क्योऽपि — 'वृद्धभारिनृप स्नात(विद्याव्रतोभयस्नात) स्त्रीरोगिवरचक्रिणाम् । पन्था देयो नृपस्तेषां मान्यः स्नातश्च भूपतेरिति ।। शङ्खः —'बालवृद्धमत्तोन्मत्तोपहतदेहभाराक्रान्त(नृप) स्नातकप्रव्रजितेभ्योऽथ ब्राह्मणायाग्रे पन्था देयो राज्ञ इत्येके तच्चानिष्टं गुरुर्ज्येष्ठश्च ब्राह्मणो राजानमतिशेते तस्मै पन्था देय इति ।। तेषां परस्पर समवाये विद्यादिभिर्विशेषो द्रष्टव्यः ।।

யாக்ஞவல்க்யர் - கிழவன், சுமையுள்ளவன், அரசன், ஸ்நாதகன், ஸ்த்ரீ, ரோகமுடையவன், விவாஹத்திற்குப் புறப்பட்டவன், வண்டியுடையவன் இவர்களுக்கு வழிவிடவேண்டும். அவர்களுள் அரசன் பூஜ்யன். அரசனுக்கு ஸ்நாதகன் பூஜ்யன். சங்கர் - பாலன், வ்ருத்தன், மத்தன், உன்மத்தன், வ்யாதியுடனுள்ள தேஹமுடையவன், சுமையுள்ளவன், ஸ்த்ரீ, (அரசன்) ஸ்நாதகன், ஸந்யாஸி இவர்களுக்கு வழிவிடவேண்டும். ப்ராமணனுக்கு முதலில் வழிகொடுக்கவேண்டும். அரசனுக்கு என்று சிலர். அது இஷ்டமானதல்ல. குருவாகவும் பெரியவனுயும் உள்ள ப்ராமணன் அரசனுக்கு மேலாகிறுன். ஆகையால் ப்ராமணனுக்கே வழிவிட வேண்டும். இவர்களே ஒருவர்க்கொருவர் சேர்ந்தால் வித்யை முதலியவைகளால் உள்ள விசேஷத்திற்குத் தகுந்தபடி நடக்கவேண்டும்.

व्यासः — 'पन्था देयो ब्राह्मणाय स्त्रियै राज्ञे ह्यचक्षुषे । वृद्धाय भारतप्ताय रोगिणे दुर्बलाय चेति ।। स्त्री चात्र गर्भिणी वेदितव्या ।। तथा च बोधायनः - 'पन्था देयो ब्राह्मणाय गवे राज्ञे ह्यचक्षुषे । वृद्धाय भारतप्ताय गर्भिण्यै दुर्बलाय चे'ति।।गौतमः— 'चक्रिदशमीस्थानुग्राह्यवधूस्नातराजभ्यः पथो दानं राज्ञा तु श्रोत्रियायेति ।। अनुग्राह्यः - रोगार्तः । वधूः - नवोढा ।।

வ்யாஸர் - ப்ராம்மணனுக்கும், கர்ப்பிணியான ஸ்த்ரீக்கும், அரசனுக்கும், குருடனுக்கும், வ்ருத்தனுக்கும், சுமையை வஹித்தவனுக்கும், ரோகமுள்ளவனுக்கும், துர்ப்பலனுக்கும் வழி விடவேண்டும். போதாயனர் - ப்ராம்மணன், பசு, அரசன், குருடன், கிழவன், சுமையால் தவிப்பவன், கர்ப்பிணீ, துர்ப்பலன் இவர்களுக்கு வழிவிட வேண்டும். கௌதமர் - வண்டி, தேர் முதலியவைகளிலிருப்பவன், வ்ருத்தன், ரோகமுள்ளவன், (கைபிடித்து அழைத்துச் செல்ல வேண்டியவன்) புதியதாய் விவாஹமான ஸ்த்ரீ, ஸ்நாதகன், அரசன்

*இவர்களுக்கு வழி விடவேண்டும். அரசன் ப்ராமணனுக்கு வழிவிடவேண்டும்.*

आपस्तम्बोऽपि — राज्ञः पन्था ब्राह्मणेनासमेत्य समेत्य तु ब्राह्मणस्यैव पन्था यानस्य भाराभिनिहतस्यातुरस्य स्त्रिया इति सर्वैर्दातव्यो वर्णज्यायसां चेतरैर्वर्णैरशिष्टपतितमत्तोन्मत्तानामात्म-स्वस्त्ययनार्थेन सर्वैरेव दातव्य' इति ॥ राजा ब्राह्मणेन यदि समेतो न भवति तदा तस्य पन्था देयः । समितश्चेत् ब्राह्मणस्यैव पन्थाः । यानं रथगजशकटादि । भाराभिनिहतः भाराक्रान्तः । वर्णज्यायसां - उत्कृष्टवर्णानां निकृष्टवर्णैः पन्था देयः । आत्मस्वस्त्यनमात्मत्राणम् । तेन प्रयोजनेन तदर्थं, न त्वदृष्टार्थमित्यर्थः ॥ अत्र कौटिल्येन देयस्य पथः प्रमाणमुक्तम् - 'पञ्चारत्नी रथपथश्चत्वारो हस्तिपथो द्वौ क्षुद्रपशुमनुष्याणामिति ॥

*ஆபஸ்தம்பர் - பட்டாபிஷிக்தனை அரசனுக்கு வழிவிடவேண்டும். அவன் ப்ராமணனோடு சந்திக்காவிடில். சந்தித்தால் ப்ராமணனுக்கே வழிவிடவேண்டும். தேர், யானை, வண்டி முதலிய வாஹனத்திற்கும், சுமையினால் தவிப்பவனுக்கும், ரோகமுள்ளவனுக்கும், ஸ்த்ரீக்கும் எல்லோரும் வழிவிடவேண்டும். உயர்ந்த வர்ணத்தார்களுக்குத் தாழ்ந்த வர்ணத்தார்களும் வழி விடவேண்டும். மூர்க்கன், பதிதன், மத்தன், பித்தன் இவர்களுக்கு எல்லோரும் தன்னைக்காத்துக் கொள்வதற்காக வழி விடவேண்டும். இது தர்மத்திற்காக அன்று. இங்கே குறுக்காக விலகிக்கொடுக்க வேண்டிய வழியின் அளவும் சொல்லப்பட்டிருக்கிறது - ரதத்திற்கு 5 அரத்னியும், யானைக்கு 4 - அரத்னியும், சிறிய பசுக்களுக்கும் மனிதர்களுக்கும் 2 அரத்னியும் ஒதுங்க வேண்டும். அரத்னி என்பது 2 அங்குலம் குறைந்த முழம்.*

## अभिवादनम्

तत्र याज्ञवल्क्यः — 'ततोऽभिवादयेद्वृद्धानसावहमिति ब्रुवन्निति ॥ ततः - अग्निकार्यानन्तरमित्यर्थः । आशीर्वचनार्थो नमस्कारोऽभिवादनम् ॥ मनुरपि — 'अभिवादनात् परं विप्रो ज्यायांस मभिवादयन् । असौ नामाहमस्मीति स्वं नाम परिकीर्तयेत् ॥ भोश्शब्दं कीर्तयेदन्ते स्वस्य नाम्नोऽभिवादने । नाम्नः स्वरूपभावो हि भोभाव ऋषिभिः स्मृत' इति ॥ अभिवादात्परं -अभिवादय इति शब्दादुपरि देवदत्तनामाहमस्मीति स्वं नाम ब्रूयात् । अस्योपरि भोः शब्दं कीर्तयेत् । अभिवाद्यस्य नाम्ना संबोधयितुमयुक्तत्वात् भोः शब्देन सम्बोधयेत् । भो भावः - भो शब्दसत्ता। नाम्नःस्वरूपभावः -नाम्नः स्वरूपसत्ता । समस्तनामधेयकार्यकरणसमर्थो भोः शब्द इत्यर्थः । तथा चायं प्रयोगः - 'अभिवादये देवदत्त नामाहमस्मि भोः' इति ॥

### அபிவாதனம்

யாக்ஞவல்க்யர் - *(அக்னிகார்யத்திற்கு) பிறகு பெரியோர்களுக்குத் தன் பெயரை உச்சரித்துக் கொண்டு அபிவாதனம் செய்யவேண்டும். ஆசீர்வாதத்தைப் பெறுவதற்காகச் செய்யப்படும் நமஸ்காரம் 'அபிவாதனம்' எனப்படும். மனு - பெரியவனை நமஸ்கரிக்கும் ப்ராமணன், 'அபிவாதயே' என்பதற்குப் பிறகு, 'தேவதத்த நாமாஹமஸ்மி' என்ற தன் பெயரை உச்சரிக்கவேண்டும். இதற்குமேல் 'போ;' என்ற சப்தத்தை உச்சரிக்க வேண்டும். நமஸ்கரிக்கப்படு கின்றவரை, அவர் பெயரைக் கொண்டு கூப்பிடுதல் யுக்தமல்லாததால் 'போ:' என்ற சப்தத்தினுல் ஸம்போதிக்க வேண்டும். இந்த சப்தம் எல்லா நாமதேயங்களும் செய்யும் கார்யத்தைச் செய்ய சக்தியுள்ளது. 'அபிவாதயே தேவவதத்தநாமாஹமஸ்மி போ:' என்று ப்ரயோகிக்க வேண்டும்.*

अत्र गौतमः — 'स्वनाम प्रोच्याहमयमित्यभिवादो ज्ञसमवाय' इति ।। तद्व्याख्याता हरदत्तः — 'यः प्रत्यभिवादनविधिज्ञः तेन सङ्गमे स्वनाम प्रोच्य उच्चैरुच्चार्य अहं शब्दं चोक्त्वा अयमिति च ब्रूयात् । अयमिति प्रत्यक्षोपदेशः । तदर्थोऽस्मिशब्दः प्रयोक्तव्य इत्याहुः । अन्ते भोः शब्दं प्रयुञ्जते । अभिवादये हरदत्तोऽहमयमस्मि भोः इति प्रयोगः । हरदत्तनामाऽहमिति केचित् । हरदत्तशर्माऽहमित्यपरे । हरदत्तशर्मा नामाहस्मि भो इत्यन्ये इति ।। शर्मान्तं ब्राह्मणस्येति वचनात् । अत्र यथास्वकुलाचारं व्यवस्था ।।

*கௌதமர் - அறிந்தவருடன் சேர்ந்தால் தன் நாமதேயத்தைச் சொல்லி 'அஹம்யம்' என்று அபிவாதனம் செய்யவேண்டும். இதன் வ்யாக்யானத்தில் ஹரதத்தர் - ஆசீர்வாதத்தின் விதியைத் தெரிந்தவன் எவனோ அவனுடன் சேர்ந்தால் தன் நாமதேயத்தை உரக்க உச்சரித்து 'அஹம்' என்று சொல்லி 'அயம்' என்றும் சொல்ல வேண்டும். 'அயம்' என்பதற்காக 'அஸ்மி' என்ற சப்தத்தை ப்ரயோகிக்க வேண்டும் என்கின்றனர். முடிவில் 'போ:' என்பதை ப்ரயோகிக்கின்றனர். 'அபிவாதயே ஹரதத்தோஹமயமஸ்மி போ:' என்று ப்ரயோகம். 'ஹரதத்தநாமாஹம்' என்று சிலர். 'ஹரதத்தசர்மாஹம்' என்று சிலர். 'ஹரதத்தசர்மா நாமாஹமஸ்மிபோ:' என்று சிலர். 'ப்ராமணனுக்கு நாமதேயம் சர்ம என்பதை முடிவிலுடையது' என்ற வசனத்தால். இவ்விஷயத்தில் தங்கள் குலாசாரத்தின்படி வ்யவஸ்தை என்றறியவும்.*

भारद्वाजः — 'कण्डूय पृष्ठतो गां तु कृत्वा चाश्वत्थवन्दनम् । उपगम्य गुरून् सर्वान् विप्रांश्चैवाभिवादयेदिति ।। मनुः — 'लौकिकं वैदिकं वाऽपि तथाऽऽध्यात्मिकमेव च । आददीत यतो ज्ञानं तं पूर्वमभिवादयेदिति ।। आपस्तम्बः — 'गुरोस्तिष्ठन् प्रातरभिवाद (मभिवाद)यीतासावहं भो इति समानग्रामे च वसतामन्येषामपि

वृद्धतराणां प्राक् प्रातराशात् प्रोष्य च समागमे स्वर्गमायुश्चेप्सन् दक्षिणं बाहुं श्रोत्रसमं प्रसार्य ब्राह्मणोऽभिवादयीतोरस्समं राजन्यो मध्यसमं वैश्यो नीचैः शूद्रः प्राञ्जलिरिति ।।

பாரத்வாஜர் - பசுவை முதுகில் சொரிந்தும், அரசமரத்திற்கு நமஸ்காரம் செய்தும், எல்லாக்குருக் களையும் நமஸ்கரித்தும், ப்ராமணர்களுக்கு அபிவாதனம் செய்யவேண்டும். மனு - லௌகிக சாஸ்த்ரஜ்ஞானத்தை யாவது, வைதிகசாஸ்த்ரஜ்ஞானத்தையாவது, ப்ரம்ம சாஸ்த்ரஜ்ஞானத்தையாவது எவனிடமிருந்து க்ரஹிப் பானோ அவனை முதலில் அபிவாதனம் செய்ய வேண்டும். ஆபஸ்தம்பர் - ப்ராத:காலத்தில் குருவுக்கு நின்று அபிவாதனம் செய்யவேண்டும்; 'யக்ஞசர்மாஹம்போ:' என்று சொல்லிக்கொண்டு. தன் க்ராமத்தில் வஸிக்கும் மற்ற வ்ருத்தர்களுக்கும் பகல்போஜனத்திற்குமுன் அபிவாதனம் செய்யவேண்டும். ஸ்வர்க்கத்தையும் ஆயுஸ்ஸையும் விரும்புவோன் பெரியோர்களுக்கு அபிவாதனம் செய்ய வேண்டும். ப்ராமணன் வலது கையைக் காதுக்குச் சமமாய் விரித்துக்கொண்டும், க்ஷத்ரியன் மார்புக்குச்சமமாயும், வைஶ்யன் இடுப்புக்குச் சமமாயும் வைத்துக் கொண்டும். சூத்ரன் காலுக்குச் சமமாய் வைத்துக் கொண்டும் அஞ்ஜலியுடன் அபிவாதனம் செய்யவேண்டும்.

विष्णुः — 'जन्मप्रभृति यत्किञ्चिच्चेतसा धर्ममाचरेत् । सर्वं तन्निष्फलं याति ह्येकहस्ताभिवादनादिति। एतत् द्विजविषयम् ।। यतः स एवाह — 'शिष्याणामाशिषं दद्यात् पादोपग्रहणं गुरोः । स्पृष्ट्वा कर्णौ तु विदुषां मूर्खाणां चैकपाणिनेति ।। आश्वलायनः — 'वामं वामेन संस्पृश्य दक्षिणेन तु दक्षिणम् । हस्तेन कर्णौ हस्ताभ्यां गुरूणामभिवादयेत् ।। वामोपरि करं कृत्वा दक्षिणं नाम चोच्चरन् । जानुप्रभृति पादान्तमालभ्य पदयोर्नमेदिति ।।

விஷ்ணு - *பிறந்தது முதல் மனதினுல் செய்யும் தர்மம் முழுவதும், ஒரு கையால் அபிவாதனம் செய்வதால் நிஷ்பலமாகின்றது. இந்த வசனம் த்விஜாதிகளின் விஷயம். 'சிஷ்யர்களுக்கு ஆசீர்வாதத்தைச் செய்ய வேண்டும்; குருவிற்குப் பாதத்தைத்தொட்டு நமஸ்கரிக்க வேண்டும்; காதுகளைத் தொட்டுக்கொண்டு வித்வான்களுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும்; மூர்க்கர் களுக்கு ஒரு கையினுல் செய்யவேண்டும்' என்று விஷ்ணுவே சொல்லியிருப்பதால். ஆச்வலாயனர் - குருக்களின் இடதுகாலை இடது கையினுலும் வலது காலை வலது கையினுலும் தொட்டுத் தன் காதுகளைக் கைகளால் தொட்டு இடது கையின்மேல் வலது கையை வைத்துக்கொண்டுத் தன் பெயரைச் சொல்லி முழங்கால் முதல் பாதம் வரையில் தொட்டுப் பாதங்களில் நமஸ்கரிக்கவேண்டும்.*

एतच्च प्रत्युत्थाय कर्तव्यम् । तदाहापस्तम्बः — ऊर्ध्वं प्राणा ह्युत्क्रमन्ति यूनः स्थविर आगते । प्रत्युत्थानाभिवादाभ्यां पुनस्तान् प्रतिपद्यत इति ।। स एव — 'ज्ञायमाने वयोविशेषे वृद्धतरायाभिवाद्यं विषमगतायागुरवे नाभिवाद्यमन्वारुह्य वाऽभिवादयीत सर्वत्र तु प्रत्युत्थायाभिवादनमप्रयतेन नाभिवाद्यं तथाऽप्रयतायाप्रयतश्च न प्रत्यभिवदेत् पतिवयसः स्त्रियो न सोपानद्वेष्टितशिरा अवहित-पाणिर्वाऽभिवादयीते'ति ।। अस्यार्थः — 'वयोविशेषे ज्ञायमाने पूर्वं वृद्धतराय अभिवाद्यं - अभिवादनं कर्तव्यम् । पश्चाद्वृद्धाय । विषमगताय - उच्चस्थाने नीचस्थाने वा स्थिताय गुरुव्यतिरिक्ताय नाभिवाद्यम् । गुरवे त्वभिवाद्यमेव । अन्वारुह्य वाऽभिवादयीत । एतद्गुरुविषयम् । अन्ववरुह्येत्येतदपि द्रष्टव्यम् । न्यायस्य तुल्यत्वात् । सर्वत्र गुरावगुरौ च । पतिवयसः स्त्रियः । तेन तदनुरोधेन ज्येष्ठभार्यादिष्वभिवादनं कर्तव्यम् । अवहितपाणिः - समित्कुशादिहस्त इति ।।

இந்த அபிவாதனத்தை எதிர்கொண்டெழுந்து பிறகு செய்யவேண்டும். அதைப்பற்றி ஆபஸ்தம்பர் - வயது, வித்யை முதலியவைகளால் பெரியவன் வரும்பொழுது சிறியவனின் ப்ராணன்கள் உயரச் செல்வதற்கு முயற்சிக்கின்றன. சிறியவன் எழுந்திருப்பதாலும் அபிவாதனம் செய்வதாலும் அந்த ப்ராணன்களை மறுபடி அடைகின்றான். ஆபஸ்தம்பரே - அநேகர் சேர்ந்தால், அவர்களின் வயது தெரிந்தால் அவர்களுள் பெரியவ்ருத்தனுக்கு முதலில் அபிவாதனம் செய்ய வேண்டும். பிறகு வயதின் கிரமப்படி மற்றவர்களுக்கு. உயரமான இடத்திலாவது பள்ளமான இடத்திலாவது இருக்கும் குருவல்லாதவர்க்கு அபிவாதனம் கூடாது. குருவானால் அபிவாதனம் செய்யவேண்டும். குருவல்லாதவருக்கு உயரத்தில் ஏறிச்சென்று அபிவாதனம் செய்யவேண்டும். ந்யாயம் ஸமானமானதால் இறங்கியும் செய்யவேண்டும். எல்லோருக்கும் ப்ர்த்யுத்தானம் (வரவேற்பு) செய்தே அபிவாதனம் செய்யவேண்டும். அசுத்தனுயிருப்பவன் அபிவாதனம் செய்யக்கூடாது. அசுத்தனுயிருப்பவனுக்கும் அபிவாதனம் செய்யக்கூடாது. அசுத்தனானவன் ஆசீர்வாதம் செய்யக்கூடாது. ஸ்திரீகள் பதியின் வயதுக்குச் சமமான வயதுள்ளவர்கள். ஆகையால் தமையன் பார்யை முதலியவர்களிடமும் அபிவாதனம் செய்யவேண்டும். பாதுகை தரித்தும், தலைப்பாகையுடனும், ஸமித், குசம் முதலியவைகளைக கையில் தரித்தும் அபிவாதனம் செய்யக்கூடாது.

मनुः — 'शय्यासनेऽध्याचरिते श्रेयसा न समाविशेत् । शय्यासनस्थश्चैवैनं प्रत्युत्थायाभिवादयेदिति ।। श्रेयसा गुर्वादिना आचरिते - परिगृहीते । परिगृहीतयोः शय्यासनयोः अधि - उपरि न समाविशेत् - न समुपविशेत् ।।

மனு - தன்னைவிடச்சிறந்த குரு முதலியவர்களால் ஸ்வீகரிக்கப்பட்ட படுக்கை ஆஸனம் இவைகளின்மேல்

உட்காரக்கூடாது. படுக்கை ஆஸனம் இவைகளில் இருக்கும்பொழுது குரு முதலியவர்கள் வந்தால் எழுந்து நின்று அபிவாதனம் செய்யவேண்டும்.

स एव — 'अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः । चत्वारि सम्यग्वर्द्धन्ते ह्यायुः प्रज्ञा यशो बलमिति ॥ बोधायनः — 'नासीनो नासीनाय न शयानो न शयानाय नाप्रयतो नाप्रयताय शक्तिविषये मुहूर्तमपि नाप्रयतः स्यात् समिद्धार्युदकुम्भपुष्पान्नहस्तो नाभिवादयेद्यच्चान्यदप्येवं युक्तं न समवायेऽभिवादनमत्यन्तशो भ्रातृपत्नीनां युवतीनां च गुरुपत्नीनां जातवीर्य इति ॥ एवं युक्तमपि - पितृदेवताद्यर्थद्रव्ययुक्तमपि नाभिवादयेत् । न समवायेऽत्यन्तशः - अत्यन्तं समीपे स्थित्वेत्यर्थः । जातवीर्यः - जातशुक्लः । च शब्दात् पितृव्यादिपत्नीनामपि युवतीनां ग्रहणम् ॥

எப்பொழுதும் பெரியோர்களுக்கு அபிவாதனம் செய்யும் வழக்கமுடையனுக்கும், பெரியோர்களைச் ஸேவிப்பவனுக்கும் ஆயுஸ், அறிவு, புகழ், பலம் இந்நான்கும் வ்ருத்தியடைகின்றன. போதாயனர் - உட்கார்ந்தவன் உட்கார்ந்திருப்பவனுக்கும், படுத் திருப்பவன், படுத்திருப்பவனுக்கும், அசுத்தன், அசுத்த னுக்கும், அபிவாதனம் செய்யக்கூடாது. சக்தி இருப்பின், ஸ்வல்பகாலம் கூட அசுத்தனாய் இருக்கக்கூடாது. ஸமித்து, ஜலகும்பம், புஷ்பம், அன்னம் இவைகளைக் கையில் வைத்துக் கொண்டும், இவைபோன்ற வஸ்துக்களைத் தரித்தவருக்கும் அபிவாதனம் செய்யக் கூடாது. யௌவனமடைந்தவன் யுவதிகளான குரு, ஜ்யேஷ்டன், பித்ருவ்யன் முதலியவரின் பத்னிகளுக்கு அதிக ஸமீபத்தில் இருந்து அபிவாதனம் செய்யக்கூடாது.

शङ्खः — 'नोदकुम्भहस्तोऽभिवादयेन्न भैक्षं चरन्न पुष्पाज्यहस्तो नाशुचिर्न देवपितृकार्यं कुर्वन्न शयान इति ॥ आपस्तम्बः — 'समित्पुष्पकुशाज्याम्बु मृदन्नाक्षतपाणिकम् । जपं होमं च कुर्वाणं

नाभिवादयते द्विजमिति ।। मनुः — 'गुरुवत् प्रतिपूज्याः स्युः सवर्णा गुरुयोषितः । असवर्णास्तु संपूज्याः प्रत्युत्थानाभिवादनैः । गुरुपत्नी तु युवतिर्नाभिवाद्येह पादयोः । पूर्णविंशतिवर्षेण गुणदोषौ विजानतेति ।। स्मृत्यर्थसारे — 'उदक्यां सूतिकां नारीं पतिघ्नीं गर्भघातिनीम् । पाषण्डं पतितं व्रात्यं महापातकिनं तथा ।। नास्तिकं कितवं स्तेनं कृतघ्नं नाभिवादयेत् ।। मत्तं प्रमत्तमुन्मत्तं धावन्तमशुचिं तथा ।। वमन्तं जृम्भमाणं च कुर्वन्तं दन्तधावनम् ।। अभ्यक्तशिरसं स्नानं कुर्वन्तं नाभिवादयेत् ।। जपयज्ञगणस्थांश्च समित्पुष्पकुशानलान् । उदपात्रार्घ्यभैक्षान्नं वहन्तं नाभिवादयेत् ।। अभिवाद्य द्विजश्चैनानहोरात्रेण शुध्यति ।।

சங்கர் -ஜலகும்பம் கையிலிருக்கும்போதும், பிக்ஷாசரணம் செய்யும் காலத்திலும், புஷ்பம், நெய், இவைகள் கையிலிருக்கும் போதும், அசுத்தனையும் தேவகார்யம் பித்ருகார்யம் செய்பவனையும், சயனித்த வனையும் அபிவாதனம் செய்யக்கூடாது. ஆபஸ்தம்பர் - ஸமித்து, புஷ்பம், குசம், நெய், ஜலம், மண், அன்னம், அக்ஷதை இவைகளைக் கையிலுடையவனுக்கும், ஜபம், ஹோமம் செய்பவனுக்கும் அபிவாதனம் செய்யக்கூடாது. மனு - ஸவர்ணைகளான குருபத்னிகள் குருவைப்போல் பூஜிக்கத்தகுந்தவர்கள். அஸவர்ணைகளோவெனில் எழுந்து நிற்பது, அபிவாதனம் இவைகளால் மட்டும் பூஜிக்கத்தகுந்தவர்கள். யௌவனமுள்ள குருபத்னியை, குணதோஷங்களறிந்தவனும் இருபது வயது பூர்ணமானவனுமான சிஷ்யன் பாதங்களைத்தொட்டு அபிவாதனம் செய்யக்கூடாது. ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் - ரஜஸ்வலை, ஸூதிகை, பதியைக்கொன்றவள், கர்ப்பத்தை அழித்தவள், பாஷண்டன், பதிதன், வ்ராத்யன், மஹாபாதகி, நாஸ்திகன், சூதாடுபவன், திருடன், நன்றியில்லாதவன், மது முதலானதால் திமிர்த்தவன், கவனிக்காதவன், பித்தன், நடையிலிருப்பவன், அசுத்தன், வாந்தி செய்பவன்,

கொட்டாவி விடுபவன், பல் துலக்குவோன், எண்ணெய் தேய்த்துக் கொண்டிருப்பவன், ஸ்நானம் செய்பவன், ஜபம், யாகம், கூட்டம் இவைகளில் இருப்பவன், ஸமித்து, புஷ்பம், குசம், அக்னி, ஜலபாத்ரம், அர்க்யம், பிக்ஷான்னம் இவைகளைத் தரித்திருப்பவன் இவர்களுக்கும் அபிவாதனம் செய்யக்கூடாது. செய்தால், ப்ராமணன் ஒருநாள் உபவாஸத்தினால் சுத்தனாகிறான்.

अभिवाद्यान्धकारस्थं शय्यास्थं पादुकाङ्किकम् । उच्छिष्टं जपहोमार्चारितं चोपवसेत्त्र्यहम्।। दूरस्थं जलमध्यस्थं धावन्तं धनगर्वितम्। रोगाक्रान्तं मदोन्मत्तं षड्विप्रान्नाभिवादयेत् ।। क्षत्रवैश्याभिवादने विप्रस्याहोरात्रं शूद्राभिवादने त्रिरात्रं रजकादिषु चण्डालादिषु चान्द्रं स्यादिति ।।

இருட்டிலிருப்பவன், படுக்கையிலிருப்பவன், பாதரக்ஷையைத் தரித்திருப்பவன், அசுத்தனாயிருப்பவன், ஜபம் ஹோமம் பூஜை இவைகளிலிருப்பவன் இவர்களுக்கு அபிவாதனம் செய்தால் மூன்றுநாள் உபவாஸமிருக்கவேண்டும். தூரத்திலிருப்பவன், ஜலத்தின் நடுவிலிருப்பவன், நடந்துகொண்டிருப்பவன், பணத்தால் கர்வமுடையவன், ரோகமுடையவன், மது முதலியதால் திமிர்த்தவன் இந்த ஆறுபேர்களுக்கும் அபிவாதனம் செய்யக்கூடாது. ப்ராமணன், க்ஷத்ரிய வைஶ்யர்களுக்கு அபிவாதனம் செய்தால் ஒருநாள் உபவாஸமும், சூத்ரனுக்குச் செய்தால் மூன்றுநாள் உபவாஸமும், வண்ணான், சண்டாளன் முதலியவர்களுக்கானால் சாந்த்ராயணமும் அனுஷ்டிக்கவேண்டும்.

शातातपः — 'अभिवाद्यो नमस्कार्यः शिरसा वन्द्य एव च । ब्राह्मणः क्षत्रियाद्यैस्तु श्रीकामैः सादरं सदा । नाभिवाद्यास्तु विप्रेण क्षत्रियाद्याः कथञ्चन । ज्ञानकर्मगुणोपेता यद्यप्येते बहुश्रुताः ।। क्षत्रं वैश्यं वाऽभिवाद्य प्रायश्चित्तं कथं भवेत् । ब्राह्मणानां दशाष्टौ च अभिवाद्य

विशुध्यति ॥ अभिवाद्य द्विजः शूद्रं सचेलं स्नानमाचरेत् । ब्राह्मणानां शतं सम्यगभिवाद्य विशुध्यति ॥ अर्चयेत् पुण्डरीकाक्षं देवं वाऽपि त्रिलोचनम्। ब्राह्मणं वा महाभागमभिवाद्य विशुद्ध्यती' ति ॥

சாதாதபர் - ஸம்பத்தை விரும்பும் க்ஷத்ரியர் முதலியவர் ப்ராமணனை ஆதரவுடன் அபிவாதனம் செய்யவேண்டும். தலையினால் வணங்கவேண்டும், ஸாஷ்டாங்கமாய் வந்தனம் செய்யவேண்டும். க்ஷத்ரியர் முதலியவர் ஞானம், கர்மம், குணங்கள், சாஸ்த்ரங்கள் இவைகளுடன் கூடினவராயினும், அவர்களை ப்ராமணன் அபிவாதனம் செய்யக்கூடாது. க்ஷத்ரியன் அல்லது வைஶ்யனுக்கு அபிவாதனம் செய்தால் ப்ராமணனுக்கு ப்ராயச்சித்தம் எப்படி எனில் பத்து அல்லது எட்டுப் ப்ராமணர்களை நமஸ்கரித்தால் சுத்தனாகிறான். ப்ராமணன் சூத்ரனை அபிவாதனம் செய்தால் ஸசேல ஸ்நானம் செய்து நூறு பிராமணர்களுக்கு நன்றாய் நமஸ்காரம் செய்தால் சுத்தனாகிறான். விஷ்ணுவையாவது, முக்கண்ணனை தேவனையாவது பூஜிக்கவேண்டும். சிறந்த ப்ராமணனுக்காவது அபிவாதனம் செய்தால் சுத்தனாகிறான்.

ब्राह्मणेष्वपि क्वचिदपवादमाह विष्णुः — 'सभासु चैव सर्वासु यज्ञे राजगृहेषु च । नमस्कारं प्रकुर्वीत ब्राह्मणान्नाभिवादयेत् ॥ विप्रौघदर्शनात् क्षिप्रं क्षीयन्ते पापराशयः । वन्दनान्मङ्गलावाप्तिरर्चना-दच्युतं पदमिति ॥ स्मृतिरत्नावल्याम् — 'वर्षैर्वयोधिकाशीतीस्तीर्त्वा मासचतुष्टयम् । यो जीवेद् स तु वन्द्यः स्या द्विष्णोरपि सुपूजित इति ॥ एतत्सवर्णविषयम् । यथाऽऽह मनुः — 'यस्य देशं न जानाति स्थानं त्रिपुरुषं कुलम् । कन्यादानं नमस्कारं श्राद्धं तस्य विवर्जयेदिति ॥

விஷ்ணு - ஸபைகள் எல்லாவற்றிலும், யாகத்திலும், அரசர் க்ருஹங்களிலும் ப்ராமணர்களுக்கு நமஸ்காரம் செய்யலாம். அன்றி அபிவாதனம் செய்யக்கூடாது. ப்ராமணர்களின் கூட்டத்தைத் தர்சிப்பதால்

பாபக்குவியல்கள் நசிக்கின்றன. நமஸ்கரிப்பதால் மங்களம் அடையப்படும். அர்ச்சிப்பதால் அக்ஷயமான பதம் அடையப்படும். ஸ்ம்ருதிரத்னாவளியில் - எண்பத்தொரு வயதும் நாலுமாதமும் சென்றுஜீவித்திருப் பவன் நமஸ்கரிக்கத்தகுந்தவன்; விஷ்ணுவைவிடப் பூஜ்ய னுவான். இது ஸவர்ண விஷயம். மனு - 'எவனுடைய தேசம் இருக்குமிடம், முந்திய மூன்று புருஷர்களுடன் குலம் இவைகள் அறியப்படவில்லையோ, அவனுக்குப் பெண்ணைக் கொடுப்பதும், அவனை நமஸ்கரிப்பதும், ம்ராத்தத்தில் வரிப்பதும் கூடாது' என்பதால்.

चन्द्रिकायाम् — 'ज्यायानपि कनीयांसं सन्ध्यायामभिवादयेत्। विना पुत्रं च शिष्यं च दौहित्रं दुहितुः पतिमिति। स्मृतिभास्करे — 'सर्वे चापि नमस्कार्याः सर्वावस्थासु सर्वदा। आशीर्वाच्या नमस्कार्यैर्वयस्यस्तु पुनर्नमेदिति ॥ वृद्धमनुः — 'अभिवादने तु सर्वत्र पादस्पर्शनमेव वा। विप्राणां प्राञ्जलिः कार्यो नमस्कारः स उच्यत' इति ॥

சந்த்ரிகையில் - பெரியவனும் சிறியவனுக்கு ஸந்த்யாகாலத்தில் அபிவாதனம் செய்யவேண்டும்; புத்ரன், சிஷ்யன், பெண்ணின்பிள்ளை, மாப்பிள்ளை இவர்களைத் தவிர்த்து. ஸ்ம்ருதிபாஸ்கரத்தில் - எல்லா விஷயங்களிலும், ஸஜாதீயர்களான எல்லோரையும் நமஸ்கரிக்கலாம். நமஸ்கரிக்கப் பட்டவர்கள் ஆசீர்வதிக்க வேண்டும்.ஸமவயதுள்ளவன் நமஸ்கரிக்கவேண்டும். வ்ருத்தமனு - அபிவாதனம் செய்யுமிடத்திலெல்லாம் பாதத்தை ஸ்பர்சிக்க வேண்டும். ப்ராமணர்களுக்கு அஞ்ஜலியாவது செய்ய வேண்டும். அது நமஸ்காரமெனப்படுகின்றது.

स्मृत्यर्थसारे — 'अभिवादने पादस्पर्शनं नास्ति कुर्याद्वा। अभिवादने नमस्कारे तथा प्रत्यभिवादनम्। आशीर्वाच्या नमस्कार्यैर्वयस्यस्तु पुनर्नमेत्॥ स्त्रियो नमस्या वृद्धाश्च वयसा पतिदेवताः। देवताप्रतिमां दृष्ट्वा यतिं चैव त्रिदण्डिनम्। नमस्कारं न

कुर्याच्चेदुपवासेन शुद्ध्यतीति ॥ स्मृतिरत्ने - 'स्रुक्पाणिकमनाज्ञातमशक्तं रिपुमातुरम् । योगिनं च तपःसक्तं कनिष्ठं नाभिवादयेदिति ॥

*ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் -அபிவாதனத்தில் பாதத்தைத் தொடுவதென்பதில்லை. செய்தாலும் செய்யலாம். அபிவாதனத்திலும் நமஸ்காரத்திலும் ப்ரத்யபிவாதனம் உண்டு. நமஸ்கரிக்கப்பட்டவர் ஆசீர்வதிக்க வேண்டும். வயதால் பெரியவர்களும், பதிவ்ரதைகளுமான ஸ்த்ரீகள் நமஸ்ரிக்கத்தகுந்தவர்கள். தேவதையின் பிம்பத்தையும், த்ரிதண்டியான யதியையும் பார்த்தால் நமஸ்கரிக்க வேண்டும். இல்லாவிடில் (ஒருநாள்) உபவாஸத்தால் சுத்தனாகிறான். ஸ்ம்ருதி ரத்னத்தில் - ஸ்ருக்' (ஹோமக்கரண்டி) என்றதைக் கையிலுடையவன், அறியப்படாதவன், ஶக்தியற்றவன், சத்ரு, வ்யாதியுள்ளவன், யோகத்திலிருப்பவன், தவத்தி லிருப்பவன், வயதிற் சிறியவன் இவர்களுக்கு அபிவாதனம் செய்யக் கூடாது.*

मनुः — 'दशाब्दाख्यं पौरसख्यं पञ्चाब्दाख्यं कलाभृताम् । त्र्यब्दपूर्वं श्रोत्रियाणामल्पेनापि स्वयोनिष्विति ॥ समानपुरवासिनां दशभिर्वर्षैः पूर्वः सखा भवति । ततोऽधिको ज्यायान् । कलाभृतां गीतादिविद्यावतां पञ्चाब्दपूर्वः सखा । श्रोत्रियाणां - वेदाध्यायिनां त्र्यब्दपूर्वः सखा । स्वयोनिषु भ्रात्रादिषु स्वल्पेनापि वयसा पूर्वः सखा भवति । ततोऽधिकोऽभिवाद्य इत्यर्थः ॥

*மனு - ஒரே நகரத்தில் வஸிப்பவர்களுக்கு வித்யாதி குணமில்லாதவர்களுமானவர்களுள் ஒருவன் பத்து வயதுகளினால் பெரியவனானாலும் 'ஸகா' என்றே மதிக்கப்படுவான். அதற்கு மேற்பட்டால் ஜ்யேஷ்டன் ஆவான். கீதம் முதலிய வித்யை உள்ளவர்களுள் ஐந்து வயது முந்தியவனும் ஸகா, ஶ்ரோத்ரியர்களுள் மூன்று வயது முந்தியவனும் ஸகா. ப்ராதா முதலியவர்கள் ஸ்வல்பகாலத்தினாலும் ஸகாக்கள். அதற்குமேல் அபிவாதனம் செய்யலாம் என்பது பொருள்.*

आपस्तम्बः — 'कुशलमवरवयसं वयस्यं वा पृच्छेदनामयं क्षत्रियमनष्टं वैश्यमारोग्यं शूद्रं नासंभाष्य श्रोत्रियं व्यतिव्रजेदरण्ये च स्त्रियमिति ॥ श्रोत्रियं पथिसङ्गतमसम्भाष्य न व्यतिक्रमेत् । अरण्ये सहायरहिते देशे स्त्रियमेकाकिनीं दृष्ट्वा असंभाष्य न व्यतिक्रमेत् । संभाषणं च मातृवद्भगिनीवच्च । 'भगिनि किं ते करवाणि न भेतव्य'मिति ॥ मनुरपि — 'ब्राह्मणं कुशलं पृच्छेत् क्षत्रबन्धुमनामयम् । वैश्यं क्षेमं समागम्य शूद्रमारोग्यमेव च । परपत्नी तु या स्त्री स्यादसम्बन्धा च योनितः । तां ब्रूयाद्भवतीत्येवं सुभगे भगिनीति वा' इति ॥

ஆபஸ்தம்பர் - சிறியவயதுடையவனும் சினேகிதனுமான ப்ராமணனைக் கண்டால் குசலத்தையும், க்ஷத்ரியனை ஆரோக்யத்தையும், வைஸ்யனை நஷ்ட மில்லாமையும். சூத்ரனை ஆரோக்யத்தையும் விசாரிக்க வேண்டும். ஸ்ரோத்ரியனை வழியிற்கண்டாலும், பயமுள்ள அரண்யம் முதலிய இடத்தில் ஸ்த்ரீயைக் கண்டாலும் அவருடன் பேசாமல் தாண்டிச் செல்லக்கூடாது. தாயினிடமும், பகினியினிடமும்போல் மர்யாதையுடன் 'ஸஹோதரி என்ன செய்யவேண்டும், பயம்வேண்டாம்' என்று பேசவேண்டும். மனு - வயதிற் சிறியவன், அல்லது ஸமானனான ப்ராமணனைக் 'குசலமா' என்றும் க்ஷத்ரியனை ஆரோக்யத்தையும், வைஸ்யனை க்ஷேமத்தையும், சூத்ரனை ஆரோக்யத்தையும் கேட்கவேண்டும். பிறனுடைய பத்னியையும், பந்துத்வ மில்லாத ஸ்த்ரீயையும் 'பவதி' என்றுவது, 'ஸுபகே' என்றுவது, 'பகினி' என்றுவது அழைக்க வேண்டும்.

यमः — 'स्वस्तीति ब्राह्मणो ब्रूयादायुष्मानिति भूमिपः । वर्धतामिति वैश्यस्तु शूद्रस्तु स्वागतं वदेदिति ॥ तथा भविष्यत्पुराणे — 'ब्राह्मणः सर्ववर्णानां स्वस्ति कुर्यादिति स्थितिरिति ॥ स्वस्तिशब्दार्थमाह यमः — 'यत्सुखं त्रिषु लोकेषु व्याधिव्यसनवर्जितम् । यस्मिन् सर्वे स्थिताः कामास्तत् स्वस्त्यभिसंज्ञितमिति ॥ व्यासः —

'कदाचित् कवचं भेद्यं नाराचेन शरेण वा। अपि वज्रशताघातैर्ब्राह्मणाशीर्न भिद्यत' इति ।। मनुः — 'मातुलांश्च पितृव्यांश्च श्वशुरानृत्विजो गुरून्। असावहमिति ब्रूयात् प्रत्युत्थाय यवीयसः' इति। असावहमिति - देवदत्तोऽहमिति ब्रूयान्नाभिवादयेदित्यर्थः ।। तथा स्मृतिरत्ने - 'ऋत्विक्पितृव्यश्वशुरमातुलानां यवीयसाम् । प्रवयाः प्रथमं कुर्यात् प्रत्युत्थायाभिभाषणमिति ।। बोधायनः — 'ऋत्विक्पितृव्यश्वशुर-मातुलानां तु यवीयसां प्रत्युत्थायाभिभाषणमिति ।। गौतमोऽपि — 'ऋत्विक्पितृव्यश्वशुरमातुलानां तु यवीयसां प्रत्युत्थानमनभिवाद्या इति ।।

யமன் - ப்ராமணனை 'ஸ்வஸ்தி' என்றும், க்ஷத்ரியனை 'ஆயுஷ்மான்' நீண்டஆயுளுடனிரு என்றும், வைச்யனை 'வர்த்ததாம்' வளர்ச்சிபெறுவாய் என்றும், சூத்ரனை 'ஸ்வாகதம்' (நல்வரவாகுக) என்றும் சொல்லவேண்டும். அவ்விதமே பவிஷ்யத்புராணத்தில் - ப்ராமணன் எல்லா வர்ணத்தார்களுக்கும் ஸ்வஸ்தி என்று சொல்லவேண்டும் என்பது முறை. ஸ்வஸ்தி என்னும் சப்தத்தின் அர்த்தத்தை யமன் சொல்லுகிறார் - மூன்றுலகங்களுள் வ்யாதி வ்யஸனமற்ற ஸுகம் எதுவோ, எதில் ஸகல காமங்களும் இருக்கின்றனவோ, அது ஸ்வஸ்தி எனப்படும். வ்யாஸர் - ஒருகால் பாணத்தாலாவது நாராசத்தாலாவது கவசம் உடைக்கப்படலாம்; பிராமணரின் ஆசீர்வாதம் அநேக வஜ்ராயுதங்களாலும் உடைக்கப்படாது. மனு - மாதுலன், பிதாவின் ப்ராதா, மாமனார், ருத்விக் குருக்கள் இவர்கள் வயதிற் சிறியவர்களானால் அவர்கள் வந்தவுடன் எழுந்து நின்று 'தேவதத்தன் நான்' என்று சொல்லவேண்டும். அபிவாதனம் செய்யக் கூடாது. அவ்விதம் ஸ்ம்ருதிரத்னத்தில் - ருத்விக், பித்ருவ்யன், மாமனார், மாதுலன் இவர்கள் சிறியவர்களாயிருந்தால், வயதிற் பெரியவன் எழுந்திருந்து முதலில் பேசவேண்டும். போதாயனரும் இவ்விதமே விதிக்கின்றார். கௌதமரும்

இவ்விதமே விதித்து, அபிவாதனம் செய்யக்கூடாது என்கிறார்.

यत्तु वसिष्ठापस्तम्बाभ्यामुक्तम्— 'ऋत्विक्छ्वशुरपितृव्यमातुला न वरवयसः प्रत्युत्थायाभिवदेदिति, तत् अभिवदेत् - आभिमुख्येन न वदेदित्यभिभाषणमात्राभिप्रायमिति स्मृतिचन्द्रिकायां व्याख्यानम् ॥ हरदत्तस्तु–'अवरवयसः ऋत्विगादयोऽप्यभिवादयन्ते । तानभिवादयमानान् प्रत्युत्थायाभिवदेन्नान्येष्विव यथा सुखमासीन' इति व्याकृतवान् ॥

வஸிஷ்டரும், ஆபஸ்தம்பரும் 'அபிவதேத்' என்று விதித்திருக்கின்றனரே எனில், அதற்கு 'எதிரில் நின்று பேசவேண்டும் என்பது மட்டில் பொருள்' என்று ஸ்ம்ருதி சந்த்ரிகையில் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது. ஹரதத்தரோவெனில், 'சிறியவர்களான ருத்விக்கு முதலியவர்கள் நமஸ்கரிக்கும்போது பெரியவன் எழுந்து நின்றே ப்ரத்யபிவாதனம் செய்யவேண்டும்; மற்ற வர்க்குப்போல் இஷ்டப்படி உட்கார்ந்தவனாய் செய்யக் கூடாது' என்று வ்யாக்யானம் செய்தார்.

गुर्वादिविषये त्वभिवादने विशेषमाह गौतमः — 'गुरोः पादोपसङ्ग्रहणं प्रातरिति, समवायेऽन्वहमभिगम्य तु विप्रोष्य मातृपितृतद्बन्धूनां पूर्वजानां विद्यागुरूणां तद्गुरूणां च सन्निपाते परस्येति च ॥ पित्रादीनां समवाये सङ्गमे प्रतिदिनं पादोपसंग्रहणं कुर्यात् । तेषां च युगपत् सन्निपाते परस्योपसंग्रहणम् ॥

குரு முதலியவர்களின் அபிவாதனத்தில் விசேஷத்தைப் பற்றி, கௌதமர் - குருவுக்குக் காலையில் அபிவாதனம் செய்யவேண்டும். பிதா முதலியவர்கட்குப் பிரதிதினமும் அவர்களிடம் வரும்போது பாதங்களைத் தொட்டு நமஸ்காரம் செய்யவேண்டும். வெளியூர் களுக்குச் சென்று வந்தால் அவர்களிருக்குமிடம் சென்று

நமஸ்கரிக்கவேண்டும். எவர்களுக்கெனில் - மாதா, பிதா, அவர்களின் பந்துக்கள், ஜ்யேஷ்ட ப்ராதாக்கள், வித்யையைக்கற்பிக்கும் உபாத்யாயர் முதலியவர்கள், அவர்களின் ஆசார்யர்கள் இவர்களுக்கு. இவர்கள் எல்லோரும் ஒரே ஸமயத்தில் சேர்ந்தால் சிறந்தவருக்கு முதலில் நமஸ்காரம்.

आपस्तम्बोऽपि — 'उदिते त्वादित्य आचार्येण समेत्योपसंग्रहणं सदैवाभिवादन'मिति, 'समावृत्तेन सर्वे गुरव उपसंग्राह्याः प्रोष्य च समागम' इति च ॥ स एव — 'आचार्यप्राचार्यसन्निपाते, प्राचार्यायोपसङ्गृह्योपसंजिघृक्षेदाचार्यं प्रतिषेधेदितर इति ॥

ஆபஸ்தம்பர் - ஸூர்யோதயத்திற்குப் பிறகு அத்யயனத்திற்காக ஆசார்யனிடம் சென்றவுடன் அவருக்கு உபஸங்க்ரஹணம் செய்ய வேண்டும். மற்ற ஸமயங்களில் அபிவாதனம் செய்யவேண்டும். ஸமாவர்த்தனம் செய்து கொண்டவனும் தன் குருக்கள் எல்லோருக்கும் ப்ரதிதினம் உபஸங்க்ரஹணம் செய்யவேண்டும். ப்ரவாஸத்திற்குப் பிறகு சேர்ந்தாலும் செய்யவேண்டும். ஆசார்யனும் ப்ராசார்யனும் சேர்ந்திருக்கும் ஸமயத்தில் முதலில் ப்ராசார்யனுக்கு உபஸங்க்ரஹம் செய்து பிறகு ஆசார்யனுக்கு உபஸங்க்ரஹம் செய்ய விரும்பவேண்டும்.

मनुरपि — 'गुरोर्गुरौ सन्निहिते गुरुवद्वृत्तिमाचरेत् । न चानिसृष्टो गुरुणा स्वान् गुरूनभिवादयेदिति ॥ आपस्तम्बः — 'यस्मिं स्त्वनाचार्यसम्बन्धाद्गौरवं वृत्तिस्तस्मिन्नन्वक्स्थानीयेऽप्याचार्यस्येति ॥ यस्मिंस्तु पुरुषे शिष्याचार्यभावमन्तरेणापि विद्याचरित्रादिना लौकिकानां गौरवं भवति, तस्मिन्नन्वक्स्थानीयेऽप्याचार्ये या वृत्तिः सा कर्तव्येत्यर्थः ॥

மனு - ஆசார்யனின் ஆசார்யன் வந்தால் குருவைப்போல் அவரிடம் நடந்துகொள்ளவேண்டும்.

*குருவின் க்ருஹத்திலிருக்கையில், தனது மாதா பிதா முதலியவர்கள் வந்தால், குருவின் அனுமதியின்றி அவர்களை நமஸ்கரிக்கக்கூடாது. ஆபஸ்தம்பர் - எவனிடத்தில் சிஷ்யாசார்யபாவமில்லாவிடினும் வித்யை நன்னடத்தை முதலியவற்றால் மற்றவர்களுக்கு மதிப்பு இருக்கின்கிறதோஅவனிடத்திலும் குருவினிடத்திற் போல் நடந்துகொள்ள வேண்டும்.*

उपसङ्ग्रहण स्वरूपमाह - स एव दक्षिणेन पाणिना दक्षं पादमधस्तादभ्याधिमृश्य सकुष्ठिकमुपसंगृह्णीयादुभाभ्यामेव उभावभिपीडमत उपसङ्ग्राह्याविर्त्येक' इति ॥ आत्मनो दक्षिणेन पाणिना आचार्यस्य दक्षिणं पादमधस्तादभ्यधिमृश्य, अधिशब्द उपरिभावे । अधस्ताच्चोपरिष्टाच्चाभिमृश्य, सकुष्ठिकं सगुल्फं साङ्गुष्ठमित्यन्ये । उपसंगृह्णीयात् - इदमुपसंग्रहणमेतत् कुर्यात् । उभाभ्यामेव पाणिभ्यामुभावाचार्यस्य पादावभिपीडयतो माणवकस्य उपसंग्राह्यावित्येके मन्यन्त इत्यर्थः ॥

*உபஸங்க்ரஹணஸ்வரூபத்தைப் பற்றி ஆபஸ்தம்பர் - தன் வலது கையினால் ஆசார்யனின் வலதுகாலை அடியிலும், மேற்புறத்திலும் தொட்டுக் கணுக்காலுடன் (கட்டைவிரலுடன் என்று சிலர்) சேர்த்துப் பிடிக்கவேண்டும். இதுதான் 'உபஸங்க்ரஹணம்' எனப்படும். இரண்டு கைகளாலும் இரண்டு கால்களையும் பிடிக்கவேண்டும் என்பது சிலரின் கருத்து.*

अत्र मनुः — 'व्यत्यस्तपाणिना कार्यमुपसंग्रहणं गुरोः । सव्येन सव्यः स्प्रष्टव्यो दक्षिणेन तु दक्षिण' इति ॥ बोधायनः — 'श्रोत्रे संस्पृश्य मनः समाधाय अधस्ताज्जान्वोरावपद्भ्यामित्युपसंग्रहणमिति ॥ एतच्च गुरुपत्नीनामपि कार्यम् । तथा च मनुः — 'गुरुवत् प्रतिपूज्याः स्युः सवर्णा गुरुयोषितः । मातृष्वसा मातुलानी श्वश्रूरथ पितृष्वसा ॥ संपूज्या गुरुपत्नीवत् समास्ता गुरुभार्यया । भ्रातृभार्योपसंग्राह्या

सवर्णाऽहन्यहन्यपि। विप्रोष्य तूपसंग्राह्या ज्ञातिसम्बन्धियोषितः ॥ अवृद्धा गुरुपत्नी च नोपसंग्रहमर्हतीति ॥

இவ்விஷயத்தில் மனு - கைகளைமாற்றிக்கொண்டு குருவின் பாதங்களை க்ரஹிக்கவேண்டும். இடது கையினால் இடது காலையும், வலதுகையினால் வலது காலையும் தொடவேண்டும். போதாயனர் - தன் காதுகளைத் தொட்டுப் பிறகு, முழங்கால்களுக்குக் கீழ் முதல் பாதம் வரையில் ஆசார்யனின் பாதங்களைத் தொடுவது உபஸங்க்ரஹணம் எனப்படும். இதைக் குருபத்னீமார்களுக்கும் செய்ய வேண்டும். அவ்விதமே மனு -ஸமான வர்ணத்தார்களான குருபத்னிகள் குருவைப்போல் பூஜிக்கத்தகுந்தவர்கள். மாதாவின் பகினீ, மாதுலனின் பத்னீ, மாமியார், பிதாவின் பகினீ இவர்கள் குருபத்னியைப்போல் பூஜிக்கத் தகுந்தவர்கள். இவர்கள் குருபத்னிக்குச் சமமானவர்கள். ஸவர்ணையான ப்ராதாவின் பார்யையை ப்ரதிதினமும் உபஸங்க்ரஹணத் துடன் நமஸ்கரிக்க வேண்டும். மற்றப் பந்துக்களின் ஸ்த்ரீகளுக்கு ப்ரவாஸத்திலிருந்து வந்தகாலத்தில் உபஸங்க்ரஹணம் செய்ய வேண்டும். யுவதியான குருபத்னிக்கு உபஸங்க்ரஹணம் செய்யக் கூடாது.

स्मृत्यर्थसारे — उपसंग्रहणं नाम अमुकगोत्रो देवदत्तशर्मानामाहं भो अभिवादय इत्युक्त्वा कर्णौ स्पृष्ट्वा दक्षिणोत्तानपाणिना गुरोर्दक्षिणं पादं सव्येन सव्यं गृहीत्वा शिरोवनमनमिति ॥ अत्र गुरवो माता स्तन्यधात्री च पिता पितामहादयो मातामहश्चान्नदाता भयत्राताऽऽचार्यश्चोपनेता मन्त्रविद्योपदेष्टा तेषां पत्न्यश्चोपसंग्राह्याः । समावृत्तश्च बालेऽध्यापके समवयस्के अध्यापके गुरुवच्चरेदिति ॥

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் - உபஸங்க்ரஹணம் என்பது தன்கோத்ரம் பெயர் இவைகளுடன் 'அஹம்போ அபிவாதயே' என்று சொல்லிக்காதுகளைத் தொட்டு, நிமிர்த்திய வலதுகையினால் குருவின் வலது பாதத்தையும்

இடதுகையினால் இடதுபாதத்தையும் பிடித்துகொண்டு தலையை வணங்குதல். இங்கே குரு என்றவர்கள் மாதா, பால் கொடுத்து வளர்த்தவள், பிதா, பிதாமஹன் முதலியவர்கள், அன்னதாதா, பயத்தினின்றும் காப்பவன், ஆசார்யன், உபநயனம் செய்தவன், மந்த்ரவித்தையை உபதேசித்தவன், அவர்களின் பத்னிகள் இவர்களாம். இவர்களுக்கு உபஸங்க்ரஹணம் செய்ய வேண்டும். ஸமாவர்த்தனம் செய்துகொண்டவன், வயதிற் சிறியவனாயினும், ஸமவயதுள்ளவனாயினும் அத்யயனம் செய்விப்பவனிடத்தில், குருவினிடத்திற் போல் நடந்து கொள்ளவேண்டியது.

## प्रत्यभिवादनम्

तत्र मनुः — 'आयुष्मान् भव सौम्येति वाच्यो विप्रोऽभिवादने। अकारश्चास्य नाम्नोऽन्ते वाच्यः पूर्वाक्षरप्लुत इति ॥ अभिवादने कृते सति विप्रः-द्विजः कनीयान् ज्यायसा वाच्यः । अस्य कनीयसो नाम्नोऽन्ते पूर्वाक्षरप्लुतः अक्षरशब्देन स्वर एव विवक्षितः । व्यञ्जनस्य प्लुतासम्भवात्। यस्मादकारात् पूर्वमक्षरं प्लुतं भवति स पूर्वाक्षरप्लुतः अकारश्च वाच्यः । आयुष्मान् भव सौम्य देवदत्त(३) अ इति वाच्य इति यावदिति मानवे व्याख्याने ॥आपस्तम्बोऽपि —'प्लावनं च नाम्नोऽभिवादनप्रत्यभिवादने च पूर्वेषां वर्णानामिति ॥ हरदत्तः — 'अभिवादनस्य यत् प्रत्यभिवादनं तत्राभिवादयितुर्नाम्नः प्लावनं कर्तव्यं - प्लुतः कर्तव्यः । पूर्वेषां वर्णानां शूद्रवर्जितानामभिवादयमानानाम् । 'प्रत्यभिवादेऽशूद्रे इति पाणिनीयस्मृतेः । तत्र 'वाक्यस्य टेः प्लुत उदात्त इत्यनुवृत्तेः प्रत्यभिवादवाक्यस्यान्ते नामप्रयोगः । तस्य टेः प्लुतः । 'आयुष्मान् भव सौम्येति वाच्यो विप्र' इति स्मृत्यन्तरवशान्नाम्नश्च पश्चादकारः । आयुष्मान् भव सौम्य देवदत्ता(३) इति प्रयोगः । शम्भुः, विष्णुः, पिनाकपाणिः इत्यादीनां नाम्नां सम्बुद्धौ गुणे कृते,

'एचोऽप्रगृह्यस्यादूराद्धूते पूर्वस्यार्धस्यादुत्तरस्येदुता' वित्ययमपि विधिर्भवति। अन्ते अकारः। 'तयोर्य्वावचि संहितायामिति यकारवकारौ भवतः। शम्भा(३)व। विष्णा(३)व। पिनाकपाणा(३)य इति। व्यञ्जनान्तेषु च अग्निची(३)द। इत्यादिप्रयोग इति ॥ वसिष्ठोऽपि — 'आमन्त्रिते योऽन्त्यः स्वरस्स प्लवत' इति ॥ एवञ्च अभिवादकनामगतान्तिमस्वरातिरिक्तोऽपूर्वोऽकारः पठितव्यः, अन्तिमस्वरश्च प्लावयितव्य इति हरदत्तादीनां बहूनामभिमतम् ॥

### ப்ரத்யபிவாதனம்

மனு - விப்ரன் (த்விஜன்) அபிவாதனம் செய்தால் நமஸ்கரிக்கப்பட்டவன் 'ஆயுஷ்மான் பவ ஸௌம்ய' என்று (பிரதியபிவாதனம்) சொல்லவேண்டும். நமஸ்கரித்தவனுடைய நாமதேயத்திற்குப்பிறகு 'அ' என்றும் உச்சரிக்க வேண்டும். அதற்கு முன்னிருக்கும் ஸ்வரத்திற்கும் ப்லுதம் வேண்டும். 'ஆயுஷ்மான் பவ ஸௌம்ய தேவதத்தா (3) அ' என்று உச்சரிக்கவேண்டும். இவ்விதம் மனுஸ்மிருதி வ்யாக்யானத்திலிருக்கின்றது. ஆபஸ்தம்பர் - முந்திய மூன்று வர்ணத்தார் அபிவாதனம் செய்தால்அவர்களுக்குச் செய்யப்படும் ப்ரத்யபி வாதனத்தில் பெயருக்கு ப்லுதம் செய்ய வேண்டும். 'ஆயுஷ்மான் பவ ஸௌம்ய தேவதத்தா (3) அ' என்று உச்சரிக்கவேண்டும். சம்பு, விஷ்ணு, பிநாகபாணி, அக்னிசித் என்றவிடங்களில் சம்பா (3) வ. விஷ்ணு (3) வ. பிநாபாணு (3)ய. அக்னிசீ(3)ய என்று ப்ரயோகிப்பது. இது ஹரதத்த வ்யாக்யானத்திலுள்ளது. கூப்பிடும் சப்தத்தில் கடைசியிலுள்ள உயிர் எழுத்து ப்லுதத்தையடையும். இவ்விதமிருப்பதால் 'நமஸ்கரிப்பவனின் பெயரின் கடைசியான ஸ்வரத்தை தவிரப்புதியதாய் ஒரு 'அ' காரம் உச்சரிக்கப்படவேண்டும். அதற்கு முந்திய ஸ்வரத்திற்கு ப்லுதம், என்பது ஹரதத்தர் முதலிய பலரின் அபிப்ராயம்.

स्मृतिचन्द्रिकायां पराशरमाधवीये च मनुवचनमन्यथा व्याख्यातम् । तथा हि — 'पूर्वं अक्षरं यस्यासौ पूर्वाक्षरः । पूर्वमक्षरञ्च सामर्थ्याद्व्यञ्जनम् । स्वराणां स्वरपूर्वकत्वासम्भवात् । अतश्चाभिवादकनामगतो व्यञ्जननिष्ठोऽन्तिमस्वरः प्लावनीयः । अकारेणान्तिमस्वरमात्रमुपलक्ष्यते । अशेषनाम्नामकारान्तत्वाभावात् । न त्वत्रापूर्वोऽकारो विधीयते । तथा च सत्येवं प्रयोगो भवति । आयुष्मान् भव सौम्य देवदत्ता(३)इतीति । एतेषां मते पूर्वाक्षरं पृथक्पदं द्रष्टव्यम् । अत्रातिरिक्ताकारपक्ष एव शिष्टाचारानुगुणः ॥

*ஸ்ம்ருதிசந்த்ரிகையிலும், பராசரமாதவீயத்திலும் மனுவசனத்திற்கு வேறுவிதமாய் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. அதை அனுஸரித்து 'ஆயுஷ்மான் பவ ஸௌம்ய தேவதத்தா (3)' என்று ப்ரயோகம். இவைகளுள் அகாரத்தை அதிகமாய்ச் சேர்த்துச் சொல்லும் பக்ஷமே சிஷ்டர்களுக்கு ஸம்மதமானது.*

मनुः — 'यो न वेत्त्यभिवादस्य विप्रः प्रत्यभिवादनम् । नाभिवाद्यः स विदुषा यथा शूद्रस्तथैव सः ॥ नामधेयस्य ये केचिदभिवादं न जानते । तान् प्राज्ञोऽहमिति ब्रूयात् स्त्रियस्सर्वास्तथैव चे'ति ॥

*மனு - அபிவாதனத்திற்கு ப்ரத்யபிவாதனத்தைத் தெரிந்துகொள்ளாதவன் சூத்ரனுக்குச் சமனானதால் அவனுக்கு வித்வான் அபிவாதனம் செய்யக்கூடாது. அபிவாதனம் செய்பவன் நாமதேயத்தை உச்சரித்தவுடன் ப்ரத்யபிவாதநம்செய்யத்தெரியாதவர்களிடம், ப்ராக்ஞனவன் 'அபிவாதயே அஹம்' என்று சொல்லவேண்டியது. ஸ்த்ரீகள் எல்லோரிடமும் அப்படியே.*

पतञ्जलिः — 'अविद्वांसः प्रत्यभिवादे नाम्नो ये न प्लुतिं विदुः । कामं तेषु च विप्रोष्य स्त्रीष्विवायमहं वदेदिति ॥ अहं वदेत् = अहमिति वदेदित्यर्थः ॥

பதஞ்ஜலி - ப்ரத்யபிவாத வாக்யத்தில் பெயருக்கு ப்லுதத்தை எவர்கள் அறியாதவர்களோ அவர்களிடம் ஸ்த்ரீகளிடத்திற்போல் 'தேவதத்தன் நான்' என்று சொல்லவேண்டும்.

यमः — 'यो न वेत्त्यभिवादस्य विप्रः प्रत्यभिवादनम्। आशिषं वा कुरुश्रेष्ठ स याति नरकं ध्रुवम् ॥ अभिवादे कृते यस्तु तं विप्रं नाभिवादयेत्। श्मशाने जायते वृक्षो गृध्रकाकोपसेवितः ॥ अभिवादे तु यः पूर्वमाशिषं न प्रयच्छति ॥ यद्दुष्कृतं भवेत्तस्य तस्माद्भागं प्रचक्षते ॥ तस्मात् पूर्वाभिभाषी स्याच्चण्डालस्यापि धर्मवित्। सुरां पिबेति वक्तव्यमेवं धर्मो न हीयत' इति ॥

யமன் - எந்தப் ப்ராமணன் ப்ரத்யபிவாதனம், ஆசீர்வாதம் இவைகளைத் தெரிந்துகொள்ளவில்லையோ அவன் நரகத்தை அடைவான்; நிச்சயம். அபிவாதனம் செய்தவனுக்கு ப்ரத்யபிவாதனம் செய்யாதவன் ம்மசானத்தில் கழுகு காக்கைகள் வஸிக்கும் மரமாகப் பிறப்பான். அபிவாதனம் செய்தவுடன் ஆசீர்வாதம் செய்யாதவன், அபிவாதனம் செய்தவனின் பாபத்தில் பங்கு பெறுமுன். ஆகையால் உடனே ஆசீர்வாதம் செய்யவேண்டும். சண்டாளன் விஷயத்திலும் 'கள்ளைக் குடி' என்பது போன்ற ஆசீர்வாதத்தைச் சொல்ல வேண்டும். இவ்விதமிருப்பின் தர்மம் குறையாது.

मनुः — 'न वाच्यो दीक्षितो नाम्ना यवीयानपि यो भवेत्। भोभवत्पूर्वकं चैनमभिभाषेत धर्मविदिति ॥ सन्निधौ भोशब्दः। यथा भो यजमानेति। असन्निधौ भवच्छब्दः। यथा तत्रभवान् यजमान इति ॥ स्मृतिरत्ने — 'आचार्यं चैव तत्पुत्रं तद्भार्यां दीक्षितं गुरुम्। पितरं च पितृव्यं च मातरं मातुलं तथा ॥ हितैषिणं च विद्वांसं श्वशुरं यतिमेव च। न ब्रूयान्नामतो विद्वान् मातुश्च गर्भिणीं तथेति ॥

மனு - சிறியவனுயிருப்பினும் தீக்ஷிதனின் பெயரைச் சொல்லக்கூடாது. எதிரிலிருந்தால் 'போ யஜமான' (வேள்வி புரிபவரே) என்றும், பரோக்ஷத்திலிருந்தால் 'தத்ர (அவ்விடம்) பவான் - யஜமான:' என்றும் சொல்ல வேண்டும். ஸ்ம்ருதிரத்னத்தில் - ஆசார்யன், அவனுடைய புத்ரன், ஆசார்யனின் பத்னீ, தீக்ஷிதன், குரு, பிதா, பித்ருவ்யன், மாதா, மாதுலன், ஹிதத்தை விரும்புவோன், வித்வான், மாமனர், யதி, மாதாவின் பகினீ இவர்களை நாமதேயத்தால் குறிப்பிடக்கூடாது.

## ब्रह्मचारिधर्मनिरूपणम्।

तत्र संवर्तः — 'ततोऽधीयीत वेदं तु वीक्षमाणो गुरोर्मुखम्। सायं प्रातश्च भिक्षेत ब्रह्मचारी समाहितः ॥ निवेद्य गुरवेऽश्नीयात् प्राङ्मुखो वाग्यतः शुचिरिति ॥ दक्षः — 'प्रातर्मध्याह्नयोः स्नानं वानप्रस्थगृहस्थयोः। यतेस्त्रिषवणं प्रोक्तं सकृत्तु ब्रह्मचारिण इति ॥ अत्र विशेषमाह विष्णुः- 'दण्डवन्मज्जन'मिति अनेनाङ्गैर्मल्यं न कार्यमित्युक्तम्॥ अत एवापस्तम्बः - 'नाप्सु श्लाघमानः स्नाया'दिति ॥

### ப்ரம்மசாரி தர்மங்கள்

ஸம்வர்த்தர் - ப்ரம்மசாரியானவன் குருவின் முகத்தையே பார்த்துக்கொண்டு அத்யயனம் செய்ய வேண்டும். காலை மாலை இருவேளைகளிலும் நியமத்துடன் பிக்ஷாசரணம் செய்யவேண்டும். பிக்ஷான்னத்தைக் குருவிற்குத் தெரிவித்துப் பிறகு கிழக்குமுகமாய் மௌனத்துடன் சுத்தனுய்ச் சாப்பிட வேண்டும். தக்ஷர் - வானப்ரஸ்தன், க்ருஹஸ்தன் இருவர்களும் காலை, மத்யாஹ்னம் இரண்டு காலங்களிலும் ஸ்நானம் செய்யவேண்டும். ஸன்யாஸிக்கு மூன்று ஸந்த்யை களிலும், ப்ரம்மசாரிக்கு ப்ராத:காலத்திலும் ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. விஷ்ணு - தடிபோல் முழுக வேண்டும். இதனுல் உடம்பில் அழுக்குத் தேய்ப்பது கூடாது என்பது சொல்லப்பட்டது. ஆபஸ்தம்பர் -

அழுக்குத் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்யக்கூடாது.

चन्द्रिकायाम् — 'मेखलामजिनं दण्डमुपवीतं च नित्यशः । कौपीनं कटिसूत्रं च ब्रह्मचारी तु धारयेदिति ।। यमः — 'दण्डं कमण्डलुं वेदं मौञ्जीं च रशनां तथा ।। धारयेद् ब्रह्मचर्यं च भिक्षान्नाशी गुरौ वसन्निति। वेदः — दर्भमुष्टिः ।। गुरौ - गुरुगृहे ।।

சந்த்ரிகையில் - மேகலை, மான்தோல், தண்டம், பூணூல், கௌபீனம், கடிஸூத்ரம் இவைகளை எப்பொழுதும் ப்ரம்மசாரி தரிக்கவேண்டும். யமன் - தண்டம், கமண்டலு, வேதம், மேகலை இவைகளைக் குருக்ருஹத்தில் வஸிக்கும் ப்ரம்மசாரி தரிக்கவேண்டும். பிக்ஷான்னத்தை உண்ணவேண்டும். வேதம் என்பது தர்ப்பமுஷ்டி.

याज्ञवल्क्यः — 'गुरुं चैवाप्युपासीत स्वाध्यायार्थं समाहितः। आहूतश्चाप्यधीयीत लब्धं चास्मै निवेदयेदिति ।। मनुः — 'ब्रह्मणः प्रणवं कुर्यादादावन्ते च सर्वदा । स्रवत्यनोङ्कृतं पूर्वं परस्ताच्च विशीर्यते ।। ब्रह्मारम्भेऽवसाने च पादौ ग्राह्यौ गुरोस्सदेति ।। अङ्गिराः — 'प्राप्ते वेदानुवचने विसर्गे चान्वहं गुरोः । उपसंग्रहणं कार्यं विप्रोष्य त्वागतेन चे'ति। मनुः — 'चोदितो गुरुणा नित्यमप्रचोदित एव वा । कुर्यादध्ययने यत्नमाचार्यस्य हितेषु च ।। शरीरं चैव वाचं च बुद्धीन्द्रियमनांसि च । नियम्य प्राञ्जलिस्तिष्ठेद्वीक्षमाणो गुरोर्मुखम् । नित्यमुद्धृतपाणिः स्यात् साध्वाचारः समाहितः । आस्यतामिति चोक्तः सन्नासीताभिमुखं गुरोः । हीनान्नवस्त्रवेषः स्यात् सर्वदा गुरुसन्निधौ । उत्तिष्ठेत् प्रथमं चास्य चरमं चैव संविशेत् ।। प्रतिश्रवणसंभाषे शयानो न समाचरेत् । नासीनो न च भुञ्जानो न तिष्ठन्न पराङ्मुख' इति ।। उद्धृतपाणिः - वस्त्रादिभिर-प्रच्छादितपाणिः । प्रतिश्रवणं - आत्मानं प्रति गुरुणा प्रयुज्यमानस्य वाक्यस्य श्रवणम् । प्रतिसंभाषा - गुरुं प्रति स्ववाक्यम् ।।

யாக்ஞவல்க்யர் - குருசுஶ்ருஷை செய்யவேண்டும். அத்யயனம் ஸித்திப்பதற்காகக் கவனமுள்ளவனாக வேண்டும். குருவினால் அழைக்கப்பட்டே அத்யயனம் செய்யவேண்டும். கிடைத்த வஸ்துக்களைக்குருவுக்குத் தெரிவிக்கவேண்டும். மனு - வேதாத்யனத்திற்கு முன்னும் பின்னும் ஓங்காரத்தை உச்சரிக்கவேண்டும். ஆதியில் உச்சரிக்காவிட்டால் வேதம் நழுவிவிடும். முடிவில் உச்சரிக்காவிட்டால் நாசத்தை அடையும். அத்யயனத்தின் ஆதியிலும் அந்தத்திலும் குருவுக்குப் பாதத்தில் வந்தனம் செய்யவேண்டும். அங்கிரஸ் - ப்ரதிதினமும் அத்யயனத்தின் ஆதியிலும், அந்தத்திலும், வெளியூர் சென்று திரும்பி வந்து சேர்ந்தகாலத்திலும் அபிவாதனம் செய்யவேண்டும். மனு - குருவினால் ஏவப்பட்டாலும் இல்லாவிடினும், அத்யயனத்திலும் குருவுக்கு ஹிதமான கார்யங்களிலும் ப்ரயத்னப்படவேண்டும். ஶரீரம், வாக்கு, புத்தி, இந்த்ரியங்கள், மனஸ் இவைகளை அடக்கி அஞ்ஜலியுடன் குருவின் முகத்தைப்பார்த்துக்கொண்டு நிற்கவேண்டும். எப்பொழுதும் கைகளை வஸ்த்ரத்தினால் மறைக்காமல், நல்ல ஆசாரமுள்ளவனாய், கவன முள்ளவனாய், உட்கார் என்று சொன்னால் குருவின் எதிரில் உட்காரவேண்டும். எப்பொழுதும் குருவின் ஸன்னிதியில் தாழ்ந்த அன்னம், வஸ்த்ரம், அலங்காரம் இவைகளை உடையவனாய் இருக்கவேண்டும். குரு எழுந்திருப்பதற்கு முன் எழவேண்டும். அவர் சயனித்தபிறகு படுக்க வேண்டும். சயனித்தவனாய்க் குருவின் வாக்யத்தைக் கேட்பதும், அவருடன் ஸம்பாஷிப்பதும் கூடாது. உட்கார்ந்து கொண்டும், புஜித்துக்கொண்டும், நின்று கொண்டும், பராங்முகனாய் இருந்தும் குருவாக்ய ஶ்ரவண ஸம்பாஷணங்களைச் செய்யக்கூடாது.

प्रतिश्रवणसंभाषे कथं कुर्यादित्यपेक्षायामाह स एव - आसीनस्य स्थितः कुर्यादभिगच्छंस्तु गच्छतः । प्रत्युद्गम्य त्वाव्रजतः पश्चाद्धावंस्तु धावतः ॥ पराङ्मुखस्याभिमुखो दूरस्थस्यैत्य चान्तिकम् । प्रणम्य तु

शयानस्य विदेशे चैव तिष्ठतः' ॥ प्रणम्य - प्रणतो भूत्वा । विदेशे - विनते देशे श्वभ्रादौ ॥

எப்படிச் செய்வதெனில் - குரு உட்கார்ந்திருந்தால் சிஷ்யன் நின்றுகொண்டும், சென்றுகொண்டிருந்தால் பின் சென்றுகொண்டும், எதிரில் வந்துகொண்டிருந்தால் எதிர் கொண்டு சென்றும், வேகமாய்ச் சென்றால் வேகமாய்ப் பின்னால் சென்றுகொண்டும், பராங்முகராயிருந்தால் (தன்னை நோக்காமல் தனக்கு முதுகைக் காட்டிக் கொண்டிருந்தால் எதிரில் சென்று நின்றும், தூரத்தி லிருந்தால் சமீபத்திற்சென்றும், படுத்திருந்தாலும் பள்ளமான இடத்திலிருந்தாலும் வணங்கி நின்றும், குருவாக்ய ச்ரவண ஸம்பாஷணங்களைச் செய்ய வேண்டும்.

'नीचं शय्यासनं चास्य नित्यं स्याद्गुरुसन्निधौ । गुरोस्तु चक्षुर्विषये न यथेष्टासनो भवेत् ॥ न व्याहरेदस्य नाम परोक्षमपि केवलम् । न चैवास्यानुकुर्वीत गतिभाषितचेष्टितम्' ॥ नित्यं - उत्तराश्रमेष्वपि । केवलं - तत्रभवदादिशब्दरहितम् ॥

குருவின் ஸன்னிதியில் சிஷ்யனுடைய படுக்கை ஆஸனம் இவைகள் தாழ்ந்ததாகவே இருக்கவேண்டும். குருவின் கண்ணிற்கெதிரில் தன் இஷ்டப்படி உட்காரக்கூடாது. 'நித்யம்' என்பது ஆச்ரமாந்த்ரங்களையும் குறிக்கும். ஆசார்யனின் பெயரைப் பரோக்ஷத்திலும் தனியாய் உச்சரிக்கக்கூடாது. பெரியவர் என்பது போன்ற பூஜ்ய சப்தங்களுடன் உச்சரிக்கவேண்டும். குருவின் நடை, பேச்சு, சேஷ்டை இவைகளைப் பரிஹாஸத்திற்காக அபிநயிக்கக்கூடாது.

अपि च — 'गुरोर्यत्र परीवादो निन्दा वाऽपि प्रयुज्यते । कर्णौ तत्र पिधातव्यौ गन्तव्यं वा ततोऽन्यतः ॥ परीवादी खरो भवति श्वा वै भवति निन्दकः । परिभोक्ता क्रिमिर्भवति कीटो भवति मत्सरी' ॥ परिभोक्ता - गुरोर्भोगादधिकभोगभोगी ॥

குருவைப்பற்றிய அவதூறுவது நிந்தையாவது சொல்லப்படுகின்ற இடத்திலிருந்தால், சிஷ்யன் தன் காதுகளைப் பொத்திக்கொள்ளவேண்டும். வேறு இடத்திற் காவது செல்ல வேண்டும். ஒருவரிடம் இல்லாத தோஷத்தைச் சொல்வது பரிவாதம்; இருக்கும் தோஷத்தைச் சொல்வது நிந்தையாம். குறைகூறுபவன் கழுதையாகப் பிறப்பான். நிந்திப்பவன் நாயாகவும், பரிபோக்தா (குருவின் போகத்திற்கதிகபோகத்தை அனுபவிப்பவன்) கிருமியாகவும் (புழு) மாத்ஸர்ய முள்ளவன் பூச்சியாகவும் பிறப்பான்.

अपि च — 'दूरस्थो नार्चयेदेनं न क्रुद्धो नान्तिके स्त्रियाः । यानासनस्थश्चैवैनमवरुह्याभिवादयेत् ॥ प्रतिवातेऽनुवाते च नासीत गुरुणा सह । असंश्रवे चैव गुरौ न किञ्चिदपि कीर्तयेत्' ॥ अन्तिके स्त्रियाः - रहसि पत्नीसहितमित्यर्थः । प्रतिवाते पुरतो नासीत । अनुवाते पृष्ठतः । पार्श्ववातयोरप्युपलक्षणम् । यथा स्वशरीरस्पृष्टो वातो नैनं स्पृशेत् तथा आसीतेति ॥ असंश्रवे - सुखसंश्रवणायोग्ये देशे ॥

மேலும் - தூரத்தில் இருந்தும், கோபமுள்ளவனும் குருவைப் பூஜிக்கக்கூடாது. ஸ்த்ரீயுடன் தனிமையில் இருப்பவரையும், அர்ச்சிக்கக்கூடாது. வாஹனத்திலாவது ஆஸனத்திலாவது இருந்தால் அவைகளினின்றும் இறங்கி அபிவாதனம் செய்யவேண்டும். முன்காற்று, பின்காற்று, பக்கத்துக்காற்று வீசும்பொழுதும் தன்மேற்பட்ட காற்று குருவின்மேற் படும்படி நிற்கக்கூடாது. வார்த்தை நன்றாய்க் காதிற் படமுடியாத தூரத்திலிருக்கும்போது குருவுடன் ஒன்றும் பேசக் கூடாது.

अपि च—'गोश्वोष्ट्रयानप्रासादस्वास्तरेषु कटेषु च । नासीत गुरुणा सार्धं शिलाफलकनौषु च ॥ बालः समानजन्मा वा शिष्यो वा यज्ञकर्मणि । अध्यापयन् गुरुसुतो गुरुवन्मानमर्हतीति ॥ गोश्वोष्ट्रयुक्तं यानं गोश्वोष्ट्रयानम् । स्वास्तरः तृणादिसमूहः । यज्ञकर्मणि - आचार्ये यज्ञकर्मादिपरवशे ॥

மேலும் - எருது, குதிரை, ஒட்டகம் இவைகளுடன் கூடியவாஹனத்திலும், மாடியிலும், விரிப்பு, பாய், கல், பலகை, ஓடம் இவைகளிலும் குருவோடு சேர்ந்து உட்காரக்கூடாது. வயதால் தனக்குச்சிறியவனாயினும் ஸமானனாயினும், ஆசார்யன் யாகம் முதலிய வேறுகார்யத்திலிருக்கும்போது, அவரின் சிஷ்யன், அல்லது புத்ரன் அத்யயனம் செய்வித்தால் குருவைப்போல் அவனும் மர்யாதைக்கு அர்ஹனாவான்.

गुरुपुत्रे गुरुवृत्तीनां प्राप्तानामपवादमाह स एव — 'उच्छादनं च गात्राणां स्नापनोच्छिष्ट भोजने । न कुर्याद्गुरुपुत्रस्य पादयोश्चावनेजनम् ॥ अभ्यञ्जनं स्नापनं च गात्रोच्छादनमेव च । गुरुपत्न्या न कार्याणि केशानां च प्रसादनम् ॥ अविद्वांसमलं लोके विद्वांसमपि वा पुनः । प्रमदा ह्युत्पथं नेतुं कामक्रोधवशानुगम् ॥ मात्रा स्वस्रा दुहित्रा वा न विविक्तासनो भवेत् । बलवानिन्द्रियग्रामो विद्वांसमपि कर्षति ॥

ஆனால், அவயங்களைப்பிடித்தல், ஸ்நானம் செய்வித்தல் உச்சிஷ்டத்தைப் புஜித்தல், கால்களை அலம்புதல் இவைகளைக் குருபுத்ரனுக்குச் செய்யக்கூடாது. எண்ணெய்தேய்த்தல், ஸ்நானம் செய்வித்தல், உடம்பைப்பிடித்தல், மயிர்களை அலங்கரித்தல் இவைகளைக் குருபத்னிக்குச் செய்யக்கூடாது. மூடனாயினும், வித்வானாயினும், காமக்ரோதங்களுக்கு வசனாக்கிப் புருஷனைக் கெட்டமார்க்கத்தில் கடத்துவதற்கு ஸ்த்ரீகள் ஶக்தியுள்ளவர்கள். தாய், பகினி, பெண் இவர்களுடன்கூட ஏகாந்தத்தில் இருக்கக்கூடாது. இந்த்ரியங்கள் வலியனவானதால் வித்வானையும் இழுக்கும்.

अहिंसयैव भूतानां कार्यं श्रेयोनुशासनम् । वाक्चैव मधुरा श्लक्ष्णा प्रयोज्या धर्ममिच्छता । यस्य वाङ्मनसी शुद्धे सम्यग्गुप्ते च सर्वदा । स वै सर्वमवाप्नोति वेदान्तोपगतं फलम्' ॥ सर्वदा - आश्रमान्तरेऽपि ॥

குருவானவர் சிஷ்யனுக்கு அதிக ஹிம்ஸை யில்லாமல், நன்மைக்காக உபதேசிக்கவேண்டும். இனியதும், ம்ருதுவுமான வார்த்தையை, தர்மத்தை விரும்புவோன் உச்சரிக்க வேண்டும். எவனுடைய வாக்கும், மனதும், எப்பொழுதும் சுத்தங்களாயும் நன்றாய் அடக்கப் பட்டவைகளாயுமிருக்கின்றனவோ, அவன் வேதாந்தத்தில் காணப்பட்ட ஸகல பலன்களையும் (மோக்ஷத்தையும்) அடைவான்.

अपि च — 'नारुन्तुदः स्यादार्तोऽपि न परद्रोहकर्मधीः । ययाऽस्योद्विजते वाचा नालोक्यां तामुदीरयेत् ॥ सेवेतेमांस्तु नियमान् ब्रह्मचारी गुरौ वसन् । सन्नियम्येन्द्रियग्रामं तपोवृद्ध्यर्थमात्मनः ॥ नित्यं स्नात्वा शुचिः कुर्याद्देवर्षिपितृतर्पणम् । देवताभ्यर्चनं चैव समिदाधानमेव च ॥ वर्जयेन्मधुमांसानि गन्धमाल्यरसांस्त्रियः । शुक्तानि चैव सर्वाणि प्राणिनां चैव हिंसनम् ॥ अभ्यङ्गमञ्जनं चाक्ष्णोरुपानच्छत्रधारणम् । कामं क्रोधं च लोभं च नर्तनं गीतवादनम् ॥ द्यूतं च परिवादं च जनवादं तथाऽनृतम् ॥ स्त्रीणां च प्रेक्षणालम्भमुपघातं परस्य चेति ॥

மேலும் - பீடிக்கப்பட்டவனாயினும், பிறரை வருத்தும் வார்த்தையைச் சொல்லக்கூடாது. பிறருக்கு த்ரோஹத்தைக் கார்யத்தாலும்செய்யக்கூடாது; புத்தி யாலும் நினைக்கக் கூடாது. எதனால் பிறன் வருந்துவானோ அந்த வார்த்தையை உச்சரிக்கக்கூடாது. அது நல்ல லோகங்களையடைய விரோதியானதால். குரு குலத்தில் வஸிக்கும் ப்ரம்மசாரியானவன் தனது தபஸ்ஸின் வ்ருத்திக்காக இந்த்ரியங்களை அடக்கி இனிச் சொல்லப்படும் நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். ப்ரதிதினமும் ஸ்நானம் செய்து சுத்தனாய், தேவ ருஷி பித்ருக்களுக்குத் தர்ப்பணம், தேவதாபூஜை, ஸமிதா தானம் இவைகளைச் செய்யவேண்டும். தேன், மாம்ஸம், வாஸனைத்ரவ்யங்கள், புஷ்பங்கள், ரஸத்ரவ்யங்கள், ஸ்த்ரீகள், புளித்துப்போன வஸ்துக்கள், பிராணிகளை

ஹிம்ஸித்தல், எண்ணெய் தேய்த்துக்கொள்ளல், மைதீட்டிக்கொள்ளல், பாதுகை குடை இவைகளைத் தரித்தல், காமம், க்ரோதம், லோபம், நர்த்தனம், பாட்டு, வாத்யம், சூதாட்டம், வாய்ச்சண்டை, பிறரை நிந்தித்தல், பொய்பேசுதல், ஸ்த்ரீகளை ஆசையுடன் பார்ப்பது, ஆலிங்கனம், பிறருக்கு அபகாரம் செய்தல் இவைகளைத் தள்ளவேண்டும்.

याज्ञवल्क्यः — 'मधुमांसाञ्जनोच्छिष्ट शुक्तस्त्रीप्राणिहिंसनम् । भास्करालोकनाश्लीलपरिवादादि वर्जये'दिति ॥ मधु - क्षौद्रम् । उच्छिष्टमगुरोः । तथा च वसिष्ठः - उच्छिष्टमगुरोरभोज्यमिति, स चेद्व्याधीयीत कामं गुरोरुच्छिष्टं भैषज्यार्थं सर्वं प्राश्नीयादिति च ॥ व्याधीयीत - व्याधिमनुभवतीत्यर्थः ॥

யாக்ஞவல்க்யர் - தேன், மாம்ஸம், எண்ணெய்த் தேய்த்துக்கொள்ளல், மைதீட்டிக்கொள்ளல். உச்சிஷ்டம், கொடுமையான வார்த்தை, ஸ்த்ரீஸங்கம், ப்ராணி ஹிம்ஸை, உதயாஸ்தமயங்களில் ஸூர்யனைப்பார்ப்பது, பொய் சொல்லுதல், பரநிந்தை முதலியவைகளை வர்ஜிக்க வேண்டும். உச்சிஷ்டமென்பது குருவல்லாதவருடையது. அவ்விதமே. வஸிஷ்டர் - 'குருவல்லாதவரின் உச்சிஷ்டம் புஜிக்கத்தகுந்ததல்ல'. 'சிஷ்யன் வ்யாதியுடனிருந்தால் மருந்திற்காக குருவின் உச்சிஷ்டம் முழுமையும் உபயோகிக்கலாம்.

माधवीये — 'नादर्शं चैव वीक्षेत नाचरेद्दन्तधावनम् । गुरूच्छिष्टं भेषजार्थं प्रयुञ्जीत न कामत' इति ॥ आपस्तम्बः — 'पितुर्ज्येष्ठस्य च भ्रातुरुच्छिष्टं भोक्तव्यमिति ॥ गुरूच्छिष्टस्य भोज्यत्वादेव तद्भार्यापुत्रेषु चैवमिति गुरुधर्मातिदेशेन प्राप्तस्योच्छिष्टभोजनस्य अपवादमाह गौतमः — 'नोच्छिष्टाशनस्नापनप्रसाधन पादप्रक्षालनोन्मर्दनोपसंग्रहणानीति ॥

மாதவீயத்தில் - கண்ணாடியைப்பார்க்கக்கூடாது. தந்ததாவனம் செய்யக்கூடாது. குருவின் உச்சிஷ்டத்தை

மருந்திற்காக உபயோகிக்கலாம். ஆசையினுல் உபயோகிக்கக் கூடாது. ஆபஸ்தம்பர் - பிதா, ஜ்யேஷ்ட ப்ராதா இவர்களின் உச்சிஷ்டத்தைப் புஜிக்கலாம். குருவினிடத்திற்போல் குருவின் பத்னீ புத்ரர்களிடத்திலு மிருக்கவேண்டுமென்ற ஸாமான்ய சாஸ்த்ரத்தால் ப்ராப்தமான உச்சிஷ்ட போஜனத்திற்கு அபவாதத்தைச் சொல்லுகிருர் கௌதமர் - குருவின் பத்னீ புத்ரர்களின் உச்சிஷ்டத்தைப் புஜித்தல், அவர்களுக்கு ஸ்நானம் செய்வித்தல், அலங்கரித்தல், கால்களை அலம்புதல், உடம்பைப்பிடித்தல், கால்களைத் தொட்டு நமஸ்கரித்தல் இவைகளைச் செய்யக் கூடாது.

स एव — 'वर्जयेन्मधुमांसगन्धमाल्य दिवास्वापाञ्जनाभ्यञ्जन यानोपानच्छत्रकामक्रोधलोभमोहवादवादन स्नान दन्तधावन हर्षनृत्तगीतपरिवादभयानि गुरुदर्शने कण्ठप्रावृत्तावसक्थिकापाश्रयणपाद प्रसारणानि निष्ठीवित हसितजृम्भितावस्फोटनानीति ।।

கௌதமரே - தேன், மாம்ஸம், வாஸனைத்ரவ்யம், புஷ்பம், பகலில் தூக்கம், மைதீட்டல், எண்ணெய் தேய்த்துக்கொள்ளல், வண்டி, பாதுகை, குடை, காமம், க்ரோதம், லோபம், மோஹம், ஸந்தோஷம், கூத்து, பாட்டு, பிறர் தோஷத்தைச் சொல்லுதல், பயம் இவைகளை வர்ஜிக்கவேண்டும். குரு பார்க்குமிடத்தில் வஸ்த்ரம் முதலியதால் கழுத்தைச் சுற்றிக்கொள்ளல், ஒரு துடையின்மேல் மற்ருெருகாலை ஏற்றி உட்காருதல், சுவர் தூண் முதலியவைகளில் சாய்ந்துகொண்டிருத்தல், காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருத்தல், கோழையைத் துப்புதல், சிரித்தல், கொட்டாவி விடுதல், விரல்களைச் சொடுக்குதல் இவைகளை வர்ஜிக்கவேண்டும்.

मनुः — 'मुण्डो वा जटिलो वा स्यादथवा स्याच्छिखाजटी' ति। कात्यायनः — 'सशिखं वपनं कार्यमास्नानाद् ब्रह्मचारिण' इति ।। एतच्छन्दोगाभिप्रायम् ।। सुमन्तुः — 'ब्रह्मचर्यं तपो भैक्षं सन्ध्ययोरग्निकर्म

च। स्वाध्यायो गुरुवृत्तिश्च चर्येयं ब्रह्मचारिणः ॥ यच्च शिष्येण कर्तव्यं यच्च दासेन वा पुनः। कृतमित्येव तत्सर्वं कृत्वा तिष्ठेत्तु पार्श्वतः ॥ किङ्करः सर्वकारी च सर्वकर्मसु कोविदः ॥ न स्नानेन न होमेन नैवाग्निपरिचर्यया। ब्रह्मचारी दिवं याति स याति गुरुपूजनादिति ॥

மனு - மொட்டைத் தலையனாகவாவது, சிகை கேசம் எல்லாவற்றையும் சடையாயுள்ளவனாகவாவது, சிகைமட்டில் சடையாயுள்ளவனாகவாவது இருக்கலாம். காத்யாயனர் - ப்ரம்மசாரிக்கு ஸமாவர்த்தனம் வரையில் சிகையுடன் சேர்த்தே வபனம் செய்யத்தகுந்தது. இது ஸாமவேதிகளைப் பற்றியது. ஸுமந்து - ப்ரம்மசர்யம், தவம்,பிக்ஷாசரணம், இருஸந்த்யைகளிலும் அக்னி கார்யம், வேதாத்யயனம், குருசுச்ரூஷை இவைகள் ப்ரம்மசாரியின் தர்மங்களாம். சிஷ்யன் செய்யக் கூடியதும், தாஸன் செய்யக்கூடியதுமான கார்யம் எல்லாவற்றையும் செய்துவிட்டுக் குருவின் பக்கத்தில் நிற்கவேண்டும். குருவுக்கு ஊழியக்காரனாய், எல்லாவற்றையும் செய்பவனாய், எல்லாவற்றிலும் வல்லவனாய் இருக்க வேண்டும். ஸ்நானம், ஹோமம், அக்னிசுச்ரூஷை இவைகளால் மட்டில் ஸ்வர்க்கத்தை அடையமுடியாது, குருவைப் பூஜிப்பதாலேயே அடைவான.

यमः — 'गुर्वधीनोऽस्वतन्त्रस्स्यात् पूर्वोत्थायी गुरोर्गृहे। सदा जघन्यसंवेशी जितशिश्नो जितोदरः ॥ जितनिद्रो जितालस्यो जितक्रोधो जितार्थवान् ॥ गन्धं माल्यं छत्रशय्ये वर्जयेद्दन्तधावनम्। सर्वं पर्युषितं वर्ज्यं कृतं च लवणं तथा ॥ मलापकर्षणस्नानं शूद्राद्यैरपि भाषणम्। गुरोरवज्ञां च तथा ब्रह्मचारी विवर्जयेदिति ॥

யமன் - ப்ரம்மசாரியானவன் ஸ்வதந்த்ரனாயிராமல் குருவுக்கு அதீனனாய், குருவின் க்ருகத்தில் அவருக்கு முன் எழுந்திருப்பவனாய், அவருக்குப்பின் படுப்பவனாய், சிச்னம், வயிறு, நித்ரை,சோம்பல், க்ரோதம், பணம்

இவைகளை ஜயித்தவனாய், கந்தம், புஷ்பம், குடை, படுக்கை, தந்ததாவனம், பழையதான அன்னம் முதலியவை, க்ருத்ரிமமான உப்பு, அழுக்குப்போக்கும் ஸ்நானம், சூத்ரர் முதலியவர்களுடன் ஸம்பாஷித்தல், குருவை அவமதித்தல் இவைகளைத்தவிர்க்கவேண்டும்.

व्यासः — 'अभुक्तवति नाश्नीयादपीतवति नो पिबेत् । न तिष्ठति तथाऽऽसीत नासुप्ते प्रस्वपेत्तथा ॥ नास्य निर्माल्यशयनं पादुकोपानहावपि । आक्रमेदासनं चास्य छायादीन् वै कदाचन ॥ यथाकालमधीयीत यावन्न विमना गुरुः । आसीत न गुरोः कूर्चे फलके वा समाहितः ॥ आसने शयने चैव नावतिष्ठेत् कथञ्चनेति ॥

வ்யாஸர் - குரு உண்ணாவிடில் உண்ணக்கூடாது. அவர் பானம் செய்யாதிருக்கும்போது பானம் செய்யக்கூடாது. அவர் நின்றுகொண்டிருக்கையில் உட்காருதலும், தூங்காமலிருக்கையில் தூங்குதலும் கூடாது. குருவின் நிர்மால்யம், படுக்கை, பாதுகை, செருப்பு, ஆஸனம், நிழல் முதலியவற்றை ஆக்ரமிக்கக் கூடாது. குரு மகிழ்ந்திருக்கும் போது காலப்படி அத்யயனம் செய்ய வேண்டும். குருவின் கூர்ச்சம், பலகை, ஆஸனம், சயனம் இவைகளில் எக்காரணத்தாலும் உட்காரக் கூடாது.

संवर्तः— 'दिवा स्वपिति चेत् स्वस्थो ब्रह्मचारी तु पर्वणि । स्नात्वा सूर्यं समभ्यर्च्य गायत्र्यष्टशतं जपेत् ॥ भिक्षाटनमकृत्वा तु स्वस्थोऽप्येकान्नमश्नुते । अस्नात्वा चैव यो भुङ्क्ते गायत्र्यष्टशतं जपेत् ॥ ग्रासस्य नियमो नास्ति प्रथमाश्रमवासिनः । इतरेषां क्रमेणैव द्वात्रिंशत् षोडशाष्ट च ॥ आपोशनमकृत्वा तु यो भुङ्क्तेऽनापदि द्विजः ॥ भुञ्जानश्च यदा ब्रूयाद्गायत्र्यष्टशतं जपेदिति ॥

ஸம்வர்த்தர் -ப்ரம்மசாரியானவன் ரோக மில்லாதிருக்கையில் பகலில் தூங்கினுல், பர்வகாலத்தில்

ஸ்நானம் செய்து ஸூர்யனைப் பூஜித்து 108 தடவை காயத்ரீயை ஜபிக்க வேண்டும். ஸ்வஸ்தனா யிருக்கும் போது பிக்ஷாசரணம் செய்யாமல் ஒரே அன்னத்தைப் புஜிப்பவனும், ஸ்நானம் செய்யாமல் புஜிப்பவனும் 108 முறை காயத்ரியை ஜபிக்கவேண்டும். ப்ரம்மசாரிக்குப் போஜனத்தில் கபளநியமம் இல்லை. மற்ற ஆம்ரமிகளுக்கு முறையே 32, 16, 8, கபளங்கள் என்று நியமமுண்டு. ஆபத்தில்லாத காலத்தில் ஆபோசனமில்லாமல் புஜித்தாலும், போஜனகாலத்தில் பேசினாலும் 108 முறை காயத்ரியை ஜபிக்க வேண்டும்.

हारीतः — 'उपनीतो माणवको वसेद्गुरुकुलेष्वथ । गुरोः कुले नाप्रियः स्यात् कर्मणा मनसा गिरा ।। ब्रह्मचर्यमधश्शय्या तथा वह्नेरुपासनम् । उदकुम्भं गुरोर्दद्याद्गोग्रासञ्चेन्धनानि च ।। कुर्यादध्ययनं चैव ब्रह्मचारी यथाविधि । विधिं त्यक्त्वा प्रकुर्वाणो न स्वाध्यायफलं लभेत् ।। यः कश्चित्कुरुते धर्मं विधिं त्यक्त्वा दुरात्मवान् । न तत्फलमवाप्नोति कुर्वाणोऽपि विधिच्युतः ।। तस्माद्वेदव्रतानीह चरेत् स्वाध्यायसिद्धये । शौचाचारमशेषं तु शिक्षयेद्गुरुसन्निधौ ।। शयनात्पूर्वमुत्थाय दर्भमृद्दन्तधावनम् । वस्त्रादिकमथान्यच्च गुरवे प्रतिपादयेत् ।। स्नाने कृते ततः पश्चात् स्नानं कुर्वीत दण्डवदिति ।।

ஹாரீதர் - உபநயனமாகிய மாணவகன் குருவின் க்ருஹத்தில் வஸிக்கவேண்டும். குருவின் க்ருஹத்தில் மனது வாக்கு காயம் எதனாலும் பிரியமல்லாததைச் செய்யக் கூடாது. ப்ரம்மசர்யம், பூமியிற்படுக்கை, அக்னிபூஜை இவைகளை அனுஷ்டிக்கவேண்டும். ஜலகும்பம், கோவுக்குப் புல், விறகுகள் இவைகளைக் குருவுக்குக் கொடுக்க வேண்டும்.விதிப்படிஅத்யயனம் செய்ய வேண்டும்.விதியின்றிச் செய்பவன் அத்யயனத்தின் பலத்தை அடைவதில்லை. எந்தத் தர்மத்தையும் விதியைவிட்டுச் செய்யும் துஷ்டசித்தன் அதன் பலத்தை அடைவதில்லை. ஆகையால் அத்யயனம்

ஸித்திப்பதற்காக வேதவ்ரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். சௌசம் முதலிய ஆசாரம் முழுவதையும் குருவினிடமிருந்து கற்கவேண்டும். படுக்கையினின்றும் குருவுக்குமுன் எழுந்து மண், பற்குச்சி, வஸ்த்ரம் முதலியவைற்றைக் குருவுக்குக் கொடுத்து அவர் ஸ்நானம் செய்தபிறகு சிஷ்யன் தண்டம்போல் ஸ்நானம் செய்யவேண்டும்.

नारदः — 'आविद्याग्रहणाच्छिष्यः शुश्रूषेत् प्रयतो गुरुम् । तद्वृत्तिर्गुरुदारेषु गुरुपुत्रे तथैव - चेति ॥ हारीतः — 'हयगजरथ-चैत्यवृक्षवृषभारोहणमहानदीप्रतरणमहासाहसविरुद्धानि वर्जयेदिति ॥ आपस्तम्बः — 'आचार्याधीनः स्यादन्यत्र पतनीयेभ्यो हितकारी गुरोरप्रतिलोमयन् वाचाऽध आसनशायी नानुदेश्यं भुञ्जीत । तथा क्षारलवणमधुमांसान्यदिवास्वापीति, 'अनृत्तदर्शी सभाः समाजांश्चा-गन्ताऽजनवादशीलो रहःशीलो गुरोरुदाचारेष्वकर्ता स्वैरिकर्माणि स्त्रीभिर्यावदर्थसंभाषी मृदुः शान्तो दान्तो ह्रीमान् दृढधृतिरिति च ॥

நாரதர் - வித்யையை க்ரஹிக்கும் வரையில் குருவுக்குச் சீடன் சுத்தனாய் சுச்ரூஷை செய்யவேண்டும். குருவின் பத்னீ புத்ரன் இவர்களிடமும் குருவினிடம்போல் நடக்கவேண்டும். ஹாரீதர் - குதிரை, யானை, தேர், சைத்யவ்ருக்ஷம், காளை இவைகளில் ஏறுதல், பெரிய நதிகளைத் தாண்டுதல், பெரிய ஸாஹஸகார்யம், விரோதமான கார்யம் இவைகளைச் செய்யக்கூடாது. ஆபஸ்தம்பர் - ஆசார்யனுக்கு அதீனனாயிருக்கவேண்டும். ஆசார்யன் ஆக்ஞாபித்தாலும் தவறான கர்மங்களைச் செய்யக்கூடாது. குருவுக்கு ஹிதத்தையே செய்பவனா யிருக்க வேண்டும். வாக்கினால் ப்ரதிகூலம் செய்யக் கூடாது. குருவின் ஸன்னிதியில் கீழே, உட்கார வேண்டும், கீழே படுக்கவேண்டும். தேவதைகளுக்காவது, பித்ருக் களுக்காவது உத்தேசித்த அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. உப்பு. உறைப்பு, மது, மாம்ஸம் இவைகளையும்

புஜிக்கக்கூடாது. பகலில் தூங்கக்கூடாது. கூத்து பார்க்கக் கூடாது. சூதாடுமிடம், உத்ஸவாதிகளில் கூடும் கூட்டம் இவைகளுக்குப் போகக்கூடாது. ஜனங்களிடம் அவதூறு சொல்லக்கூடாது. ஜனங்களில்லாத இடத்திலிருக்க வேண்டும். குரு அதிகமாய் ஸஞ்சரிக்குமிடங்களில் தனது இஷ்டமான கார்யங்களைச் செய்யக் கூடாது. ஸ்த்ரீகளிடம் ஆவச்யகமான வார்த்தையை மட்டில் பேசவேண்டும். பொறுமை யுடையவனாய், ஜிதேந்த்ரியனாய், தளர்ச்சி யற்றவனாய், லஜ்ஜையுடைவனாய், திடமான தைர்ய முடையவனாய் இருக்கவேண்டும்.

शङ्खः — न वेदमनधीत्यान्यां विद्यामधीयीतान्यत्र वेदाङ्गेभ्य इति ॥ हारीतोऽपि — 'वेदो विद्या ब्राह्मणस्य तत्परिज्ञानार्थ मङ्गानीति। लघुव्यासः — 'वेदस्याध्ययनं सर्वं धर्मशास्त्रस्य चापि यत्। अजानतोऽर्थतः सर्वं तुषाणां खण्डनं यथा ॥ यथा पशुर्भारहारी न तस्य लभते फलम्। द्विजस्तथाऽर्थानभिज्ञो न वेदफलमश्नुते ॥ ज्ञानं कर्म च संयुक्तं मुक्त्यर्थं कथितं यथा। अधीतं श्रुतसंयुक्तं तथा श्रेष्ठं न केवलम्॥ समुचितं स्तोकमपि श्रुताधीतं विशिष्यते । चतुर्णामपि वेदानां केवलाध्ययनाद्द्विज इति ॥

சங்கர் - வேதத்தைக்கற்காமல், வேதாங்கங்களின்றி மற்ற வித்யையை அப்யஸிக்கக் கூடாது. ஹாரீதர் - ப்ராமணனுக்கு உரியதான வித்யை வேதமே. வேதத்தின் அர்த்தத்தை அறிவதற்காகவே வேதாங்கங்கள். லகுவ்யாஸர் - வேதார்த்தத்தை அறியாதவனுக்கு, வேதாத்யயனமும், சாஸ்த்ராத்யயனமும், உமியைத் தின்பதுபோல் வீணாய் ஆகும். மூட்டையைச் சுமக்கும் பிராணி அதன் பயனை அடையாததுபோல், அர்த்தத்தை அறியாத ப்ராமணன் வேதத்தின் பலனை அடைவதில்லை. ஜ்ஞானம், கர்மம் இரண்டும் சேர்ந்தால் சிறந்த முக்திக்கு ஸாதனமாவதுபோல், வேதமும் அர்த்த ஜ்ஞானமும் சேர்ந்தாலே சிறந்ததாகும். தனியாய் இருந்தால்

*வ்யாஸர் - மீசையுடையவளையும், புருஷனைப் போன்ற ஆக்ருதியுடையவளையும், கரகரத்துப் பேசுபவளையும், இளைத்தவளையும், காக்கைக் குரலாளையும், கட்டுப்படாத கண்ணையுடையவளையும், வட்டமான கண்ணுடைய வளையும் மணக்கூடாது. ரோமமடர்ந்த முழங்காலுடைய வளையும், உயர்ந்த கணுக்காலுள்ளவளையும், சிரிக்கும் பொழுது கன்னங்களில் குழியுள்ளவளையும் மணக்கக் கூடாது. மிகக்ரூரமான காந்தியுடையவளும், வெளுத்த நகங்களுடையவளும், சிவந்த கண்களுடையவளும், பருத்த கைகால்கள் உடையவளும், குட்டையும், நெட்டையும், ஒட்டிய புருவங்களுடையவளும், அதிக இடைவெளியுள்ள பற்களுடையவளும், பயங்கரமான முகமுடையவளும், பின்கால் பெருத்தவளும், ரோமமடர்ந்தவளும், இரட்டையாய்ப் பிறந்தவளும், சொற்றைப் பல்லாளும், தணிந்த புருவங்களுடையவளும், பூனை விழியாளும் ஆகிய இவர்களை மணக்கக் கூடாது. பந்துக்களில்லாதவளும், பிறந்தது முதல் ரோகமுடைய வளும், தாழ்ந்த வம்ஸத்தில் பிறந்தவளும், அதிக ரோம முள்ளவளும், ரோமமில்லாதவளும், மிகக்கருத்தவளும், பிங்கள வர்ணமுடையவளும், அதிகாங்கமுடையவளும், அங்கம் குறைந்தவளும், சுத்தியற்றவளும், ரோம முடையவளும், கூனியும், ரோகமுடையவளும், துஷ்டை யும், துஷ்டவாக்யமுடைய வளும், மாதா பிதாக்கள் இல்லாதவளும் ஆகிய இவர்களை மணப்பது கூடாது.*

शातातपः - 'हंसस्वरां मेघवर्णां मधुपिङ्गल लोचनाम् । तादृशीं वरयन् कन्यां गृहस्थः स्वयमेधते' सति ॥ सवर्णोद्वाहे नियममाह मनुः - 'असपिण्डा च या मातुरसगोत्रा च या पितुः । सा द्विजानां प्रशस्ता स्त्री दारकर्मण्यमैथुनी' ति ॥ अमैथुनी अक्षतयोनिः । असपिण्डा - समानः एकः पिण्डो देहो यस्याः स सपिण्डा । न सपिण्डा असपिण्डा ।

*சாதாதபர் - ஹம்ஸம் போன்ற குரலுள்ளவளும், மேகம் போன்ற வர்ணமுடையவளும், தேன் போன்ற கண்ணுடையவளுமான கன்யையை மணப்பவன் வளர்ச்சி அடைவான். ஸவர்ணையின் விவாஹத்தில் நியமத்தைப்பற்றி மனு - மாதாவுக்கு ஸபிண்டையாயில்லாதவளும், பிதாவுக்கு ஸகோத்ரையாயில்லாதவளும், புருஷ ஸம்ஸர்க்கத்தை அடையாதவளுமானவள், ப்ராமணர்களுக்கு விவாஹத்திற்குரியவள் ஆவாள். ஸமானமான பிண்டத்தை உடையவள் ஸபிண்டை. அவளல்லாதவள் அஸபிண்டை. பிண்டம் என்பது மரீரம்.*

सपिण्डता चैकशरीरावयवान्वयेन भवति। तथा हि — पुत्रस्य पितृशरीरावयवान्वयेन भवति। तथा हि — पुत्रस्य पितृशरीरावयवान्वयेन पित्रा सह सपिण्डता। एवं पितामहादिभिरपि पित्रादिद्वारेणैक शरीरावयवान्वयात्। एवं मातृशरीरावयवान्वयेन मात्रा। एवं मातामहादिभिरपि मात्रादिद्वारेण। तथा मातृष्वसृमातुलादिभिः पितृव्यपितृष्वस्रादिभिरप्येक शरीरावयवान्वयात्। तथा पत्युः सह पत्न्या एक शरीरारम्भकतया। एवं भ्रातृभार्याणामपि परस्परमेकशरीरारब्धैः सहैकशरीरारम्भकत्वेन। एवं यत्र यत्र सपिण्डशब्दप्रयोगस्तत्र साक्षात् परंपरया वा एकशरीरान्वयो वेदितव्यः॥ एकशरीरान्वयश्च श्रुतितोऽवगम्यते - 'आत्मा हि जज्ञ आत्मन' इति, 'प्रजामनुप्रजायस इति च॥ तथा गर्भोपनिषदि - 'एतत् षाट्कौशिकं शरीरं त्रीणि पितृतस्त्रीणि मातृतः। अस्थिस्नायुमज्जानः पितृतः, एवं त्वङ्मांसरुधिराणि मातृत इति, 'अङ्गादङ्गात्सम्भवसि, प्रजायस्व प्रजया, तत्रायं जायते स्वयमिति च॥

*ஸபிண்டதை என்பது ஒரு மரீராவயவத்தின் அன்வய (ஸம்பந்த)த்தால் ஏற்படுகிறது. எப்படியெனில் - புத்ரனுக்குப் பிதாவின் மரீராவயவ ஸம்பந்தத்தால்*

பிதாவோடு ஸாபிண்ட்யம். இவ்விதம் பிதா மஹாதிகளுடனும், பிதா முதலியவர்களின் வழியாய் ஏகஶரீராவயவ ஸம்பந்தத்தால். இவ்விதம் மாதாவின் சரீராவயவ ஸம்பந்தத்தால் மாதாவுடன். இவ்விதம் மாதாமகாதகளோடும் மாதா முதலியவரின் வழியாய். அவ்விதம் தாயின் சகோதரி, மாதுலன் முதலியவர்களுடனும், பிதாவின் ப்ராதா, பிதாவின் பகினீ முதலியவர்களுடனும் ஏகஶரீராவயவ ஸம்பந்தத்தால் ஸாபிண்ட்யம். அவ்விதம் பதிக்கும் பத்னியுடன் ஒரு ஶரீரத்தை ஜனிப்பிக்கும் தன்மையினால். இவ்விதம் ப்ராதாக்களின் பார்யைகளுக்கும் பரஸ்பரம் ஏக ஶரீரஜாதர்களுடன் ஏகஶரீராரம்பகத்வத்தால். இவ்விதம் எங்கெங்கு ஸபிண்ட சப்தம் ப்ரயோகிக்கப் படுகின்றதோ அங்கங்கு நேராகவோ பரம்பரையாகவோ ஏகசரீரான்வயம் அறியத்தகுந்தது. ஏகஶரீரான்வயமும் வேதத்தால் தெரிகின்றது. கர்ப்போபநிஷத்திலும் - 'இச்சரீரம் ஆறுகோசங்களையுடையது. அஸ்தி, ஸ்நாயு, மஜ்ஜை இம்மூன்றும் பிதாவினிடமிருந்தும், த்வக், மாம்ஸம், ரக்தம், இம்மூன்றும், மாதாவினிடமிருந்தும் பெற்றது. அங்காதங்காத்' முதலிய ஶ்ருதிகளும் ப்ரமாணங்கள்.

आपस्तम्बः - 'स एवायां विरूढः पृथक् प्रत्यक्षेणोपलभ्यत' इति। निर्वाप्यपिण्डान्वयेन तु सापिण्ड्ये मातृसन्ताने भ्रातृपितृव्यादिषु च सापिण्ड्यं न स्यात्। समुदायशक्त्यङ्गीकरणेन रूढिपरिग्रहेऽवयवशक्तिः तत्र तत्रावगम्यमाना परित्यक्ता स्यादिति विज्ञानेश्वरीये॥ स्मृतिचन्द्रिकायां तु - 'एकस्यां पिण्डदानक्रियायां दातृत्वेन पिण्डभाक्त्वेन लेपभाक्त्वेन वाऽनुप्रविष्टानां भवति सापिण्ड्यम्। लेपभाजश्चतुर्थ्याद्याः पित्राद्याः पिण्डभागिनः। पिण्डदः सप्तमस्तेषां सापिण्ड्यं साप्तपूरुषमिति स्मृतेः। न च निर्वाप्यपिण्डापेक्षया सापिण्ड्यवर्णने भ्रातृपितृव्यादिषु सापिण्ड्यं न

स्यादिति शङ्कनीयम् । एकोद्देश्यावच्छेदेनैकक्रियान्वयित्वसम्भवा-दित्यभिहितम्॥

*ஆபஸ்தம்பர் - பிதாவே தனியாய் உண்டானவன் போல் நேரிடையாகக் காணப்படுகிறுன். சிராத்தங்களில் கொடுக்கப்படும் பிண்டத்தின் ஸம்பந்தத்தால் ஸாபிண்ட்யம் சொல்வோமெனில் மாதாவின் வம்ஶத்திலும், ப்ராதா, பிதாவின் ப்ராதா முதலியவர்களிடத்திலும் ஸாபிண்ட்யம் ஏற்படாமற்போகும். ஸமுதாய ஶக்தியை அங்கீகரிப்பதால் ரூடியைப் பரிக்ரஹிப்போமெனில் அவயவ ஶக்தியைப் பரித்யாகம் செய்ததாயாகும்.' என்று விக்ஞானஶ்வரீயத்தில். ஸ்ம்ருதி சந்த்ரிகையிலோவெனில் - ஒரு பிண்டதான க்ரியையில் கொடுப்பவனுகவோ, பிண்டத்தை அடைகிறவர்களாகவோ, லேபத்தை அடைகிறவர்களாகவோ உள்ளவர்களுக்கு ஸாபிண்ட்யம் வருகிறது. 'பிதாவிலிருந்து 4- வது முதலுள்ள மூவர் லேபத்தை அடைபவர்கள். பிதா முதல் மூவர் பிண்டம் பெறுபவர்கள். பிண்டத்தைக் கொடுப்பவன் ஏழாமவன். இவ்வேழு பேர்களுக்கும் பரஸ்பரம் ஸாபிண்ட்யம். இது 7 - புருஷர்கள் வரையில். இவ்விதம் பிண்டத்தைக் கொண்டு ஸாபிண்ட்யத்தை வர்ணித்தால், ப்ராதா, பித்ருவ்யன் (தந்தையின் சகோதரன்) முதலியவர்களிடத்தில் ஸாபிண்ட்யம் ஏற்படாதென்று எண்ணக்கூடாது. ஏகோத்தேச்யத்வத்துடன் ஏகக்ரியான்வயித்வம் ஸம்பவிப்பதால் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.*

अत्र सार्वभौमः - 'एकोद्देश्यावच्छेदेनैकक्रियान्वयिनः सपिण्डाः इत्यभिधानेन भ्रातृपितृव्यादिसापिण्ड्यसिद्धावपि स्वदुहितृस्वसृमातुल-तद्दुहितॄणां एकक्रियान्वयित्वाभावेन सापिण्ड्यं न स्यात्। ततश्च पञ्चमात् सप्तमादित्यादिवचननिचयस्य वैयर्थ्यं स्यात् । अतो लेपभाजश्चतुर्थाद्या

इत्युक्तं सापिण्ड्यम् 'अनन्तरः सपिण्डो यस्तस्य तस्य धनं भवेत्, पुत्राभावे सपिण्डा मातृ सपिण्डाः शिष्याश्च दद्यु'रिति मनुगौतमाद्युक्त-दायभाक्त्वौर्ध्वदैहिककर्तृत्वविषय'मिति। एकशरीरावयवान्वयद्वारेण साक्षात् पारंपर्येण वा सापिण्ड्यवर्णने सर्वत्र सर्वस्य यथाकथञ्चिदनादौ संसारे तत्सम्भवादिति योऽतिप्रसङ्गः सम्भवति स दोषो मन्वादिवचनैः परिहर्तव्यः ॥ तथा च मनुः - 'सपिण्डता तु पुरुषे सप्तमे विनिवर्तत' इति ॥

இவ்விடத்தில் ஸார்வபௌமர் - இவ்விதம் சொல்வதால் ப்ராத்ரு பித்ருவ்யாதிகளிடத்தில் ஸாபிண்ட்யம் ஸித்தித்தாலும், தனது பெண், பகினீ, மாதுலன், அவன் பெண் இவர்களுக்கு ஏகக்ரியான் வயித்வமில்லாததால் ஸாபிண்ட்யம் ஏற்படாது. அதனுல் 'பஞ்சமாத் ஸப்தமாத்' என்பது முதலான வசனங்கள் வீணாகக்கூடும். ஆகையால் 'லேபாஜ:' என்ற வசனத்தால் சொல்லிய ஸாபிண்ட்யமானது, 'அனந்தரஸ்ஸ பிண்டோ ய:' 'புத்ரபாவே-' என்று மனு கௌதமர் முதலியவர் சொல்லிய தனபாகிகள், (சொத்துரிமை பெற்றவர்கள்) அபரக்ரியை செய்பவர்கள் இவர்களின் தன்மையைப் பற்றியது என்றார். முதலில் சொல்லியபடி ஏக ஶரீராவயவான் வயத்தால் நேராகவோ பரம்பரையாகவோ ஸாபிண்ட்யம் சொல்வதில், அநாதியான ஸம்ஸாரத்தில் எல்லோருக்கும் எல்லோரிடமும் எவ்விதமாயாகவாவது ஏகஶரீரான்வயம் ஸம்பவிக்கலாம் என்ற அதிப்ரஸங்கம் ஏற்படும். (எனில்) அந்தத் தோஷத்தை மன்வாதிகளின் வசனங்களால் பரிஹரிக்க வேண்டும். அவ்விதமே மனு - ஸாபிண்ட்ய மானது 7-வது புருஷனிடத்தில் நிவர்த்திக்கின்றது.

गौतमः - 'गृहस्थः सदृशीं भार्यां विन्देतानन्यपूर्वां यवीयसीमसमान प्रवरैर्विवाहः ऊर्ध्वं सप्तमात् पितृबन्धुभ्यो बीजिनश्च मातृबन्धुभ्यः पञ्चमादिति ।। शङ्खश्च - 'दारा नाहरेत् सदृशान् समानार्षेयान् असम्बद्धान् सप्तमात्पञ्चमात् पितृमातृबन्धुभ्य' इति ।। वसिष्ठश्च — 'असमानार्षेयाम-स्पृष्ट मैथुनामवरवयसीं भार्यां विन्देत पञ्चमीं मातृबन्धुभ्यः सप्तमीं पितृबन्धुभ्य' इति । अतीत्येति शेषः ।।

*கௌதமர் - க்ருஹஸ்தனுகக் கூடியவன், ஜாதிகுலங்களால் தனக்குச் சமானமானவளும், இதரனுக்குக் கொடுக்கப்படாதவளும், வயதால் சிறியவளுமானவளை மணக்கவேண்டும். ஸமான ப்ரவரர்களல்லாதவர்களுடன் விவாஹம் செய்ய வேண்டும். பிதாவின் தலை முறையிலும், (பீஜீ) தன் பீஜத்தால் உருவாக்கிய பிதாவின் தலைமுறையிலும் 7-தலைமுறைக்கு மேலும், மாதாவின் தலைமுறையில் 5-தலைமுறைக்கு மேலும் விவாஹம் செய்யவேண்டும். சங்கர் - தனக்குச் சமமானவளும், ஸமானப்ரவரம் இல்லாதவளும், மாதாபிதாக்களின் வழியில் 5,7-க்கு மேற்பட்டவளு மானவளை மணக்க வேண்டும். வஸிஷ்டர் - ஸமான பிரவரமில்லாதவளும் இதரனும் சேராதவளும் வயதில் சிறியவளும், பிதாக்களின் வழியில் 5-7க்கு மேற்பட்டவளுமானவளை மணக்க வேண்டும்.*

यदाह पैठीनसिः - 'असमानार्षेयां कन्यां पञ्च मातृतः परिहरेत् सप्त पितृत' इति ।। विष्णुरपि — 'असगोत्रामसमानप्रवरां भार्यां विन्देत मातृतः पञ्चमादूर्ध्वं पितृतः सप्तमादिति ।। याज्ञवल्क्यः - 'अविप्लुतब्रह्मचर्यो लक्षण्यां स्त्रियमुद्वहेत् । अनन्यपूर्विकां कान्तामसपिण्डां यवीयसीम् ।। अरोगिणीं भ्रातृमतीमसमानार्षगोत्रजाम् । पञ्चमात् सप्तमादूर्ध्वं मातृतः पितृतस्तथेति ।। अनन्यपूर्विकां पूर्वं पुरुषान्तरापरिगृहीताम्, कान्तां कमनीयां वोढुर्मनोनयनानन्दकारिणीम् यस्यां मनश्चक्षुषोर्निबन्धस्तस्यामृद्धिरित्याप-

स्तम्ब स्मरणात्। यवीयसीं - वयसा प्रमाणतश्च न्यूनां उद्वहेदित्यर्थः ॥

*பைடீநஸி* - ஸமானப்ரவரமில்லாதவளை மணக்க வேண்டும். மாதாவின் வழியில் 5-ம், பிதாவின் வழியில் 7-தலைமுறையும் பரிஹரிக்க வேண்டும். *விஷ்ணு* - ஸமானகோத்ரமில்லாதவளும், ஸமானப்ரவரமில்லாதவளும் ஆனவளை, மாதாவிலிருந்து 5, பிதாவிலிருந்து 7-க்கு மேல் விவாஹம் செய்து கொள்ளலாம். *யாக்ஞவல்க்யர்* - விதிமுறைதவருது ப்ரம்மசர்யத்தை அனுஷ்டித்தவன், லக்ஷணங்களுடையவளும், முன் வேறு புருஷனுல் பரிக்ரஹிக்கப்படாதவளும், மனத்திற்கும் கண்ணுக்கும் இன்பத்தைக் கொடுப்பவளும், ஸபிண்டையல்லாதவளும், வயதாலும், உருவத்தாலும் சிறியவளும், ரோகமில்லாதவளும், ஸஹோதரனையுடையவளும், ஸமான கோத்ரப்ரவரங்களில்லாதவளும், மாதாவின் வம்சத்தில் 5-க்கு மேலும், பிதாவின் வம்சத்தில் 7-க்கு மேலும் உள்ளவளுமான ஸ்த்ரீயை விவாஹம் செய்து கொள்ள வேண்டும். 'எவளிடத்தில் மனதிற்கும், கண்ணிற்கும் பிடிப்பு உண்டாகின்றதோ அவளை மணந்தால் தர்மம் முதலியவைகளுக்கு வ்ருத்தி உண்டாகும்' என்று *ஆபஸ்தம்பர்* விதிக்கின்றூர்.

तत्र बृहस्पतिः - त्रिंशद्वर्षो दशाब्दां भार्यां विन्देत मानवः । एकविंशति वर्षो वा सप्तवर्षामवाप्नुयादिति । अङ्गिराः - 'वयोधिकां नोपगच्छेद्दीर्घां कन्यां स्वदेहतः । स्ववर्षाद्विपञ्चान्यूनां कन्यां समुद्वहेदिति ॥ विष्णुः - 'वर्षैरेकगुणां भार्या मुद्वहेत्त्रिगुणो वरः । त्र्यष्टवर्षोऽष्टवर्षां वा वयोमात्रावरां न च' इति ॥ वयोमात्रावरां नचेत्युक्तेः द्वित्रादिकतिपयमासैरूना नोद्वाह्या ॥

வயதின் குறைவைப் பற்றி *ப்ருஹஸ்பதி* 30-வயதுள்ளவன் 10-வயதுள்ளவளையும், அல்லது 21

வயதுள்ளவன் 7-வயதுள்ளவளையும், பார்யையாக அடையலாம். அங்கிரஸ் - தன்னை விட வயதால் பெரியவளும், தேகத்தினுல் பெரியவளும் ஆன கன்யையை க்ரஹிக்கக் கூடாது. தன் வயதைவிட 2-3-5 வயது சிறியவளான கன்யகையைக் க்ரஹிக்க வேண்டும். விஷ்ணு - ஒரு மடங்கு வயதுள்ளவளை 3 மடங்கு வயதுள்ளவன், 24 வயதுள்ளவன் 8 வயதுள்ளவளை க்ரஹிக்கலாம். ஒரு வயது மட்டில் குறைந்தவளை க்ரஹிக்கக் கூடாது. இதனுல் மாதக் கணக்கால் குறைந்தவளை க்ரஹிக்கக் கூடாது. எனப்படுகிறது.

नारदः - 'हीनाङ्गामधिकाङ्गां च वराद्दीर्घां वयोधिकाम् । नोपेयाद्रोगिणीं नारीं दीर्घमायुर्जिजीविषु'रिति ॥ अरोगिणीमित्यत्र 'वातगुल्माश्मरीकुष्ठमहोदरभगन्दराः । अर्शांसि ग्रहणीत्यष्टौ महारोगाः प्रकीर्तिता' इत्युक्तमहारोगरहिताम् ॥ भ्रातृमतीं, पुत्रिकाकरणभयात् ॥ यदाह मनुः - 'यस्यास्तु न भवेद् भ्राता न विज्ञायेत वा पिता । नोपयच्छेत तां कन्यां पुत्रिकाधर्मशङ्कयेति ॥ अनेन पितुः सङ्कल्पमात्रादपि पुत्रिका भवतीति गम्यते ॥ अत एव गौतमः - 'अभिसन्धिमात्रात् पुत्रिकेत्येक' इति । सा च कथं पुत्रिका भवतीत्यपेक्षायां मनुराह - 'अपुत्रोऽनेन विधिना सुतां कुर्वीत पुत्रिकाम् । यदपत्यं भवेदस्यां तन्मम स्यात् स्वधाकरमिति ॥

நாரதர் - அங்கம் குறைந்தவளும், அங்கமதிகமாயுள்ளவளும், வரனைவிட உயரமானவளும், வயதால் பெரியவளும், ரோகமுடையவளுமான ஸ்த்ரீயை, வெகுநாள் பிழைத்திருக்க விரும்புகின்றவன் அடையக் கூடாது. ரோகமில்லாதவள் என்பதற்கு வாதம், குல்மம், அச்மரீ, குஷ்டம், மஹோதரம், பகந்தரம், அர்சஸ், க்ரஹணி என்ற எட்டு மகாரோகங்களில்லாதவள் என்று பொருள். ஸஹோதரனுடையவள் என்றது புத்ரிகாதர்ம பயத்தால்.

இதைப்பற்றி மனு - எவளுக்கு ப்ராதா இல்லையோ, பிதா அறியப்படவில்லையோ, அந்தக் கன்னியை மணக்கக்கூடாது. புத்ரிகாதர்மம் இருக்கலாம் என்ற ஸந்தேஹத்தால். இதனால் பிதாவின் மனதில் உள்ள ஸங்கல்பத்தினாலும் கூட புத்ரிகையாக ஆகின்றாள் என்று அறியப்படுகிறது. ஆகையால் தான் கௌதமர் 'மனதில் உள்ள ஸங்கல்பத்தாலும் புத்ரிகையாவாள் என்று சிலர் என்றார். புத்ரிகை ஆவது எவ்விதம் எனில் மனு - புத்ரனில்லாதவன் தன் பெண்ணைத் தானம் செய்யும் பொழுது 'இவளிடத்தில் பிறக்கும் பிள்ளை எனக்கு ம்ராத்தாதிகளைச் செய்பவனாக ஆகவேண்டும்' என்று ஸங்கல்பித்து இந்த விதியினால் தானம் செய்து புத்ரிகையாய்ச் செய்து கொள்ள வேண்டும்.

वसिष्ठोऽपि—'अभ्रातृकां प्रदास्यामि तुभ्यं कन्यामलङ्कृताम्। अस्यां यो जायते पुत्रः स मे पुत्रो भवेदिति ॥ इयमेव मे पुत्र इति वा। एतच्चाग्रे वक्ष्यते ॥ असमानार्षगोत्रजां - आर्षं प्रवरः। गोत्रं प्रसिद्धम्। समानता नामतो वेदितव्या। गोत्रप्रवरौ पृथक्पृथक्पर्युदासे निमित्तम्। असमानार्षजां असमानगोत्रजामिति च। 'परिणीय सगोत्रां तु समानप्रवरां तथेति भेदेन स्मरणात् ॥

வஸிஷ்டரும் - 'ப்ராதா இல்லாத இந்தப் பெண்ணை அலங்கரித்து உனக்குக் கொடுக்கிறேன். இவளிடத்தில் பிறக்கும் பிள்ளை எனக்குப் பிள்ளையாக ஆகவேண்டும்' என்றாவது, இவளே எனக்குப் பிள்ளை என்றாவது. இதைப்பற்றி மேலே சொல்லப்படும். ஆர்ஷமும் கோத்ரமும் ஸமானமாயில்லாதவள் என்பதன் பொருள் - ஆர்ஷம் என்பது ப்ரவரம். கோத்ரம் என்பது ப்ரஸித்தமானதே. ஸமானத்தன்மை பெயரால், 'ஸமானப்ரவரையும் கூடாது; ஸமானகோத்ரையும் கூடாது என்றாகும். அவ்விதம் ஸ்ம்ருதி இருப்பதால்.

बोधायनः — 'एकमेव ऋषिर्यावत् प्रवरेष्वनुवर्तते । तावत् समानगोत्रत्वमन्यत्राङ्गिरसो भृगोरिति ॥ समानगोत्रत्वं - समानप्रवरत्वम्। भृग्वङ्गिरोगणेषु विशेषमाह स एव — 'द्व्यार्षेयसन्निपाते अविवाहस्त्र्यार्षेयाणां, त्र्यार्षेयसन्निपाते पञ्चार्षेयाणामिति ॥ अत्र च असपिण्डामित्यनेन पितृष्वसृमातृष्वसृमातुलादिदुहितृनिषेधः । असगोत्रामित्यनेन असपिण्डाया अपि भिन्नसन्तानजायाः समानगोत्रजाया निषेधः । असमानप्रवरामित्यनेन असपिण्डजाया असगोत्रजाया अपि समानप्रवराया निषेधः । यथा यास्कवाधूलमौनमोकानां गोत्रभेदेऽपि तेषां भार्गववैतहव्यसावेदसेति समानप्रवरत्वम् ।

போதாயனர் - ஒரே ருஷி எவ்வளவு ப்ரவரங்களில் அனுவர்த்திக்கின்றதோ அவ்வளவும் ஸமான ப்ரவரங்கள் எனப்படும்; அங்கிரஸ், ப்ருகு இவையன்றி. ப்ருகு அங்கிரஸ் கணங்களில் விசேஷத்தைப்பற்றி போதாயனரே - மூன்று ப்ரவரருஷியுள்ளவர்கள், இரண்டு ப்ரவரருஷிகள் ஸமமாயிருக்குமிடத்திலும், 5 ப்ரவரமுள்ளவர்கள், மூன்றுப்ரவரங்கள் ஸமமாயிருக்குமிடத்திலும் விவாஹம் செய்யக் கூடாது என்றார். இங்கு 'அபிண்டாம்' என்பதால் அத்தையின் பெண், மாத்ருபகினியின் பெண், மாதுலன் முதலியவரின் பெண் இவர்களுக்கு நிஷேதம். 'அஸகோத்ராம் என்பதால், ஸபிண்டை இல்லாதவளாயினும், வேறுவம்சத்திற் பிறந்தவ ளாயினும், ஸமானகோத்ரத்திற் பிறந்தவளுக்கு நிஷேதம். 'அஸமான ப்ரவராம்' என்பதால் அஸபிண்டையாயினும், அஸகோத்ரையாயினும், ஸமான ப்ரவரத்திற் பிறந்தவளுக்கு நிஷேதம். எப்படியெனில், யாஸ்கர், வாதூலர், மௌனமோகர் இவர்களுக்குக் கோத்ரபேதமிருப்பினும், பார்கவ வைதஹவ்ய ஸாவேதஸ என்ற ப்ரவரங்களால் ஸாம்யமிருக்கின்றது.

पञ्चमात् सप्तमादूर्ध्वमिति। मातृतः - मातृसन्ताने पञ्चमादूर्ध्वम्। पितृतः - पितृसन्ताने सप्तमादूर्ध्वम्। सापिण्ड्यं निवर्तत इति शेषः। अतश्चायं सपिण्डशब्दोऽवयवशक्त्या वर्तमानः पङ्कजादिशब्दवन्नियतविषय एव। तथा च पित्रादयः षट् सपिण्डाः। पुत्रादयश्च षट्। आत्मा च सप्तमः। सन्तानभेदेऽपि यतः सन्तानभेदः तमादाय गणयेत्। यावत्सप्तम इति सर्वत्र योजनीयम्। सपिण्डासमानगोत्रासमानप्रवरासु भार्यात्वमेव नोत्पद्यते। रोगिण्यादिषु तूत्पन्नेऽपि भार्यात्वे दृष्टविरोध एवेति विज्ञानेश्वरेणोक्तम्। अप्रत्तानां तु स्त्रीणां सापिण्ड्यं त्रिपूरुषमिति विज्ञायत इति वसिष्ठवचनमाशौचविषयमिति विज्ञानेश्वरादिभिर्निर्णीतम्॥

பஞ்சமாத்ஸப்தமாதூர்த்வம் என்பதன் பொருள் - மாதாவின் வம்ஸத்தில் ஐந்தாமவனுக்குமேல்; பிதாவின் வம்ஸத்தில் ஏழாமவனுக்கு மேல், 'ஸாபிண்ட்யம் நிவர்த்திக்கின்றது' என்று சேர்க்கவும். ஆகையால் இந்த ஸபிண்டசப்தமானது அவயவசக்தியுடனிருந்து பங்கஜம் (தாமரை பற்றியது) முதலிய சப்தம்போல் நியதவிஷயமே. ஆகையால் பிதா முதல் ஆறுபேர்கள் ஸபிண்டர்கள். புத்ரன் முதல் ஆறுபேர்கள் ஸபிண்டர்கள். தான் ஏழாமவன். ஸந்தானத்தில் பேதமிருப்பின் எவனிடமிருந்து பேதமோ அவன் முதல் கணக்கிட வேண்டும். ஏழாமவன் வரையில் என்று எங்கும் சேர்க்க வேண்டும். ஸபிண்டா, ஸமானகோத்ரா, ஸமானப்ரவரா என்ற இவர்களிடத்தில் பார்யாத்வமே உண்டாவதில்லை. ரோகமுள்ளவள் முதலியவரிடத்தில் பார்யாத்வம் உண்டானாலும் த்ருஷ்ட விரோதமே. (ப்ரயோஜனமற்றது) என்று விக்ஞானேஸ்வரரால் சொல்லப்பட்டது. 'விவாஹமாகாத ஸ்த்ரீகளுக்கு ஸாபிண்ட்யம் மூன்று தலைமுறைவரையில் என்று தெரிகிறது' என்ற வஸிஷ்ட வசனம் 'ஆசௌச விஷயம்' என்றுவிக்ஞானேச்வரர் முதலியவர்களால் நிர்ணயிக்கப்பட்டது.

मातृगोत्रजामप्यपरिणेयां केचिदिच्छन्ति — 'मातुलस्य सुतामूढ्वा मातृगोत्रां तथैव च । समानप्रवरां चैव गत्वा चान्द्रायणं चरेदिति शातातपस्मरणात्, 'सगोत्रां मातुरप्येके नेच्छन्त्युद्वाहकर्मणीति व्याසस्मरणाच्चेति । मातृगोत्रामिति गोत्रग्रहणं सपिण्डपरिमित्यन्ये ॥ **अखण्डादर्शे** — 'कूटस्थमन्तरालेऽवस्थाप्य तमादायान्योन्यगणने सति पितृपक्षे सप्तपुरुषानतीत्य या कन्या विवाहेच्छोः पुरुषस्याष्टमी भवति सा विवाह्या । तथा मातृपक्षे च कूटस्थमारभ्यान्योन्यगणने सति पञ्च पुरुषानतीत्य या कन्या विवाहेच्छोः पुरुषस्य षष्ठी भवति सैव विवाह्येति ॥ एवं च बहुस्मृतिसंमतत्वात् पञ्चमात् सप्तमादूर्ध्वमेव विवाहः, न ततोऽर्वागिति स्थितम् ॥ तथा च **नारदः** — 'पञ्चमात् सप्तमादर्वाग् बन्धुभ्यः पितृमातृतः। अविवाह्या सगोत्रा च समानप्रवरा तथे'ति ॥ **विष्णुः** — 'पञ्चमात् सप्तमाद्धीनां यः कन्यामुद्वहेद्द्विजः । गुरुतल्पी स विज्ञेयः सगोत्रां चैवमुद्वहन्निति ॥

*மாத்ருகோத்ரத்தில் பிறந்தவளும் விவாஹத்திற்கு உரியவளல்லள் என்று சிலர் எண்ணுகின்றனர்; 'மாதுலன் பெண், மாத்ருகோத்ரத்திற் பிறந்தவள், ஸமானப்ரவர முள்ளவள் இவர்களை மணந்து அவளிடம் சென்றால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும்' என்று சாதாதப ஸ்ம்ருதியாலும், 'மாதாவின் கோத்ரமுடையவளும் விவாஹத்திற்கு உரியவளல்ல என்று சிலர்' என்ற வ்யாஸ ஸ்ம்ருதியாலும். மாத்ருகோத்ராம் என்றவிடத்தில் உள்ள கோத்ரபதம் ஸபிண்டா என்பதைச் சொல்லுகிறது என்று சிலர். அகண்டா தர்ஶத்தில் - கூடஸ்தனை நடுவில் வைத்து அவன் முதல் இருபுறமும் எண்ணியதில் பித்ரு வம்ஶத்தில் 7 புருஷர்களைத் தாண்டி எட்டாவதாகக் கணக்கிடப்படும் பெண்ணை மணக்கலாம். அவ்விதமே மாத்ருபக்ஷத்தில் கூட ஸ்தனை நடுவில் வைத்து எண்ணியதில் ஐந்து பேர்களுக்கு மேல் 6-வதாக ஆகும் பெண் விவாஹத்திற்கு உரியவள். இவ்விதமாக வெகு ஸ்ம்ருதிகளுக்கு ஸம்மதமா*

யிருப்பதால் 5-வது, 7-வதுக்கு மேல்தான் விவாஹம் உசிதம். அதற்குக்கீழ் உசிதமல்ல என்பது நிலைத்தது. அவ்விதமே நாரதர் - மாதா பிதாக்களின் பந்துக்களில் முறையே, 5,7-க்குள் உள்ளவளும், ஸகோத்ரையும், ஸமானப்ரவரையும் விவாஹத்திற்கு உரியவளல்லள். விஷ்ணு - 5,7-க்குக் குறைந்தவளையும், ஸகோத்ரையையும் மணப்பவன் குருதல்பகமனம் செய்தவனாகக் கருதப்படுவான்.

यत्तु — ''पञ्चमीं मातृपक्षात्तु पितृपक्षात्तु सप्तमीम्। गृहस्थ उद्वहेत् कन्यां न्याय्येन विधिनोत्तमामिति व्यासवचनम्, तत्पञ्चमीं सप्तमीमतीत्य उपरितनामुद्वहेदित्येवंपरम् ॥ अत एव मरीचिः — 'पञ्चमे सप्तमे चैव येषां वैवाहिकी क्रिया। क्रियापरा अपि हि ते पतिताः शूद्रतां गता' इति ॥ मनुः — पैतृष्वस्रेयीं भगिनीं स्वस्रेयीं मातुरेव च। मातुश्च भ्रातुस्तनयां गत्वा चान्द्रायणं चरेत्। एतास्तिस्रस्तु भार्यार्थे नोपयच्छेत्तु बुद्धिमान्। ज्ञातित्वेनानुपेयास्ताः पतितो ह्युपयन्नर इति ॥

''மாத்ருபக்ஷத்தில் ஐந்தாவதானவளையும், பித்ருபக்ஷத்தில் 7-வதானவளையும் விதிப்படி மணக்கலாம்'' என்று வ்யாஸவசனம் காணப்படுகிறதெனில், அது அவர்களைத் தாண்டி மேலே உள்ளவளை மணக்கலாம் என்று பொருள் உள்ளது. ஆகையால் தான் மரீசி - '5-லும், 7-லும் விவாஹம் செய்து கொண்டவர்கள் ஸத்கர்மத்தை அனுஷ்டிப்பவர்களாயினும், பதிதர்களாகி, சூத்ரத்தன்மையை அடைகின்றனர் என்றார். மனு - அத்தையின் பெண், தன் பகினீ, மாத்ரு பகினியின் பெண், மாதுலனின் பெண் இவர்களைச் சேர்ந்தால் சாந்த்ராயணம் அனுஷ்டிக்க வேண்டும். நற்புத்தியுள்ளவன், இம்மூவர்களையும் விவாஹம் செய்து கொள்ளக் கூடாது. இம்மூவர்களும் ஞாதிகளானதால் அவர்களைச் சேரக்கூடாது. சேருகின்றவன் பதிதனாவான்.

व्यासः — 'जन्मनाम्नोरविज्ञान उद्वहेदविशङ्कितः। मातुः सपिण्डा यत्नेन वर्जनीया द्विजातिभिः ॥ तृतीयां मातृतः कन्यां तृतीयां पितृतस्तथा। शुल्केन चोद्वहिष्यन्ति विप्राः पापविमोहिता इति ॥ मातृतः - मातृपक्षे तृतीयां मातुलसुतां, पितृतः- पितृपक्षे तृतीयां पैतृष्वस्रेयीमित्यर्थः। शातातपः — 'समानप्रवरां कन्या मेकगोत्रामथापि वा। विवाहयति यो मूढस्तस्य वक्ष्यामि निष्कृतिम् ॥ उत्सृज्य तां ततो भार्यां मातृवत् परिपालयेत्। कृत्वा तस्यास्समुत्सर्गमतिकृच्छ्रं विशोधनमिति ॥

*வ்யாஸர் -பிறப்பும் பெயரும் தெரியாவிடில், சங்கையின்றி மணக்கலாம். மாதாவின் ஸபிண்டைகளைக் கவனித்து வர்ஜிக்க வேண்டும். (கலியில்) மாமன் பெண்ணையும், அத்தையின் பெண்ணையும், விலைக்கு வாங்கிய பெண்ணையும், ப்ராமணர்கள் பாபத்தால் மதிமயங்கி மணப்பார்கள். சாதாதபர் - ஸமான ப்ரவரையை அல்லது ஸமானகோத்ரையை விவாஹம் செய்துகொண்ட மூடனுக்கு ப்ராயச்சித்தம் சொல்லுகிறேன். அவளைப் பார்யையல்ல என்று விட்டு மாதாவைப் போல் பரிபாலிக்க வேண்டும். அவளைத்யாகம் செய்தால் அதிக்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும்.*

आपस्तम्बः — 'समानप्रवरां कन्यां सगोत्रामुपगम्य च। तस्यामुत्पाद्य चण्डालं ब्राह्मण्यादेव हीयत' इति ॥ कल्पसारे — 'अमत्योढा सगोत्रा चेन्मातृवद्बिभृयात्तु ताम्। चान्द्रायणं चरित्वाऽन्यामुपयच्छेत कन्यकाम्। कृच्छ्राब्दपादं कुर्वीत प्रजाता यदि सा भवेत्। मिन्दाहुती द्वे जुहुयात् तस्यान्ते चरितव्रतः ॥ तस्यां प्रसूतो निर्दोषः काश्यपो गोत्रतः स्मृतः। ऊढा चेद्बुद्धिपूर्वं स्याद्गुरुतल्पव्रतं चरेत् ॥ तस्यां प्रसूतश्चण्डालः सर्वकर्मबहिष्कृत इति ॥

*ஆபஸ்தம்பர் - ஸமானப்ரவரை, ஸகோத்ரை இவர்களிடம் ஸங்கமம் செய்தால், ப்ராம்மண்யத்தை இழப்பான். அவளிடத்தில் பிறக்கும் பிள்ளை*

சண்டாளனாவான். கல்பஸாரத்தில் - ஸகோத்ரையை அறியாமல் விவாஹம் செய்து கொண்டவன், அவளை மாதாவைப் போல் போஷிக்க வேண்டும். சாந்த்ராயணம் அனுஷ்டித்துப்பிறகு வேறு கன்யகையை மணக்க வேண்டும். அறியாமையால் ஸகோத்ரரையினிடம் புத்ரன் பிறந்து விட்டால் அப்தக்ருச்ரமும் பாதக்ருச்ரமும் அனுஷ்டித்து வ்ரதத்தின் முடிவில் 2 மிந்தாஹுதிகளை ஹோமம் செய்ய வேண்டும். அவளிடம் பிறந்த பிள்ளை தோஷமற்றவன். காஸ்யபகோத்ரமுடையவனாவான். புத்தி பூர்வமாய் விவாஹம் செய்து கொண்டவன் குருபத்னீகமன ப்ராயச்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். அவளிடம் பிறந்த பிள்ளை சண்டாளன். ஒரு கர்மத்திற்கும் அர்ஹனல்லன்.

स्मृत्यर्थसारे — 'यदि कश्चित् ज्ञानतस्तां कन्यामूढ्वोपगच्छति। गुरुतल्पव्रताच्छुद्धो गर्भस्तज्जोऽन्त्यतां व्रजेत् ॥ भोगतस्तां परित्यज्य पालयेज्जननीमिव । अज्ञानाच्चेदैन्दवेन शुध्यद्गर्भस्तु काश्यप' इति ॥ आपस्तम्बः — 'सगोत्राय दुहितरं न प्रयच्छेन्मातुश्च योनिसम्बन्धेभ्य इति। माधवीये पाराशरे — 'पितुः पितृष्वसुः पुत्राः पितुर्मातृष्वसुः सुताः । पितुर्मातुलपुत्राश्च विज्ञेयाः पितृबान्धवाः । मातुः पितृष्वसुः पुत्रा मातुर्मातृष्वसुः सुताः । मातुर्मातुलपुत्राश्च विज्ञेया मातृबान्धवाः ॥ विवाहो नेष्यते तत्र पितुर्मातुश्च बन्धुष्विति ॥

ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் — ஸகோத்ரையைப் புத்திபூர்வமாய் விவாஹம் செய்து அவளிடம் ஸங்கமம் செய்பவன் குருபத்னீ கமனத்திற்குள்ள ப்ராயச்சித்தத்தை அனுஷ்டிக்க வேண்டும். அவளிடம் பிறந்த குழந்தை சண்டாளனாவான். அவளை மாதாவைப் போல் போஷிக்க வேண்டும் அக்ஞானத்தால் ஏற்படும் விஷயத்தில் சாந்த்ராயணத்தால் சுத்தி. பிறந்த பிள்ளை காஸ்யபகோத்ரனாவான். ஆபஸ்தம்பர் - ஸகோத்ரனுக்குப் பெண்ணைக் கொடுக்கக் கூடாது. (பெண்ணின்) மாதாவின்

பந்துக்களான மாதுலன் முதலியவர்கட்கும் கொடுக்கக் கூடாது. பாராசர மாதவீயத்தில் -பிதாவின் அத்தை, பிதாவின் மாத்ருபகினீ, பிதாவின் மாதுலன் என்ற இவர்களின் பெண்களும் பிள்ளைகளும் பித்ருபந்துக்கள் எனப்படுவர். மாதாவின் அத்தை, மாதாவின் மாத்ருபகினீ, மாதாவின் மாதுலன் என்ற இவர்களின் பெண்களும், பிள்ளைகளும் மாத்ருபந்துக்கள் எனப்படுவர். இந்தப் பித்ரு மாத்ரு பந்துக்களிடத்தில் விவாஹம் செய்வது சாஸ்த்ரஸம்மதமன்று.

सुमन्तुः—'पितृष्वसृसुतां मातृष्वसृसुतां मातुलसुतां मातृसगोत्रा-मुद्वाह्य चान्द्रायणं चरेत् परित्यज्यैनां बिभृयादिति ।। पैठीनसिः — 'पितृमातृष्वसृदुहितरौ मातुलसुता धर्मतो भगिन्यस्ता वर्जयेदिति ।। स एव — 'उद्वहेत सगोत्रां तु तनयां मातुलस्य च। ऋषिभिश्चैव तुल्योऽपि स तु चान्द्रायणं चरेदिति ।। गौतमः— 'ब्रह्महसुरापगुरुतल्पगपितृमातृ-योनिसम्बन्धगस्तेननास्तिक निन्दितकर्माभ्यासिपतितात्याग्य-पतितत्यागिनः पतिताः पातकसंयोजकाश्चेति ।।

ஸுமந்து - அத்தையின் பெண், மாத்ருபகினியின் பெண், மாதுலனின் பெண், மாதாவின் ஸகோத்ரை இவர்களை விவாஹம் செய்து கொண்டால் சாந்த்ராயணம் செய்ய வேண்டும். அவளை மாதாவைப் போல் போஷிக்க வேண்டும். பைடீநஸி - அத்தையின் பெண், மாத்ரு பகினியின் பெண், மாதுலனின் பெண் இவர்கள் பகினிக்குச் சமமானவர்கள். ஆகையால் அவர்களை மணக்கக் கூடாது. ஸகோத்ரையையும், மாதுல புத்ரியையும் விவாஹம் செய்து கொண்டவன் ருஷிகளுக்குச் சமனானாலும் சாந்த்ராயணத்தை அனுஷ்டிக்க வேண்டும். கௌதமர் - ப்ராமணனைக் கொன்றவன், ஸுராபானம் செய்தவன், குருபத்னியைச் சேர்ந்தவன், மாதாவின் வம்ஶத்தில் ஐந்துக்குள் உள்ள பெண்கள், பிதாவின் வம்சத்தில் ஏழுக்குள் உள்ள பெண்கள், தன் பகினீ முதலியவர்கள் இவர்களைச் சேர்ந்தவன், ஸ்வர்ணத்தைத் திருடியவன்,

தைவமில்லை என்ற புத்தியுள்ள நாஸ்திகன், நிஷித்த கர்மத்தைப் புத்தியுடன் அடிக்கடி செய்பவன், பதிதர்களை விடாதவன், பதிதல்லாதாரை த்வேஷத்தால் விட்டவன் இவர்கள் பதிதர்கள் எனப்படுவர். பாதகத்தில் பிறரை ப்ரவ்ருத்தி செய்வித்தவரும் பதிதர்களாவர்.

चन्द्रिकायाम् — 'स्त्रीसन्ततिस्तथा पुंसां न विवाह्ये उभे मते । स्त्रीपुंसोस्तु विवाह्या स्यात् पञ्चमात्सप्तमात् परमिति ।। चतुर्थीमुद्वहेदित्या-दीन्यर्वाग्विवाहपराणि वचनानि विजातीयविषयाणि ।। यदाह शङ्खः — 'यद्येकजाता बहवः पृथक्क्षेत्राः पृथग्जनाः । एकपिण्डाः पृथक्छौचाः पिण्डस्त्वावर्तते त्रिष्विति ।। एकस्मात् ब्राह्मणादेर्जाताः, पृथक्क्षेत्राः - भिन्नजातीयासु स्त्रीषु जाताः । पृथग्जनाः - समानजातीयासु भिन्नासु स्त्रीषु जाताः । ते एकपिण्डाः सपिण्डाः । किन्तु पृथक्छौचाः । शौचमाशौचप्रकरणे वक्ष्यते । पिण्डस्त्वावर्तते त्रिष्विति - त्रिपूरुषमेव सापिण्ड्यमित्यर्थः ।।

சந்த்ரிகையில் - மாதாவின் ஸந்ததியும், பிதாவின் ஸந்ததியும் விவாஹத்திற்கு அர்ஹமல்ல. மாதாவின் வம்ஸத்தில் ஐந்துக்கு மேலும், பிதாவின் வம்ஸத்தில் ஏழுக்கு மேலும் விவாஹம் செய்யலாம். நாலாமவளை மணக்கலாம் என்றது முதலான வசனங்கள் விஜாதீய விஷயங்களாம். சங்கர் - ஒரு ப்ராமணன் முதலியவனிடம் பிறந்தவர்கள், வேறு ஜாதியுள்ள ஸ்த்ரீகளிடம் பிறந்தவர்களும், ஸமான ஜாதிகளான வெவ்வேறு ஸ்த்ரீகளிடத்தில் பிறந்தவளும் ஆனால் அவர் ஸபிண்டர்கள், தனியான ஆசௌசமுடையவர்கள். ஆசௌசத்தைப் பற்றி ஆசௌசப்ரகரணத்தில் சொல்லப்படும். இவர்களுக்கு ஸாபிண்ட்யம் மூன்று தலைமுறை தான்.

तथैव चतुर्थीविवाहः क्षत्रियाविषय इति व्यक्तमुक्तवान खण्डादर्शकारः - 'त्रीनतीत्य मातृतः पञ्चातीत्य पितृत इति पैठीनसिवचनं क्षत्रियाविषयमिति व्याख्येयमिति । 'तृतीयात् क्षत्रियां मातुः पञ्चमात्

सप्तमात्परम्। समुद्वहेत् सवर्णां तु पञ्चमात्मत्सप्तमात्परामिति कण्ववचन-बलात् त्रीनतीत्य मातृत इति पैठीनसिवचनं क्षत्रियाविषयमिति वरदराजीये विनिर्णीतम् ॥ विज्ञानेश्वरीयेऽपि - 'यदपि वसिष्ठेनोक्तं पञ्चमीं सप्तमीं चैव मातृतः पितृतस्तथेति, यदपि 'त्रीनतीत्य मातृतः पञ्चातीत्य पितृत इति पैठीनसिना, तदप्यर्वाङ्निषेधार्थं न पुनस्तत्प्राप्त्यर्थमिति सर्वस्मृतीनामविरोधः।

*அவ்விதமே 'நான்காமவளை மணப்பது க்ஷத்ரியையின் விஷயம் என்று ஸ்பஷ்டமாய் அகண்டாதர்மகாரர் சொல்லியிருக்கின்றார். 'மாதாவின் வம்மத்தில் மூன்று பிதாவின் வம்மத்தில் ஐந்து தலைமுறை தாண்டி என்ற பைடீநஸிவசனம் க்ஷத்ரியையின் விஷயம் என்று வ்யாக்யானம் செய்ய வேண்டும்' என்று. 'தாயின் வழியில் 3-க்கு மேலும், பிதாவின் வழியில் 5-க்கு மேலுள்ள க்ஷத்ரியையை மணக்கலாம். 'ஸவர்ணையை 5-7- க்கும் மேல் தான் மணக்கலாம்' என்ற கண்வவசனத்தின் பலத்தால் முன் சொல்லிய பைடீநஸி வசனம் க்ஷத்ரியையின் விஷயம்' என்று வரதராஜீயத்தில் நிர்ணயிக்கப்பட்டது. விஜ்ஞானேச்வரீயத்திலும் 5-7க்கு பிறகு என்ற வஸிஷ்ட வசனமும் 3-5- க்கு மேல் என்ற பைடீநஸிவசனமும் அதற்குக் கீழ் உள்ளதை நிஷேதிப்பதற்கே தவிர மற்றதை விதிப்பதற்கல்ல என்பதால் ஸர்வஸ்ம்ருதிகளுக்குள்ள விரோதம் பரிஹரிக்கப்பட்டது.*

एतच्च 'पञ्चमात् सप्तमादूर्ध्वं मातृतः पितृतस्तथेति वचनं समानजातीये द्रष्टव्यम्। विजातीयेतु 'यद्येकजाता बहव इति शङ्खवचनात् त्रिपुरुषमेव सापिण्ड्य'मिति सार्वभौमीये ॥

*இந்த 5,7 க்கு மேல் என்ற வசனம் ஸஜாதீய விஷயம். பின்னஜாதீய விஷயத்தில் முன் சொல்லிய சங்கவசனப்படி ஸாபிண்ட்யம் மூன்று தலைமுறை வரையில் தான் என்று ஸார்வபௌமீயத்தில்.*

चतुर्थ्यादिविवाहे प्रवर्तमानस्य लोकस्य भ्रान्तिरेव मूलम् । विजातीयविषयस्य 'चतुर्थीमुद्वहे' दित्यादिवचनस्य सजातीयविषयत्वानवगमात् । अन्धपरंपरा वा । नान्यत् किञ्चिन्मूलम् । यदि कथञ्चित् किञ्चिद्वचनं कृच्छ्रलब्धं तथाऽपि 'मन्वर्थविपरीता तु या स्मृतिः सा न शस्यते। एकतः सर्वमुनयो याज्ञवल्क्यस्तथैकतः । यदुक्तवान् धर्मशास्त्रं तत् प्रमाणं प्रतीयतामिति मनुयाज्ञवल्क्यादिप्रबलस्मृतिविरोधेन तदेव त्याज्यम् । एवं शास्त्रविरोधे लोकाचारश्च त्याज्यः ॥

*நாலாமவள் முதலியவர்களை மணப்பதில் ப்ரவர்த்திக்கும் ஜனங்களுக்கு பிரமையே காரணம். நாலாமவளை மணக்கலாம் என்று சொல்லும் வசனம் விஜாதீய விஷயம் என்றிருப்பதால் ஸஜாதீய விஷயம் என்பது அறியப்படாததால். குருட்டுப் பரம்பரையாவது காரணமாகலாம். வேறுஒன்று மூலமில்லை. சிரமப்பட்டு ஏதாவது வசனம் கண்டுபிடிக்கப்பட்டாலும் அது, 'மனுஸ்ம்ருதிக்கு விரோதமான ஸ்ம்ருதியானது ச்லாக்யமல்ல' 'ஸகல முனிகளும் ஒருபுறம், யாக்ஞவல்க்யர் ஒருபுறம்; ஆகையால் அவர் சொல்லிய தர்மசாஸ்த்ரமே ப்ராமணம் என்று அறியத்தக்கது' என்றிருப்பதால் ப்ரபலமான மனு யாக்ஞவல்க்யாதிகளின் ஸ்ம்ருதிகளுக்கு விருத்தமாயிருப்பதால் விடத்தகுந்தது. இவ்விதம் சாஸ்த்ர விரோதமேற்பட்டால் லோகாசாரத்தையும் விடவேண்டியது.*

तथा कात्यायनः — 'स्मृतेर्वेदविरोधे तु परित्यागो यथा भवेत् । तथैव लौकिकाचारं स्मृतिबाधात् परित्यजेदिति ॥ वसिष्ठोऽपि — 'श्रुतिस्मृतिविहितो धर्मस्तदलाभे शिष्टाचारः प्रमाणमिति ॥ शास्त्रविरोधे शिष्टाचारो न प्रमाणमित्यर्थः ॥ तथाह गौतमः - 'देशजातिकुलधर्मा आम्नायैरविरुद्धाः प्रमाण'मिति ॥ तदेवं 'असवर्णासु नारीषु विवाहश्च द्विजातिभि'रिति कलावसवर्णविवाहनिषेधात्, मनुयाज्ञवल्क्यादिभिरपि

पञ्चमात्सप्तमादूर्ध्वमेव विवाहविधानात्, तदर्वाक्पातित्यादि प्रत्यवायस्मरणाच्च पञ्चमात्सप्तमादर्वाग्विवाहो निन्दितः ॥

*அவ்விதமே காத்யாயனர் - வேதத்திற்கு விருத்தமான ஸ்ம்ருதியைத் தள்ளுவதுபோல், ஸ்ம்ருதிக்கு விருத்தமான லோகாசாரத்தைத் தள்ளவேண்டும். அவைகள் கிடைக்காவிடில், சிஷ்டாசாரம் ப்ரமாணம். சாஸ்த்ர விருத்தமான சிஷ்டாசாரம் ப்ரமாணமல்ல என்பது பொருள். அவ்விதமே கௌதமர் - தேசதர்மம், ஜாதிதர்மம், குலதர்மம் இவைகள் சாஸ்த்ரங்களுடன் விருத்தங்களில்லாவிடில் ப்ரமாணங்கள். ஆகையால் இவ்விதம் கலியில் அஸவர்ணைகளின் விவாஹம் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும், மனு, யாக்ஞவல்க்யர் முதலியவர்களாலும் 3, 7 க்கு மேற்பட்டே விவாஹம் விதிக்கப்பட்டிருப்பதாலும், அதற்குக் கீழ் விவாஹத்தில் பாதித்யம் முதலிய கேடுகள் சொல்லப்பட்டிருப்பதாலும், 5,7 க்கு முன் விவாஹம் நிஷித்தமே.*

एवमापञ्चमात् सपत्नीमातृबन्धुवर्गोऽपि परिहार्यः । तत्र एकशरीरावयवान्वयलक्षणसापिण्ड्याभावेऽप्यतिदेशेन सापिण्ड्यसिद्धेः ॥ तथा सुमन्तुः - 'पितृपत्न्यः सर्वा मातरस्तद्भ्रातरो मातुलास्तत्सुता मातुलसुतास्तत्स्वसारश्च मातृष्वसारस्तत्सुता मातृष्वसृसुतास्तद्दुहितरश्च भगिन्यस्तदपत्यानि भागिनेयानि तस्मात्ता नोपयन्तव्या अन्यथा सङ्करकारिकाः स्युरिति ॥

*இவ்விதம் ஐந்து தலைமுறை வரையில் ஸபத்னீ மாதாவின் பந்துவர்க்கமும் பரிஹரிக்கத் தகுந்தது. அதிலும் அதிதேசத்தால் ஸாபிண்ட்யம் ஸித்திப்பதால். அவ்விதம் ஸுமந்து - பிதாவின் பத்னிகள் எல்லோரும் மாதாக்கள், அவர்களின் ப்ராதாக்கள் மாதுலர்கள், அவர்களின் பெண்கள் மாதுலர்களின் பெண்கள், அவர்களின் பகினிகள் மாத்ருபகினிகள், அவர்களின் குழந்தைகள் மாத்ருபகினியின் குழந்தைகள். ஆகையால் அவர்களைச்*

சேரக்கூடாது. சேர்ந்தால் வர்ணஸங்கரம் செய்தவர்கள் ஆவார்.

स्मर्यते च सापिण्ड्यम् — 'एकत्वं सा गता भर्तुः पिण्डे गोत्रेऽथ सूतक' इति ।। भर्तुः पत्न्या सहैकशरीरोत्पादनलक्षणसापिण्ड्य सद्भावाच्च पुत्रादीनां पितृशरीरावयवान्वयद्वारेण सपत्नीमातृतत्सपिण्डैः सह भवति सापिण्ड्यम् । अत एव हि 'मातृतः पितृतस्तथा, मातृबन्धुभ्यः, पञ्चमीं मातृपक्षाच्चे' त्यादिषु सामान्येन मातृमात्रशब्दः प्रयुक्तः, न जननीशब्दः । तस्माज्जननीबन्धुवर्गवत् सपत्नीमातृयोनिसम्बन्धबन्धुवर्गश्च परिहार्य एव।

ஸ்ம்ருதியிலும் ஸாபிண்ட்யம் சொல்லப்படுகிறது - 'அவள் பர்த்தாவின் பிண்டத்திலும் கோத்திரத்திலும், ஸூதகத்திலும் ஒருமையை அடைந்தவளாகிறாள்' என்று. பிதாவுக்குப் பத்னியுடன் ஏகசரீரோத்பாதநரூபமான ஸாபிண்ட்யம் இருப்பதால் புத்ரன் முதலியவருக்கும் பித்ருசரீராவயவஸம்பந்தத்தின் வழியாய் ஸபத்னீ மாதாவுடனும் அவளின் ஸபிண்டர்களுடனும் ஸாபிண்ட்யம் ஏற்படுகிறது. ஆகையால்தான் முன் சொல்லிய வசனங்களில் ஸாதாரணமான மாத்ரு சப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஜநநீ (பெற்றவள்) சப்தம் ப்ரயோகிக்கப்படவில்லை. ஆகையால் மாதாவின் பந்து வர்க்கத்தைப் போல் ஸபத்னீ மாதாவின் பந்து வர்க்கத்தையும் பரிஹரிக்க வேண்டியது ஆவச்யகம்.

स्मृत्यन्तरे— 'भ्रातुस्तु पत्नीभगिनीं तत्सुतां चैव वर्जयेदिति ।। एवं सामान्येन पितृशब्दप्रयोगाज्जनकव्यतिरिक्तपितृकुलमपि सप्तमावधि परिहार्यम् ।। तथा च गौतमः — 'असमानप्रवरैर्विवाह ऊर्ध्वं सप्तमात् पितृबन्धुभ्यो बीजिनश्चेति ।। परक्षेत्रे नियोगादुत्पन्नः पुत्रः उभयोरपि भवति। 'अपुत्रेण परक्षेत्रे नियोगोत्पादितः सुतः । उभयोरप्यसौ रिक्थी पिण्डदाता च धर्मत' इति याज्ञवल्क्यस्मरणात्, 'बीजिनः क्षेत्रिणश्चैव द्व्यामुष्याणको हि सः' इति स्मृत्यन्तराच्च ।। तथा दत्तादीनां द्व्यामुष्यायणत्वेन गोत्रद्वयं

परिहार्यम्। 'गोत्ररिक्थे जनयितुर्न हरेद्दत्तिमस्सुतः ॥ जनकस्य तु गोत्रेण ह्युपनीतो द्विगोत्रकः । (पश्चाद्दत्त इत्यर्थः) उपनेतुर्भजेद्गोत्रमसंप्रज्ञातगोत्रवान् । प्रज्ञातगोत्रस्तु भजेदुभयं दत्तपुत्रवदिति स्मरणात्॥

வேறு ஸ்ம்ருதியில் ப்ராத்ருபத்னியின் பகினியையும், அவளின் பெண்ணையும், பிதாவின் பத்னியின் பகினியையும் அவளின் பெண்ணையும் வர்ஜிக்க வேண்டும். இவ்விதம் பித்ரு சப்தத்தையே ப்ரயோகித்திருப்பதால், ஜனகசப்தத்தை ப்ரயோகிக்காததால், ஜநகனைத் தவிர்த்த பிதாவின் குலமும் 7 தலைமுறையில் பரிஹரிக்கப்பட வேண்டும். அவ்விதமே கௌதமர் - ஸமானப்ரவர்களல்லாதவர்களுடன் விவாஹம் செய்ய வேண்டும். பிதாவின் பந்துக்களில் 7- தலைமுறைக்கு மேல். பீஜிபிதாவின் பந்துக்களிலுமப்படியே. 'அன்யனின் க்ஷேத்ரத்தில் (பத்னியினிடத்தில்) புத்ரனில்லாத தேவரனால் நியோகத்தினால் உற்பத்தி செய்யப்பட்ட புத்ரன் இரண்டு விதமான பிதாக்களின் தனத்தை அடையவும், இருவர்களுக்கும் ஶ்ராத்தம் செய்யவும் உரியவன்' என்று யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதியாலும், ''பீஜீ, க்ஷேத்ரீ என்ற 2 பிதாக்களுக்கும் புத்ரனவன், த்வ்யாமுஷ்யாயணகனானதால் (இருவருக்கும் உரியவன்) என்று வேறு ஸ்ம்ருதியாலும். அதுபோல் தத்தன் முதலானவர்களும் ஆனதால், அவர்களும் இரண்டு பிதாக்களின் கோத்ரங்களைப் பரிஹரிக்க வேண்டும்; ''தத்தனான புத்ரன், ஜனகனின் கோத்ரம், தனம் இவைகளை அடைவதில்லை. ஜனககோத்ரத்தால் உபநயனம் பெற்றுப் பிறகுதத்தனானவன்இரண்டு கோத்ரங்களுடையவனாவான். கோத்ரம் தெரியாதவன் உபநயனம் செய்பவனின் கோத்ரத்தை அடைவான். கோத்ரம் தெரிந்தால் தத்தன் போல் இரண்டு கோத்ரங்களையும் அடைவான்.'' என்ற ஸ்ம்ருதியால்.

तथा पैठीनसिः — 'अथ दत्तक्रीतकृत्रिमपुत्रिकापुत्राः परिग्रहेणार्षेण

जातास्ते संहतगोत्रा द्व्यामुष्यायणा भवन्तीति ॥ अत उभयत्र पञ्चमात् सप्तमादूर्ध्वमेव विवाह इति विज्ञानेश्वरीयाखण्डादर्शवरदराजीयादिषु निर्णीतम् ॥

*அவ்விதம் பைடீநஸி - 'தத்தன், க்ரீதன், க்ருத்ரிமன், புத்ரிகா புத்ரன் இவர்கள் இரண்டு கோத்ரமுடையவர்கள், த்வ்யாமுஷ்யாயணர்கள் எனப்படுவர். ஆகையால் இருகுலத்திலும் 5,7 க்கு மேல் தான் விவாஹம் என்று விக்ஞானேச்வரீயம், அகண்டாதர்சம், வரதராஜீயம் முதலியவைகளில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.*

अपरे तु चन्द्रिकाकारादय आहुः — 'एकोद्देश्यावच्छेदेनैक-क्रियान्वयिन एव सपिण्डा इति ॥ तथा च मार्कण्डेयः - असपिण्डां मातरं च वाङ्मात्रेण तथैव च । स्वसारमसपिण्डां च मातृवद्वर्जयेत् सदेति ॥ वसिष्ठः — 'वाङ्मात्रेण स्वसारं च मातरं च तथैव च । असपिण्डां मातरं च वर्जयेन्मातृवत्सदेति ॥ जाबालिः - 'पिता पितामहश्चैव तथैव प्रपितामहः । पिण्डसम्बन्धिनो ह्येते विज्ञेयाः पुरुषास्त्रयः ॥ लेपसम्बन्धिनश्चान्ये पितामहपितामहात् । प्रभृत्युक्तास्त्रयस्तेषां यजमानस्तु सप्तमः ॥ इत्येषु मुनिभिः प्रोक्तः सम्बन्धः सप्तपूरुष' इति ॥

*சந்த்ரிகாகாரர் முதலிய சிலரோவெனில் - ஏகோத்தேஶ்யத்துடன்ஏகக்ரியையில் ஸம்பந்த முள்ள வர்களே ஸபிண்டர்கள் என்கின்றனர். அவ்விதமே மார்க்கண்டேயர் - 'பிதா முதல் மூவர் பிண்டபாக்குகள்; அதற்கு மேல் உள்ள மூவர் லேபபாக்குகள்; யஜமானன் ஏழாமவன். இவ்விதம் ஸம்பந்தம் ஏழு புருஷர்கள் வரையில்.*

एवं च सति मातुलसुतादीनामेकपिण्डक्रियानुप्रवेशाभावेना-सपिण्डत्वात् तद्विवाहोऽभिमत एव । पञ्चमान्मातृतः, सगोत्रां मातुरप्येके नेच्छन्तीत्यादि वचनजातं पुत्रिकाकरणविषयमासुरादिविवाहोढासन्तति-

विषयं च। अन्यथा मातुः पतिगोत्रत्वेन गोत्रान्तराभावात्। न च भूतपूर्वगत्या मातृसगोत्रत्वं वर्तमाने संभवति। भूतपूर्वगतेरन्यायत्वात्। पतिगोत्रत्वं च 'स्वगोत्राद् भ्रश्यते नारी विवाहात् सप्तमे पदे। एकत्वं सा गता भर्तुः पिण्डे गोत्रेऽथ सूतक' इत्यादिस्मृतिभ्योऽवगम्यते॥

*இவ்விதமிருக்க, அம்மான் பெண் முதலியவர்களுக்கு ஏகபிண்டக்கிரியானுப்ரவேசமில்லாததால் அவர்கள் அஸபிண்டைகளானதால் அவர்களை மணப்பது இஷ்டமானதே. 'தாயின் வம்ஸத்தில் 5-க்கு மேல், மாதாவின் ஸகோத்ரை கூடாது' என்பது முதலிய வசனங்களெல்லாம் புத்ரிகாகரணவிஷயம். ஆஸுராதி விவாஹத்தால் க்ரஹிக்கப்பட்டவளின் ஸந்ததி விஷயமும்கூட. இவ்விதமில்லையெனில் மாதா பதியின் கோத்ரமுடையவளாதலால் வேறு கோத்திரமில்லாததால். முன்னிருந்த கோத்ரத்தைக் கொண்டு ஸகோத்ரத்வம் சொல்வது ந்யாயவிருத்தம். பதிகோத்ரமுடையவளென்பதும், ஸ்ம்ருதிகளால் அறியப்படுகிறது.*

पुत्रिकापुत्रस्य मातृगोत्रत्वमाह लोकाक्षिः — 'मातामहस्य गोत्रेण मातुः पिण्डोदकक्रियाः। कुर्वीत पुत्रिकापुत्र एवमाह प्रजापतिरिति॥ आसुरादिविवाहविषये मार्कण्डेयः — 'ब्राह्मादिषु विवाहेषु या तूढा कन्यका भवेत्। भर्तृगोत्रेण कर्तव्या तस्याः पिण्डोदक क्रिया॥ आसुरादिविवाहेषु पितृगोत्रेण धर्मविदिति॥ मातृपितृगोत्रेणेत्यर्थः॥

*புத்ரிகா புத்ரனுக்கு மாதாவின் கோத்ரம் என்கிறார் லோகாக்ஷி - 'புத்ரிகா புத்ரனானவன் மாதாவுக்குப் பிண்டோதக தானம் முதலியவைகளை மாதாமஹன் கோத்ரத்தால் செய்ய வேண்டும் என்றார் ப்ரஜாபதி. ஆஸுராதி விவாஹ விஷயத்தில் மார்க்கண்டேயர் - 'ப்ராம்ஹாதி விவாஹங்களால் ஏற்கப்பட்டவளுக்கு உத்தரக்கிரியைகளை பர்த்ருகோத்ரத்தால் செய்ய வேண்டும். ஆஸுராதிவிவாஹங்களால் க்ரஹிக்கப்பட்டவளுக்கு, அவள் பிதாவின் கோத்ரத்தால் செய்ய வேண்டும்.'*

एवं च पुत्रिकाकरणे आसुरादिविवाहेषु च उदकपूर्वदानाभावेन स्वपितृसापिण्ड्यस्य स्वगोत्रस्य चानिवृत्तेर्मातुः स्वपित्रा सापिण्ड्यादि-सद्भावात् 'असपिण्डा च या मातुरसगोत्रा च या पितु' रित्यादीनि वचनानि तद्विषयाणि वेदितव्यानि ॥

இவ்விதமிருப்பதால் புத்ரிகாகரணத்திலும், ஆஸுராதி விவாஹங்களிலும் ஜலபூர்வமான தானமில்லாததால், பிதாவின் ஸாபிண்ட்யம், கோத்ரம் இவைகள் நிவர்த்திக்காததால், மாதாவுக்குத் தன்பிதாவோடு ஸாபிண்ட்யம் முதலியவை இருப்பதால் 'அஸபிண்டாசயாமாது:' என்பது முதலான வசனங்கள் புத்ரிகாபுத்ர விஷயங்கள் என்றறியவும்.

ननु पुत्रस्य मातृसपिण्डत्वात् या मातुः सपिण्डा सा पुत्रस्यापीति किमर्थं मातृग्रहणम्? उच्यते — यदा तु पुत्रिकापुत्रस्यैव मातामहाभ्यां परित्यागः तदा तत्सापिण्ड्यनिवृत्त्या तत्सपिण्डाया विवाहप्राप्तौ तन्माभूदिति मातृग्रहणम् । एवं दत्तपुत्रादेस्त्यागेनैव पितृगोत्रनिवृत्त्या तत्सगोत्राया विवाहप्राप्तौ तन्मा प्रसांक्षीदिति पितृग्रहणमिति ॥ ब्राह्मादिभिर्विवाहैर्निवृत्तपितृसापिण्ड्यायाः पुत्रस्य मातुलसुतादीनां पञ्चमात् सप्तमादर्वाचीनानामपि परिणयनमभिमतमेव ।

புத்ரன் மாதாவுக்கு ஸபிண்டனானதால், மாதாவின் ஸபிண்டை புத்ரனுக்கும் ஸபிண்டையானதால், 'மாது:' என்ற பதம் எதற்கு? எனில், சொல்வோம். எக்காலத்திலாவது புத்ரிகாபுத்ரனை மாதாமஹமாதா மஹிகள் பரித்யாகம் செய்தால் அப்பொழுது அவனுக்கு அவர்களின் ஸாபிண்ட்யம் நிவர்த்திப்பதால், மாத்ரு ஸபிண்டையின் விவாஹம் ப்ராப்தமாகுமாதலால் அது கூடாதென்பதற்காக மாத்ருக்ரகணம். (மாதாவைச் சேர்த்தது) இவ்விதம் தத்தபுத்ராதிகளுக்கும் தானத்தினாலேயே பித்ருகோத்ரம் நிவர்த்திப்பதால்

பிதாவின் ஸகோத்ரையின் விவாஹம் ப்ராப்தமாகுமாதலால் அது கூடாதென்பதற்காக பித்ருக்ரகணம். ப்ராம்ஹாதி விவாஹங்களால் மாதா பித்ரு ஸாபிண்ட்யம் நிவர்த்தித்தவளின் புத்ரனுக்கு, மாதுலபுத்ரீ முதலான 7 க்குக் கீழ்ப்பட்டவர்களின் விவாஹம் அபிமதமே.

मातुलसुतादिविवाहनिषेधवचनानि सर्वाण्यासुरादि विवाहोढापुत्र-विषयाणि पुत्रिकापुत्रविषयाणि च। मातुलसुतादिविवाहानुग्राहकाणि तु ब्राह्मादिविवाहोढापुत्रविषयाणीति व्यवस्था॥

மாதுலபுத்ரீ முதலியவர்களின் விவாஹத்தை நிஷேதிக்கும் வசனங்கள் எல்லாம் ஆஸுராதி விவாஹங்களால் க்ரஹிக்கப்பட்டவளின் புத்ர விஷயங்கள், புத்ரிகா புத்ரனின் விஷயங்களுமாம். மாதுலபுத்ரீ முதலியவர்களின் விவாஹத்திற்கு அனுகூலமான வசனங்களெல்லாம் ப்ராம்ஹாதி விவாஹத்தால் க்ரஹிக்கப்பட்டவளின் புத்ரனின் விஷயங்கள் என்று வ்யவஸ்தையாம்.

मातुलसुताविवाहविषयः।

अत्र नारदः — 'तृतीयां मातृपक्षाच्च पञ्चमीं पितृतस्तथा। विवहन्ति कचिद्देशे सङ्कोच्यापि सपिण्डताम्। चतुर्थीमुद्वहेत् कन्यां चतुर्थः पञ्चमीमपि। षष्ठीं तु नोद्वहेत् कन्यां पञ्चमो न तु पञ्चमीम्॥ तृतीयो वरयेत् कन्यां चतुर्थीं पञ्चमीं तथेति॥ षट्त्रिंशन्मते -तृतीयां मातृतः कन्यां तृतीयां पितृतस्तथा। विवाहयेन्मनुः प्राह पाराशर्योऽङ्गिरा यमः इति॥

மாதுல ஸுதா விவாஹ விஷயம்

நாரதர் - தாயின் தலைமுறையில் மூன்றுமவளையும், பிதாவின் தலைமுறையில் ஐந்தாமவளையும், சிலதேசங்களில் ஸாபிண்ட்ய ஸங்கோசம் செய்து விவாஹம் செய்கின்றனர். நாலாமவன் நாலாமவளையும் ஐந்தாமவளையும் மணக்கலாம்; ஆறுமவளைக் கூடாது. ஐந்தாமவன்

ஐந்தாமவளை மணக்கக் கூடாது. மூன்றாமவன் நாலாமவளையும், ஐந்தாமவளையும் வரிக்கலாம். ஷட்த்ரிம்மன்மதத்தில் - தாயின் வழியில் மூன்றா மவளையும், தகப்பன் வழியில் —மூன்றாமவளையும். விவாஹம் செய்யலாம் என்பது பாராசர்யர், அங்கிரஸ், யமன் இவர்களின் மதமாம்.

चतुर्विंशतिमते — 'तृतीयां वा चतुर्थीं वा पक्षयोरुभयोरपि । विवाहयेन्मनुः प्राह पाराशर्योऽङ्गिरा यम' इति ॥ स्मृतिसारे — 'मातुलस्य सुतां केचित् पितृष्वसृसुतादिकाम् । विवहन्ति कचिद्देशे सङ्कोच्यापि सपिण्डताम् । चतुर्थः पञ्चमीं कन्यां पञ्चमीं षष्ठ उद्वहेत् । चतुर्थीमुद्वहेत् कन्यां पञ्चमो न तु पञ्चमीम् ॥ पञ्चमः पञ्चमीं कन्यां नोद्वहेदिति यत् स्मृतम् । पितृपक्षे निषेधोऽयं मातृपक्षे न तद्भवेदिति ॥

சதுர்விம்சதி மதத்தில் - இரண்டு பக்ஷங்களிலும் மூன்றாமவளையும், நான்காமவளையும் மணக்கலாம் என்பது பாராசர்யர், அங்கிரஸ், யமன் இவர்களின் மதம். ஸ்ம்ருதிஸாரத்தில் - சில தேசங்களில் சிலர், மாதுலனின் புத்ரியையும், அத்தையின் புத்ரியையும் ஸாபிண்ட்ய ஸங்கோசம் செய்து மணக்கின்றனர். நாலாமவன் ஐந்தாமவளையும், ஆறாமவன் ஐந்தாமவளையும் விவஹிக்கலாம்; ஐந்தாமவன் நாலாமவளை மணக்கலாம். ஐந்தாமவளை மணக்கக் கூடாது. ஐந்தாமவன் ஐந்தாமவளை மணக்கக் கூடாதென்றது பிதாவின் வழியில். மாதாவின் வழியிலல்ல.

स्मृतिरत्ने — 'अब्रह्मचारि दाराद्यैः सार्धं भोजनकर्म च । मातुलादिसुतायाश्च विवाहश्शिष्टसंमतः ॥ इत्येते दाक्षिणात्यानामविगीता उदाहृताः ॥ समुद्रयानं मांसस्य भक्षणं शस्त्रजीविका । शीधुपानमुदीच्याना मविगीतानि धर्मत' इति ॥

ஸ்ம்ருதிரத்னத்தில் - உபநயனமாகாதவன், பத்னி இவர்களுடன் போஜனம் செய்வதும், மாதுலன்

முதலியவரின் பெண்ணை விவாஹம் செய்வதும் தக்ஷிணதேத்தில் உள்ளவர்களுக்குத் குற்றமற்றவை எனப்படுகின்றன. ஸமுத்ரயாத்ரை, மாம்ஸபக்ஷணம், ஆயுதமெடுத்துப் பிழைத்தல், மத்யபானம் இவைகள் உத்தரதேசத்திலுள்ளவர்களுக்கு தடை செய்யப்படாதவைகளாம்.

बृहस्पतिः — 'उद्वाह्यते दाक्षिणात्यैर्मातुलस्य सुता द्विजैः । मध्यदेशे कर्मकराः शिल्पिनश्च गवाशिनः ॥ मत्स्यादाश्च नराः पूर्वे व्यभिचाररताः स्त्रियः । उत्तरे मद्यपा नार्यः स्पृश्या नृणां रजस्वलाः । अप्रजातां प्रगृह्णन्ति भ्रातृभार्यामभर्तृकाम् । देशजातिकुलाचारधर्माः सत्यप्रवर्तिताः। तथैवैते पालनीयाः प्रजा प्रक्षुभ्यतेऽन्यथा । विरुद्धाः प्रतिदृश्यन्ते दाक्षिणात्येषु सम्प्रति। स्वमातुलसुतोद्वाहो मातृबन्धुत्वदूषितः ॥ अभर्तृकभ्रातृभार्याग्रहणं चातिदूषितम् । कुले कन्याप्रदानं च देशेष्वन्येषु दृश्यते ॥ इत्थं विरुद्धानाचारान् प्रभूतान्न निवर्तयेत् । तथा भ्रात्रीविवाहोऽपि पारसीकेषु दृश्यते ॥

ப்ருஹஸ்பதி - தக்ஷிணதேசத்திலுள்ள த்விஜர்கள் மாதுலன் புத்ரியை மணக்கின்றனர். மத்யதேசத்திலுள்ள த்விஜர்கள் மாதுலன் புத்ரியை மணக்கின்றனர். மத்யதேசத்தில் கர்மகாரர், சில்பிகள் இவர்கள் கோமாம்ஸத்தைப் பக்ஷிக்கின்றனர். எல்லா மனிதர்களும் மத்ஸ்யத்தைப் புஜிக்கின்றனர். ஸ்த்ரீகள் வ்யபிசாரிணிகளாய் இருக்கின்றனர். வடக்குத் தேசத்தில் ஸ்த்ரீகள் மத்யபானம் செய்கின்றனர். ரஜஸ்வலைகளான ஸ்த்ரீகளை ஸ்பர்ச்சிக்கின்றார்கள். பர்த்தா இல்லாத ப்ராதாவின் பார்யை, ஸந்ததி இல்லாதிருந்தால் அவளை மைத்துனன் ஏற்கின்றான். இவ்விதம் தேசம், ஜாதி, குலம், இவைகளைப் பற்றிய ஆசாரங்களும் தர்மங்களும் முன்னோர்களால் நடைமுறையில் ஏற்கப்பட்டன. அவைகளை அவ்விதமே பரிபாலிக்க வேண்டும். இல்லாவிடில் ஜனங்களுக்கு குழப்பம் ஏற்படும்.

இக்காலத்தில் தக்ஷிணதேசத்தில் உள்ளவர்களிடத்தில் விருத்தமான ஆசாரங்கள் காணப்படுகின்றன. மாதாவின் பந்து என்பதால் அம்மான் பெண்ணின் விவாஹம் தூஷிக்கப்படுகிறது. பர்த்தா இல்லாத ப்ராத்ருபார்யையைச் சேருவதும் அதிகமாய் தூஷிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆசாரம் மற்றத் தேசங்களில் காணப்படுகிறது. இவ்விதம் விருத்தமான அநேக ஆசாரங்களை தடுக்கக் கூடாது. பாரஸீக தேசத்தில் தங்கை முறையுள்ளவளையும் விவாஹம் செய்வதும் காணப்படுகிறது.

तथैकादशरात्रादौ श्राद्धे भुक्तं तु यैर्द्विजैः । तेभ्यः श्राद्धे पुनर्दानं केचिन्नेच्छन्ति देहिनः । दत्वा धान्यं वसन्तेऽन्यैः शरदि द्विगुणं पुनः । भुज्यते बन्धकक्षेत्रं प्रविष्टे द्विगुणे धने । भुज्यतेऽन्यैरप्रविष्टमूल्यं तच्चविरुध्यते । देशजात्यादिधर्मस्य प्रामाण्यादविरोधिनः । शास्त्रेणातो नृपः सर्वं शास्त्रे दृष्ट्वा प्रवर्तयेदिति ।

ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தில் புஜித்தவனை மறுபடி வேறு ச்ராத்தத்தில் வரிக்கக்கூடாதென்கின்றனர் சிலர். வஸந்தகாலத்தில் கடனுகக் கொடுத்த தான்யத்தைச் சரத்காலத்தில் இரண்டு மடங்காக வாங்கிக் கொள்கின்றனர். கடன் கொடுத்த தனம் இரண்டு மடங்காகிவிட்டால், அதற்காகப் பந்தகமாயுள்ள நிலத்தை விலைகொடாமல் அனுபவிக்கின்றனர். இது கூடாதென்றகின்றனர் சிலர். தேசஜாதி முதலியவைகளைப் பற்றிய தர்மமும் சாஸ்த்ர விருத்தமாய் இல்லாவிடில் ப்ரமாணமாகையால், அரசன் சாஸ்த்ரங்களைப் பார்த்து எல்லாவற்றையும் ப்ரவர்த்திக்கச் செய்ய வேண்டும்.

अतो ब्राह्मादिषु विवाहेषु निवृत्तसपिण्डभावाया मातुरसपिण्डत्वात् मातुलसुता परिणेया । एवं पैतृष्वस्रेयी च । न च तथाविधा मातृष्वसा तद्दुहिता च किमिति न परिणेयेति वाच्यम् । शास्त्राविरोधेऽपि लोकविरुद्धत्वात् । यद्धर्म्यमपि लोकविद्विष्टं तन्नानुष्ठेयम् ।

ஆகையால் ப்ராம்மாதி விவாஹங்களால் ஸபிண்டபாவம் நிவர்த்தித்த மாதாவுக்கு அஸபிண்டை யானதால், அம்மானின் பெண் விவாஹத்திற்கு உரியவளே. இவ்விதமே அத்தையின் பெண்ணும். 'ஆனால் அவ்விதமான மாத்ருபகினியின் பெண்ணை ஏன் மணக்கக் கூடாது' எனில், சாஸ்த்ர விரோத மில்லாவிடினும் லோக விரோதமிருப்பதால். தர்மத்தை ஒட்டியதாயிருப்பினும் லோகத்திற்கு எதிரானதை அனுஷ்டிக்கக் கூடாது.

तदुक्तं मनुना — 'अस्वर्ग्यं लोकविद्विष्टं धर्म्यमप्याचरेन्न त्विति । वराहमिहिरोऽपि - 'देशाचारस्तावदादौ विचिन्त्यो देशे देशे या स्थितिः सैव कार्या । लोकद्विष्टं पण्डिता वर्जयन्ति दैवज्ञोऽतो लोकमार्गेण याया'दिति । दाक्षिणात्यानां मध्ये आन्ध्रेषु त्रैविद्यवृद्धा वेदार्थानुष्ठातारः शिष्टा अपि मातुलादिदुहितृपरिणयनमाचरन्ति । द्रमिडेषु तथाविधाः शिष्टाः चतुर्थ्यादिविवाहमाचरन्ति । मातृष्वसृतद्दुहित्रादिविवाहं सर्वत्र वर्जयन्ति ॥ उक्तं च तथाऽऽचारस्य प्रामाण्यं मनुना — 'शिष्टाचारः स्मृतिर्वेदः त्रिविधं धर्मलक्षणम् इति, 'सद्भिराचरितं यत् स्याद्धार्मिकैस्तु द्विजातिभिः । तद्देशकुलजातीनामविरुद्धं प्रकल्पयेदिति च ॥

அதைப்பற்றி மனு - தர்ம்யமானாலும் லோகவிருத்த மாயின் அது நற்கதியைக் கொடாததலால் அதை அனுஷ்டிக்கக் கூடாது.வராஹமிஹிரரும் - முதலில் தேசாசாரத்தை ஆலோசிக்க வேண்டும். எந்தெந்தத் தேசத்தில் எவ்விதமுறையோ அதையே செய்ய வேண்டும். லோகவிருத்தமாயுள்ளதைப் பண்டிதர்கள் வர்ஜிக்கின்றனர். ஆகையால் வித்வான் உலகத்தின் மார்க்கப்படி செல்ல வேண்டும். தக்ஷிணதேசத்தில் உள்ளவர்களுள் ஆந்த்ரர்களில் மூன்று வேதங்களைக் கற்றறிந்தவர்களுள் சிறந்தவர்களும், வேதத்திற் சொல்லியதை அனுஷ்டிப்பவர்களுமான சிஷ்டர்களும் மாமன் பெண் முதலியவர்களை மணக்கின்றனர். த்ராவிடர்களிலும் அவ்விதமான சிஷ்டர்கள் நாலாமவள்

முதலியவர்களை மணக்கின்றனர். மாத்ருபகினீ, அவள் பெண் முதலியவர்களை விவாஹம் செய்வதில்லை. சிஷ்டாசாரமும் ப்ரமாணமென்கிறார் மனு - சிஷ்டாசாரம், ஸ்ம்ருதி, வேதம் இம்மூன்றும் தர்மத்திற்கு ப்ரமாணங்கள். ஸாதுக்களாயும், தார்மிகர்களாயுமுள்ள த்விஜர்களால் அனுஷ்டிக்கப்பட்டதும் தேசம், குலம், ஜாதி இவைகளுக்கு விருத்தமில்லாததுமான ஆசாரத்தைக் கொண்டு வ்யவஹாரநிர்ணயம் செய்யவேண்டும்.

आपस्तम्बः — 'येषां परम्पराप्राप्ताः पूर्वजैरप्यनुष्ठिताः । त एव तैर्न दुष्येयुराचारा नेतरे पुन'रिति ॥ देवलः — 'यस्मिन् देशे य आचारो न्यायदृष्टस्तु कल्पितः । स तस्मिन्नेव कर्तव्यो देशाचारः स्मृतो भृगोः ॥ येषु देशेषु ये देवाः येषु देशेषु येषु द्विजाः । येषु देशेषु यत्तोयं या च यत्रैव मृत्तिका। येषु देशेषु यच्छौचं धर्माचारश्च यादृशः। तत्र तान्नावमन्येत धर्मस्तत्रैव तादृशः। यस्मिन् देशे पुरे ग्रामे त्रैविद्ये नगरेऽपि वा । यो यत्र विहितो धर्मस्तं धर्मं न विचालयेदिति ॥

ஆபஸ்தம்பர் - எவர்களுக்கு எந்த ஆசாரங்கள் வம்ஶபரம்பரையால் வந்து முன்னோர்களால் அனுஷ்டிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவர்களே அந்த ஆசாரங்களால் தூஷிக்கப்படமாட்டார்களேயன்றி மற்றவர்களல்லர். தேவலர் - எந்தத் தேசத்தில் எந்த ஆசாரம் ந்யாயத்தால் கற்பிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த ஆசாரத்தை அந்தத் தேசத்தில் தான் செய்யலாமென்பது ப்ருகுவின் மதம். எந்தத் தேசங்களில் எவர்கள் தேவர்களோ, எந்தத் தேசங்களில் எவர் ப்ராமணர்களோ, எந்தத் தேசங்களில் எது ஜலமோ, எந்தத் தேசங்களில் எது ம்ருத்திகையோ, எந்தத் தேசங்களில் எது சௌசமோ, எந்தத் தேசங்களில் தர்மாசாரம் எவ்விதமோ அந்தந்தத் தேசங்களில் அவைகளை அவமதிக்கக் கூடாது. அங்கங்கு அவ்விதமே தர்மமாம். எந்தத் தேசத்திலோ, புரத்திலோ, க்ராமத்திலோ, மூன்று வேதம் கற்றவர் இருக்குமிடத்திலோ, நகரத்திலோ, எந்த தர்மம் விஹிதமோ அதை மாற்றக்கூடாது.

बोधायनः— 'पञ्चधा विप्रतिपत्तिर्दक्षिणतस्तथोत्तरतो यानि दक्षिणतस्तानि व्याख्यास्यामो यथैतदनुपेतेन सह भोजनं स्त्रिया सह भोजनं पर्युषितभोजनं मातुलपितृष्वसृदुहितृगमनमित्यथोत्तरत ऊर्णाविक्रयः शीधुपानमुभयतोदद्भिर्व्यवहार आयुधीयकं समुद्रसंयानमितीतरदितरस्मिन् कुर्वन्दुष्यतीतरदितरस्मिंस्तत्र तत्र देशप्रामाण्यमेव स्यादिति ॥ अयमर्थः — 'दक्षिणतः दक्षिणेन नर्मदां उत्तरेण कन्यातीर्थं, तथा उत्तरतः - दक्षिणेन हिमवन्तमुत्तरेण विन्ध्यम् । एतद्देशप्रसूतानां शिष्टानां परस्परं पञ्चधा विप्रतिपत्तिः विसंवादः । मातुलपितृष्वसृदुहितृगमनं तत्परिणयनं, ऊर्णायास्तद्विकारस्य च कम्बलादेर्विक्रयः, उभयतोदन्ता अश्वादयः, व्यवहारः विक्रयादिः, आयुधीयकं शस्त्रधारणं, समुद्रसंयानं - नावा द्वीपान्तरगमनं, इतरत् - अनुपेतेन सह भोजनादि इतरस्मिन् - उत्तरापथे कुर्वन् दुष्यति । एवमूर्णाविक्रयादीनि इतरत्र दक्षिणापथे कुर्वन् दुष्यति । तत्र देशप्रामाण्यमेव स्यादिति । एवं व्यवस्थितविषयैव मूल श्रुतिः कल्प्यते । तस्माद्व्यवस्थितमेवानुष्ठानं तद्वर्जनं चेति ॥

போதாயனர் - தக்ஷிணதேசத்தில் (நர்மதைக்குத் தெற்கு கன்யாதீர்த்தத்திற்கு வடக்கு) விருத்தமான ஆசாரம் ஐந்துவிதமாம். அவ்விதமே உத்தரதேசத்திலும். (ஹிமயமலைக்குத் தெற்கு விந்த்யத்திற்கு வடக்கு). தக்ஷிணதேசத்திலுள்ளவைகளைச் சொல்வோம். உபநயனமில்லாதவனுடன் புஜித்தல், ஸ்த்ரீயுடன் புஜித்தல், பழைய அன்னத்தைப் புஜித்தல், மாதுலபுத்ரியைச் சேர்தல், அத்தையின் புத்ரியைச் சேர்தல் என்று. உத்தரதேசத்திலுள்ளவைகளைச் சொல்வோம். கம்பளங்களை விக்ரயம் செய்தல், மத்யபானம், குதிரை முதலியவைகளின் விக்ரயம், ஆயுதமெடுத்து ஜீவித்தல், ஸமுத்ரயாத்ரை செய்தல் என்று. தக்ஷிணதேசாசாரத்தை உத்தரதேசத்தில் செய்தாலும், உத்தரதேசாசாரத்தைத் தக்ஷிணதேசத்தில் செய்தாலும் தோஷத்தை அடைவான். அந்த

ஆசாரங்களுக்குத் தேசங்களால் ப்ராமாண்யம். இவ்விதம் வ்யவஸ்தைக்கு மூலமாக ச்ருதி கல்பிக்கப்படுகின்றது. ஆகையால் அனுஷ்டானமும் வர்ஜனமும் வ்யவஸ்தித விஷயமாம்.

यत्तु — अनन्तरमेव बोधायनेनोक्तम् — 'मिथ्यैतदिति गौतमः उभयंचैतन्नाद्रियेत दृष्टस्मृतिविरोधदर्शनादिति, तन्न पूर्वोक्तनिराकरणार्थं, गौतमग्रहणात्। किन्तु शिष्टस्मृतिविरोधदर्शनात् गौतमस्य मातृसपिण्डा-परिणयनमनभिमतमिति दर्शयितुमिति चन्द्रिकायां व्याख्यातम्। यदप्या-पस्तम्बवचनम् — 'यत्र तु प्रीत्युपलब्धितः प्रवृत्तिर्न तत्र शास्त्रमस्ति तदनु-वर्तमानो नरकाय राध्यती'ति, तदपि मातृसपिण्डमातुलसुतापरिणयनादि-विषयं वेदितव्यम्॥

'இது தவறு என்கிறார் கௌதமர், ப்ரத்யக்ஷஸ்ம்ருதி விரோதம் காணப்படுவதால் என்று போதாயனரே அடுத்தபடி சொல்லுகிறார் எனில் அது முன் சொல்லியவைகளை நிராகரிப்பதற்கல்ல; கௌதமர் சொல்லுகிறார் என்றிருப்பதால். சிஷ்டர்களின் ஸ்ம்ருதிகளுக்கு விருத்தமாயிருப்பதால் மாத்ரு ஸபிண்டையை விவாஹம் செய்வது கௌதமருக்கு அபிமதமல்ல என்று காண்பிப்பதற்கு என்று சந்த்ரிகையில் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. தன் ப்ரீதிக்காகச் செய்யும் கார்யங்களில் சாஸ்த்ரமில்லை. அதை அனுவர்த்திப்பவன் நரகமடைவான்' என்ற ஆபஸ்தம் பவசனம் மாத்ருஸபிண்டையான மாதுல புத்ரியின் விவாஹத்தையே நிஷேதிப்பதாகும்.

यदपि वसिष्ठस्मरणम् — 'देशकुलधर्मा आम्नायैरविरुद्धाः प्रमाणमिति, तदप्यत्राम्नायविरोधाभावादनुकूलमेव । अनुकूल एव चाम्नायः श्रूयते – 'आयाहीन्द्र पथिभिरीळितेभिर्यज्ञमिमन्नो भागधेयं जुषस्व। तृप्तां जहुर्मातुलस्येव योषा भागस्ते पैतृष्वसेयी वपामिवेति ॥ एहीन्द्र पथिभिः - मार्गैः । ईलितेभिः - प्रशस्तैः । अस्माकमिमं

यज्ञमायाहि - आगच्छ। आगत्य च इदं अस्माभिर्दीयमानं भागधेयं जुषस्व सेवस्व । अत एव एते यजमानाः तृप्तां आज्यादिना संस्कृतां वपां त्वामुद्दिश्य जुहुः - त्यक्तवन्तः । अत्र दृष्टान्तद्वयम् । यथा मातुलस्य योषा - दुहिता दौहित्रस्य भागः - भजनीया परिणेतुं योग्या, यथा च पैतृष्वसेयी पौत्रस्य, तथाऽयं तव भागो वपाख्य इति मन्त्रार्थः । तेन श्रुतितः स्मृतित आचारादपि सिद्धं मातुलसुतादिपरिणयनमिति स्मृतिचन्द्रिकाकारेण देवणभट्टोपाध्यायेन अन्यैरपि स्वदेशाचारानुसारिभिः बुद्धिमद्भिः समर्थितं मातुलसुतादिपरिणयनम्॥

*வஸிஷ்டர் சொல்லிய 'தேச தர்மங்களும் குல தர்மங்களும் வேதங்களுடன் விரோதிக்காவிடில் ப்ரமாணங்களாகும்' என்ற வசனமும் இவ்விஷயத்தில் அனுகூலமே. வேதவிரோதமில்லாததால். அனுகூலமான ஶ்ருதியும் இருக்கிறது. அதாவது - ஹே இந்த்ர ! சிறந்த மார்க்கங்களால் எங்களின் இந்த யாகத்திற்கு வாரும். வந்து எங்களால் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸை க்ரஹித்துக் கொள்ளும். ஆகையால் தான் இந்த யாகம் செய்பவர்கள் நெய் முதலியவற்ருல் பாகம் செய்யப்பட்டவபையை உன்னைக்குறித்து ஹோமம் செய்தனர். இங்கு இரண்டு உதாஹரணங்கள் - அம்மானின் பெண்ணும், அத்தையின் பெண்ணும், ப்ரதியோகியான புருஷனுக்கு விவாஹத்திற்கு உரியவர்களாவது போல் இந்த வபையும் உனக்கு உரியதானது என்று. ஆகையால் ச்ருதியாலும், ஸ்ம்ருதியாலும், ஆசாரத்தாலும் மாதுலபுத்ரீ முதலியவரின் விவாஹம் ஸித்தித்தது என்று ஸ்ம்ருதிசந்த்ரிகையை இயற்றிய தேவணபட்டோபாத்யாயராலும், தம் தேசாசாரத்தை அனுஸரித்த இதர புத்திமான்களாலும் ஸமர்த்திக்கப்பட்டது.*

## विवाहे वर्जनीयानि कुलानि

अथ विवाहे वर्जनीयानि कुलान्याह मनुः — 'महान्त्यपि समृद्धानि

गोजाविधनधान्यतः । स्त्रीसम्बन्धे दशैतानि कुलानि परिवर्जयेत् ।। हीनक्रियं निष्पुरुषं निश्छन्दो रोमशार्शसम् । क्षय्यामयाव्यपस्मारिश्वित्रिकुष्ठिकुलानि चेति ।। हीनक्रियं श्रौतस्मार्ताचारहीनम्, निष्पुरुषं - स्त्रीशेषम्, तद्वर्जयेत् । कुतः सन्तत्यभावानुसारभयात् । निच्छन्दः - निरध्ययनम् । रोमशं - रोमबहुलम् निरृतिरूपत्वात् । तथा हि श्रुतिः — 'निरृत्यै विकृतरूपं देहं रोमशमालभेत सा ह्यस्याःस्वतनुः इति ।। अर्शोऽस्यास्तीत्यर्शसम् । क्षयि - क्षयरोगयुक्तम् । आमयः महोदरादिः तद्युक्तं आमयावि । व्याधिसङ्क्रान्तिभयादेतानि वर्जयेत् ।।

### விவாஹத்தில் தவிர்க்கவேண்டிய குலங்கள்

மனு - *சிறந்தவைகளாயினும், பசு, ஆடு, தனம், தான்யம் இவைகளால் நிறைந்தவைகளாயினும், மேற்சொல்லப்போகும் பத்துக்குலங்களை விவாஹத்தில் தள்ளவேண்டும். அவைகளாவன - ம்ருதிஸ்ம்ருதிகளிற் சொல்லிய ஆசாரமற்றது. புருஷஸந்ததியற்றது. ஸந்ததி அற்றுப்போகக்கூடுமென்றபயத்தால். வேதாத்யயன மில்லாதது, ரோமம் மிகவுள்ளது நிர்ருதியின் ரூபமாதலால். அவ்விதம் ம்ருதி - 'நிர்ருதி தேவதைக்கு விகாரமுள்ளதும், ரோமமதிகமுள்ளதுமான தேகத்தை ஆலபனம் செய்யவேண்டும். அது நிர்ருதியின் மரீரமானதால்' என்று. மூலரோகமுடையது. க்ஷய ரோகமுடையது, மஹோதரம் முதலிய ரோகமுடையது, அபஸ்மாரமுள்ளது. வெண்குஷ்டமுள்ளது, குஷ்ட முள்ளது. வ்யாதி ஸங்க்ரமிக்குமென்ற பயத்தால் இவைகளைத் தள்ளவேண்டும்.*

याज्ञवल्क्योऽपि — दशपूरुषविख्यातात् श्रोत्रियाणां महाकुलात् ।। स्फीतादपि न सञ्चारिरोगदोषसमन्वितादिति ।। पुरुषा एव पूरुषाः दशभिः पुरुषैः मातृतः पञ्चभिः पितृतश्च पञ्चभिर्विख्यातं यत् कुलं महत् कुलं पुत्रपौत्रपशुदासग्रामादिसमृद्धं तस्मात् कन्याऽऽहर्तव्या । तत्रापवादः

स्फीतादपीति । सञ्चारिरोगाः कुष्ठापस्मारादयः । एतैः समन्वितात् पूर्वोक्तान्महाकुलादपि नाहर्तव्येत्येर्थः ॥ यमः — 'कुलानीमान्यपि सदाऽविवाह्यानि विनिर्दिशेत् । अनार्षेयं ब्राह्मणानामृत्विजां चैव वर्जयेत् । हीनाङ्गमतिरिक्ताङ्ग मामयाविकुलानि च । तथा श्वित्रिकुलादीनां कुर्याद्विपरिवर्जनम् । सदा कामिकुलं वर्ज्यं रोमशानां च यत्कुलम् । अपस्मारिकुलं यच्च यच्च पाण्डुकुलं भवेत् ॥ अत्युच्च मतिनीचं च अतिवर्णं च वर्जये'दिति ॥ अनार्षेयं - अविज्ञातप्रवरम् ॥

யாக்ஞவல்க்யர் - தாயின் வழியில் ஐந்து, தகப்பன் வழியில் ஐந்து, ஆகப்பத்துப்புருஷர்களால் ப்ரஸித்தமான ஶ்ரோத்ரியர்களின் பெரிய குலத்தினின்றும் பெண்ணை எடுக்கவேண்டும். இவ்விதம்புத்ரபௌத்ர பசுதாஸ க்ராமங்களால் பெருத்த குலமாயினும், ஸஞ்சாரி (பரவுகிற) ரோகங்களான குஷ்டம் அபஸ்மாரம் முதலியவைகளுடன் கூடிய குலத்திலிருந்து கூடாது. யமன் - ப்ரவரம் தெரியாத குலம், ருத்விக்குகளின் குலம், அங்கஹீனமான குலம், அதிகாங்கமுள்ள குலம், மகோதரமுள்ளது, வெண்குஷ்டமுள்ளது, அதிக காமமுள்ளது, அதிக ரோமமுள்ளது, அபஸ்மாரமுள்ளது, பாண்டு உள்ளது, அதிக உயரமானது, மிகக்குட்டையானது, அதிக வர்ணமுள்ளதுமான குலங்களையும் பரிஹரிக்க வேண்டும்.

मनुः — 'उत्तमैरुत्तमैर्नित्यं सम्बन्धानाचरेत् सह । निनीषुः कुलमुत्कर्षमधमानधमांस्त्यजेत् । विशुद्धाः कर्मभिश्चैव श्रुतिस्मृतिनिदर्शिनः । अविप्लुतब्रह्मचर्या महाकुलसमन्विताः ॥ महाकुले च सम्बद्धा महत्त्वे च व्यवस्थिताः । सन्तुष्टाः सज्जनहिताः साधवः समदर्शिनः ॥ अक्रोधनाः सुप्रसादाः कार्याः सम्बन्धिनः सदा । ये स्तेनाः पिशुनाः क्लीबा ये च नास्तिकवृत्तयः ॥ विकर्मणा च जीवन्तो विकृताकृतयस्तथा । प्रबद्धवैराः शूरैर्ये राजकिल्बिषिणस्तथा ॥ ब्रह्मस्वादननित्याश्च कदर्याश्च विगर्हिताः ।

மற்றும் மனு - தன்குலத்திற்கு மேன்மையை அடைவிக்க விரும்பியவன், எப்பொழுதும் உயர்ந்தவர்களுடன் ஸம்பந்தங்களைச் செய்யவேண்டும். தாழ்ந்தவர்களைத் தள்ளவேண்டும். நற்கார்யங்களால் சுத்தர்களும், ச்ருதிஸ்ம்ருதிகளை அறிந்தவர்களும், ப்ரம்மசர்யத்தை முறைப்படி அனுஷ்டித்தவர்களும், பெரியகுலத்திற் பிறந்தவர்களும், பெரியகுலங்களிற் சம்பந்தம் செய்தவரும், பெருந் தன்மையிலிருப்பவரும், ஸந்தோஷமுள்ளவரும், ஸாதுக்களுக்கு ஹிதம் செய்பவரும், ஸாதுக்களும், ஸமமாய்ப் பார்ப்பவரும், கோபமற்றவரும், ப்ரஸாதமுள்ளவருமானவர்களை ஸம்பந்திகளாய்ச் செய்து கொள்ள வேண்டும். திருடரும், கோட்சொல்பவரும், அலிகளும், நாஸ்திகரும், இழிவான தொழிலால் பிழைப்பவரும், விகாரமுள்ள மேனியுள்ளவரும், சூரருடன் விரோதமுள்ளவரும், அரசனுக்கு அபராதம் செய்தவரும், ப்ராமணர் தனத்தைப் பறித்துத் தின்பவரும், க்ருபணருமானவர்கள் ஸம்பந்தத்திற்கு அர்ஹரல்லர்.

अप्रजा येषु वंशेषु स्त्रीप्रजाप्रसवास्तथा ॥ पतिर्यत्र स चान्यश्च तांश्च यत्नेन वर्जयेत् ॥ पितुर्वा भजते शीलं मातुर्वोभयमेव वा । न कथञ्चन दुर्योनिः प्रकृतिं स्वां विमुञ्चतीति ॥ हारीतः — 'मातुलान् भजते पुत्रः कन्यका भजते पितॄन् । यथाशीला भवेन्माता तथाशीलो भवेन्नर इति ॥ विष्णुः - 'अश्वं पित्रा परीक्षेत मात्रा कन्यां परीक्षयेत् । तृणाद्भूमिं परीक्षेत आचारेण कुलं तथेति ॥

எவரின் குலங்களில் ப்ரஜையில்லாதவரும், பெண்களையே பெறுபவரும், ஜாரபுருஷனையுடையவரும் உளரோ அவர்களையும் கவனித்துத் தள்ளவேண்டும். மனிதன், தகப்பனின் அல்லது தாயின் நடத்தையை, அல்லது இருவரின் நடத்தையை அனுஸரிப்பான். துஷ்டமான இடத்தினின்று பிறந்தவன் எவ்விதத்திலும் தன் இயற்கையை விடமுடியாது. ஹாரீதர் - ஆண் மாமன்

குணத்தையும், பெண் தகப்பன் குணத்தையும் அனுஸரிக்கக் கூடும். மனிதன், தாய் எவ்விதமோ அவ்விதம் சீலமுடையவனுவான். விஷ்ணு - குதிரையை அதன் பிதாவினுலும், பெண்ணைத் தாயினுலும், பூமியைப் புல்லாலும், குலத்தை ஆசாரத்தாலும் பரீக்ஷிக்க வேண்டும்.

असवर्णोद्वाहः ॥

अथ सवर्णोद्वाहनियमेन प्रतिषिद्धमसवर्णोद्वाहमधिकारिविशेषे अनुजानाति मनुः — 'सवर्णोऽग्रे द्विजातीनां प्रशस्ता दारकर्मणि । कामतस्तु प्रवृत्तानामिमास्स्युः क्रमशोऽपराः । शूद्रैव भार्या शूद्रस्य सा च स्वा च विशः स्मृते । ते च स्वा चैव राज्ञः स्युस्ताश्च स्वा चाग्रजन्मन इति। प्रथमतः सवर्णैव वोढव्या, तदनु भोगेच्छायामसवर्णा अपि क्रमेण वोढव्याः। तथासति ब्राह्मणस्य चतस्रः, क्षत्रियस्य तिस्रः, वैश्यस्य द्वे, शूद्रस्य सवर्णैकैवेत्यर्थः ॥

ஸவர்ணையல்லாதவளுடன் விவாஹம்

ஸவர்ணையை விவாஹம் செய்யவேண்டும் என்ற நியமத்தால் தடுக்கப்பட்ட அஸவர்ணையின் விவாஹத்தைச் சில அதிகாரிகளுக்கு அனுக்ஞை செய்கிருர் மனு - மூன்று வர்ணத்தார்களுக்கும் முதல் விவாஹத்தில் ஸவர்ணையே சிறந்தவள். காமத்தினுல் மறுவிவாஹம் செய்பவர்களுக்கு இனிச் சொல்லப்படுகின்றவர்கள் சிறந்தவர்களாவர். சூத்ரனுக்கு ஸவர்ண ஸ்த்ரீ மட்டில் உரியவள். வைய்யனுக்கு ஸவர்ணையும், சூத்ரஸ்த்ரீயும், க்ஷத்ரிய னுக்கு ஸவர்ணையும், வைய்ய சூத்ர ஸ்த்ரீகளும், ப்ராமணனுக்கு ஸவர்ணையும், க்ஷத்ரிய வைய்ய சூத்ரஸ்த்ரீகளும் உரியவர்களாவர். முதலில் ஸவர்ணையையே மணக்கவேண்டும். பிறகு போகத்தில் இச்சையிருந்தால் அஸவர்ணகளேயும் க்ரமமாய் விவஹிக்கலாம். இப்படியிருக்க, ப்ராமணனுக்கு நான்கு, க்ஷத்ரியனுக்கு மூன்று, வைய்யனுக்கு இரண்டு,

*சூத்ரனுக்கு ஒரு ஜாதிஸ்த்ரீகளும் விவாஹத்திற்கு உரியவர்களாம்.*

अथ ब्राह्मणक्षत्रियाभ्यां सवर्णायां प्रथममुद्वोढुमशक्यायां असवर्णाऽपि वोढव्या, न कदाचिदपि प्रथमं शूद्रेत्याह स एव — 'न ब्राह्मणक्षत्रिययोरापद्यपि हि तिष्ठतोः। कस्मिंदश्चिदपि वृत्तान्ते शूद्रा भार्योपदिश्यत इति ॥ वृत्तं धर्मः, अन्तः निर्णयः, धर्मशास्त्र इत्यर्थः । भार्या नोपदिश्यते भार्यात्वेन नोपदिश्यते । किन्तु काम्यत्वेनेत्यर्थः । शूद्रां प्रथमं भार्यात्वेनोद्वहतः प्रत्यवायमाह स एव — 'हीनजातिं स्त्रियं मोहादुद्वहन्तो द्विजातयः । कुलान्येव नयन्त्याशु ससन्तानानि शूद्रतामिति ॥ केवलशूद्राभार्यत्वं तदपत्यत्वं च ब्राह्मणस्य दोषावहमित्याह स एव — 'शूद्रां शयनमारोप्य ब्राह्मणो यात्यधोगतिम् । जनयित्वा सुतं तस्यां ब्राह्मण्यादेव हीयते ॥ दैवपित्र्यातिथेयानि तत्प्रधानानि यस्य तु ॥ निन्दन्ति पितृदेवास्तं न च स्वर्गं स गच्छतीति ॥

*இனி, ப்ராமண க்ஷத்ரியர்கள் முதலில் ஸவர்ணையை மணக்கச் சக்தியற்றவர்களாயின் அஸவர்ணையை மணக்கலாம்; எக்காலத்திலும் சூத்ரஸ்த்ரீயை முதலில் மணக்கக் கூடாதென்கிறார் மனுவே - ஆபத்திலிருப்பவர்களாயினும் ப்ராமண க்ஷத்ரியர்களுக்குச் சூத்ரஸ்த்ரீ பார்யை ஆகலாமென்று ஒரு தர்மசாஸ்த்ரத்திலும் சொல்லப்படுகிறதில்லை. பார்யை என்பதால் காமத்திற்காக க்ரஹிக்கலாமென்பதாம். சூத்ரஸ்த்ரீயை முதலில் பார்யையாய் க்ரஹிப்பவனுக்குத் தோஷத்தைப் பற்றி மனுவே - சூத்ரஜாதியான பெண்ணை மோஹத்தால் மணக்கும் த்விஜர்கள் ஸந்ததியுடன் குலங்களையும் சூத்ரத்தன்மையை அடைவிக்கின்றனர். சூத்ரஸ்த்ரீயை மட்டில் பார்யையாய் அடைதலும், அவளிடத்தில்குழந்தையைப் பெறுதலும் ப்ராமணனுக்குப் பாபமென்கிறார் மனுவே - ஸவர்ணஸ்த்ரீயை விவாஹம் செய்யாமல் சூத்ரையை விவஹித்து அவளிடம் ஸங்கமம்*

செய்யும் ப்ராமணன் நரகத்தை அடைவான். அவளிடம் புத்ரனைப் பெற்றால் ப்ராமணத் தன்மையையே இழப்பான்.

मतान्तराण्युपन्यस्य स्वमतं सिद्धान्तयति - 'शूद्रावेदी पतत्यत्रे-रुचथ्यतनयस्य च। शौनकस्य सुतोत्पत्त्या तदपत्यतया भृगो' रिति। शूद्रावेदी - शूद्रां भार्यात्वेन विन्दतीति शूद्रावेदी। अत्रेः उचथ्यतनयस्य - गौतमस्य। शूद्रायां सुतोत्पादनेन, न पुनस्तस्यागमनेनेति शौनकस्य मतम्। शूद्रामूढवानपि तस्यां सुतोत्पत्तिभयादृतौ तां नोपेयादित्यर्थः ॥ तदपत्यतया तस्यां शूद्रायामेवापत्यं यस्य सः तदपत्यः तदपत्यतया पततीति भृगोर्मतम्। भृगुमुखेन मनुशास्त्रस्य प्रोच्यमानत्वादिति मानवानीमानि वचनानीति टीकाकृतैवं व्याख्यातानि ॥

இதரர்களின் மதங்களைச் சொல்லித் தன் மதத்தை ஸித்தாந்தம் செய்கிறார் மனு - சூத்ரஸ்த்ரீயை பார்யையாய் பெற்றவன் பதிதனாகிறான் என்பது, அத்ரி கௌதமர் இவர்களின் மதம். சூத்ரையினிடம் புத்ரனைப் பெறுவதால் பதிதனாவான், அவள் ஸங்கத்தால் மட்டுமல்ல என்பது சௌனகர் மதம். ருதுகாலத்தில் அவளிடம் ஸங்கமம் செய்யக் கூடாது என்பதாம். ஸவர்ணையினிடத்தில் புத்ரனில்லாமல் சூத்ரையினிடத்தில் மட்டில் புத்ரனைப் பெறுவதால் பதிதனாவான் என்பது ப்ருகுவின் மதம். ப்ருகுவின் முகமாகவே மனுவின் தர்மசாஸ்த்ரம் சொல்லப்படுவதால் ப்ருகுவின் மதமென்பதெலாம் மனுவின் மதமேயாம்.

याज्ञवल्क्यः —'तिस्रो वर्णानुपूर्व्येण द्वे तथैका यथाक्रमम्। ब्राह्मणक्षत्रियविशां भार्यास्वाशूद्रजन्मनः ॥ यदुच्यते द्विजातीनां शूद्राद्दारोपसङ्ग्रहः। न तन्मम मतं यस्मात्तत्रायं जायते स्वयमिति ॥ मानवेन समानार्थमिति चन्द्रिकायाम् ॥

யாக்ஞவல்க்யர் - மனுவின் மதத்தை ஒத்திருப்பதால் தனியாய் எழுதவேண்டியதில்லை. சந்த்ரிகையிலும் இவ்விதமே.

पैठीनसिः — 'अलाभे विप्रकन्यायाः स्त्रियोऽन्यास्तिस्र एव तु। शूद्रायाः प्रातिलोम्येन तथाऽन्ये पतयस्त्रय' इति ।। जातुकर्णिः - 'अलाभे कन्यायाः स्नातकव्रतं चरेदपि वा क्षत्रियायां पुत्रानुत्पादयीत वैश्यायां वेति । नारदः — 'ब्राह्मणस्यानुलोम्येन स्त्रियोऽन्यास्तिस्र एव तु । शूद्रायाः प्रातिलोम्येन तथाऽन्ये पतयस्त्रयः ।। द्वे भार्ये क्षत्रियस्यान्ये वैश्यस्यैका प्रकीर्तिता । वैश्याया द्वौ पती ज्ञेयावेकोऽन्यः क्षत्रियापति'रिति ।। विष्णुः — 'द्विजस्य भार्या शूद्रा तु धर्मार्थं न भवेत् कचित् । रत्यर्थमेव सा तस्य रागान्धस्य प्रकीर्तितेति ।। व्यासः — 'शूद्रायोनौ पतद्बीजं हाहाशब्दं द्विजन्मनः । कृत्वा परुषगर्तेषु पतितोऽस्मीति दुःखितः ।। मामधः पातयेदेष पापात्मा काममोहितः । अधोगतिं व्रजेत् क्षिप्रमिति शस्वा पतेत्तु तदिति ।।

பைடீநஸி - *ப்ராமணனின் கன்னிகை கிடைக்காவிடில் மற்ற வர்ணங்களில் கன்னிகையை க்ரஹிக்கலாம். சூத்ர கன்னிகைக்குப் பிரதிலோமமாய் மூன்று வர்ணத்தாரும் பதியாகலாம்.* ஜாதுகர்ணி - *ப்ராமணன் ஸ்வஜாதியான கன்னிகை கிடைக்காவிடில் ஸ்நாதக வ்ரத்தை அனுஷ்டிக்கலாம். க்ஷத்ரிய கன்னிகையினிடமாவது, வைஶ்ய கன்னிகையினிடமாவது புத்ரர்களைப் பெறலாம்.* நாரதர் - *ப்ராமணனுக்கு மற்ற மூன்று ஜாதி கன்னிகைகளும் பார்யைகளாகலாம். இது ஆனுலோம்யம். சூத்ரனின் கன்னிகைக்கு, மேலான மூன்று வர்ணத்தாரும் பதிகளாகலாம். இது ப்ராதிலோம்யம். க்ஷத்ரியனுக்கு வைஶ்ய சூத்ரகன்யகைகளும் வைச்யனுக்கு சூத்ரகன்யகையும் பார்யை ஆகலாம். வைச்ய கன்னிகைக்கு மேலான இரண்டு வர்ணத்தாரும், க்ஷத்ரிய கன்னிகைக்கு மேலான ஒரு வர்ணத்தானும் பதியாகலாம்.* விஷ்ணு - *த்விஜனுக்கு, சூத்ர கன்னிகை தர்மத்திற்குரிய பார்யையாக ஒருகாலும் ஆகமாட்டாள். காமத்தால் விவேகமற்ற அவனுக்கு ஸுகத்திற்கு மட்டுமே ஆவாள்.* வ்யாஸர் - *சூத்ரஸ்த்ரீயின் யோனியில் விழும் த்விஜனின் சுக்லமானது ஹாஹா என்று அலறிக்கொண்டு விழுகின்றது. பாபமான*

குழியில் விழுந்தேன்; காமத்தால் விவேகமற்ற இப்பாவி என்னையும் நரகத்தில் தள்ளுவான்; இவன் சீக்கிரம் நரகத்தை அடையக்கடவன்; என்று சபித்துக் கொண்டே விழும்.

वसिष्ठोऽपि - 'शूद्रामप्येके मन्त्रवर्जं तदु तथा न कुर्यादहोभिर्ध्रुवः कुलापकर्षः प्रत्युतास्वर्ग्य इति ॥ मनुः — 'वृषलीफेनपीतस्य निश्वासोपहतस्य च । तस्यां चैव प्रसूतस्य निष्कृतिर्न विधीयते ॥ शिल्पेन व्यवहारेण शूद्रापत्यैश्च केवलैः । गोभिरश्वैश्च यानैश्च कृष्या राजोपसेवया। अयाज्ययाजनैश्चैव नास्तिक्येन च कर्मणाम् । कुलान्यकुलतां यान्ति यानि हीनानि मन्त्रत' सति ॥ गोभिरश्वैर्विक्रीयमाणैरित्यर्थः ॥ अयं असवर्णाविवाहो युगान्तरविषयः । 'असवर्णासु कन्यासु विवाहश्च द्विजातिभि'रिति कलौ निषिद्धत्वात् ॥

வஸிஷ்டர் -மந்த்ரங்களில்லாமல் சூத்ர கன்னிகையையும் க்ரஹிக்கலாமெனச் சிலர் சொல்லுகின்றனர். அது அவ்விதம் செய்யக்கூடாது. சீக்கிரத்தில் குலம் தாழ்வை அடையும். ஸ்வர்க்கத்தையும் தடுக்கும். மனு - சூத்ரஸ்த்ரீயின் அதரபானம் செய்தவனுக்கும் அவளுடன் ஒரே சயனத்தில் படுப்பவனுக்கும், அவளிடத்தில் புத்ரனைப் பெற்றவனுக்கும் ப்ராயச்சித்தமில்லை. பதிதனாகிறான். சித்ரம் முதலிய சில்பத்தாலும், வட்டிக்குக் கொடுப்பது முதலிய வ்யவஹாரத்தாலும், சூத்ரஸ்த்ரீயினிடத்தில் மட்டில் புத்ரர்களைப் பெறுவதாலும், பசு, குதிரை, தேர் முதலியவைகளை க்ரயம் செய்வதாலும், பயிரிடுவதாலும், ராஜஸேவையாலும், பதிதன் முதலியவர்களுக்கு யாகம் செய்விப்பதாலும், நாஸ்திக புத்தியாலும், வேதத்தைக் கற்காததாலும், உயர்ந்த குலங்களும் தாழ்வை அடைகின்றன. இந்த அஸவர்ணஸ்த்ரீ விவாஹம் யுகாந்தர விஷயம். கலியுகத்தில் நிஷேதிக்கப்பட்டிருப்பதால்.

## वरलक्षणम्

तत्र मनुः — 'उत्कृष्टायाभिरूपाय वराय सदृशाय च। अप्राप्तसमयां तस्मै कन्यां दद्याद्विचक्षण' इति ।। यमोऽपि — 'कुलं च शीलं च वपुर्वयश्च विद्यां च वित्तं च सनाथतां च। एतान् गुणान् सप्त परीक्ष्य कन्या देया बुधैश्शेषमचिन्तनीयमिति ।। यत्तु विष्णुनोक्तम् - 'ब्राह्मणस्य कुलं ग्राह्यं न वेदा न च सम्पदः। कन्यादाने तथा श्राद्धे न विद्या तत्र कारणमिति, तत्कुलस्य प्राधान्यप्रतिपादनपरं न पुनर्विद्यानिराकरणार्थम्। अत एवाश्वलायनः — 'कुलमग्रे परीक्षेतेति ।। आपस्तम्बः — 'बन्धुशीललक्षणसंपन्नः श्रुतवानरोग इति वरसंपत्' इति ।। गौतमः — 'विद्याचारित्रबन्धुशीलसम्पन्नाय दद्यादिति ।।

### வரனின் லக்ஷணம்

மனு -குலம் முதலியவைகளால் சிறந்தவனும், அழகுடையவனும், ஸமான ஜாதீயனுமான வரன் கிடைத்தால், புத்திமான் தன் பெண்ணை விவாஹத்திற்குரிய (8-வது) வயதிற்கு முன்பாகனும் விவாஹம் செய்து கொடுக்கவேண்டும். யமன் - குலம், சீலம், பரீரம், வயது, வித்யை, தனம், பந்துக்கள் என்ற இந்த ஏழு குணங்களையும் பரிக்ஷித்துக் கன்யகையைப் புத்திமான்கள் தானம் செய்யவேண்டும். மற்றதை விசாரிக்க வேண்டியதில்லை. ''கன்யாதானத்தில் ப்ராமணனின் குலத்தைப் பரீக்ஷிக்க வேண்டும். வித்யைகளையும், ஸம்பத்துக்களையும் பரீக்ஷிக்க வேண்டியதில்லை. சிராத்தத்திலும் அப்படியே. அதில் வித்யை காரணமல்ல.'' என்ற விஷ்ணு வசனம் குலம் ப்ரதானம்என்பதைச்சொல்வதில் தாத்பர்யமுள்ள தேயன்றி, வித்யையை நிராகரிப்பதற்கல்ல. ஆகையால் தான் ஆய்வலாயனர் ''குலத்தை முதலில பரீக்ஷிக்க வேண்டும்.'' என்றார். ஆபஸ்தம்பர் - ''பந்துக்கள், நல்லொழுக்கம், லக்ஷணம், சாஸ்த்ரம் இவைகளுடன் கூடியவனும், ரோகமற்றவனும் சிறந்த வரன்'' என்றார்.

*கௌதமர் - ''வித்யை, விஹிதகர்மானுஷ்டானம், பந்துக்கள், சீலம் இவைகளுடன் கூடியவனுக்குப் பெண்ணைக் கொடுக்க வேண்டும்'' என்றார்.*

शातातपः — 'वरो वरयितव्योऽर्थी कुलशीलसमन्वितः । रूपवान्पण्डितः प्राज्ञो युवा शील समन्वितः इति ॥ याज्ञवल्क्यः — 'एतैरेव गुणैर्युक्तः सवर्णः श्रोत्रियो वरः । यत्नात् परीक्षितः पुंस्त्वे युवा धीमान् जनप्रय' इति ॥ कात्यायनोऽपि — 'अपत्यार्थं स्त्रियः सृष्टाः स्त्री क्षेत्रं बीजिनो नराः । क्षेत्रं बीजवते देयमतो बीजं परीक्षयेत्' इति।

*சாதாதபர் - ''பெண்ணை விரும்புகின்றவனும், குலம், சீலம், ரூபம், பாண்டித்யம், ப்ரக்ஞை, யௌவனம் இவைகளுடன் கூடியவனுமானவனை வரனாக க்ரஹிக்க வேண்டும்'' என்றார். யாக்ஞவல்க்யர் - முன் சொல்லிய குணங்களுடன் கூடியவனும், ஸமானவர்ணத்தானும், யௌவனமுள்ளவனும், புத்திமானும், ஜனங்களுக்கு ப்ரியனுமாய் இருப்பவன் வரன் ஆவான். காத்யாயனர் - குழந்தைக்காக ஸ்த்ரீகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனர். ஸ்த்ரீ, க்ஷேத்ரம் (வயல்) எனப்படுவாள். புருஷன் பீஜம் (விதை) உடையவனாவான். க்ஷேத்ரத்தைப் பீஜமுள்ளவனுக்குக் கொடுக்க வேண்டும். ஆகையால் பீஜத்தைப் பரீக்ஷிக்க வேண்டும்.*

तत्परीक्षोपायमाह नारदः - 'यस्याप्सु प्लवते बीजं ह्रादि मूत्रं च फेनिलम् । पुमान् स्याल्लक्षणैरेतैर्विपरीतस्तु षण्डकः' ॥ ह्रादि - शब्दवत् ॥ 'चतुर्दशविधः शास्त्रे षण्डो दृष्टो मनीषिभिः । चिकित्स्यश्चाचिकित्स्यश्च तेषामुक्तो विधिः क्रमात् ।निसर्गषण्डो बद्धश्च पक्षषण्डस्तथैव च । अभिशापाद्गुरो रोगाद्देवक्रोधात्तथैव च ॥ ईर्ष्याषण्डश्च सेव्यश्च वातरेता मुखेभगः। आक्षिप्तो मोघबीजश्च शालीनोऽन्यापतिस्तथा' ॥ एतेषां लक्षणम् । निसर्गषण्डः - स्वभावतो लिङ्गवृषणहीनः । बद्धः - छिन्नमुष्कः । पक्षषण्डः - पञ्चदशदिनानि स्त्रियमनासेव्य सकृद्भोगक्षमः । गुरुशापषण्डादयः त्रयः

स्पष्टाः। ईर्ष्यया पुंस्त्वमुत्पद्यते यस्य स ईर्ष्याषण्डः स्त्र्युपचारविशेषेण पुंस्त्वशक्तिर्यस्य स सेव्यषण्डः । वातोपहतरेतस्को वातरेताः । मुख एव पुंस्त्वशक्तिर्न योनौ यस्य स मुखेभगः । रेतोनिरोधात् षण्डीभूत आक्षिप्त-षण्डः । गर्भाधानासमर्थबीजः मोघबीजः । अप्रगल्भतया क्षोभाद्वा नष्टपुंस्त्वः शालीनः । यस्य भार्याव्यतिरेकेण अन्यासु पुरुषभावः सोऽन्यापतिः । 'तत्राद्यावप्रतीकारौ पक्षषण्डं च वर्जयेत् । अनुक्रमात्त्रयस्यास्य कालः संवत्सरः स्मृतः ॥ ईर्ष्याषण्डादयो येऽन्ये चत्वारः समुदाहृताः । त्यक्तव्यास्ते पतितवत् क्षतयोन्याऽपि च स्त्रिया ॥ आक्षिप्तमोघबीजाभ्यां कृतेऽपि पतिकर्मणि । पतिरन्यः स्मृतो नार्या वत्सरार्धं प्रतीक्ष्य तु ॥ शालीनस्यापि धृष्टस्त्रीसंयोगाद्भ्रश्यते गुणः । तं हीनं विषमं तत्स्त्री बाला रहसि बोधयेत् ॥ अन्यस्यां यो मनुष्यः स्यादमनुष्यः स्वयोषिति । लभते साऽन्यभर्तारमेतद्वाक्यं प्रजापतेरिति ॥ भर्त्रन्तरपरिग्रहोऽयं युगान्तरविषयः ॥ 'ऊढायाः पुनरुद्वाह'मिति कलौ निषेधस्मरणात् ॥

*பீஜபரீக்ஷயின் உபாயத்தைப் பற்றி நாரதர் - எவனுடைய பீஜமானது ஜலத்தில் மிதக்கின்றதோ, மூத்ரம் சப்தமுடையதும், நுரையுடையதுமாயுள்ளதோ அவன் புருஷனாவான். விபரீதமாயுள்ளவன் ஷண்டன் (நபும்ஸகன்) ஆவான். ஷண்டன் 14 - விதமாவான் என்று சாஸ்த்ரங்களில் வித்வான்களால் காணப்பட்டிருக்கிறான். இவர்களில் சிலருக்குச் சிகித்ஸை உண்டு. சிலருக்கு இல்லை. அவர்களைப் பற்றிக் கிரமமாய்ச் சொல்லப்படுகிறது. நிஸர்க்க ஷண்டன், பதிதன், பக்ஷஷண்டன், குருசாப ஷண்டன், ரோக ஷண்டன், தேவகோப ஷண்டன், ஈர்ஷ்யா ஷண்டன், ஸேவ்யன், வாதரேதஸ், முகேபகன், ஆக்ஷிப்தன், மோகபீஜன், சாலீனன், அன்யாபதி எனப்பதினான்கு பேதங்கள். இவர்களின் லக்ஷணங்கள் - இயற்கையால் ஆண்குறியும், வ்ருஷணமுமில்லாதவன் 'நிஸர்க்கஷண்டன்'. வெட்டப்பட்டதால் விருஷண மற்றவன் 'பத்தன்'. பதினைந்து நாள் ஸ்த்ரீயுடன்*

சேராமலிருந்தால் ஒரு தடவை சேருவதற்குச் சக்தியுள்ளவன் 'பக்ஷஷண்டன்'. குருசாபத்தாலும், ரோகத்தாலும், தேவகோபத்தாலும் ஆண்மை யிழந்தவர்கள் முறையே குரு சாப ஷண்டன், ரோக ஷண்டன், தேவகோபஷண்டன் எனப்படுவர். பொறாமை யால் ஆண்மையுண்டாகின்றவன் ஈர்ஷ்யாஷண்டன். ஸ்த்ரீயின் உபசாரத்தால் ஆண்மையை அடைபவன் ஸேவ்யஷண்டன். வாதத்தால் சுக்லமழிந்தவன் வாதரேதஸ். யோனியிலன்றி முகத்தில் மட்டில் ஆண்மையுடையவன் முகேபகன். சுக்லம் கட்டுப்பட்டதால் ஷண்டனானவன் ஆக்ஷிப்தஷண்டன். கர்ப்பத்தை உற்பத்தி செய்யும் ஶக்தியற்ற சுக்லமுடையவன் மோகபீஜன். தைர்யமின்மையால், அல்லது க்ஷோபத்தால் ஆண்மையற்றவன் சாலீனன். தன் பார்யை தவிர மற்ற ஸ்த்ரீகளிடம் ஆண்மையுடையவன் அன்யாபதி. இவர்களுள் முதல் இருவர்களும் சிகித்ஸை செய்ய முடியாதவர்கள். பக்ஷஷண்டனையும் தள்ளவேண்டும். பிறகு உள்ள மூவர்களையும் ஒரு வர்ஷம் வரையில் எதிர்ப்பார்க்கலாம். ஈர்ஷ்யாஷண்டன் முதலிய நால்வரையும், பதிதனைப்போல் ருதுவான பெண்ணும் கூட விட்டு விலகலாம். ஆக்ஷிப்தன் மோகபீஜன் என்ற இருவர்களை விவாஹமான பிறகும் ஆறுமாதம் ப்ரதீக்ஷித்துப் பிறகும் ஆண்மையில்லாவிடில் பரித்யாகம் செய்து ஸ்த்ரீ வேறு புருஷனை அடையலாம். சாலீனன் என்பவனுக்குத் தைர்யமுள்ள ஸ்த்ரீயுடன் சேருவதால் குணம் காணப்படுகிறது. அவனை அவனுடைய ஸ்த்ரீயானவள் ரஹஸ்யத்தில் போதிக்க வேண்டும். அன்யாபதி என்பவனைப் பரித்யாகம் செய்து வேறு பர்த்தாவை அடையலாம். இது ப்ரம்மதேவரின் வாக்யமாம். இவ்விதம் வேறு பர்த்தாவை அடையலாமென்றது யுகாந்தர விஷயம். பெண்ணுக்கு மறுவிவாஹம் கூடாதென்று கலியுகதர்மத்திற் சொல்லியிருப்பதால்.

कात्यायनः — 'उन्मत्तः पतितः कुष्ठी तथा षण्डः स्वगोत्रजः । चक्षुःश्रोत्रविहीनश्च तथाऽपस्मारदूषितः ॥ वरदोषाः स्मृता ह्येते कन्यादोषाश्च कीर्तिताः । दूरस्थानामविद्यानां मोक्षमार्गानुसारिणाम् ॥ शूराणां नि(भृता)र्धनानां च न देया कन्यका बुधैरिति ॥ अपरार्के — 'अनार्यता निष्ठुरता क्रूरता निष्क्रियात्मता । पुरुषं व्यञ्जयन्तीह लोके कलुषयोनिजमिति ॥

**காத்யாயனர்** - *பித்தன், பதிதன், குஷ்ட முடையவன், ஷண்டன், ஸஹோதரன், குருடன், செவிடன், அபஸ்மாரரோகமுடையவன்என்பவர்கள் தோஷமுள்ளவர்கள். இவர்கள் வரனுக ஆவதற்கில்லை. கன்னிகையின் தோஷங்களும் முன்பே சொல்லப்பட்டன. தூரதேசத்திலிருப்பவர்க்கும், வித்யை கற்காதவர்க்கும், மோக்ஷமார்க்கத்தை அனுஸரிப்பவர்க்கும், சூரர்களுக்கும், ஏழைகளுக்கும், அறிவுள்ளவர் பெண்ணைக் கொடுக்கக் கூடாது. அபரார்க்கத்தில் - கடினத்தன்மையும், கடினமாய்ப் பேசுதலும், ஹிம்ஸித்தலும், விஹிதானுஷ்டானமில்லாதிருத்தலும், ஸங்கரஜாதியிற் பிறந்தவன் எனப்புருஷனைத் தெரிவிக்கின்றன.*

## कन्यादानकालः

तत्र बोधायनः — 'दद्याद्गुणवते कन्यां नग्निकां ब्रह्मचारिणे । अपि वा गुणहीनाय नोपरुन्ध्याद्रजस्वलामिति ॥ वसिष्ठः— 'प्रयच्छेन्नग्निकां कन्यामृतुकालभयात् पिता । ऋतुमत्यां हि तिष्ठन्त्यां दोषः पितरमृच्छतीति। 'नग्निकालक्षणमाह स एव — 'यावन्न लज्जिताऽङ्गानि कन्या पुरुषसन्निधौ । योन्यादीन्यवगूहेत तावद्भवति नग्निका । यावच्चेलं न गृह्णाति यावत् क्रीडति पांसुभिः । यावद्दोषं न जानाति तावद्भवति नग्निके' ति ॥

## கன்யாதான காலம்

**போதாயனர்** - *நக்னிகையான பெண்ணைக்*

குணமுடைய ப்ரம்மசாரிக்குக் கொடுக்க வேண்டும். குணமுடையவன் கிடைக்காவிடில் குணம் குறைந்த வரனுக்காவது கொடுக்க வேண்டும். ரஜஸ்வலையாகும் வரையில் கொடுக்காமலிருக்கக் கூடாது. வஸிஷ்டர் - பெண் நக்னிகையாய் இருக்கும் போதே பெண்ணை, ருதுகாலம் வந்துவிடுமென்று பயந்து தானம் செய்ய வேண்டும். விவாஹமாகாத பெண் ருதுமதியாய் இருந்தால் பிதாவைப் பாபம் சேரும். நக்னிகாலக்ஷணத்தைப்பற்றி வஸிஷ்டரே - பெண்ணானவள் புருஷர்களின் எதிரில் வெட்கப்பட்டு மறைக்க வேண்டிய அங்கங்களை மறைத்துக் கொள்ளாதகாலம் வரையில் நக்னிகை எனப்படுவாள். எது வரையில் வஸ்த்ரம் தரிக்க வில்லையோ, எதுவரையில் புழுதியில் விளையாடுகின்றாளோ, எதுவரையில் குற்றத்தை அறியவில்லையோ, அது வரையில் நக்னிகை எனப்படுவாள்.

संवर्तः — 'यावन्न लज्जते कन्या यावत् क्रीडति पांसुषु। यावत्तिष्ठति गोमार्गे तावत् कन्यां विवाहयेत्॥ अष्टवर्षा भवेद्गौरी नववर्षा तु रोहिणी। दशवर्षा भवेत् कन्या अत ऊर्ध्वं रजस्वला' इति॥

ஸம்வர்த்தர் - பெண் எது வரையில் வெட்கப்படுவதில்லையோ, எதுவரையில் புழுதிகளில் விளையாடுகின்றாளோ, எதுவரையில் மாடுகளின் மார்க்கத்தில் நிற்கின்றாளோ அதற்குள் பெண்ணை விவாஹம் செய்து கொடுக்க வேண்டும். எட்டு வயதுள்ளவள் கௌரீ; ஒன்பது வயதுள்ளவள் ரோகிணீ; பத்து வயதுள்ளவள் கன்யை; இதற்கு மேல் ரஜஸ்வலை எனப்படுவாள்.

अत ऊर्ध्वं रजस्वलेत्येतत् काचित्काभिप्रायम्। तदा रजसो नियमेनासंभवात्। यतः स एवाह — 'प्राप्ते तु द्वादशे वर्षे यः कन्यां न प्रयच्छति। मासि मासि रजस्तस्याः पिता पिबति शोणितम्॥ माता चैव पिता चैव ज्येष्ठो भ्राता तथैव च। त्रयस्ते नरकं यान्ति दृष्ट्वा कन्यां

रजस्वलाम्। कन्यां ददद् ब्रह्मलोकं रौरवं तु रजस्वलाम्। तस्माद्विवाहयेत् कन्यां यावन्नर्तुमती भवेत्। विवाहस्त्वष्टवर्षायाः कन्यायास्तु प्रशस्यते॥ रोमकाले तु सम्प्राप्ते सोमो भुङ्क्ते तु कन्यकाम्। रजो दृष्ट्वा तु गन्धर्वः कुचौ दृष्ट्वा तु पावक' इति॥ अत एव यमसंवर्तौ — 'दशवर्षा भवेत् कन्या अत ऊर्ध्वं रजस्वले'ति॥ एवञ्च यावद्रजोदर्शनं न भवति तावत् कन्यात्वमुक्तं भवति। अत एव यमः — 'तस्मादुद्वाहयेत् कन्यां यावन्नर्तुमती भवे'दिति॥ मनुरपि — 'त्रिंशद्वर्षो वहेत् कन्यां हृद्यां द्वादशवार्षिकीमिति॥ एतद्रजोदर्शनाभावे वेदितव्यम्॥ अत एव बृहस्पतिः — 'पितुर्गृहे तु या कन्या रजः पश्यत्यसंस्कृता। भ्रूणहत्या पितुस्तस्याः सा चैव वृषली स्मृता॥ यस्तां विवाहयेत् कन्यां ब्राह्मणो मदमोहितः। असंभाष्यो ह्यपाङ्क्तेयः स विप्रो वृषलीपतिः॥ वृषलीसङ्गृहीता यो ब्राह्मणो मदमोहितः। सततं सूतकं तस्य ब्रह्महत्या दिने दिने॥ यः करोत्येकरोत्रेण वृषलीसेवनं द्विजः। तद्भैक्षभुग्जपन्नित्यं त्रिभिर्वर्षैर्व्यपोहति॥ वृषलीगमनं चैव मासमेकं निरन्तरम्। इह जन्मनि शूद्रत्वं मृतः श्वा चैव जायत' इति॥यमः — 'अष्टमे तु भवेद्गौरी नवमे नग्निका भवेत्। दशमे कन्यका प्रोक्ता द्वादशे वृषली तथेति॥ वृषली - रजस्वला॥ 'वन्ध्या तु वृषली ज्ञेया वृषली च मृतप्रजा। अपरा वृषली ज्ञेया कुमारी या रजस्वलेति देवलस्मरणात्॥ आपस्तम्बः — 'अष्टवर्षा भवेद्गौरी नववर्षा तु रोहिणी। दशवर्षा भवेत् कन्या अत ऊर्ध्वं रजस्वला॥ प्राप्ते तु द्वादशे वर्षे रजः स्त्रीणां प्रवर्तत इति॥ एतच्च प्रायिकाभिप्रायम्। न पुनर्द्वादश एव रजस्वला भवतीति॥ कासाञ्चिदर्वागपि रजोदर्शनसंभवात्॥

*பத்து வயதிற்குமேல் ரஜஸ்வலை என்பது சிலரைப் பற்றிய அபிப்ராயம். அப்பொழுது எல்லோருக்கும் ரஜஸ்ஸு உண்டாகின்றதென்ற நியமம் இல்லாததால். அவரே சொல்லுகின்றார். 12-வது வயது வந்தபிறகும், எவன் பெண்ணைத் தானம் செய்யவில்லையோ அந்தப் பிதா தன்*

பெண்ணின் சோணிதத்தைப் பருகின பாபத்தைப் பிரதிமாதமும் அடைகின்முன். விவாஹமாகாத பெண் ரஜஸ்வலையாளுல், தாய், தகப்பன், தமையன் இம்மூவர்களும் நரகத்தை அடைகின்றனர். கௌரியானவளைக் கொடுப்பவன் கன்னிகையயைக் கொடுப்பவன் ப்ரம்மலோகத்தையும், ரஜஸ்வலையைக் கொடுப்பவன் ரௌவத்தையும் அடைவான். ஆகையால் ருதுமதியாய் ஆவதற்குள் பெண்ணை விவாஹம் செய்து கொடுக்க வேண்டும். பெண்ணுக்கு எட்டாவது வயதில் விவாஹம் செய்து ச்லாக்யமாகும். ரோமமுண்டாகும் காலத்தில் ஸோமதேவனும், ரஜோதர்சன காலத்தில் கந்தர்வனும், ஸ்தனங்களுண்டாகும் காலத்தில் பாவகனும் கன்னிகையை அனுபவிக்கின்றனர்.

**யமன்** - எட்டாவது வயதில் கௌரி என்றும், ஒன்பதில் நக்னிகை என்றும், பத்தாவதில் கன்யகா என்றும், பன்னிரெண்டில் வ்ருஷளீ என்றும் சொல்லப்படுகிருள். வ்ருஷளீ ரஜஸ்வலை. ''மலடாயிருப்பவள் வ்ருஷளீ எனப்படுவாள். பிறந்த குழந்தைகளெல்லாம் இறந்து குழந்தையற்றவளும் வ்ருஷளீ. விவாஹமாகாமல் ரஜஸ்வலையானவளும் வ்ருஷளீ.'' என்று தேவலர் சொல்லியிருப்பதால். **ஆபஸ்தம்பர்** - எட்டுவயதுடையவள் கௌரீ என்றும், ஒன்பது வயதுடையவள் ரோகிணீ என்றும், 10 - வயதுடவயவள் கன்யை என்றும், பிறகு ரஜஸ்வலை என்றும் சொல்லப்படுகிருள். பன்னிரண்டாவது வயது வந்தால் ஸ்த்ரீகளுக்கு ரஜஸ் உண்டாகிறது. இது அநேகமாய் இவ்விதமிருக்கும் என்பதால் சொல்லியது. 12-வது வயதிலேயே தான் ரஜஸ்வலையாவாள் என்பதால் சொல்லியதல்ல. சிலருக்கு 12-க்கு முன்னும் ரஜோதர்சனம் ஸம்பவிப்பதால். **யமனும் ஸம்வர்த்தரும்** - 10 வயதுடையவள் கன்யை; அதற்கு மேல் ரஜஸ்வலை இவ்விதமிருப்பதால் ரஜோதர்ஶனம் ஏற்படாதவரையில் கன்னிகை என்பது ஏற்படுகிறது. ஆகையால்தான் **யமன்** -

''ருதுமதியாய் ஆவதற்குள் கன்னிகையை விவாஹம் செய்து கொடுக்க வேண்டும்'' என்றார். மனுவும் - ''முப்பது வயதுடையவன் பன்னிரண்டு வயதுள்ளவளை மணக்க வேண்டும்'' என்றார். இது ரஜோதர்சனமில்லாத விஷயத்தில் என்றறியவும். ஆகையால்தான் ப்ருஹஸ்பதி - ''விவாஹ மாகாமல் பிதாவின் வீட்டிலிருக்கும் பெண் ரஜஸ்வலையாய் ஆனால், அவளின் பிதா ப்ரூணஹத்யா தோஷத்தை அடைவான்; அவளும் வ்ருஷளீ எனப்படுவாள்; அவளை மோஹத்தால் மணந்தவன் வ்ருஷளீபதி எனப்படுவான்; அவன் ஸம்பாஷணத்திற்கும் பங்க்திக்கும் அர்ஹனல்ல; அவனுக்கு எப்பொழுதும் ஆசௌசம்; ஒவ்வொரு நாளிலும் ப்ரம்மஹத்யா தோஷமுண்டாகும்; அந்த வ்ருஷளியுடன் ஒருநாள் ஸங்கமம் செய்த பாபத்தை மூன்று வர்ஷம் பிக்ஷான்னம் புஜிப்பவனாய் ஜபம் செய்தால் போக்கலாம்; வ்ருஷளியுடன் ஒரு மாதம் ஸங்கமம் செய்தால் இந்த ஜன்மத்திலேயே சூத்ரனாவான்; இறந்தபிறகு நாயாய்ப் பிறப்பான்'' என்றார்.

नारदः — 'यावन्तश्चर्तवस्तस्याः समतीयुः पतिं विना। तावत्यो भ्रूणहत्याः स्युस्तस्य यो न ददाति तामिति ।। याज्ञवल्क्योऽपि - अप्रयच्छन् समाप्नोति भ्रूणहत्यामृतावृताविति ।। व्याघ्रपादः — 'उपायनोदितः कालः स्त्रीणामुद्वाहकर्मणि। स्त्रीणामुपनयस्थाने विवाहं मनुरब्रवी' दिति ।।

நாரதர் - விவாஹமாகாத பெண்ணுக்கு எவ்வளவு ருதுகாலங்கள் சென்றனவோ அவ்வளவு ப்ரம்மஹத்யைகள், அவளின் பிதாவைச் சேருகின்றன. யாக்ஞவல்க்யர் - பெண்ணை விவாஹம் செய்து கொடுக்காத பிதாவானவன் ஒவ்வொரு ருதுவிலும் கர்ப்பஹத்யா தோஷத்தை அடைகிறான். வ்யாக்ரபாதர் - உபநயனத்திற்குச் சொல்லிய காலமே ஸ்த்ரீகளுக்கு விவாஹத்திற்குரியதாகும். ஸ்த்ரீகளுக்கு உபநயன ஸ்தானத்தில் விவாஹத்தை மனு விதித்தார்.

यमः — 'विवाहं चोपनयनं स्त्रीणामाह पितामहः । तस्माद्गर्भाष्टमः श्रेष्ठो जन्मतो वाऽष्टवत्सरः ।। देशकालादिवैषम्यादधर्मोद्वाहसंशये । सदृशासम्भवे कन्यां नग्निकामपि दापयेत् ।। बालिका या भवेत् कन्या गुणाढ्यो यदि लभ्यते । दद्यादप्राप्तकालेऽपि देशकालभयान्नर इति ।।

*யமன் - ஸ்த்ரீகளுக்கு விவாஹமே உபநயனம் என்றார் பிதாமஹர். ஆகையால் கர்ப்பாஷ்டமம், அல்லது பிறந்தது முதல் எட்டாவது வயது ஶ்லாக்யம். தேசம் காலம் முதலியவை அனுகூலமில்லாமல் அதர்ம்யமான விவாஹம் செய்ய நேரிடும். ஸமானனான வரன் கிடைக்கமாட்டான் என்ற ஸம்சயமேற்படின் சிறுவயதிலேயே விவாஹம் செய்யலாம். பெண் சிறுவயதாயிருக்கும் போது குணங்கள் நிறைந்த வரன் கிடைத்தால் விவாஹகாலம் வராவிடினும், தேசகால பயத்தால் விவாஹம் செய்யலாம்.*

बालिकाविवाहमङ्गीकृत्य संस्कारविशेषमाह प्रजापतिः — 'द्विवर्षात् प्राग्विवाहश्चेत् कन्याकामरणं यदि । खननं नैव कर्तव्यं मन्त्रसंस्कारमाचरेदिति ।। यत्तु मनुनोक्तम् — 'काममामरणात्तिष्ठेद्गृहे कन्यर्तुमत्यपि । न त्वेवैनां प्रयच्छेत गुणहीनाय कर्हिचिदिति, तत् गुणवति सम्भवति गुणहीनाय न दद्यादित्येवं परं न पुनर्गुणहीननिषेधार्थम् ।।

*சிறிய வயதுள்ள பெண்ணின் விவாஹத்தை அங்கீகரித்து ஸம்ஸ்காரத்தில் விசேஷத்தைச் சொல்லுகின்றார் ப்ரஜாபதி - இரண்டு வயது பூர்த்தி ஆவதற்குள் விவாஹமாகிய பெண் மரித்தால் கனனம் செய்யக்கூடாது. மந்த்ரத்துடன் (தகன) ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும். ''ருதுமதியானாலும், பெண் சாகும் வரையில் வீட்டில் இருக்கலாம்; குணமில்லாதவரனுக்குப் பெண்ணைக் கொடுக்கவே கூடாது''. என்று மனு சொல்லியிருக்கின்றாரே எனில், அந்த வசனம் குணவானான வரன் கிடைக்குமானால், குணமற்றவனுக்குக்*

கொடுக்ககூடாதென்றதைச் சொல்வதற்கே யன்றி குணம் குறைந்தவனுக்குக் கொடுக்கக் கூடாதென்று நிஷேதிப்பதற்கல்ல. இவ்விதமே யமர் போதாயனர் இருவரும் சொல்லுகின்றனர் - குணமுள்ள வரன் கிடைத்தால் நக்னிகையாயிருக்கும் போதும் கொடுத்துவிடலாம். உரியகாலத்தில் உயர்ந்த வரன் கிடைக்காவிடில் தாழ்ந்த வரனுக்காவது கொடுக்க வேண்டும். ரஜஸ்வலையாய் ஆகும் வரையில் விவாஹமின்றி வைக்கக் கூடாது. ப்ரௌடையான பிறகும் பிதா விவாஹம் செய்விக்காவிடில், அப்பெண் தானாகவே ஸமமான வரனை அடையலாம் என்கிறார் யமன் - பன்னிரண்டாவது வயதில் தானம் செய்யப்படாத பெண் வீட்டிலிருந்தால், பிதாவுக்குக் கர்ப்பஹத்யா தோஷமுண்டாகும். அப்பெண் தானாகவே பதியை வரிக்கலாம். இவ்விதம் வரிப்பது ருது தர்ஸனம் முதல் மூன்று வர்ஷத்திற்கு மேல் என்று அறியவும்.

यदाहतुर्यमबोधायनौ — 'दद्याद्गुणवते कन्यां नग्निकामेव शक्तितः। अपि वा गुणहीनाय नोपरुन्ध्याद्रजस्वलामिति ।। यदा प्रौढामपि पिता न प्रयच्छति तदा कन्यैव सदृशं भर्तारं वरयेदित्याह यमः — 'कन्या द्वादशमे वर्षे या त्वदत्ता गृहे वसेत् । भ्रूणहत्या पितुस्तस्याः स कन्या वरयेत् स्वयमिति। एतच्च वरणमृतुप्रभृति वर्षत्रयादूर्ध्वं वेदितव्यम् ।।

அவ்விதமே யமனும் போதாயனரும் - ருதுமதியான பெண்ணை மூன்று வர்ஷம் வரையில் தானம் செய்யாத பிதா, ப்ரம்மஹத்திக்குச் சமமான பாபத்தை அடைவான். ஸம்ஸயமில்லை. ஒருவரும் யாசிக்காவிடில் இவ்விதம், யாசித்தும் கொடுக்காவிடில் ஒவ்வொரு ருதுவிலும் தனித்தனியே ப்ரம்மஹத்யா தோஷமேற்படும் என்பது மனுவின் மதம். ருதுமதியான பெண் மூன்று வர்ஷம் முடியமளவும் பிதாவின் கட்டளையை எதிர்பார்க்க வேண்டும். நான்காவது வர்ஷத்தில் ஸமானனான பர்த்தாவைத் தானாகவே அடையலாம். ஸமானனான வரன்

கிடைக்காவிடில் தாழ்ந்த வரனையாவது அடையவேண்டும்.

मनुरपि — 'त्रीणि वर्षाण्युदीक्षेत कुमार्यृतुमती सती । ऊर्ध्वं तु कालादेतस्माद्विन्देत सदृशं पतिम् ।। अदीयमाना भर्तारमधिगच्छेद्यदि स्वयम्। नैनः किञ्चिदवाप्नोति न च यं साऽधिगच्छति ।। अलङ्कारं नाददीत पित्र्यं कन्या स्वयंवरा । मातृकं भ्रातृदत्तं वा स्तेयं स्याद्यदि तं हरेत् ।। पित्रे न दद्याच्छुल्कं तु कन्यामृतुमतीं हरन् ।। स च स्वाम्यादतिक्रामेदृतूनां प्रतिरोधक' इति ।।

மனு - ருதுமதியான பெண் மூன்று வர்ஷம் வரையில் ப்ரதீக்ஷிக்க வேண்டும். பிறகு தானாகவே ஸமானனான பர்த்தாவை அடையலாம். இவ்விதம் பிதாவினால் கொடுக்கப்படாமல் தானாகவே பர்த்தாவை வரிப்பதால் அவள் கொஞ்சமும் பாபத்தை அடைவதில்லை. பர்த்தாவும் பாபத்தை அடைவதில்லை. தானாகப் பர்த்தாவை வரிக்கும் பெண் பிதா மாதா ப்ராதா இவர்களால் முன் தனக்குக் கொடுக்கப்பட்ட ஆபரணம் முதலியவற்றை எடுத்துக் கொள்ளக் கூடாது. எடுத்துக் கொண்டால் திருடியவள் ஆவாள். இவ்விதமான பெண்ணை ஸ்வீகரிப்பவன், பெண்ணின் பிதாவுக்குச் சுல்கம் கொடுக்கக் கூடாது. அந்தப் பிதா தன் பெண்ணின் ருதுக்களை வீணாக்கியதால் பெண்ணின் பாத்தியத்தினின்றும் விலகியவனாகின்றான்.

## विवाहमध्ये रजोदर्शने कर्तव्यविधिः

विवाहकाले रजोदर्शने कर्तव्यामाहात्रिः - 'विवाहे वितते यज्ञे होमकाल उपस्थिते । कन्यामृतुमतीं दृष्ट्वा कथं कुर्वन्ति याज्ञिकाः ।। स्नापयित्वा तु तां कन्यामर्चयित्वा हुताशनम् । युञ्जानमाहुतिं कृत्वा ततः कर्म प्रयोजयेत् ।। प्रधानहोमे निर्वृत्ते कुमारी यदि सार्तवा । त्रिरात्रेऽपगते पश्चाच्छेषं कार्यं समापये'दिति ।। स्मृतिभास्करे - 'विवाहहोमे प्रक्रान्ते यदि कन्या रजस्वला । त्रिरात्रं दम्पती स्यातां पृथक्छय्यासनाशनौ ।।

चतुर्थेऽहनि संस्नातौ तस्मिन्नग्नौ यथाविधि । विवाहहोमं कुर्याता मित्यादिस्मृतिसङ्ग्रह' इति ॥

**விவாஹமத்தியில் பெண் ரஜஸ்வலையானால் முறை**

அத்ரி - விவாஹத்தில் ஹோமகாலம் ஸமீபத்திருக்கும் பொழுது கன்னிகை ருதுமதியாய் ஆகிவிட்டால் எவ்விதம் செய்வது ? அப்பெண்ணுக்கு ஸ்நானம் செய்வித்து, அக்னியைப் பூஜித்து, யுஞ்ஜாந:' என்று ஆஹுதி செய்து பிறகு ஹோமத்தைச் செய்யவேண்டியது. ப்ரதான ஹோமம் முடிந்த பிறகு ரஜஸ்வலையானால், மூன்று நாள் சென்றபிறகு மற்றகார்யத்தை முடிக்க வேண்டும். ஸ்ம்ருதி பாஸ்கரத்தில் - விவாஹ ஹோமம் ஆரம்பிக்கும் பொழுது கன்னிகை ரஜஸ்வலையானால், தம்பதிகள் தனியாய் படுக்கை, இருப்பு, போஜனம் இவைகளை வைத்துக் கொள்ள வேண்டும். நான்காவது தினத்தில் ஸ்நானம் செய்து அந்த அக்னியில் விதிப்படி விவாஹ ஹோமத்தைச் செய்ய வேண்டும் என்பது ஸ்ம்ருதிகளின் சுருக்கம்.

यस्तु कन्यां प्रदाय पुनस्तामपहरति स राज्ञा दण्ड्य इत्याह याज्ञवल्क्यः - 'सकृत् प्रदीयते कन्या हरंस्तां चोरदण्डभागिति ॥ मनुरपि — 'सकृदंशे निपतति सकृत् कन्या प्रदीयते। सकृदाह ददानीति त्रीण्येतानि सतां सकृत् ॥ न दत्वा कन्यचित् कन्यां पुनर्दद्याद्विचक्षणः । दत्वा पुनः प्रयच्छेद्यः प्राप्नोति पुरुषानृतमिति ॥ शतमश्वानृते हन्ति सहस्रं पुरुषानृत इत्युक्तं दोषमाप्नोतीत्यर्थः ॥

பெண்ணைத் தானம் செய்து பிறகு அபஹரிப்பவனை அரசன் தண்டிக்க வேண்டும் என்கிறார் யாக்ஞவல்க்யர் - பெண்ணை ஒரு தடவைதான் கொடுக்கலாம். கொடுத்த பெண்ணை அபஹரிப்பவன் திருடனுக்குரிய தண்டனையை அடையவேண்டும். மனு - பாகம் பிரிப்பது ஒரே தடவை. பெண்ணைத் தானம் செய்வதும் ஒரே தடவை.

மற்றவஸ்துவைத் தானம் செய்வதும் ஒரே தடவை. இம்மூன்றும் ஸாதுக்களுக்கு ஒரே தடவைதான். பெண்ணை ஒருவனுக்குக் கொடுத்துப்பிறகு மற்றொருவனுக்குக் கொடுக்கக் கூடாது. அப்படிக் கொடுப்பவன் புருஷாந்ருத தோஷத்தை அடைவான். "அஶ்வவிஷயமாய்ப் பொய் சொல்பவன் நூறு பேர்களைக் கொன்ற பாபத்தை அடைவான். புருஷன் விஷயமாய்ப் பொய் சொல்பவன் ஆயிரம் புருஷர்களைக் கொன்ற பாபத்தை அடைவான்' என்று சாஸ்த்ரத்தில் சொல்லிய தோஷத்தை அடைவான் என்று பொருள்.

काश्यपः — 'सप्त पौनर्भवाः कन्या वर्जनीयाः कुलाधमाः । वाचा दत्ता मनोदत्ता कृतकौतुकमङ्गला ।। उदकस्पर्शिता या च या च पाणिगृहीतिका । अग्निं परिगता या च पुनर्भूप्रसवा च या ।। इत्येताः काश्यपेनोक्ता दहन्ति कुलमग्निवत् ।। प्ररोहत्यग्निना दग्धः पादपः सुचिरादपि। न च पौनर्भवाद्दग्धं कुलं क्वापि प्ररोहतीति ।।

காஶ்யபர் - ஏழுவிதமுள்ள புனர்ப்பூ என்ற கன்னிகைகள் குலத்திலிழிந்தவர்களானதால் அவர்களை வர்ஜிக்க வேண்டும். வாக்கினால் கொடுக்கப்பட்டவள், மனதால் கொடுக்கப்பட்டவள், கங்கண பந்தமானவள், ஜலபூர்வமாய்த்தானம் செய்யப்பட்டவள், பாணிக்ரஹணமானவள், அக்னியைச் சுற்றிவந்தவள், புனர்ப்பூவுக்குப் பிறந்தவள் என்று ஏழுவிதமான இவர்கள் அக்னிபோல் குலத்தைத் தஹிப்பார்கள். அக்னியால் தஹிக்கப்பட்ட வ்ருக்ஷம் வெகுகாலத்திற்குப் பிறகு தழைப்பதுமுண்டு. புனர்ப்பூஸம்பந்தத்தால் தஹிக்கப்பட்ட குலம் ஒருகாலும் தழைப்பதில்லை.

मनुः — 'एतत्तु न परे चक्रुर्नापरे जातु साधवः । यदन्यस्मै प्रतिश्रुत्य पुनरन्यस्य दीयत' इति ।। बोधायनः — 'वाग्दत्ता मनोदत्ताऽग्निं परिगता सप्तमं पदं नीता भुक्ता गृहीतगर्भा प्रसूता चेति सप्तविधा पुनर्भूस्तां गृहीत्वा न प्रजां न धर्मं विन्देतेति ।।

**மனு** - ஒருவனுக்குக் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டு பெண்ணை மற்றொருவனுக்குக் கொடுப்பதென்பதை முன்னோர்களான ஸாதுக்களாவது, இக்காலத்திலுள்ள ஸாதுக்களாவது ஒருபொழுதும் செய்யவில்லை. **போதாயனர்** - வாக்கால் கொடுக்கப்பட்டவள், மனதால் கொடுக்கப்பட்டவள், அக்னியைச் சுற்றியவள், ஏழு அடி நடத்தப்பட்டவள், அனுபவிக்கப்பட்டவள், கர்ப்பம் தரித்தவள், ப்ரஸவித்தவள், என புனர்ப்பூ ஏழுவிதமாம். அவளை க்ரஹித்தால் ப்ரஜை, தர்மம் ஒன்றையும் அடைவதில்லை.

आपस्तम्बः — 'दत्तां गुप्तां द्योतामृषभां शरभां विनतां विकटां मुण्डां मण्डूषिकां साङ्कारिकां रातां पालीं मित्रां स्वनुजां वर्षकारीं च वर्जयेदिति ॥ दत्ता - अन्यस्मै वाचा प्रतिश्रुता, उदकपूर्वं वा प्रतिपादिता । गुप्ता - कञ्चुकाद्यावृता, द्योता - बभ्रुकेशी, ऋषभा - ऋषभगतिः, शरभा - शीर्णदीप्तिः, विनता - कुब्जा, विकटा - विकटजङ्घा, मुण्डा - अपनीतकेशा, मण्डूषिका - अल्पकाया, साङ्कारिका - कुलान्तरस्य दुहितृत्वं गता, राता - ऋतुस्नाता, पाली - क्षेत्रादिपालिका, मित्रा - सखी, शोभना अनुजा यस्याः सा स्वनुजा, वरजन्मवत्सर एव पश्चाज्जाता वा । वर्षकारी अधिकवयस्केत्यर्थः ॥ सर्वाणीमानि दत्ताविषयाणि वचनानि अदुष्टवराभिप्रायाणि ॥ यदाह नारदः — 'दत्वा न्यायेन यः कन्यां वराय न ददाति ताम् । अदुष्टश्चेद्वरो राज्ञा स दण्ड्यस्तत्र चोरवदिति ॥

**ஆபஸ்தம்பர்** - வாக்கினால் அல்லது ஜலபூர்வமாய் அன்யனுக்குக் கொடுக்கப்பட்டவள், சட்டை முதலியவற்றால் தேஹத்தை மூடிக்கொண்டிருப்பவள், செம்பட்டை மயிருள்ளவள், எருதுபோல் நடையுள்ளவள், காந்தியற்றவள், கூனலானவள், விரிந்த முழங் காலுடையவள், மயிரில்லாதவள், சிறிய சரீரமுடையவள், வேறு குலத்திற்குப் பெண்ணானவள், ருதுதர்சனமானவள், வயல் முதலியவற்றைக் காப்பவள், ஸகியானவள்,

வரன்பிறந்த வர்ஷத்திலேயே பின் பிறந்தவள், வரனின் வயதைவிட அதிகவயதுடையவள் இவர்களை வர்ஜிக்க வேண்டும். இவ்விதம் தத்தையை நிஷேதிக்கும் வசனங்கள் தோஷமற்றவரனுக்குக் கொடுக்கப்பட்டவளைப் பற்றியவை. ஏனெனில்? நாரதர் - முறைப்படி கன்னிகையை ஒரு வரனுக்குக் கொடுத்துவிட்டுப் பிறகு கொடாமலிருப்பவனை, அரசன் திருடனுக்குரிய தண்டனைக்குட்படுத்த வேண்டும்; அந்தவரன் தோஷமற்றவனாகில்.

गौतमोऽपि — 'प्रतिश्रुत्याप्यधर्मसंयुक्ते न दद्यादिति ॥ याज्ञवल्क्योऽपि — 'दत्तामपि हरेत् पूर्वात् श्रेयांश्चेद्वर आव्रजेदिति ॥ काश्यपः — 'कुलशीलविहीनस्य षण्डादेः पतितस्य च । अपस्मारिविकर्मस्थरोगिणां वेषधारिणाम् ॥ दत्तामपि हरेत् कन्यां सगोत्रोढां तथैव च । मन्त्रसंस्काररहिता देयाऽन्यस्मै वराय तु ॥ अन्यथा तु हरन् दण्ड्यो व्ययं दद्याच्च सोदयमिति ॥

கௌதமர் - கொடுப்பதாய்ச் சொல்லியிருந்தாலும் அதர்மவிஷயத்தில் கொடுக்கக் கூடாது. யாக்ஞவல்க்யர் - கொடுத்த பெண்ணையும், சிறந்த வரன் பிறகு கிடைத்தால் அவனுக்குக் கொடுத்து விடலாம். காச்யபர் - நற்குலமில்லாதவனுக்கும், நல்ல சீலமில்லாதவனுக்கும், நபும்ஸகன் முதலியவனுக்கும், பதிதனுக்கும், அபஸ்மாரமுள்ளவனுக்கும், கெட்ட தொழில் செய்பவனுக்கும், ரோகமுள்ளவனுக்கும், வேஷதாரிக்கும், ஸகோத்ரனுக்கும் கொடுத்த பெண்ணை வேறு வரனுக்குக் கொடுத்துவிடலாம்; அவன் விவாஹமந்த்ரங்களால் ஸம்ஸ்காரத்தை அடையாவிடில். முற்கூறிய காரணங்களின்றி மற்றொருவனுக்குக் கொடுப்பவனைத் தண்டிக்க வேண்டும். முந்திய வரனுக்கு ஏற்பட்டுள்ள செலவை வட்டியுடன் கொடுக்க வேண்டும்.

शातातपः — 'वरश्चेत् कुलशीलाभ्यां न युज्येत कथञ्चन। पुनर्गुणवते दद्यादिति शातातपोऽब्रवीत् ॥ हीनस्य कुलशीलाभ्यां हरन्कन्यां न दोषभागिति॥ कात्यायनः - 'स तु यद्यन्यजातीयः पतितः क्लीब एव वा। विकर्मस्थः सगोत्रो वा दासो दीर्घामयोऽपि वा। दत्ताऽपि देया साऽन्यस्मै सप्रावरणभूषणा ॥ विधिवत् प्रतिगृह्यापि त्यजेत् कन्यां विगर्हिताम्। व्याधितां विप्रकृष्टां वा छद्मना चोपपादितामिति॥

*சாதாதபர் - கொடுப்பதாய்ச் சொல்லப்பட்ட வரன் குலசீலங்களற்றவனாகில், குணமுள்ள வேறு வரனுக்குக் கொடுக்கலாம். குலசீலங்களற்றவனை மறுத்ததால் தோஷமில்லை. காத்யாயனர் - முதலில் கொடுப்பதாய் உத்தேசிக்கப்பட்ட வரன் வேறு ஜாதீயன், பதிதன், நபும்ஸகன், கெட்ட தொழிலிலிருப்பவன், ஸகோத்ரன், தாஸன், தீர்க்கரோகி இவர்களிலொருவனாயிருந்தால், கொடுத்த பெண்ணையும் ஆடை ஆபரணங்களுடன் வேறு வரனுக்குக் கொடுத்து விடலாம். விதிப்படி பெற்றுக் கொள்ளப்பட்ட பெண்ணும் இழிவானவளாய், வ்யாதியுள்ளவளாய், தூரதேசத்திலிருப்பவளாய், கபடமாய்க் கொடுக்கப்பட்டிருந்தால் அவளை விட்டுவிடலாம்.*

नारदः — 'नादुष्टां दूषयेत् कन्यां नादुष्टं दूषयेद्वरम्। दोषे सति न दोषः स्यादन्योन्यं त्यजतोर्द्वयोरिति॥ एतानि सप्तमपदादर्वाग्वेदितव्यानि। अत्र चन्द्रिकायाम् — 'वाग्दानप्रभृति सप्तमपदादर्वाग्दोषदर्शने मरणादौ वा कन्यामन्यस्मै दद्यान्नोर्ध्वमिति॥ तथा च मनुः — 'पाणिग्रहणमन्त्रैस्तु नियतं दारलक्षणम्। तेषां निष्ठा तु विज्ञेया विद्वद्भिः सप्तमे पदे' इति॥ निष्ठा - परमावधिः। कन्यावरयोः दोषदर्शनेऽपि सप्तमपदादूर्ध्वं न परित्याग इत्यर्थः॥ अत्र यमः — 'नोदकेन न वाचा वा कन्यायाः पतिरुच्यते। पाणिग्रहणसंस्कारात् पतित्वं सप्तमे पद' इति॥

நாரதர் - தோஷமில்லாத பெண்ணைப் பொய்யாய்த் தூஷிக்கக்கூடாது. தோஷமில்லாத வரனையும் தூஷிக்கக் கூடாது. தோஷம் உண்மையானால் த்யாகம் செய்யும் இருவருக்கும் பாபமில்லை. இந்த வசனங்களெல்லாம் ஸப்தபதிக்கு முன் செய்யும் த்யாகவிஷயத்தைப் பற்றியவை என்று அறியவும். சந்த்ரிகையில் - வாக்தானம் முதல் ஸப்தபதிக்கு முன் வரனின் தோஷம் தெரிந்தாலும், மரணம் முதலியவை நேர்ந்தாலும், பெண்ணை வேறொருவனுக்குக் கொடுக்கலாம்; ஸப்தபதிக்குப் பிறகு கூடாது. மனு - விவாஹத்தில் சொல்லப்படும் மந்த்ரங்களால் பத்னி என்னும் தன்மை ஏற்படுகிறது. அவைகளின் கடைசி எல்லை ஸப்தபதியில் என்று வித்வான்கள் அறியவேண்டும். கன்னிகைக்காவது, வரனுக்காவது தோஷமிருப்பதாய்த் தெரிந்தாலும் ஸப்தபதிக்குப் பிறகு பரித்யாகம் செய்யக்கூடாதென்பது பொருள். யமன் - வாக்தானத்தாலாவது, உதகபூர்வ தானத்தாலாவது கன்னிகைக்குப் பதியாவதில்லை. பாணிக்ரஹணம் செய்து ஸப்தபதியான பிறகு தான் பதியாகிறான்.

वसिष्ठः — 'स्त्रीपुंसयोस्तु सम्बन्धे वरणं प्राग्विधीयते । वरणाद् ग्रहणं पाणेः संस्कारो हि विलक्षणः। तयोरनियतं प्राहुर्वरणं दोषदर्शनादिति। स्त्रीपुंससम्बन्धे विवाहे पूर्वं वरणम् । तदनु तद्विलक्षणः पाणिग्रहणाख्यः संस्कारः । तयोर्मध्ये दोषदर्शने सति वरणमनियतम् । दानमात्रेण पतित्वानुत्पत्तेरित्यर्थः ।। तथा व्यासः — 'कन्याऽन्यस्मै प्रदातव्या वाग्दाने तु कृते वरे । मृतेऽन्यस्मै प्रदातव्या मृते सप्तपदात् पुरा । दत्तामपि हरेत् कन्यां सगोत्रोढां तथैव च । मन्त्रसंस्काररहिता देयाऽन्यस्मै वराय तु' इति ।। एवञ्च सप्तपदादर्वाक्परिणेतुर्मरणेऽपि न विधवात्वमित्युक्तं भवति ।।

வஸிஷ்டர் - ஸ்த்ரீ புருஷர்களுக்கு ஸம்பந்தமேற்படும் விவாஹத்தில் முதலில் வரணமும், பிறகு பாணிக்ரஹணம் என்னும் ஸம்ஸ்காரமும்

செய்யப்படுகிறது. இவைகளின் நடுவில் தோஷம் தெரிந்தால் வரணம் நியதமல்ல. வேறொருவனுக்குப் பெண்ணைக் கொடுத்துவிடலாம். தானத்தினால் மட்டில் பதியாவதில்லை என்பது பொருள். வ்யாஸர் - வாக்தானத்திற்குப் பிறகு வரன் இறந்தாலும், ஸப்தபதிக்கு முன் வரன் இறந்தாலும், பெண்ணை இதரனுக்குக் கொடுக்கலாம். ஸகோத்ரன் விஷயத்திலுமிப்படியே. விவாஹ ஸம்ஸ்காரமாகாவிடில் இதரனுக்குக் கொடுக்கலாம். இதனால் ஸப்தபதிக்குமுன் வரன் இறந்தாலும் பெண்ணுக்கு வைதவ்யமில்லை எனச்சொல்லியதாய் ஆகிறது.

तथा च वसिष्ठः — 'अद्भिर्वाचा च दत्ता या म्रियेतादौ वरो यदि। न च मन्त्रोपनीता स्यात् कुमारी पितुरेव से'ति ॥ सा पितुरेव न प्रतिग्रहीतुरित्यर्थः ॥ कात्यायनोऽपि - 'वरयित्वा तु यः कश्चित् प्रणश्येत् पुरुषो यदा। रक्तागमांस्त्रीनतीत्य कन्याऽन्यं वरयेद्वरमिति ॥ रक्तागमः - रजोदर्शनम्। नारदः — 'प्रतिगृह्य तु यः कन्यां वरो देशान्तरं व्रजेत्। त्रीनृतून् समतिक्रम्य कन्यान्यं वरयेद्वरमिति ॥

இவ்விதமே வஸிஷ்டர் - வாக்கினாலும், ஜலபூர்வமாகவும் பெண் கொடுக்கப்பட்டு, விவாஹ மந்த்ரங்களால் ஸம்ஸ்காரம் ஆவதற்கு முன் வரன் இறந்தால், அந்தப் பெண் தகப்பனைச் சேர்ந்தவளேயன்றி வரனைச் சேர்ந்தவளல்ல. காத்யாயனர் - கன்னிகையை வரித்து விட்டு வரனானவன் தேசாந்தரம் சென்று வராமலிருந்து விட்டால், மூன்று ரஜோதர்சனம் வரையில் ப்ரதீக்ஷித்துப் பிறகு அப்பெண் வேறு பர்த்தாவை அடையலாம். நாரதர் - பெண்ணை வரித்த பிறகு வரன் தேசாந்தரம் சென்று திரும்பாவிடில், அப்பெண் மூன்று ருது தர்மனத்திற்குப் பிறகு வேறு வரனை அடையலாம்.

शुल्कदाने विशेषमाह मनुः — 'कन्यायां दत्तशुल्कायां म्रियेत यदि शुल्कदः। देवराय प्रदातव्या यदि कन्याऽनुमन्यते ॥ प्रदाय शुल्कं गच्छेद्यः

कन्यायाः स्त्रीधनं तथा । धार्या सा वर्षमेकं तु देयाऽन्यस्मै विधानतः । यस्या म्रियेत कन्याया वाचा सत्ये कृते पतिः । तामनेन विधानेन निजो विन्देत देवर' इति ॥

*சுல்கதானத்திலுள்ள விசேஷத்தைப் பற்றி மனு - கன்னிகைக்குச் சுல்கத்தைக் கொடுத்தவன் விவாஹத்திற்கு முன் இறந்தால், பெண்ணை அவனின் ப்ராதாவுக்குக் கொடுக்க வேண்டும், அப்பெண் ஸம்மதித்தால். சுல்கத்தையும் கன்னிகைக்காக ஸ்த்ரீ தனத்தையும் கொடுத்தவன் வராவிடில் ஒரு வர்ஷம் வரையில் ப்ரதீக்ஷித்துப் பிறகு விதிப்படி அன்யனுக்குக் கொடுத்து விடலாம். வாக்கினுல் தானம் செய்த பிறகு வரன் மரித்தால், அவனின் ஸஹோதரன் அப்பெண்ணை அடையவேண்டும்.*

कात्यायनः — 'पूर्वदत्ता तु या कन्या वृताऽन्येन यदा भवेत् । असंस्कृता प्रदेया स्याद्यस्मै पूर्वं प्रतिश्रुता' ॥ स चेद्गुणवत्तर इति शेषः ॥ 'अनेकेभ्यो हि दत्तायामनूढायां तु तत्र वै । परागमश्च सर्वेषां वहते चादिमस्तु ताम् ॥ अथागच्छेयुरूढायां दत्तं पूर्वं हरेद्धनमिति ॥ यत्तु पाणिग्रहणा-दुपर्यन्यस्मै दानमाह वसिष्ठः — 'पाणिग्रहे कृते कन्या केवलं मन्त्रसंस्कृता । सा चेदक्षतयोनिः स्यात् पुनः संस्कारमर्हती' ति ॥

*காத்யாயனர் - வரித்தவன் வராததால் மற்ெருருவனுக்கு வாக்தானம் செய்த பிறகு விவாஹத்திற்குள் முந்தியவன் வந்தால், அவன் பிந்தியவனை விட குணவாஞகில் அவனுக்கே பெண்ணைக் கொடுக்க வேண்டும். அநேகர்களுக்கு வாக்தானம் செய்யப்பட்ட பெண்ணின் விவாஹத்திற்கு முன் எல்லோரும் வந்துவிட்டால் முதலில் உத்தேசிக்கப்பட்டவன் அப்பெண்ணை அடையவேண்டும். விவாஹத்திற்குப் பிறகு மற்றவர் வந்தால், தங்கள் தனத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். பாணி*

க்ரஹணத்திற்குப் பிறகும் அன்யனுக்குக் கொடுக்கலாமென்கிறார் வஸிஷ்டர் - பாணிக்ரஹணம் ஆனபிறகும் விவாஹமந்த்ர ஸம்ஸ்காரத்தை மட்டில் அடைந்த பெண் ருதுமதியாய் ஆகாவிடில் அவளுக்கு மறுவிவாஹம் செய்யலாம்.

यदपि स्मृत्यन्तरम् — 'कन्याऽन्यस्मै प्रदातव्या मृते सप्तपदात् पुरा । पुरा पुरुषसंयागान्मृते देयेति केचन ।। ऋतौ च दृष्टे कन्यैव मृतौ देयेति चापरे । आगर्भधारणात् कन्या पुनर्देयेति केचनेति । यदपि नारदः — 'उद्वाहिताऽपि या कन्या न चेत् संप्राप्तमैथुना । पुनः संस्कारमर्हेत यथा कन्या तथैव सेति, यदपि बोधायनः — 'निसृष्टायां हुते वाऽपि यस्या भर्ता म्रियेत सः । सा चेदक्षतयोनिः स्याद्गता प्रत्यागता सती ।। पौनर्भवेन विधिना पुनः संस्कारमर्हतीति, यदपि मनुराह — 'नष्टे मृते प्रव्रजिते क्लीबे च पतिते पतौ । पञ्चस्वापत्सु नारीणां पतिरन्यो विधीयत' इति ।। सप्तपदादूर्ध्वमपि पुनरुद्वाहपराण्येतानि वचनानि युगान्तरविषयाणि ।।

வேறு ஸ்ம்ருதியில் - ஸப்தபதிக்கு முன் வரன் இறந்து விட்டால் அன்யனுக்குப் பெண்ணைக் கொடுத்து விடலாம். புருஷஸம்ஸர்க்கத்திற்கு முன் இறந்தாலும் என்று சிலர். ருது தர்மனமான பிறகும் என்று சிலர். கர்ப்பதாரணம் வரையிலும் என்று சிலர். நாரதர் - விவாஹமாகியவளும் புருஷஸம் ஸர்க்கமடையாதவளாகின் கன்னிகை போன்றவள் தான். அவளுக்கு மறுமணம் செய்யலாம். **போதாயனர்** - தானமான பிறகும், விவாஹ ஹோமமான பிறகும், பர்த்தா மரித்தால், ருதுதர்மனமாகாத பெண்ணுக்கு மறுபடி விவாஹம் செய்விக்கலாம். **மனு** - புருஷன் தேசாந்தரம் சென்று வராவிடினும், இறந்தாலும், ஸன்யாஸியானாலும், நபும்ஸகனாயிருந்தாலும், பதிதனாயிருந்தாலும், இவ்வைந்து ஆபத்துக்களிலும் ஸ்த்ரீகள் வேறு பதியை அடையலாம். இவ்விதம் ஸப்தபதிக்குப் பிறகும் மறு விவாஹத்தைச் சொல்லும் வசனங்கள் மற்ற யுகங்களிலுள்ள விவாஹ விஷயங்களாம்.

यदाह व्यासः — 'ऊढायाः पुनरुद्वाहं ज्येष्ठांशं गोवधं तथा। कलौ पञ्च न कुर्वीत भ्रातृजायां कमण्डलु'मिति ॥ क्रतुः — 'देवराच्च सुतोत्पत्तिर्दत्ता कन्या न दीयते । न यज्ञे गोवधः कार्यः कलौ न च कमण्डलुरिति ॥ बोधायनोऽपि — 'विधिर्योऽनुष्ठितः पूर्वं क्रियते नैव साम्प्रतम्। पुराकल्पः स यद्वच्च विधवाया नियोजनमिति ॥

*ஏனெனில், **வ்யாஸர்** - 'விவாஹமான பெண்ணுக்கு மறுவிவாஹம், ஜ்யேஷ்டனுக்கு அதிகபாகம், கோவின் வதம், ப்ராதாவின் பத்னியினிடம் பிள்ளை பெறுதல், கமண்டலுவைத் தரித்தல் இவ்வைந்தும் கலியில் கூடாது' என்றார். **க்ரது** - மைத்துனன் பிள்ளையை உற்பத்தி செய்தல், பெண்ணுக்கு மறுவிவாஹம், யாகத்தில் கோவதம், கமண்டலுதாரணம் இவை கலியில் கூடாது. **போதாயனர்** - முன் யுகத்தில் அனுஷ்டித்த விதியை இந்த யுகத்தில் அனுஷ்டிக்கக் கூடாது. அது முன் யுகத்தின் தர்மம். விதவையினிடம் தேவரன் பிள்ளையைப் பெறுவது போல்.*

चन्द्रिकायामपि — 'देवरेण सुतोत्पत्तिं गोमेधं च कमण्डलुम्। अक्षतां पौरुषं मेधं कलौ पञ्च विवर्जये'दिति ॥ 'अपुत्रां गुर्वनुज्ञातो देवरः पुत्रकाम्यया। सपिण्डो वा सगोत्रो वा घृताभ्यक्त ऋतावियात् ॥ आगर्भसंभवाद्गच्छेत् पतितस्त्वन्यथा भवेत् । अनेन विधिना जातः क्षेत्रजोऽस्य भवेत्सुत' इति याज्ञवल्क्यादिभिरुक्ता देवरसुतोत्पत्तिः कलौ वर्जनीया ॥ गोमेधः - गवालम्भनम्। कमण्डलुः - मृन्मयकमण्डलुधारणम् ॥ 'कमण्डलुर्द्विजातीनां शौचार्थं विहितः पुरा। ब्रह्मणा मुनिमुख्यैश्च तस्मात्तं धारयेत् सदे'ति बोधायनादिभिरुक्तम्। अक्षता - अक्षतयोनिः। पुरुषमेधः - क्रतुविशेषः । एतानि कलौ वर्जयेदित्यर्थः ॥

***சந்த்ரிகையிலும்** - மைத்துனனால் பிள்ளை பெறுதல், கோவதம், கமண்டலுதாரணம், ருதுவாகாத பெண்ணுக்கு மறுவிவாஹம், மனிதனைப் பசுவாக்கி யாகம் செய்தல் இவ்வைந்தையும் கலியில் வர்ஜிக்க வேண்டும்.*

'புத்ரனில்லாத விதவையைப் பெரியோர்களின் அனுமதி பெற்று, மைத்துனன், அல்லது ஸபிண்டன், ஸகோத்ரன், நெய்யினால் தேஹத்தைப் பூசியவனாய் ருதுகாலத்தில் சேரலாம். கர்ப்பம் தரிக்கும் வரை இவ்விதம் செய்யலாம். பிறகு சேர்ந்தால் பதிதனாவான். இந்த விதியால் பிறந்தவன் க்ஷேத்ரஜன் என்ற புத்ரனாவான் என்று யாக்ஞவல்க்யாதிகள் சொல்லிய விதியைக் கலியில் தள்ளவேண்டும். கோமேதம் என்பது கோவை ஹிம்ஸித்தல். 'கமண்டலு' என்பதற்கு மண்ணால் செய்யப்பட்ட கமண்டலுவைத் தரித்தல் என்று பொருள். 'ப்ராமணர்களுக்குச் சுத்திக்காகப் ப்ரம்மதேவரும், முனிகளும் கமண்டலுவை விதித்தனர். ஆகையால் அதை எப்பொழுதும் தரிக்க வேண்டும்' என்று போதாயனர் முதலியவர் சொல்லியிருக்கின்றனர். அக்ஷதா என்பது ருதுவாகாதவள். புருஷமேதம் என்பது ஓர் யாகம். இவைகளைக் கலியில் வர்ஜிக்க வேண்டும். என்பது பொருள்.

अक्षताया वर्ज्यात्वमाह नारदोऽपि — 'कन्या चाक्षतयोनिर्या पाणिग्रहणदूषिता । पुनर्भूः प्रथमा प्रोक्ता पुनस्संस्कारकर्मणीति ॥ याज्ञवल्क्योऽपि — 'अक्षता च क्षता चैव पुनर्भूः संस्कृता पुन'रिति ॥ यस्तु कन्यादोषमनभिधाय प्रयच्छति दण्ड्यो राज्ञेत्याह नारदः — 'यस्तु दोषवतीं कन्यामनाख्याय प्रयच्छति । तस्य कुर्यान्नृपो दण्डं पूर्वसाहसचोदितम् इति ॥ पणशतद्वयं सप्तत्यधिकं पूर्वसाहसम् ॥

அக்ஷதையானாலும் கூடாதென்கிறார் நாரதர் - அக்ஷதையான கன்னிகையானாலும் பாணிக்ரஹணம் செய்யப்பட்டவள் மறு விவாஹத்தில் 'புனர்ப்பூ' எனப்படுவாள். அவளை வர்ஜிக்க வேண்டும். யாக்ஞவல்க்யரும் - அக்ஷதையானாலும், க்ஷதையானாலும் மறுவிவாஹத்தை அடைந்தவள் 'புனர்ப்பூ' எனப்படுவாள். பெண்ணின் தோஷத்தைச் சொல்லாமல் கொடுத்தவனை அரசன் தண்டிக்க வேண்டும் என்கிறார் நாரதர் - குற்றமுள்ள பெண்ணை முன்பே

*தெரிவிக்காமல் கொடுப்பவனுக்கு, அரசன் 'பூர்வஸாஹஸம்' என்னும் அபராதத்தை விதிக்க வேண்டும். இருநூற்று எழுபது பணம் பூர்வஸாஹஸம் எனப்படும்.*

यत्तु याज्ञवल्क्येनोक्तम् — 'अनाख्याय ददद्दोषं दण्ड्य उत्तमसाहसम् । अदुष्टां च त्यजन् दण्ड्यो दूषयंस्तु मृषा शतम्' इति, तद्दोषभूयस्त्वाभिप्रायमिति चन्द्रिकायाम् ।। साशीतिपणसाहस्रं उत्तमं साहसम् ।। नारदः — 'प्रतिगृह्य तु यः कन्यामदुष्टामुत्सृजेन्नरः ।। विनेयःसोऽप्यकामोऽपि कन्यां तामेव चोद्वहेदिति । विनेयः - दण्ड्य इत्यर्थः ।।

*'தோஷத்தைத் தெரிவிக்காமல் பெண்ணைக் கொடுத்து ஏமாற்றியவனுக்கு உத்தமஸாஹஸம் என்னும் அபராதத்தை விதிக்க வேண்டும். தோஷமற்ற பெண்ணைத் தள்ளியவனுக்கும் இதுவே அபராதம். பொய்யாய்த் தூஷிப்பவனுக்கு நூறுபணம் அபராதம் விதிக்க வேண்டும்.'' என்று யாக்ஞவல்க்யர் அதிகமாகச் சொல்லியிருப்பது அதிக தோஷ விஷயம் என்று சந்த்ரிகையில் கூறப்பட்டிருக்கின்றது. ஆயிரத்தெண்ணூறு பணம் உத்தமஸாஹஸம். நாரதர் - பெண்ணைப் பெற்றுக் கொண்ட பிறகு தோஷமற்ற அப்பெண்ணை வேண்டாமென்பவனைத் தண்டிக்க வேண்டும். அவன் அப்பெண்ணையே மணக்க வேண்டும்.*

## कन्यादातृनिर्णयः

तत्र याज्ञवल्क्यः — 'पिता पितामहो भ्राता सकुल्यो जननी तथा। कन्याप्रदः पूर्वनाशे प्रकृतिस्थः परः परः ।। अप्रयच्छन् समाप्नोति भ्रूणहत्यामृतावृतौ । गम्यं त्वभावे दातॄणां कन्या कुर्यात् स्वयंवरमिति ।। पित्रादीनां पूर्वपूर्वाभावे परः परः कन्याप्रदः । प्रकृतिस्थश्चेत् -

यद्युन्मादादिदोषवान्न भवति । अतो यस्याधिकारः सोऽप्रयच्छन् भ्रूणहत्यामृतावृतावाप्नोति । यदा पुनर्दातॄणामभावस्तदा कन्यैव गम्यं - गमनार्हमुक्तलक्षणं वरं स्वयमेव वरयेदित्यर्थः ॥

### கன்யாதானம் செய்ய உரியவர்

யாக்ஞவல்க்யர் - *பிதா, பிதாமஹன், ப்ராதா, குலத்தில் பிறந்தவன், தாய் என்ற இவர்களுள் முந்தியவர் இல்லாவிடில் பிந்தியவர் நல்ல நிலைமையிலிருந்தால் கன்யாதானத்திற்கு அதிகாரிகள் ஆவர். அவர் காலத்தில் தானம் செய்யாவிடில் ஒவ்வொரு ருதுவிலும் ப்ரூணஹத்யா தோஷத்தை அடைவர். ஒருவரும் இல்லாவிடில் பெண் தானாகவே யோக்யனான வரனை வரிக்கலாம்.*

नारदः — 'पिता दद्यात् स्वयं कन्यां भ्राता वाऽनुमतौ पितुः । मातामहो मातुलश्च सकुल्यो बान्धवास्तथा ॥ माता त्वभावे सर्वेषां प्रकृतौ यदि वर्तते । तस्यामप्रकृतिस्थायां कन्यां दद्युः स्वजातयः ॥ यदा तु नैव कश्चित् स्यात् कन्या राजानमाव्रजेत् । अनुज्ञया तस्य वरं प्रतीतं वरयेत् स्वयम् ॥ सवर्णमनुरूपं च कुलशीलबलश्रुतैः । सह धर्मं चरेत्तेन पुत्रांश्चोत्पादयेत्ततः ॥ स्वतन्त्रोऽपि हि यत्कार्यं कुर्यादप्रकृतिं गतः । तदप्यकृतमेव स्यादस्वतन्त्रत्वहेतुत इति ॥

நாரதர் - *பிதா தானாகவே பெண்ணைத் தானம் செய்யலாம். பிதாவின் அனுமதியால் ப்ராதா, மாதாமஹன், மாதுலன், ஞாதி, பந்துக்கள், இவர்களில்லாவிடில், நல்ல நிலைமையிலுள்ள தாய், அவளில்லாவிடில் ஸ்வஜாதியிலுள்ளவர்கள் கன்யா தானத்திற்கு அதிகாரிகள். முற்கூறிய ஒருவருமில்லாவிடில் பெண் அரசனிடம் தெரிவித்து அவன் உத்தரவினால் தானாகவே அறியப்பட்டவனும், ஸவர்ணனும், குலம், சீலம் பலம் சாஸ்த்ரம் இவைகளால் தனக்கு ஸமானனுமான வரனை வரித்து அவனுடன் தர்மானுஷ்டானம் செய்யலாம், புத்ரர்களையும் பெறலாம்,*

*உன்மாதம் முதலியவற்றால் நிலைமை தவறியவன் ஸ்வதந்த்ரனாயிலும், அவன் செய்த கார்யம் செய்யாததாகவே ஆகும்.*

मनुः — 'यस्मै दद्यात् पिता त्वेनां भ्राता वाऽनुमतौ पितुः । तं शुश्रूषेत जीवन्तं स्वर्यातं च न लङ्घयेदिति ॥ एतत्तयोः प्राधान्यप्रतिपादनार्थं न पुनरन्यनिषेधाय ॥

மனு - *பிதா, அல்லது அவன் அனுமதியால் ப்ராதா இவர்கள் எவனுக்குத் தானம் செய்கிறார்களோ அவனுக்கு ஜீவித்திருக்கும் வரையில் அவள் சுப்ரூஷை செய்ய வேண்டும். அவன் இறந்த பிறகும் அதிக்ரமம் செய்யக் கூடாது. இவ்வசனத்தில் இருவரைமட்டிற் குறித்தது அவர்கள் ப்ரதானம் என்பதற்கேயன்றி மற்றவரை நிஷேதிப்பதற்கல்ல.*

### ब्राह्मादिविवाहभेदाः ।

तत्र मनुः — 'चतुर्णामपि वर्णानां प्रेत्येह च हिताहितान् । अष्टाविमान् समासेन स्त्रीविवाहान्निबोधत ॥ ब्राह्मो दैवस्तथैवार्षः प्राजापत्यस्तथाऽऽसुरः । गान्धर्वो राक्षसश्चैव पैशाचश्चाष्टमोऽधमः' इति। आर्षात् प्राजापत्यस्य श्रैष्ठ्येऽपि वृत्तभङ्गभयादत्र क्रमभङ्गः ॥

### ப்ராம்ஹாதி விவாஹ பேதங்கள்

மனு - *நான்கு வர்ணங்களுக்கும் இகபரவுலகங்களில் நன்மைதீமைகளைச் செய்யும் விவாஹங்கள் எட்டு. இவைகளைச் சுருக்கமாய்ச் சொல்வதைக் கவனியுங்கள். ப்ராம்ஹம், தைவம், ஆர்ஷம், ப்ராஜாபத்யம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்று விவாஹம் எட்டுவிதம். இவைகளுள் பைசாசம் அதமம். ஆர்ஷத்துக்கு முன் ப்ராஜாபத்யத்தைச் சொல்லாமல் பின் சொல்லியது, ச்லோகத்தில் வ்ருத்தம் கெடும் என்ற பயத்தால்.*

கன்யாதான காலநியமங்கள்

"போஜனம் செய்தவளான கன்யையை மணக்க வேண்டும். காயத்ரியை ஸ்வீகரிப்பதும் அப்படியே. கன்யையைக் கொடுப்பவன் உபவாஸத்துடன், பூஜிக்கப்பட்டவரனுக்குக் கொடுக்க வேண்டும்." என்ற வசனம் தர்மம் மீறிய விவாஹ விஷயம். அவ்விதமே வ்யாஸர் - காந்தர்வம், ஆஸுரம் என்ற விவாஹங்களில்தான் போஜனம் செய்த பெண்ணைத் விவஹிப்பது. ப்ராம்மம் முதலிய விவாஹங்களில போஜனம் கூடாது என்றார் காச்யபர். சாதாதபர் - ப்ராம்மம் முதலிய விவாஹங்களில் முதலில் ஹோமம், பிறகு கன்யையை ஸ்வீகரித்தல். ஆஸுராதி விவாஹங்களில் இது மாறுபடும். அல்லது தங்கள் க்ருஹ்யத்திற் சொல்லிய விதிப்படியாவது இவைகளுக்கு முன் பின் வ்யவஸ்தை.

व्यासः — 'दद्यात्पूर्वमुखः कन्यां गृह्णीयादुत्तरामुखः । दम्पत्योर्वर्धते चायुर्दातुश्चैव विवर्धत' इति ॥ स्कन्दोऽपि - 'नामगोत्रे समुच्चार्य प्राङ्मुखो वारिपूर्वकम् । उदङ्मुखाय वै दद्यात् कन्यां चैव यवीयसीमिति। वसिष्ठस्तु विशेषमाह — 'प्राक्प्रत्यङ्मुखयोश्चैव दातृग्राहकयोः स्थितिः । उद्वाहे चैव गोदानादानयोरेवमेव हीति ॥

வ்யாஸர் - கன்யையைக் கொடுப்பவன் கிழக்குமுகமாயும், க்ரஹிப்பவன் வடக்கு முகமாயுமிருக்க வேண்டும். இப்படியானால் தம்பதிகளுக்கும் கொடுப்பவனுக்கும் ஆயுஸ் வ்ருத்தியாகும். ஸ்கந்தரும் - கொடுப்பவன் கிழக்கு முகமாயிருந்து, வடக்கு முகமாயிருக்கும் வரனுக்கு வயதிற் சிறியவளான பெண்ணை, ஜலபூர்வமாய்த் தானம் செய்ய வேண்டும். வஸிஷ்டர் - விவாஹத்திலும், கோதானத்திலும், கொடுப்பவன் கிழக்கு முகமாகவும், வாங்கிக் கொள்பவன் மேற்கு முகமாகவும் இருக்க வேண்டும்.

आग्नेयपुराणे — 'दद्यात्तु प्राङ्मुखस्तस्मै वरः प्रत्यङ्मुखो वधूम्। गृहीत्वा शोभने लग्न ईक्षेतापादमस्तक'मिति ॥ (आश्वलायनः — 'वरस्योदक् स्थितां कन्यां प्राङ्मुखीं प्राङ्मुखायताम्। तमभ्यर्च्य पिता दद्यात् तत्पाणौ मन्त्रवज्जलैः' इति ॥ 'दद्यात् प्रत्यङ्मुखः स्थित्वा गृहीत्वा प्राङ्मुखो जलम्)

*ஆக்னேய புராணத்தில் - கிழக்கு முகமாய் இருந்து கன்யையைத் தானம் செய்யவேண்டும். வரன் மேற்கு முகமாய் வாங்கிச் சுபமானலக்னத்தில் அந்தப் பெண்ணைக் கால்முதல் தலைவரையில் பார்க்க வேண்டும்.*

अत्र स्मृतीनां विरोधे विकल्पो द्रष्टव्यः ॥ व्यासः— 'आच्छाद्यालङ्कृतां कन्यां गृह्णन् वामकरेण तु। गोत्रमादौ तु सङ्कीर्त्य प्रपितामहपूर्वकम् ॥ प्रपितामहपूर्वाय फलमुद्दिश्य दापयेत् ॥ नान्दीमुखे विवाहे च प्रपितामहपूर्वकम्। नाम सङ्कीर्तयेद्विद्वानन्यत्र पितृपूर्वकमिति ॥

*இங்கு ஸ்ம்ருதிகளின் விரோதத்தில் விகல்பமென்றறியவும்.வ்யாஸர் - வஸ்த்ராபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பெண்ணை இடதுகையில் பிடித்துக் கொண்டு, கோத்ரத்தைச் சொல்லி, தன் ப்ரபிதாமஹர் முதல் மூவர்களின் பெயர்களை உச்சரித்து, வரனின் ப்ரபிதாமஹர் முதல் மூவர்களின் பெயர்களை உச்சரித்து, பலனையும் உச்சரித்துத் தானம் செய்ய வேண்டும். நாந்தியிலும் விவாஹத்திலும் ப்ரபிதாமஹர் முதலாகப் பிதாவரையிலும் சொல்ல வேண்டும். மற்றவைகளில் பிதா முதல் ப்ரபிதாமஹர் வரையில் சொல்ல வேண்டும்.*

दक्षः— 'नामगोत्रे समुच्चार्य प्रपितामह पूर्वकमिति ॥ जमदग्निः — 'कन्यां वामकरे धृत्वा प्रपितामहपूर्वकमिति ॥ देवीपुराणेऽपि 'गोत्रमादौ तु सङ्कीर्त्य कीर्तयेत् प्रपितामहम्। पितामहं च पितरं कन्यामेवं वराय च। आसीनायाः स्त्रियास्तिष्ठन् गृह्णामीत्यृग्भिरन्ततः। गृह्णीयात् पाणिमुत्तानं साङ्गुष्ठाङ्गुलिदक्षिण'मिति ॥

தக்ஷர் - ப்ரபிதாமஹர் முதலாக நாமகோத்ரங்களைச் சொல்லித் தானம் செய்ய வேண்டும். ஜமதக்னி - கன்னியை இடதுகையில் பிடித்துக் கொண்டு ப்ரபிதாமஹன் முதலாக. தேவீ புராணத்திலும் - முதலில் கோத்ரத்தை உச்சரித்துப் பிறகு கன்யையின் ப்ரபிதாமஹன், பிதாமஹன், பிதா, கன்யை இவர்களின் பெயர்களை உச்சரித்துப் பிறகு இவ்விதமே வரனின் கோத்ரம் முதலியவைகளை உச்சரித்துத் தானம் செய்ய வேண்டும். வரன் நின்று கொண்டு, உட்கார்ந்திருக்கும் கன்யையின் வலது கையைக் கட்டைவிரலுடன் சேர்த்து 'க்ருஹ்ணாமி' என்பது முதலான ருக்குகளால் க்ரஹிக்க வேண்டும்.

औपासनारम्भात् पूर्वमग्निनाशे पुनर्विवाहः । तथा सङ्ग्रहे । 'पूर्वमौपासनारम्भादग्निनाशो यदा भवेत् । पुनर्विवाहः कर्तव्यः परतस्तु न विद्यते ॥ ऋग्वेदिनां प्रवेशहोमात् पूर्वं यजुर्वेदिनामौपासनारम्भात् सामवेदिनां लेखाहोमात् पूर्वं चाग्निनाशे पुनर्विवाह' इति ॥

ஔபாஸநாரம்பத்திற்கு முன் அக்னி அணைந்து போனால் புனர்விவாஹம் செய்ய வேண்டும். அவ்விதமே ஸங்க்ரஹத்தில் - ஔபாஸநாரம்பத்திற்கு முன் அக்னி நஷ்டமானால் புனர்விவாஹம். பிறகு ஆனால் இல்லை. ருக்வேதிகளுக்கு ப்ரவேசஹோமத்திற்கு முந்தியும், யஜுர் வேதிகளுக்கு ஔபாஸநாரம்பத்திற்கு முந்தியும், ஸாமவேதிகளுக்கு லேகாஹோமத்திற்கு முந்தியும் அக்னி நஷ்டமானால் புனர்விவாஹம் செய்ய வேண்டும்.

बोधायनः — 'अथ चेदौपासनारम्भात् प्राक् ज्वलनस्य नाशः पुनर्विवाहं कुर्वीतेति ॥ पुनर्विवाह कल्पोऽपि तेनैव व्याख्यातः — 'अङ्कुरं च प्रतिसरं वरणं च प्रतिग्रहम् । वाससा परिधानं च कर्माण्येतानि वर्जयेदिति ॥ उपनयनविवाहजातकर्मश्मशानाग्निनाशे प्रायश्चित्तमाह बोधायनः — 'अथ यद्युपनयनाग्निर्विवाहाग्निर्जातकर्माग्निः

श्म्यशानाग्निराचतुर्थादाद्वादशाहादासञ्चयनादुद्वातः स्यात् सर्वं तदपहृतेति प्रोक्ष्य स्थण्डिलमुद्धत्याग्निमुपसमाधाय संपरिस्तीर्य प्रायश्चित्तञ्जुहोत्ययाश्च पञ्चहोता ब्राह्मण एक होता मनस्वतीमिन्दाहुतिर्महाव्याहृतीर्व्याहृतीश्च जुहुयादिति ॥

போதாயனர் - ஔபாஸனாரம்பத்திற்கு முன் அக்னி நஷ்டமானால் புனர்விவாஹம் செய்ய வேண்டும். புனர்விவாஹ கல்பத்தைப் போதாயனரே விவரிக்கின்றார் - அங்குரம், ப்ரதிஸரம், வரணம், ப்ரதிக்ரஹம், வஸ்த்ராச்சாதனம் இவைகளைத் தள்ளவேண்டும். உபநயனாக்னி, விவாஹாக்னி, ஜாதகர்மாக்னி, ஶ்மஶானாக்னி இவைகளின் நாசத்தில் ப்ராயச்சித்தத்தைப் பற்றிப் போதாயனர் - உபநயனாக்னி, விவாஹாக்னி இவைகள் நாலுநாட்களுக்குள்ளும், ஜாதகர்மாக்னி 12 - நாட்களுக்குள்ளும், ஶ்மசானாக்னி ஸஞ்சயனத்திற்குள்ளும் அணைந்து போனால், 'அபஹ்ருதா:' என்ற மந்த்ரத்தால் ப்ரோக்ஷித்து ஸ்தண்டில ஸம்ஸ்காரம், அக்னிஸ்தாபனம், பரிஸ்தரணம் முதலியவைகளைச் செய்து ப்ராச்சித்த ஹோமமும், 'அயாஶ்ச' முதலிய மந்த்ரங்களால் ஹோமமும் செய்ய வேண்டும்.

## औपासनारम्भकालः

औपासनारंभकालमाहापस्तम्बः — 'सायं प्रातरत ऊर्ध्वं हस्तेनैते आहुती तण्डुलैर्यवैर्वा जुहुयादिति ॥ अत ऊर्ध्वं - आग्नेयस्थालीपाकान्ताद्विवाहादूर्ध्वम् । रात्रावेवौपासनस्यारम्भः । यदि नवनाड्यो नातीताः । अतीताश्चेदपरेद्युः सायमेवाग्निहोत्रवेलाया' - मिति गृह्यतात्पर्यदर्शने ॥

## ஔபாஸநாரம்பகாலம்

ஔபாஸநாரம்ப காலத்தைப் பற்றி ஆபஸ்தம்பர் - ஆக்னேயஸ்தாலீபாகத்திற்குப் பிறகு காலையிலும்

மாலையிலும், கையினால் அரிசி, அல்லது யவையினால் இரண்டாஹுதிகளை ஹோமம் செய்ய வேண்டும். ஆக்னேய ஸ்தாலீபாகம் முடிந்த பிறகு ராத்ரியிலேயே ஔபாஸனாரம்பம் செய்ய வேண்டும்; ஒன்பது நாழிகைகள் ஆகாவிடில். 9 நாழிகைகளாகி விட்டால் மறுநாள் ஸாயங்காலம் அக்னி ஹோத்ரவேளையில்தான் என்ற தாத்பர்யதர்சனத்தில்.

स्मृतिरत्ने—'त्रेधा कृत्वा यामिनीं पूर्वभागे स्थालीपाको नित्ययुक्तो द्वितीये । स्थालीपाको नैव नित्यस्तृतीये नैव स्थाली नैव नित्यो विवाहे इति ।। नित्यः — औपासनहोमः ।। व्यासः — 'रात्रौ विवाह उत्पन्ने वह्निं परिचरेत्तदा । रात्रावतीतकालश्चेत् श्वः सायं तदुपक्रमेत् ।। प्रातर्होमः सङ्गवान्ते काले त्वनुदिते तथा ।। सायमस्तमिते होमकालस्तु नवनाडिकाः' इति ।।

ஸ்ம்ருதிரத்னத்தில் - ராத்ரியை மூன்று பாகங்களாக்கி, அவைகளுள் முதல் பாகத்தில் ஸ்தாலீபாகம் ஔபாஸன ஹோமம் இரண்டையும் செய்யலாம். 2 -வது பாகத்தில் ஸ்தாலீபாகம் நித்யஹோமம் இரண்டும் செய்யக் கூடாது. வ்யாஸர் - ராத்ரியில் விவாஹம் நேர்ந்தால் அப்பொழுதே ஔபாஸனாரம்பம் செய்ய வேண்டும். ராத்ரியில் காலம் அதிக்ரமித்து விட்டால் மறுநாள் ஸாயங்காலத்தில் ஆரம்பிக்க வேண்டும். காலையில் ஹோமகாலம் ஸங்கவாந்தம் வரையிலும். ஸாயங்காலத்தில் ஸூர்யாஸ்த மயத்திற்குப் பிறகு ஒன்பது நாழிகைகள்.

## स्थालीपाकोपक्रमः ।

तत्रापस्तम्बः — 'एवमत ऊर्ध्वं दक्षिणावर्जमुपोषिताभ्यां पर्वसु कार्यः पूर्णपात्रस्तु दक्षिणेत्येक इति ।। अत ऊर्ध्वं आग्नेयस्थालीपाकात् परमित्येवं वदता आग्नेयस्थालीपाकानन्तरं शेषहोमात्पूर्वं पर्वसम्भवेऽपि

स्थालीपाकः कार्य इत्युक्तं भवति ।। यथाहुः — 'विवाहशेषमध्ये तु पर्वण्युत्पतिते इति। तस्मिन्नपि च कर्तव्यः स्थालीपाको यथाविधि ।। तत्र यद्यप्यमावास्या विवाहात् स्यादनन्तरम् । यदि वा पौर्णमासी स्यात् स्थालीपाकक्रिया मते'ति ।।

ஸ்தாலீபாகாரம்பம்

*ஆபஸ்தம்பர் - ஆக்னேயஸ்தாலீ பாகத்திற்குப் பிறகு, தம்பதிகள் பர்வங்களில் உபவாஸமிருந்து மறுநாளில் இவ்விதமே ருஷபதக்ஷிணையின்றி ஸ்தாலீபாகம் செய்ய வேண்டும். 'பூர்ணபாத்ரம் தக்ஷிணை' என்று சிலர். இதனால் ஆக்னேயஸ்தாலீபாகத்திற்குப் பிறகு சேஷஹோமத்திற்குள் பர்வம் நேர்ந்தாலும் ஸ்தாலீபாகம் செய்யவேண்டும் என்று சொல்லியதாகிறது. பெரியோர்களும் இவ்விதம் சொல்லுகின்றனர் - ''விவாஹத்தில் சேஷஹோமத்திற்குள் பர்வம் நேர்ந்தால் அதிலும் விதிப்படி ஸ்தாலீபாகம் செய்யவேண்டும். அமாவாஸ்யையானாலும் பூர்ணிமையானாலும் ஸ்தாலீபாகம் செய்யவேண்டும்''*

अत्रामावास्यायामपि स्थालीपाकस्मरणमागामिपौर्णमास्या मौढ्यादिदोषदुष्टत्वे द्रष्टव्यम् ।। तदाह गौतमः — 'पाकयज्ञस्य चारम्भमन्वारम्भणमेव च । पौर्णमास्यां यजेत् पूर्वं दर्शेनैव कथञ्चन ।। मौढ्यादिदोषमासे तु पौर्णमास्यां यजेत् कथम् । दर्शे वाऽपि यजेत् पूर्वं पौर्णमासीममामपि ।। अतिकालान्तरारम्भो यजमानस्य पापकृत् । आयुः श्रियं यशो हन्यात्तस्मात्तौ न व्यतिक्रमेदिति ।।

*இங்கு அமாவாஸ்யையிலும் செய்யலாம் என்றது மேல்வரும் பூர்ணிமைக்கு மௌட்யாதி தோஷமிருந்தால் என்று அறியவேண்டும். அதைப்பற்றிக் கௌதமர் - ''பாகயக்ஞத்தினாரம்பம் அன்வாரம்பணம் இவைகளை முதலில் பூர்ணிமையில் ஆரம்பிக்க வேண்டும். தர்சத்தில்*

ஆரம்பிக்கக் கூடாது. பிறகு வரும் பூர்ணிமைக்கு மௌட்யாதி தோஷமிருந்தால் எவ்விதம் செய்வது? எனில், தர்சத்திலேயே பூர்ணிமை அமை இவைகளின் யாகத்தைச் செய்யவேண்டும். அதிக்ரமித்து வேறுகாலத்திலாரம்பிப்பது யஜமானுக்குப் பாபத்தைக் கொடுக்கும். ஆயுஸ், ஸம்பத், யசஸ் இவைகளைக் கெடுக்கும். ஆகையால் அவைகளை அதிக்ரமிக்கக் கூடாது.''

यावद्दर्शं पौर्णमासस्य कालत्वात् दर्शात् पूर्वमेव पञ्चम्यादौ पौर्णमासस्थालीपाकं कृत्वा स्वकाले अमामपि - दर्शमपि यजेत्। न तु प्रतिपदि पौर्णमासमपि सह यजेदित्यर्थः ॥ यत्तु — 'मौढ्ये वाऽप्यधिमासे वा ग्रहणे चन्द्रसूर्ययोः । अन्वारम्भं प्रकुर्वीत समनन्तरपर्वणीति स्मरणम्, यदपि — 'आषाढेऽप्यधिमासे वा सङ्क्रान्तौ ग्रहणेऽपि वा । अन्वारम्भं प्रकुर्वीत समनन्तरपर्वणीति, तत् समनन्तर-पर्वण्यवश्यकर्तव्यताप्रतिपादनपरम्। मौढ्यादौ तु दोषस्मरणात्।

தர்சம் வரையில் பூர்ணமாஸத்திற்குக் காலமானதால் தர்சத்திற்குமுன் பஞ்சமீ முதலிய காலங்களில் பூர்ணமாஸ ஸ்தாலீபாகத்தைச் செய்து ஸ்வகாலத்தில் தர்சஸ்தாலீ பாகத்தையும் செய்ய வேண்டும். ப்ரதமையிலேயே இரண்டு ஸ்தாலீபாகங் களையும் சேர்த்துச் செய்யக் கூடாது என்று அர்த்தம். ''மௌட்யம், அதிக மாஸம், சந்த்ரஸூர்யக்ரஹணம் இவைகள் நேர்ந்தால் அடுத்த பர்வத்தில் அன்வாரம்பம் செய்ய வேண்டும்'' என்ற வசனமும், ''ஆஷாடமாஸம், அதிகமாஸம், ஸங்க்ரமணம், க்ரஹணம் இவைகள் நேர்ந்தால் அடுத்த பர்வத்தில் அன்வாரம்பம் செய்ய வேண்டும்'' என்ற வசனமும், அடுத்த பர்வத்தில் அவச்யம் ஆரம்பிக்க வேண்டும் என்பதையே சொல்லுவதாகும். ஏனெனில் மௌட்யம் முதலியவைகளில் ஆரம்பித்தால் தோஷமுண்டென்று ஸ்ம்ருதி வசனங்களிருப்பதால்.

यथाहुः — 'आधानानन्तरा पौर्णमासी चेन्मलमासगा । न तत्रारम्भणीया स्यादिति वृद्धेन भाषितमिति ।। स्मृत्यर्थसारे च — 'वसन्तकालेऽपि मलमासादिकं चेत् कर्मारम्भो नास्ति । अन्वारम्भणादिकं न कर्तव्यमिति ।। अत्र अन्वारम्भणं - स्थालीपाकः ।।

*எவ்விதமெனில் - "ஆதானத்திற்கடுத்த பூர்ணிமை மலமாஸத்திலிருந்தால் அதில் ஆரம்பணீ கூடாது என்று வ்ருத்தரால் சொல்லப்பட்டது." ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்தில் - வஸந்தகாலத்திலும் மலமாஸம் முதலியவை நேர்ந்தால் கர்மாரம்பம் கூடாது. ஸ்தாலீபாகாரம்பமும் கூடாது.*

'उपरागोऽधिमासो वा यदि प्रथमपर्वणि । नाहरेत् प्रथमामिष्टिं मौढ्ये च गुरुशुक्रयोः ।। स्थालीपाकक्रियां कुर्याद्विवाहादुत्तरायणे । पितृमासचतुष्के तु यदि कुर्याद्विनश्यति ।। आरम्भं दर्शपूर्णेष्ट्योरग्निहोत्रस्य चादिमम् ।। प्रतिष्ठामपि कर्माद्यां मलमासे विवर्जयेत् ।। प्रारब्धे तु तृतीयादौ प्रोक्तदोषो न विद्यते ।। ऋतुत्रयमतिक्रम्य स्थालीपाकं विना कृतम् । अजस्रं लौकिकं विद्यान्मासत्रयमथापि वेति ।। इदं देशान्तरगमनविषयम् ।। 'ऋतुमेकमतिक्रम्य स्थालीपाकं विना कृतम् । अजस्रं लौकिकं विद्यादिति वेदविदो विदुरिति स्मरणात् ।।

*உபராகமாவது, அதிக மாஸமாவது முதல் பர்வத்தில் நேர்ந்தால் முதலாவது இஷ்டியைச் செய்யக் கூடாது. குரு சுக்ரர்களின் மௌட்யத்திலுமிவ்விதமே. விவாஹத் திற்குப் பிறகு ஸ்தாலீபாகத்தை உத்தராயணத்தில் செய்ய வேண்டும். பித்ருமாஸங்கள் நாலில் செய்தால் நாசமடைவான். தர்ஸபூர்ண மாஸேஷ்டிகள், அக்னி ஹோத்ரம் இவைகளின் ப்ரதமாரம்பத்தையும், ப்ரதிஷ்டை முதலியவற்றையும் மலமாஸத்தில் வர்ஜிக்க வேண்டும். நல்ல காலத்தில் ஆரம்பித்தால் மூன்றுவது இஷ்டி முதலியவைகளுக்கு முன் சொல்லிய தோஷமில்லை. மூன்று ருதுக்கள், அல்லது*

மூன்று மாதங்கள் முடிய ஸ்தாலீபாகமில்லாமல் ஹோமம் செய்யப்பட ஔபாஸநாக்னி லௌகிகமாகுமென்று அறியவும்.' இது தூரதேசம் சென்றவனின் விஷயம். 'ஒரு ருது தாண்டியும் ஸ்தாலீபாகமில்லாமல் ஹோமம் செய்யப்படும் ஔபாஸநம் லௌகிகமாகுமென்று வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர் என்ற ஸ்ம்ருதியினால்.

## अधिवेदनम्।

तत्र मनुः — 'मद्यपाऽसद्यवृत्ता च प्रतिकूला च या भवेत्। व्याधिता वाऽधिवेत्तव्या हिंस्राऽर्थघ्नी च सर्वदा ॥ वन्ध्याऽष्टमेऽधिवेद्याऽब्दे दशमे तु मृतप्रजा ॥ एकादशे स्त्रीजननी सद्यस्त्वप्रियवादिनी ॥ या रोगिणी स्यात्तु हिता संपन्ना चैव शीलतः । साऽनुज्ञाप्याधिवेत्तव्या नावमान्या च कर्हिचित्॥ अधिविन्ना तु या नारी निर्गच्छेद्रोषिता गृहात्। सा सद्यः सन्निरोद्धव्या त्याज्या वा कुलसन्निधौ' इति ॥ त्यागः जनककुले प्रेषणम्॥

## அதிவேதனம்

*(மூத்தாள் ஜீவித்திருக்க இளையாளை மணப்பது)*

மனு - மத்யபானம் செய்பவளும், துராசாரமுடையவளும், பர்த்தாவுக்கு ப்ரதிகூலமாயிருப்பவளும், பாபரோகமுடையவளும், ஹிம்ஸிப்பவளும், எப்பொழுதும் அதிகச் செலவு செய்பவளுமான பத்னியைத் தள்ளி வேறு விவாஹம் செய்யலாம். ருதுவான முதல், மலடியாயிருப்பவளை 8-வது வர்ஷத்திலும், குழந்தைகள் பிறந்தும் ஜீவித்திராத போது 10 -வது வர்ஷத்திலும், பெண் குழந்தைகளையே பெறுபவளை 11- வது வர்ஷத்திலும் தள்ளிவேறு விவாஹம் செய்யலாம். அப்ரியமாய்ப் பேசுகிறவளைக் காலநியமமின்றித் தத்க்ஷணத்திலேயே தள்ளி வேறு விவாஹம் செய்யலாம். அவள் புத்ரவதியாயிருந்தால்

தள்ளக்கூடாது. நல்லொழுக்கமுள்ளவளாயும் ஹிதையாயு முள்ளவள் தீர்க்கரோகம் உடையவளாயிருந்தால் அவளனுமதியின் பேரில் வேறு விவாஹம் செய்யலாம். அவளை அவமதிக்கக் கூடாது. வேறு விவாஹம் செய்ததால் கோபித்துக் கொண்டு வீட்டைவிட்டு வெளியிற் சென்றால் மூத்தவளை வீட்டிலேயே நிர்ப்பந்தித்து இருக்கச் செய்ய வேண்டும். பிதாவின் க்ருஹத்திற்காவது அனுப்ப வேண்டும்.

याज्ञवल्क्यः—— 'सुरापी व्याधिता धूर्ता वन्ध्याऽर्थघ्न्यप्रियंवदा । स्त्रीप्रसूश्चाधिवेत्तव्या पुरुषद्वेषिणी तथा' ।। यस्यां हि विद्यमानायां भार्यान्तरपरिग्रहः। साऽधिवेत्तव्येत्यर्थः ।। 'अधिविन्ना तु भर्तव्या महदेनोऽन्यथा भवेत् । यत्रानुकूल्यं दम्पत्योस्त्रिवर्गस्तत्र वर्द्धते । आज्ञासम्पादिनीं दक्षां वीरसूं प्रियवादिनीम् । त्यजन् दाप्यस्तृतीयांश मद्रव्यो भरणं स्त्रिया' इति ।। त्यजन् - अधिविन्दन् स्वस्य धनस्य तृतीयांशं दाप्यः । निर्धनस्तु स्त्रिया भरणं ग्रासाच्छादनादि दाप्य इत्यर्थः ।।

யாக்ஞவல்க்யர் - மத்யபானம் செய்பவள், தீர்க்கரோகமுடையவள், துராசாரமுள்வள், மலடி, பணத்தைத் தொலைப்பவள், அப்ரியமாய்ப் பேசுகின்றவள், பெண்களையே பெறுபவள், புருஷனை த்வேஷிப்பவள் இவர்களைத் தள்ளி வேறு விவாஹம் செய்யலாம். அந்த மூத்தவளைப் போஷிக்க வேண்டும். இல்லாவிடில் அதிகமான பாபம் நேரிடும். எவ்விடத்தில் தம்பதிகள் அனுகூலர்களாய் இருக்கின்றார்களோ அங்கு த்ரிவர்க்கம் (தர்மார்த்த காமங்கள்) வளர்கிறது. தன்கட்டளைப்படி செய்பவளும், சீக்ரமாய்ச் செய்பவளும், வீரனான புத்ரனைப் பெற்றவளும், ப்ரியமாய்ப் பேசுகின்றவளுமான ஸ்த்ரீயைத் தள்ளி வேறு விவாஹம் செய்தவன், தன் தனத்தில் மூன்றிலொருபாகத்தை அவளுக்குக் கொடுக்க வேண்டும். த்ரவ்யமில்லாதவன் அவள் அன்னவஸ்த்ரத்திற்குப் போதுமான த்ரவ்யத்தைக் கொடுக்க வேண்டும்.

पराशरमाधवीये — 'धर्मविघ्नकरीं भार्यामसतीं चातिकोपनाम्। त्यजेद्धर्मस्य रक्षार्थं तथैवाप्रियवादिनीमिति ॥ त्यजेत् - अधिविन्देत् ॥ दक्षः — 'प्रथमा धर्मपत्नी स्यात् द्वितीया रतिवर्द्धिनी। दृष्टमात्रफलं तस्यामदृष्टं नोपलभ्यते ॥ धर्मपत्नी समाख्याता निर्दोषा यदि सा भवेत्। दोषेष्वपि न दोषः स्यादन्योद्वाहे विजानत इति ॥

பராசரமாதவீயத்தில் - தர்மத்திற்கு விக்னம் செய்பவளையும் துஷ்டையையும், அதிக கோபமுடைய வளையும்,அப்ரியமாய்ப் பேசுகின்றவளையும் தள்ளித் தர்மத்தை ரக்ஷிப்பதற்காக வேறு விவாஹம் செய்யலாம். தக்ஷர் - மூத்தவளே தர்மபத்னீ எனப்படுவாள். இரண்டாமவள் ஸுகத்திற்கு மட்டுமே ஆவாள். அவளிடம் காமஸுகம் மட்டில் ஏற்படும், தர்மபலம் ஏற்படாது. மூத்தவள் தோஷமற்றிருந்தால்தான் தர்மபத்னீ எனப் படுவாள். தோஷமுள்ளவளானால் அவளைவிட்டு வேறு விவாஹம் செய்வதால் தோஷமில்லை.

स्मृतिरत्ने — 'एकामुत्क्रम्य कामार्थमन्यां लब्धुं य इच्छति। समर्थस्तोषयित्वाऽर्थैः पूर्वोढामपरां वहेदिति ॥ बोधायनः — 'अप्रजां दशमे वर्षे स्त्रीप्रजां द्वादशे त्यजेत्। मृतप्रजां पञ्चदशे सद्यस्त्वप्रियवादिनीमिति ॥

ஸ்ம்ருதிரத்னத்தில் - காமஸுகத்திற்காக வேறு விவாஹம் செய்ய விரும்பியவன், மூத்தவளைத் தனத்தால் ஸந்தோஷப்படுத்தியே வேறொருவளை மணக்க வேண்டும். போதாயனர் - மலடியைப் பத்தாவது வர்ஷத்திலும், பெண்களையே பெறுகிறவளை 12 -வது வர்ஷத்திலும், ம்ருதப்ரஜையை 15 -வது வர்ஷத்திலும், அப்ரியமாய்ப் பேசுகிறவளை அந்தக் காலத்திலேயும் பரிஹரித்து வேறு விவாஹம் செய்யலாம்.

आपस्तम्बः — 'धर्मप्रजासम्पन्ने दारे नान्यां कुर्वीतान्यतराभावे कार्या प्रागग्न्याधेयादिति ॥ श्रौतेषु स्मार्तेषु च कर्मसु श्रद्धा शक्तिश्च

धर्मसम्पत्तिः । पुत्रवत्त्वं प्रजासम्पत्तिः । एतद्युक्ते दारे सति अन्यां भार्यां नोद्वहेत् । धर्मप्रजयोरन्यतरस्याभावे कार्या - उद्वाह्या । अत्र दारे सतीति वचनात् मृते तस्मिन् प्रागूर्ध्वं चाधानात् सत्यामपि पुत्रसम्पत्तौ धर्मसम्पत्त्यर्थं दारग्रहणं भवत्येव ।। शातातपः — 'मद्यपानप्रवृत्ता च दीर्घरोगा च या भवेत् । प्रतारिकाऽनपत्या च स्त्री प्रसूः परिभाषिणी ।। अर्थघ्नी च पतिद्वेषी स्त्री तिष्ठत्यपि चोद्वहेदिति ।।

ஆபஸ்தம்பர் - தர்மத்தில் ஶ்ரத்தையுள்ளவளும், ப்ரஜைகளுடன் கூடியவளுமான பத்னி இருக்கும் போது வேறு விவாஹம் செய்யக் கூடாது. இவ்விரண்டில் ஏதாவதொன்று இல்லாவிடில் செய்யலாம்; ஆதானத்திற்குமுன், 'இருக்கும் போது கூடாது' என்றதால், இறந்த பிறகு ஆதானத்திற்கு முந்தியும் பிந்தியும், புத்ரனிருந்தாலும் தர்மத்திற்காக வேறு விவாஹம் செய்யலாமென்கிறது. சாதாதபர் - மத்யபானம் செய்பவளும், தீர்க்கரோகமுள்ளவளும், ஏமாற்றுகிறவளும், குழந்தையில்லாதவளும், பெண் குழந்தைகளையே பெறுகிறவளும், கடிந்து பேசுகிறவளும், தனத்தைத் தொலைப்பவளும், பதியை த்வேஷிப்ப வளுமான ஸ்த்ரீ ஜீவித்திருந்தாலும் வேறு விவாஹம் செய்து கொள்ளலாம்.

स्मृत्यन्तरे — 'व्याधितां स्त्रीप्रजां वन्ध्यामुन्मत्तां विगतार्तवाम् । अदुष्टामर्हति त्यक्तुं तीर्थतो न तु धर्मत' इति ।। तीर्थं - योनिः ।। गर्गः — 'गृही स्यादेकपत्नीकः स कामी चोद्वहेत् पराम् ।। तृतीयां नोद्वहेत् कन्यां चतुर्थीमपि चोद्वहेत् ।।

வேறு ஸ்ம்ருதியில் - வ்யாதியுள்ளவளையும், பெண்களையே பெறுபவளையும், மலடியையும், பைத்ய முள்ளவளையும், ரஜோநிவ்ருத்தி அடைந்தவளையும், தோஷமில்லாதவளையும் உபேக்ஷித்து விவாஹம் செய்வதானால் போகேச்சையால் செய்யலாமே தவிர,

தர்மத்திற்காக வேண்டியதில்லை. கர்கர் - க்ருஹஸ்தன் ஒரு பத்னியையுடையவனாகவே இருக்க வேண்டும். காமத்திற்காக வேண்டுமானால் மற்றுமொருவளை மணக்கலாம். மூன்றாவதாக ஒரு கன்னிகையை மணக்கக் கூடாது. நாலாமவளை மணக்கலாம்.

अर्कविवाहः

तृतीयामुद्वहेत् कन्यां मोहादज्ञानतोऽपि यः। धनधान्यायुषां हानी रोगी स्याद्यदि जीवति ।। चतुर्थ्युद्वाहसिद्ध्यर्थमर्कवृक्षं समुद्वहेत्। ग्रामात् प्राचीमुदीचीं वा गच्छेद्यत्रैव तिष्ठति ।। यथार्हं शोभनं कृत्वा कृत्वा भूमिं च शोधिताम् । वस्त्रेण तन्तुनाऽऽवेष्ट्य ब्राह्मणस्तं परिश्रयेत् ।। स्वशाखोक्तविधानेन होमान्तेऽग्निं स्व आत्मनि ।। आरोप्यैव वरो धीरो ब्रह्मचर्यं चरेत्त्र्यहम्। एकाहमपि वा कन्यामुद्वहेदविशङ्कित' मिति ।।

எருக்கு விவாஹம்

கர்கர் - மோஹத்தினாலாவது, அறியாமையினாலாவது மூன்றாமவளை விவாஹம் செய்து கொள்பவனுக்கு தனம், தான்யம், ஆயுஸ் இவைகள் குறையும். ஆயுஸ் குறைவின்றியிருந்தாலும் ரோகமுடையவனாய் ஆவான். நாலாமவளின் விவாஹமென்பது ஸித்திப்பதற்காக, எருக்குச் செடியை மணக்க வேண்டும். க்ராமத்திற்கு வெளியில் கிழக்கு அல்லது வடக்கில் எருக்கு உள்ள இடத்திற்குச் செல்ல வேண்டும். உசிதப்படி சுபங்களைச் செய்து பூமியைச் சுத்தி செய்து வஸ்த்ரம் ப்ரதிஸரம் இவைகளுடன் சேர்த்து அந்த எருக்கஞ்செடியை மணக்க வேண்டும். தன் சாகையில் சொல்லியபடி விவாஹ ஹோமம் முடிந்த பிறகு அந்த அக்னியை ஆத்ம ஸமாரோபிதமாய்ச் செய்து கொண்டு மூன்று நாள் ப்ரம்மசர்யமனுஷ்டிக்க வேண்டும். ஒரு நாளாவது அனுஷ்டித்துப் பிறகு நாலாவதாகக் கன்னிகையைச் சங்கையில்லாமல் மணக்கலாம்.

अयं च द्वितीयादिविवाहः प्रजासम्पत्त्यभावे मृतायां वा द्रष्टव्यः । 'जायमानो वै ब्राह्मणस्त्रिभिर् ऋणवा जायते ब्रह्मचर्येणर्षिभ्यो यज्ञेन देवेभ्यः प्रजया पितृभ्यः, तस्मादेको द्वे जाये विन्दते, तस्मादेको बह्वीर्जाया विन्दते इत्यादि श्रुतितः धर्मप्रजार्थमनेकभार्यापरिग्रहावगमात् ॥

*இவ்விதம் 2, 4-வது முதலிய விவாஹங்கள் ப்ரஜை இல்லாவிடிலாவது, பார்யை இறந்துவிட்டாலாவது செய்ய வேண்டியவை என்றறியவும், அநேக ஶ்ருதி வாக்யங்களால், தர்மத்திற்காகவும், ப்ரஜைக்காகவும் அநேக பார்யைகளைப் பரிக்ரஹிக்கலாமென்று தெரிவதால்.*

### द्वितीयादिविवाहकालः

गार्ग्यः — 'भार्यान्तरविवाहः स्यादयुग्मे वत्सरे शुभः । युग्मे भर्तृविनाशाय गार्ग्यस्य वचनं यथेति ॥ वसिष्ठः — 'भार्याहीनस्तु वैवाह्यं कुर्यात्तस्मिंस्तु वत्सरे । वत्सरान्तरिते कुर्यादयनान्तरितेऽपि वा ॥ युग्मेऽप्ययुग्ममासे वा शौनको मुनिरब्रवीदिति ॥

### இரண்டாவது முதலிய விவாஹங்களின் காலம்

*கார்க்யர் - வேறு பார்யையை விவாஹம் செய்வது ஒற்றைப்படையான வர்ஷத்தில் சுபமாகும். இரட்டைப் படை வர்ஷமானல் பர்த்தாவுக்கு விநாசமேற்படும். வஸிஷ்டர் - பார்யையிழந்தவன் அதே வர்ஷத்தில் விவாஹம் செய்யலாம். ஒரு வர்ஷம் க்ரமித்தும் செய்யலாம். அயனம் க்ரமித்தும் செய்யலாம். இரட்டைப்படை மாதத்தில், அல்லது ஒற்றைப் படை மாதத்திலாவது செய்யலாம்; என்று சௌனகமுனி சொன்ஞர்.*

परिवेदनम्।

तत्र गर्गः — 'सोदर्ये तिष्ठति ज्येष्ठे न कुर्याद्दारसङ्ग्रहम् । आवसत्थ्यं तथाऽऽधानं पतितस्त्वन्यथा भवेदिति ॥ आवसत्थ्यं - आवसत्थ्याधानम् । आधानं - गार्हपत्याद्याधानम् ॥ यमः - 'पितृव्यपुत्रान् सापत्न्यान्परपुत्रांस्तथैव च । दाराग्निहोत्रधर्मेषु नाधर्मः परिविन्दतः इति ॥ परपुत्राः - दत्तक्रीतादयः ॥ शातातपः — 'क्लीबे देशान्तरस्थे च पतिते भिक्षुकेऽपि वा । योगशास्त्राभियुक्ते च न दोषः परिवेदन इति ॥

பரிவேதனம்

*(ஜ்யேஷ்டன் விவாஹமில்லாலிருக்கும் போது கனிஷ்டன் விவாஹம் செய்துகொள்ளல்)*

கர்கர் - *ஸஹோதரனான ஜ்யேஷ்டன் விவாஹமில்லாமலிருக்கையில் கனிஷ்டன் விவாஹம் செய்து கொள்ளக் கூடாது. ஜ்யேஷ்டனுக்கு ஆதானமாகாவிடில் கனிஷ்டன் ஆதானம் செய்து கொள்ளக் கூடாது. செய்தால் பதிதனுவான்.* யமன் - *பிதாவின் ப்ராத்ருபுத்ரர்கள், ஸபத்னீபுத்ரர்கள், தத்தர்களான பரபுத்ரர்கள் இவர்களை அதிக்ரமித்து விவாஹம் ஆதானம் இவைகளைச் செய்து கொள்வதால் கனிஷ்டனுக்குத் தோஷமில்லை.* சாதாதபர் - *நபும்ஸகன், தேசாந்தரத்திலிருப்பவன், பதிதன், ஸன்யாஸி, யோகசாஸ்த்ரத்திற் பற்றுள்ளவன் இவர்களை அதிக்ரமிப்பதால் கனிஷ்டனுக்குப் பரிவேதனதோஷமில்லை.*

कात्यायनः — 'देशान्तरस्थक्लीबैकवृषणानसहोदरान् । वेश्यातिसक्तपतितशूद्रतुल्यातिरोगिणः ॥ जडमूकान्धबधिरकुब्जवामनखेटकान्। अतिवृद्धानभार्यांश्च कृषिसक्तान्नृपस्य च ॥ धनवृद्धिप्रसक्तांश्च कामतोऽकारिणस्तथा । कुहकोन्मत्तचोरांश्च परिविन्दन्न दुष्यतीति ॥

खेटकः - भग्नदोःपादद्वयः । अभार्याः नैष्ठिकब्रह्मचारिणः । कामतोऽकारिणः = स्वेच्छयैव विवाहान्निवृत्ताः । तेषामपि परिवित्तित्वं नास्तीति प्रतिभाति । यद्यपि जडमूकादीनामपि विवाहोऽस्ति । तथाऽपि तान् परिविन्दन्न दुष्यति ॥

காத்யாயனர் - தேசாந்தரத்திலிருப்பவன், நபும்ஸகன், ஒற்றை விதையுள்ளவன், பின்ஞேதரன், வேசியினிடம் பற்றுள்ளவன், பதிதன், சூத்ரனை யொத்தவன், மஹாரோகி, ஜடன், ஊமை, குருடு, செவிடு, கூனன், குள்ளன், கைகாலொடிந்தவன், கிழவன், நைஷ்டிகப்ரம்மசாரி, அரசனின் க்ருஷியில் பற்றுள்ளவன், பணத்தைப் பெருக்குவதிற் பற்றுள்ளவன், விவாஹம் வேண்டாமென்று தள்ளியவன், வஞ்சகன், பித்தன், திருடன் இவர்களைத் தள்ளி விவாஹம் செய்து கொண்டவனுக்குப் பரிவேதனதோஷமில்லை. ஜ்யேஷ்டனுக்கும் பரிவித்தித்வதோஷமில்லை. ஜடன் ஊமை முதலியவர்க்கும் விவாஹமுண்டு. ஆனாலும் அவர்களுக்கு முன் விவாஹம் செய்து கொண்டால் பரிவேதன தோஷமில்லை.

पराशरः - 'द्वादशैव तु वर्षाणि ज्यायान् धर्मार्थयोर्गतः । न्याय्यः प्रतीक्षितुं भ्राता श्रूयमाणः पुनः पुनरिति ॥ धर्मार्थयोः - धर्मार्थमर्थार्थं च देशान्तरं गतः जीवतीति पुनः पुनः श्रूयमाणः द्वादश वर्षाणि प्रतीक्ष्य इत्यर्थः ॥ वसिष्ठोऽपि - 'अष्टौ दश द्वादश वर्षाणि ज्येष्ठभ्रातरमनिविष्ट मप्रतीक्षमाणः प्रायश्चित्ती भवतीति ॥ अनिविष्टं अकृतविवाहाग्निहोत्रम् । कार्यान्तरार्थं देशान्तरगतविषये अष्टौ दश वेति पक्षद्वयम् । धर्मार्थमर्थार्थं वा गतविषये द्वादश वर्षाणीति विवेकः ॥

பராசரர் - தர்மத்திற்காக அல்லது அர்த்தத்திற்காகத் தேசாந்தரம் சென்ற ஜ்யேஷ்டன் ஜீவித்திருப்பதாய்த் தெரிந்தால் 12-வர்ஷம் வரையில் அவனை ப்ரதீக்ஷிக்க வேண்டும். வஸிஷ்டர் - தர்மத்திற்காக, அல்லது தனத்திற்காகக் தேசாந்தரம் சென்ற ஜ்யேஷ்டன், விவாஹம் அக்னிஹோத்ரம் இல்லாதவனுகில் அவனை 12 வர்ஷம் வரையில் கனிஷ்டன் ப்ரதீக்ஷிக்க வேண்டும். வேறு கார்ய வசத்தால் சென்றவனை 8 அல்லது 10 -வர்ஷம் ப்ரதீக்ஷிக்க வேண்டும். இல்லாவிடில் ப்ராயச்சித்தி ஆவான். கௌதமர் - விவாஹம், ஆதானம் இல்லாத ஜ்யேஷ்டன் வித்யார்த்தியாய்த் தேசாந்தரம் சென்றிருந்தால் கனிஷ்டன் 12- வர்ஷம் ப்ரதீக்ஷிக்க வேண்டும். சங்கர் - அதிகாரியான ஜ்யேஷ்டன் விவாஹம் அக்னிஹோத்ரமில்லாமலிருந்தால் அவனுடைய உத்தரவின்றிக் கனிஷ்டன் விவாஹம் அக்னிஹோத்ரம் இவைகளைச் செய்யக் கூடாது. தேசாந்தரம் சென்ற ஜ்யேஷ்டனைப் பன்னிரண்டு வர்ஷம் ப்ரதீக்ஷித்துப் பிறகு கனிஷ்டன் விவாஹம் செய்து கொள்ளலாம்.

एवं प्रतीक्षणमुन्मत्तादिव्यतिरिक्तविषयम् । तथा चन्द्रिकायाम् — 'उन्मत्तः किल्बिषी कुष्ठी पतितः क्लीब एव वा । राजयक्ष्मामयावी च न न्याय्यः स्यात् प्रतीक्षितुम् ।। मत्तोन्मत्तजडक्लीब पतितानां द्विजन्मनाम्। नोद्वाहो नैव संस्कारो नाशौचं नोदकक्रिया ।। रम्भाविवाहः कर्तव्यस्तदलाभेऽर्कशाखया ।। विवाहं मनुजाः कुर्युरित्येवं मनुरब्रवी'दिति ।।

இவ்விதம் ப்ரதீக்ஷிப்பது உன்மத்தன் முதலிய வரல்லாதவரின் விஷயம். அவ்விதமே சந்த்ரிகையில் - பித்தன், பாபி, குஷ்டீ, நபும்ஸகன், க்ஷயரோக முடையவன் இவர்களை ப்ரதீக்ஷிப்பது ந்யாயமில்லை. மத்தன், உன்மத்தன், ஜடன், நபும்ஸகன், பதிதன் இவர்களுக்கு விவாஹம், ஸம்ஸ்காரம், ஆசௌசம்,

உதகதானம் இவைகளில்லே. கதளீவிவாஹம், அல்லது அர்க்க விவாஹம் செய்யலாம் என்ருர் மனு.

मनुशातातपौ — 'दाराग्निहोत्रसंयोगं कुरुते योऽग्रजे स्थिते । परिवेत्ता स विज्ञेयः परिवित्तिस्तु पूर्वज' इति ॥ पराशरः — 'परिवित्तिः परिवेत्ता यया च परिविद्यते । सर्वे ते नरकं यान्ति दातृयाजकपञ्चमाः ॥ कुब्जवामनषण्डेषु गद्गदेषु जडेषु च । जात्यन्धे बधिरे मूके न दोषः परिवेदने। पितृव्यपुत्रः सापत्न्यः परनारीसुतस्तथा । दाराग्निहोत्रसंयोगे न दोषः परिवेदने । परिवेत्तुर्न चाग्निस्तु न वेदा न तपांसि च । न च श्राद्धं कनिष्ठस्य या च कन्या विरूपितेति ॥

மனு சாதாதபர்கள் - ஜ்யேஷ்டன் விவாஹம் அக்னிஹோத்ரம் இல்லாமல் இருக்கும் போது, அவைகளைச் செய்து கொள்ளும் கனிஷ்டன் பரிவேத்தா என்றும், ஜ்யேஷ்டன் பரிவித்தி என்றும் சொல்லப்படுகிருன். பராசரர் - பரிவித்தி, பரிவேத்தா, பரிவேத்தாவின் பத்னி, அப்பெண்ணைத் தானம்செய்தவன், அவ்விவாஹத்தைச் செய்து வைத்த புரோஹிதன் இவ்வைந்து பேர்களும் நரகத்தை அடைகின்றனர். கூனன், குள்ளன், நபும்ஸகன், திக்குவாயன், ஜடன், பிறவிக்குருடன், செவிடன், ஊமை இவர்கள் விஷயத்தில் பரிவேதன தோஷமில்லை. பிதாவின் ப்ராத்ருபுத்ரன், ஸபத்னீபுத்ரன், தத்தக்ரீதாதிகள் இவர்கள் விஷயத்தில் பரிவேதன தோஷமில்லை பரிவேத்தாவான கனிஷ்டனுக்கு அக்னியிலும், வேதங்களிலும், தவத்திலும், ப்ராத்தத்திலும் அதிகாரமில்லை.

विवाहाधिकारिण्यां ज्येष्ठायां कन्यायां सत्यां कनिष्ठाया उद्वाहो न कार्यः। विरूपितायां तु ज्येष्ठायामनूढायामपि कनिष्ठाया उद्वाहो न दोषायेत्यर्थः ॥ स एव - 'ज्येष्ठायां यद्यनूढायामुह्यते सा अग्रेदिधिषुः ज्येष्ठा च दिधिषुः ।

விவாஹத்திற்கு அதிகாரமுள்ள தமக்கைக்கு விவாஹமாகாமல் தங்கைக்கு விவாஹம் கூடாது. தமக்கைக்குத் தோஷமிருந்தால் தங்கைக்கு விவாஹம் தோஷமில்லை என்று பொருள். பராசரரே - தமக்கைக்கு விவாஹமாகாமலிருக்கும் போது தங்கைக்கு விவாஹமானால், அவள் 'அக்ரேதிதிஷு' என்றும், தமக்கை 'திதிஷு' என்றும் சொல்லப்படுவாள்.

बोधायनोऽपि — 'परिवित्तिः परिवेत्ता या चैनं परिविन्दति। सर्वे ते नरकं यान्ति दातृयाजकपञ्चमा इति ॥ कन्यायाः पातित्ये सति कृतप्रायश्चित्ताया एव विवाह इत्याह यमः — 'स्त्री यदा बालभावेन महापापं करोति हि। प्रायश्चित्तव्रतस्यार्धं पित्रा तु व्रतचारिणीम् ॥ उद्वहेदभिरूपां तामन्यथा पतितस्तु स इति ॥

போதாயனர் - பரிவித்தி, பரிவேத்தா, பெண், பெண்ணின் பிதா, புரோஹிதன் இவ்வைவரும் நரகத்தை அடைகின்றனர். கன்யைக்குப் பாதித்யமிருந்தால் ப்ராயச்சித்தம் செய்த பிறகுதான் விவாஹம் செய்ய வேண்டுமென்கிறார் யமன் - கன்னிகை பால்யத்தால் விவேகமற்று மஹாபாபத்தைச் செய்து விட்டால், ப்ராயச்சித்த நியமத்தில் பாதியை அவளின் பிதா அனுஷ்டிக்க வேண்டும். அதனால் சுத்தையான பிறகு தான் அவளை விவாஹம் செய்யலாம். இல்லாவிடில் விவாஹம் செய்து கொண்டவனும் பதிதனாவான்.

पतितैः सह योनिसम्बन्धे पातित्यमाह व्यासः — 'संवत्सरेण पतति संसर्गं कुरुते तु यः। यानशय्यासनैर्नित्यं जानन् वै पतितो भवेत् ॥ याजनं योनिसम्बन्धं तथैवाध्यापनं द्विजः। कृत्वा सद्यः पतेज्ज्ञानात् सहभोजनमेव वा' इति ॥ देवलः — 'याजनं योनिसम्बन्धं स्वाध्यायं सहभोजनम्। कृत्वा सद्यः पतत्येव पतितेन न संशय' इति ॥

பதிதர்களுடன் விவாஹாதி ஸம்பந்தம் செய்தால் பாதித்யமுண்டென்கிறார் வ்யாஸர் -பதிதனுடன் ஒரே

வாகனம், படுக்கை, ஆஸனம் இவைகளால் ஒரு வர்ஷம் ஞானபூர்வமாய் ஸம்ஸர்க்கம் செய்பவன் பதிதன் ஆவான். யாஜனம், விவாஹம், அத்யாபனம், போஜனம் இவைகளை ஞானபூர்வமாய்ச் செய்தால் அப்பொழுதே பதிதனாவான். தேவலர் - யாஜனம், விவாஹம், அத்யயனம், போஜனம் இவைகளைப் பதிதனோடு செய்பவன் உடனே பதிதனாவான்; ஸம்சயமில்லை.

आपस्तम्बः — 'न पतितैः संव्यवहारो विद्यत' इति ॥ पतितैः कृतप्रायश्चित्तैरपि ॥ पतितैरुत्पादितानां पुत्राणामपि पातित्यमस्तीति पूर्वपक्षपूर्वकं प्रतिपादयति स एव — 'अथाभिशस्ताः समवसाय चरेयुर्धार्म्यमिति सांशित्य इतरेतरयाजका इतरेतराध्यापका मिथो विवहमानाः पुत्रान् सन्निष्पाद्य ब्रूयुर्विप्रव्रजता स्म देवं ह्यस्मत्स्वार्याः सम्प्रत्यपत्स्यतेत्यथापि न सेन्द्रियः पतति तदेतेन वेदितव्यमङ्गहीनोऽपि साङ्गं जनयति मिथ्यैतदिति हारीतो दधिधानी सधर्मा भवति यो हि दधिधान्यामप्रयतं पय आतच्य मन्थति तेन धर्मकृत्यं क्रियत एवमशुचि शुक्लं यन्निर्वर्तते न तेन सह सम्प्रयोगो विद्यत' इति ॥ अभिशस्ताः - पतिताः । समवसाय चरेयुः - अवसानं गृहम् । समित्येकीभावे । ग्रामाद्बहिरेकस्मिन् प्रदेशे गृहाणि कृत्वा चरेयुः । धार्म्यं - धर्म्यं वक्ष्यमाणं वृत्तमिति सांशित्य - संशितां तीक्ष्णां बुद्धिं कृत्वा निश्चित्येत्यर्थः । इतरेतरं याजयन्तः इतरेतरमध्यापयन्तः परस्परं विवाहसम्बन्धं कुर्वन्तश्चरेयुः वर्तेरन्निति ।

ஆபஸ்தம்பர் - ப்ராயச்சித்தம் செய்து கொண்டவராயினும் பதிதர்களோடு ஸம்பந்தமே கூடாது. பதிதர்களால் பிறந்த பிள்ளைகளுக்கும் பாதித்ய முண்டென்பதை பூர்வபக்ஷத்துடன் நிருபிக்கின்றார் ஆபஸ்தம்பரே - பதிதர்கள் ஒன்றுகூடி க்ராமத்திற்கு வெளியில் வீடுகளைக்கட்டிக்கொண்டு மேல் சொல்லப்படும் விஷயம் தர்ம்யம் என்று நிச்சயம் செய்து கொண்டு வஸிப்பார்கள்.

अथ ते पुत्रान् सन्निष्पाद्य ब्रूयुः । हे पुत्राः? अस्मत् = अस्मत्तः, विप्रव्रजत - विविधं प्रकर्षेण च स्नेहमुत्सृज्य आर्यसमीपं गच्छत । एवं हि अस्मत्सु - अस्मासु आर्याः - शिष्टाः सम्प्रत्यपत्स्यत - सम्प्रतिपत्तिं करिष्यन्ति । आर्याणामप्येतदभिप्रतं भविष्यति । यस्मादस्माभिरेव पतनीयं कर्मानुष्ठितं न च भवद्भिः । न च पतितेनोत्पादितस्य पातित्यम् । अन्यत्वात्। एतदेवोपपादयति —— अथापि न सेन्द्रियः पतति । न हि पतितो भवन्निन्द्रियेण सह पतति । पुरुष एव पतति नेन्द्रियं शुक्लमिति । तदनन्तरोक्तमर्थरूपं एतेन - वक्ष्यमाणेन निदर्शनेन वेदितव्यम् । चक्षुराद्यङ्गहीनोऽपि साङ्गं - चक्षुरादिमन्तं जनयति । एवमधिकारविकलः साधिकारं जनयिष्यति । स्त्रिया अपि कारणत्वात्तस्याश्च दोषाभावात् । दूषयति मिथ्यैतदिति । एतदनन्तरोक्तं मिथ्या - न युक्तमिति हारीतो मन्यते। हारीतग्रहणं पूजार्थम् । दधि धीयते यस्यां सा दधिधानी स्थाली । तया सधर्म्या - सदृशी स्त्री भवति । ततः किम्? यो हि पुरुषो दधिधान्यां स्थाल्यां अप्रयतं - श्वाद्युपहतं पय आतच्य - तक्राद्यातञ्चनेन संस्कृत्य मन्थति । न तेन - तदुत्पन्नेन घृतादिना धर्मकृत्यं - यागादिकं क्रियते । एवं पतितसम्बन्धेनाशुचि शुक्लं स्त्रियां निषिक्तं शोणितेनाक्तं यन्निर्वर्तते - येन रूपेण निष्पद्यते न तेन सह सम्प्रयोगो विद्यते । शिष्टानामित्यर्थः ॥

*அவர்கள் தங்களுக்குப் பிறந்த பிள்ளைகளை இவ்விதம் சொல்வார்கள். ஓ புத்ரர்களே நீங்கள் எங்களிடத்தில் ஸ்நேஹத்தைவிட்டுப் பெரியோர்களிடம் செல்லுங்கள். அவர்களுக்கும் இது ஏற்கக்கூடியதாக இருக்கும். நாங்களே பதிதர்கள், நீங்கள் பதிதர்களல்ல. பதிதனுக்குப் பிறந்தவன் பதிதனாகான். புருஷன் பதிதன் ஆனாலும் அவனுடைய சுக்லமும் பதிதமாகாது. கண்ணில்லாதவன் கண்ணுள்ள வனைப் பெறுவது போல். பதிதன் அபதிதனைப் பெறலாம். ஸ்த்ரீயும் காரணமானதால், அவளுக்குப் பாதித்யமில்லாததால். இதைப் பூர்வபக்ஷமாக்கித் தூஷிக்கின்றார். இவ்விதம் சொல்லியது யுக்தமல்ல வென்பது ஹாரீதரின் மதம். ஏனெனில் - ஸ்த்ரீயானவள்*

தயிர்ப்பானைக்குச் சமானமாவாள். ஒருவன் நாய் முதலியவற்றால் தீண்டப்பட்டு அசுத்தமான பாலைத் தயிர்ப்பானையில் விட்டுத் தயிராக்கிக் கடைந்த நெய் எடுத்தால் அதனால் சிஷ்டர்கள் யாகம் முதலிய தர்ம கார்யங்களைச் செய்வதில்லை. இவ்விதம் பதித ஸம்பந்தத்தால் துஷ்டமான சுக்லத்தின் ஸம்பந்தத்தால் உண்டாகிய உருவத்துடன் சிஷ்டர்கள் சேர்வதில்லை.

बोधायनः — 'संवत्सरेण पतति पतितेन समाचरन् । याजनाध्यापनाद्यौनात्सद्य इति ।। स एव - 'अथ पतिताः समवसाय धर्मांश्चरेयुरितरेतरयाजका इतरेतराध्यापका मिथो विवहमानाः पुत्रान् सन्निष्पाद्य ब्रूयुर्विप्रव्रजतास्मत्त एवमार्यान् संप्रतिपत्स्यतेत्यथापि न सहेन्द्रियैः पतति तदेतेन वेदितव्यमङ्गहीनोऽपि साङ्गं जनयेन्मिथ्यैतदिति हारीतो दधिधानीसधर्माः स्त्रियः स्युर्यो हि दधिधान्याम प्रयतं पय आतच्य मन्थति न तच्छिष्टा धर्मकृत्येषूपयोजयन्त्येवमशुचि शुक्लं यन्निर्वर्तते न तेन सह सम्प्रयोगो विद्यतेऽशुचिशुक्लोत्पन्नानां तेषामिच्छतां प्रायश्चित्तिः पतनीयानां तृतीयोंशः स्त्रीणामंशस्तृतीय इति ।।

போதாயனர் - பதிதனுடன் 1-வர்ஷம் ஸம்ஸர்க்கம் செய்தவன் பதிதனாகிறான். பதிதனுடன் யாஜனம், அத்யாபனம், விவாஹம் இவைகளைச் செய்பவன் உடனே பதிதனாகிறான். போதாயனரே - ஆபஸ்தம்பஸூத்ரம் போல் முழுவதும் பொருள். பிறகு விசேஷம் - பதிதர்களுக்குப் பிறந்தவர்கள் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள இச்சித்தால் பதனீய ப்ராயச்சித்தத்தின் மூன்றிலொருபாகம் ப்ராயச்சித்தம். ஸ்த்ரீகளுக்கு மிவ்விதமே.

समानायामप्युत्पत्तौ पुत्र एव पतति न दुहिता । तदाह वसिष्ठः - तितेनोत्पन्नः पतितो भवत्यन्यत्र स्त्रिया सा हि परगामिनी तामरिक्थामुद्वहेदिति ।। अशुल्कां कृतप्रायश्चित्तामुपेयादित्यर्थः ।।

ஜனனம் ஸமானமானாலும், புத்ரன் பதிதனாகிறான், பெண் பதிதையாகிறதில்லை. அதைப்பற்றி வஸிஷ்டர் - பதிதனிடத்திற் பிறந்தவன் பதிதனாகிறான், பெண்ணைத்தவிர; அவள் பிறனை அடைகின்றவளாகையால். அவளைப் பணமில்லாமல் விவாஹம் செய்து கொள்ளலாம். கன்னிகையின் பிதாவினிடமிருந்து சுல்கம் வாங்காமலும், அவளுக்கு ப்ராயச்சித்தம் செய்வித்தும் க்ரஹிக்கலாமென்பது பொருள்.

तथा याज्ञवल्क्यः — 'कन्यां समुद्वहेदेषां सोपवासामकिञ्चनामिति। एषां ब्रह्महादीनाम्। अकिञ्चनामशुल्काम्॥ हारीतोऽपि - 'पतितस्य तु कुमारीं विवस्त्रामहोरात्रोपोषितां प्रातः शुक्लेनाहतेन वाससाऽऽच्छादितां नाहमेतेषां न ममैत इति त्रिरुच्चैरभिदधानां तीर्थे स्वगृहे वोद्वहेदिति॥ दारसङ्ग्रहस्य फलमाह याज्ञवल्क्यः — 'लोकानन्त्यं दिवः प्राप्तिः पुत्रपौत्रप्रपौत्रकैः। यस्मात्तस्मात् स्त्रियः सेव्याः कर्तव्याश्च सुरक्षिता इति। पुत्रादिभिर्लोके आनन्त्यं वंशस्याविच्छेदः। अग्निहोत्रादिभिश्च स्वर्गप्राप्तिः। एतद्द्वयं यस्मात् स्त्रीभ्य एव भवति तस्मात् स्त्रियः सेव्याः - उपभोग्याः प्रजार्थम्। रक्षितव्याश्च धर्मार्थमित्यर्थः॥

அவ்விதமே யாக்ஞவல்க்யர் - மகாபாபிகளின் பெண்ணை உபவாஸமிருக்கச் செய்து சுல்கமில்லாமல் விவாஹம் செய்துகொள்ளலாம். ஹாரீதரும் - பதிதனுடைய பெண்ணை வஸ்த்ரமில்லாமல் ஒருநாள் முழுவதும் உபவாஸமிருக்கச் செய்து காலையில் வெளுப்பான வஸ்த்ரத்தைத்தரிக்கச்செய்து, நான் இவர்களுடையவளல்ல; இவர்களும் என்னுடையவர்களல்ல என்று மூன்று தடவை உரக்கக் கூவிச் சொல்லியபிறகு தீர்த்தக்கரையிலாவது தன் க்ருஹத்திலாவது விவாஹம் செய்துகொள்ளலாம். விவாஹத்திற்குப் பலனைச் சொல்லுகிறார் யாக்ஞவல்க்யர் - புத்ரன், பௌத்ரன், ப்ரபௌத்ரன் இவர்களால் இவ்வுலகில் வம்சம்

அழியாமலிருப்பதும், தர்மானுஷ்டானத்தால் ஸ்வர்க்கத்தை அடைவதும் ஸ்த்ரீகளிடமிருந்தே உண்டாவதால், அவர்களை அனுபவிக்க வேண்டும்; ரக்ஷிக்கவும் வேண்டும்.

## स्त्रीरक्षणक्रम स्त्रीधर्मादि निरूपणम् ।

मनुः — 'अस्वतन्त्राः स्त्रियः कार्याः पुरुषैः स्वैर्दिवानिशम् । विषयेषु च सज्जन्त्यः संस्थाप्या आत्मनो वशे ॥ पिता रक्षति कौमारे भर्ता रक्षति यौवने । पुत्रस्तु स्थाविरे भावे न स्त्री स्वातन्त्र्यमर्हति ॥ सूक्ष्मेभ्योऽपि प्रसङ्गेभ्यः स्त्रियो रक्ष्या विशेषतः । द्वयोर्हि कुलयोः शोकमावहेयु ररक्षिताः॥ इमं हि सर्ववर्णानां पश्यन्तो धर्ममुत्तमम् । यतन्ते रक्षितुं भार्यां भर्तारो दुर्बला अपि ॥ स्वां प्रसूतिं चरित्रं च कुलमात्मानमेव च । स्वं च धर्मं प्रयत्नेन जायां रक्षन् हि रक्षति ॥ पतिर्भार्यां सम्प्रविश्य गर्भो भूत्वेह जायते । जायायास्तद्धि जायात्वं यदस्यां जायते पुनः । यादृशं भजते हि स्त्री सुतं सूते तथाविधम् । तस्मात् प्रजाविशुद्ध्यर्थं स्त्रियं रक्षेत् प्रयत्नतः ॥

### ஸ்த்ரீகளைக் காப்பாற்றும் முறை - ஸ்த்ரீ தர்மம்

மனு - புருஷர்கள் தங்கள் ஸ்த்ரீகளை எப்பொழுதும் ஸ்வாதந்த்ரியமில்லாதவர்களாய்ச் செய்ய வேண்டும். விஷயங்களில் பற்றுள்ளவர்களைத் தன் வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். விவாஹத்திற்கு முன் பிதாவும், யௌவனத்தில் பர்த்தாவும், வார்த்தகத்தில் புத்ரனும் ரக்ஷிக்க வேண்டும். ஸ்த்ரீக்கு ஸ்வாதந்த்ரியம் நல்லதல்ல. ஸ்வல்பங்களான துஷ்டவிஷய ஸம்பந்தங்களினின்றும் கூட மிகக் கவனத்துடன் ஸ்த்ரீகளை ரக்ஷிக்க வேண்டும். காப்பாற்ருவிடில் அவர்கள் இரு குலங்களுக்கும் துக்கத்தைக் கொடுக்க நேரிடும். எல்லா வர்ணங்களுக்கும் இது சிறந்த தர்மம் எனத்தெரிந்து துர்ப்பலர்களான பர்த்தாக்களும் பார்யையைக் காக்க முயலவேண்டும். தன் புத்ர பௌத்ராதி ஸந்ததியையும், சிஷ்டாசாரத்தையும்,

பிதா முதலியவர்களின் வம்ஶத்தையும், தன்னையும், தனது தர்மத்தையும், பார்யையைரக்ஷிப்பவன் ரக்ஷித்தவனாகின்றான். பதியானவன், பார்யையினிடத்தில் சுக்லரூபமாய் ப்ரவேசித்துக் கர்ப்பமாய் ஆகிப் புத்ரனாய்ப் பிறக்கிறான். ஆகையால்தான் பார்யைக்கு 'ஜாயா' என்று நாமதேயம்; இவளிடம் அவனே மறுபடி உண்டாவதால். ஸ்த்ரீயானவள் எவ்விதமான பர்த்தாவை அடைகின்றாளோ அவ்விதமான புத்ரனைப் பெறுவாள். ஆகையால் பிறக்கும் ப்ரஜையின் சுத்திக்காக ப்ரயத்னத்துடன் ஸ்த்ரீயைக் காக்க வேண்டும்.

न कश्चिद्योषितश्शक्तः प्रसह्य परिरक्षितुम् । एतैरुपाययोगैस्तु शक्यास्ताः परिराक्षितुम् । अर्थस्य सङ्गहे चैनां व्यये चैव नियोजयेत् । शौचे धर्मेऽन्नपक्त्यां च पारिणाह्यस्य चेक्षणे ।। अरक्षिता गृहे रुद्धाः पुरुषैराप्तकारिभिः । आत्मानमात्मना यास्तु रक्षेयुस्ताः सुरक्षिता। पानं दुर्जनसंसर्गः पत्या च विरहोऽटनम् । स्वप्नोऽन्यगेहवासश्च नारीसन्दूषणानि षट् ।। नैता रूपं परीक्षन्ते नासां वयसि संस्थितिः । सुरूपं वा विरूपं वा पुमानित्येव भुञ्जते। पौंश्चल्याच्चलचित्ताच्च नैस्नेह्याच्च स्वभावतः । रक्षिता यत्नतोऽपीह भर्तृष्वेता विकुर्वते ।। एवं स्वभावं ज्ञात्वाऽऽसां प्रजापतिनिसर्गजम् । परमं यत्नमातिष्ठेत् पुरुषो रक्षणं प्रति ।।

ஒருவனும் பலாத்காரத்தால் ஸ்த்ரீகளைக் காப்பதற்குச் சக்தனாகான். சொல்லப்போகும் உபாயங்களை ப்ரயோகித்தால் காப்பாற்ற முடியும். பணத்தை சேமிப்பதிலும், செலவிடுவதிலும், த்ரவ்யம் சரீரம் இவைகளைச் சுத்தி செய்வதிலும், தர்மத்திலும், சமையல் செய்வதிலும், வீட்டிலுள்ள பண்டங்களைக் கவனிப்பதிலும் ப்ரவர்த்திக்கச் செய்ய வேண்டும். ஆப்தர்களான புருஷர்களால் வீட்டில் தடுக்கப்பட்டுக் காக்கப்பட்டிருந்தாலும் ரக்ஷிக்கப் பட்டவர்கள் ஆகார். எந்த ஸ்த்ரீகள் தன்னைத்தானாகவே ரக்ஷிப்பார்களோ அவர்களே ரக்ஷிதைகளாக ஆவார். மத்யபானம், துஷ்டர்களுடன் சேர்க்கை; புருஷனைவிட்டுப்

பிரிந்திருத்தல், வெளியில் திரிதல், அகாலத்தில் தூக்கம், அன்யர்வீடுகளில் வஸித்தல் என்ற இவ்வாறும் ஸ்த்ரீகளுக்கு கெடுதியை உண்டாக்கக்கூடியவைகளாம். ஸ்த்ரீகள் அழகையும் வயதையும் கவனியார். அழகுள்ளவனுயினும், குரூபனுயினும், ஆண் என்று அவனை அனுபவிப்பார்கள். இவர்கள் ப்ரயத்னத்துடன் வீட்டில் வைத்துக் காக்கப்பட்டாலும், புருஷனைக் கண்டவுடன் ஆசைப்படும் ஸ்வபாவத்தாலும், சஞ்சலமான சித்தத்தாலும், இயற்கையாய் ஸ்நேஹமில்லாத் தன்மையாலும், பர்த்தாக்களிடத்தில் வெறுப்பை அடைகின்றனர். ப்ரம்மதேவர் ஸ்ருஷ்டிகாலம் முதல் உண்டாகிய இவ்விதமான ஸ்வபாவத்தை அறிந்து, இவர்களை ரக்ஷிப்பதின் பொருட்டுப் புருஷன் அதிகமான ப்ரயத்னத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

शय्यासनमलङ्कारं कामं क्रोधमनार्जवम् । द्रोहभावं कुचर्यां च स्त्रीभ्यो मनुरकल्पयत् ।। यादृग्गुणेन भर्त्रा स्त्री संयुज्येत यथाविधि । तादृग्गुणा सा भवति समुद्रेणेव निम्नगा ।। प्रजनार्थं महाभागाः पूजार्हा गृहदीप्तयः । स्त्रियः श्रियश्च गेहेषु न विशेषोऽस्ति कश्चन ।। प्रजनार्थं स्त्रियः सृष्टाः सन्तानार्थं च मानवाः । तस्मात् साधारणो धर्मः श्रुतौ पत्न्या सहोदितः ।। उत्पादनमपत्यस्य जातस्य परिपालनम् । प्रत्यहं लोकयात्रायाः प्रत्यक्षं स्त्रीनिबन्धनम् ।। अपत्यं धर्मकार्याणि शुश्रूषा रतिरुत्तमा । दाराधीनस्तथा स्वर्गः पितॄणामात्मनश्च ह । विधाय वृत्तिं भार्यायाः प्रवसेत् कार्यवान्नरः । अवृत्तिकर्शिता हि स्त्री प्रदुष्येत् स्थितिमत्यपि ।। विधाय प्रोषिते वृत्तिं जीवेन्नियममास्थिता ।।

எப்பொழுதும் படுத்திருப்பதும், உட்கார்ந் திருத்தலும், அலங்கரித்துக் கொள்ளுதலும், காமம், க்ரோதம், கௌடில்யம், பரத்ரோஹம், துராசாரம் என்ற இவை ஸ்ருஷ்டியின் ஆதியிலேயே ஸ்த்ரீகள் ஸ்வபாவமா யுள்ளவை என்று மனு சொன்னுர். ஸ்த்ரீயானவள் எவ்விதகுணங்களுடைய பர்த்தாவுடன் விவாஹவிதிப்படி

சேருகின்றாளோ அவ்வித குணங்களுடையவளாக ஆவாள்; ஸமுத்ரத்துடன் கூடிய நதிபோல். கர்ப்போத்பத்திக்காக, மஹாபாக்யமுள்ளவர்களும், பூஜிக்கத்தகுந்தவர்களும், க்ருஹத்திற்குச் சோபையைச் செய்பவர்களும் ஆன ஸ்த்ரீகளும், ஶ்ரீகளும் (லக்ஷ்மீகளும்) ஸமமானவர்கள்; இவர்களுள் பேதமொன்றுமில்லை. கர்ப்பத்தைத் தரிப்பதற்காக ஸ்த்ரீகளும், கர்ப்பத்தை உற்பத்தி செய்வதற்காகப்புருஷர்களும் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக் கின்றனர். ஆகையால் வேதத்தில் ஆதானம் முதலிய கர்மமும் பத்னியுடன் கூடவே ஸாதாரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையைப் பெறுவதற்கும், பிறந்த குழந்தையை பரிபாலிப்பதற்கும், ப்ரதிதினமும் உள்ள வியவஹாரத்திற்கும் ஸ்த்ரீயே காரணம் என்பது ப்ரத்யக்ஷமானது. குழந்தையைப் பெறுதல், தர்மகார்யங்கள், பணிவிடை, உத்தமமான ஸுகம், முன்னோர்களுக்கும் தனக்கும் ஸ்வர்க்கத்தின் ப்ராப்தி இவைகள் மனைவிக்கு அதீனங்களாம். கார்யவசத்தால் வேறுதேசம் போகும் போது பார்யைக்கு வேண்டிய உதவியைச் செய்து விட்டுப் போகவேண்டும். அன்னவஸ்த்ரங்களில்லாது வருந்தினால், சீலமுள்ள ஸ்த்ரீயும் தோஷமுள்ளவளாவாள். அன்னவஸ்த்ராதி களுக்கு உபாயத்தைச் செய்து வைத்துத் தேசாந்தரத்திற்குப் பர்த்தா சென்றிருக்கும் போது, பத்னியானவள் பதிவ்ரதாதர்மத்துடன் வீட்டிலேயே இருக்க வேண்டும்.

प्रोषिते त्वविधायैव जीवेच्छिल्पैरगर्हितैः ॥ यदि स्वाश्च पराश्चैव विन्देरन् योषितो द्विजाः । तासां वर्णक्रमेण स्यात् ज्येष्ठ्यं पूजा च वेश्म(नि) च ॥ भर्तुः शरीरशुश्रूषां धर्मकार्यं च नैत्यकम् । स्वा स्वैव कुर्यात् सर्वेषां नासजातिः कथञ्चन ॥ यस्तु तत्कारयेन्मोहात् सजात्या स्थितयाऽन्यया । यथा ब्राह्मणचण्डालः पूर्वदृष्टः स एव सः ॥ तथा नित्यं यतेयातां स्त्रीपुंसौ तु कृतक्रियौ । यथा नातिचरेतां तौ वियुक्तावितरेतर'मिति ॥ दक्षः —

'गृहाश्रमात्परो नास्ति यदि भार्या वशानुगा । तया धर्मार्थकामाख्यं त्रिवर्गफलमश्नुते ।। आनुकूल्यं कलत्रस्य स्वर्गो भवति निश्चितम् । प्रातिकूल्यं कलत्रस्य नरको नास्ति संशयः ।। स्वर्गेऽपि दुर्लभं ह्येतदनुरागः परस्परम् । रक्तमेकं विरक्तं चेत्तस्मात् कष्टतरं नु किम् ।। गृहाश्रमसुखस्थस्य पत्नीमूलं हि तत्सुखम् । सा पत्नी या विधिज्ञा तु चित्तज्ञा वशवर्तिनी ।। दुःखान्तिकः कलिर्भेदः चित्तपीडा परस्परम् । प्रतिकूलकलत्रस्य द्विदारस्य विशेषतः ।। जलूकावत् स्त्रियस्सर्वा भूषणाच्छादनाशनैः ।। सुपूजिता सुखाढ्याऽपि पुरुषं ह्यपकर्षति । जलूका रक्तमादत्ते कवलं सा तपस्विनी । इतरा तु धनं चित्तं मांसं वीर्यं तथा सुखम् ।।

அன்ன வஸ்த்ரங்களுக்கு உபாயமில்லாவிடில் குற்றமற்ற சில்பங்களால் (நூல் நூற்பது முதலியவைகளால்) ஜீவிக்க வேண்டும். த்விஜர்கள் (மூன்று வர்ணத்தார்கள்) ஸ்வஜாதி ஸ்த்ரீகளையும், அன்யஜாதி ஸ்த்ரீகளையும் விவாஹம் செய்து கொண்டிருந்தால், அந்த ஸ்த்ரீகளுக்குள் ஜ்யைஷ்ட்யமும் (மூத்தவளென்ற நிலையும்) மர்யாதையும் வர்ணத்தின் க்ரமமாய் ஏற்படுகின்றது. பர்த்தாவின் சரீரத்திற்குப் பணிவிடை, ப்ரதிதினம் செய்யக் கூடிய தர்மகார்யம் இவைகளை ஸஜாதியான ஸ்த்ரீயே செய்ய வேண்டும். பின்ன ஜாதியான ஸ்த்ரீ செய்யக் கூடாது. ஸஜாதியான ஸ்த்ரீ ஸமீபத்திலிருந்தும் அவளை உபேக்ஷித்து மோஹத்தால் மாறுபட்டஜாதியான ஸ்த்ரீயினால் அவைகளைச் செய்வித்தவன் முன் சொல்லிய ப்ராமண சண்டாளன் போலாவான். (ப்ராமணியினிடத்தில் சூத்ரனுக்குப் பிறந்தவன் ப்ராமண சண்டாளன்) விவாஹமான ஸ்த்ரீபுருஷர்கள் (தம்பதிகள்) எவ்விதமிருந்தால், பரஸ்பரம் பிரிந்து தவறுநேராமலிருக்குமோ அவ்விதம் நடந்து கொள்ள வேண்டும். தக்ஷர் -பார்யையானவள் தனக்கதீனமாயிருந்தால் க்ருகஸ்தாஶ்ரமத்தைவிடச் சிறந்த ஆஶ்ரமம் வேறில்லை. க்ருஹஸ்தன் பார்யையினால் தர்மம்,

அர்த்தம், காமம் இவைகளை அடைகிறான். பார்யையின் ஆனுகூல்யமே ஸ்வர்க்கமென்பது நிச்சயம். களத்ரத்தின் ப்ரதிகூலத்தன்மை நரகம் என்பதில் ஸம்சயமில்லை. தம்பதிகளுக்குள் பரஸ்பரம் அனுராகமிருப்பதென்பது ஸ்வர்க்கத்திலும் துர்லபம். தம்பதிகளுள் ஒருவர் ஆசையுடனிருக்க மற்றொருவர் ஆசையில்லாமலிருந்தால் அதைவிடக் கஷ்டமெது இருக்கிறது? க்ருஹஸ்தாச்ரம ஸுகத்திலிருப்பவனின் ஸுகத்திற்குப் பத்னியே காரணம். க்ருஹாஸ்தாச்ரம ப்ரகாரங்களை அறிந்தவளும், பர்த்தாவின் மனதைஅறிந்தவளும்,அவனுக்கு அதீனமாயிருப்பவளுமே பத்னி எனப்படுவாள். களத்ரம் ப்ரதிகூலமாயுள்ளவனுக்கு துக்கத்துடன் சண்டை, விரோதம், பரஸ்பரம் மனவருத்தம் இவைகள் உண்டாகும். இரண்டு பத்னிகளை உடையவனுக்கு இவைகள் விசேஷமாயுண்டு. ஸ்த்ரீகள் எல்லோரும் அட்டைப்பூச்சியைப் போன்றவர்கள். ஸ்த்ரீயானவள் ஆபரணம், வஸ்தரம், ஆஹாரம், ஸுகம் இவைகளால் பூஜிக்கப்பட்டாலும் புருஷனைத் தாழ்ந்தவனுக்குவாள். அசடான அட்டை ரக்தத்தை மட்டில் க்ரஹிக்கின்றது. ஸ்த்ரீயோவெனில் தனம், மனம், மாம்ஸம், வீர்யம், ஸுகம் இவைகளை க்ரஹிக்கின்றாள்.

साशङ्का बालभावे तु यौवने विषयोन्मुखी । तृणवन्मन्यते पश्चाद्वृद्धभावे स्वकं पतिम् ।। अकार्ये वर्तमाना सा स्नेहेन न निवारिका । अवार्या तु भवेत् पश्चाद्यथा व्याधिरुपेक्षितः ।। अनुकूला सदा हृष्टा दक्षा साध्वी प्रजावती । एभिरेव गुणैर्युक्ता श्रीरेव स्त्री न संशयः ।।प्रहृष्टमानसा नित्यं स्थानमान-विचक्षणा । भर्तुः प्रियकरा या तु सा भार्या इतरा जरा ।।

பால்யத்தில் கூச்சமுள்ளவளாயும், யௌவனத்தில் விஷயஸுகத்தில் நோக்கமுள்ளவளாயும் இருந்தவள் முதுமையில் பர்த்தாவை த்ருணம் போல் நினைக்கிறாள். அகார்யத்தில் ப்ரவர்த்திக்கும் போதே அவளை ஸ்னேஹத்தால் தடுக்காமலிருந்து விட்டால், பிறகு அவள் தடுப்பதற்கு முடியாதவளாவாள்; உபேக்ஷிக்கப்பட்ட

வ்யாதிபோல். எப்பொழுதும் அனுகூலையாயும், ஸந்தோஷமுள்ளவளாயும், ஸமர்த்தையாயும், பதி வ்ரதையும், ப்ரஜைகளையுடைவளாயும் உள்ள ஸ்த்ரீ ஸ்ரீயே ஆவாள். எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவளும் ஸ்தானம் ஸம்மானம் இவைகளில் ஸமர்த்தையாயும், பர்த்தாவுக்கு ப்ரியத்தைச் செய்பவளாயுமுள்ளவளே ஜாயை; இவ்விதமில்லாதவள் ஜரை (முதுமை).

अदुष्टां विनतां भार्यां यौवने यः परित्यजेत्। सप्तजन्म भवेत् स्त्रीत्वं वैधव्यं च पुनः पुनः ॥ दरिद्रं व्याधितं मूर्खं भर्तारं याऽवमनन्यते सा। मृता जायते स्त्री श्वा सूकरी च पुनः पुनः ॥ जीवे भर्तरि या नारी उपोष्य व्रतचारिणी। आयुष्यं हरते भर्तुः सा नारी नरकं व्रजेत् ॥ शिष्यभार्याशिशु-भ्रातृमित्रदाससमाश्रिताः। यस्यैतानि विनीतानि तस्य लोकेऽपि गौरवमिति।

தோஷமில்லாதவளும், வணக்கமுள்ளவளுமான பார்யையை யௌவனத்தில் பரித்யாகம் செய்த பர்த்தாவுக்கு ஏழு ஜன்மங்களில் ஸ்த்ரீத்வமும் வைதவ்ய மும் உண்டாகும். தரித்ரனும், வ்யாதியுள்ளவனும், மூர்க்கனுமான பர்த்தாவை அவமதித்த பார்யை, இறந்த பிறகு நாயாகவும், பன்றியாகவும் அடிக்கடி பிறப்பாள். பர்த்தா ஜீவித்திருக்கும் பொழுது உபவாஸமிருந்து வ்ரதத்தை அனுஷ்டிக்கும் ஸ்த்ரீயானவள் பர்த்தாவின் ஆயுஸ்ஸை அபஹரிக்கின்றாள். அவள் நரகத்தை அடைவாள். எவனுடைய சிஷ்யன், பார்யை, குழந்தை, ப்ராதா, மித்ரன், தாஸன், ஆச்ரிதன் (அண்டியவன்) என்ற இவர்கள் வணக்கமுடையவர்களாய் இருக்கின்றனரோ அவனுக்கு உலகத்திலும் கௌரவம் ஏற்படுகின்றது.

याज्ञवल्क्यः — 'मृते जीवति वा पत्यौ या नान्यमुपगच्छति। सेह कीर्तिमवाप्नोति मोदते चोमया सह॥ स्त्रीभिर्भर्तृवचः कार्यमेष धर्मः परः स्त्रियाः। आशुद्धेः सम्प्रतीक्ष्यो हि महापातकदूषितः॥ भर्तृभ्रातृपितृज्ञातिश्वश्रूश्वशुरदेवरैः।

बन्धुभिश्च स्त्रियः पूज्या भूषणाच्छादनाशनैः ।। संयतोपस्करा दक्षा हृष्टा व्ययपराङ्मुखी । कुर्याच्छ्वशुरयोः पादवन्दनं भर्तृतत्परा' इति ।। संयतोपस्करा - स्वस्थाननिवेशितदृषदुपलोलूखलादिगृहोपकरणवर्गा ।।

யாக்ஞவல்க்யர் - *பர்த்தா ஜீவித்திருக்கையிலும், இறந்த பிறகும், பரபுருஷர்களை அடையாமலிருக்கும் பெண் இவ்வுலகில் கீர்த்தியை அடைவாள், பரலோகத்தில் பார்வதியுடன் ஸந்தோஷிப்பாள். ஸ்த்ரீகள் பர்த்தாவின் வார்த்தைப் படி நடக்க வேண்டும். இதுவே ஸ்த்ரீகளுக்குச் சிறந்த தர்மம். மகாபாதகங்களால் தூஷிதனான பர்த்தாவை சுத்தனாகி வரும் வரையில் ப்ரதீக்ஷிக்க வேண்டும். பர்த்தா, ப்ராதா, பிதா, ஞாதிகள், மாமியார், மாமனார், மைத்துனன், பந்துக்கள் இவர்களால், ஆபரணம், வஸ்த்ரம், போஜனம் இவைகளால் ஸ்த்ரீகள் சிறப்பிக்கப்பட வேண்டும். வீட்டிலுள்ள பண்டங்களை அந்தந்த ஸ்தானத்தில் வைப்பவளாயும், ஸமர்த்தையாயும், ஸந்துஷ்டையாயும், வீண்செலவு செய்யாதவளாயும், பர்த்தாவுக்கு அதீனையாயும் இருந்து, பர்த்தாவின் மாதாபிதாக்களுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும்.*

प्रोषिते भर्तरि तया कर्तव्यमाह स एव — 'क्रीडां शरीरसंस्कारं समाजोत्सवदर्शनम् । हास्यं परगृहे यानं त्यजेत् प्रोषितभर्तृका ।। रक्षेत् कन्यां पिता विन्नां पतिः पुत्रस्तु वार्धके । अभावे ज्ञातयस्तेषां स्वातन्त्र्यं न क्वचित् स्त्रियाः ।। पतिप्रियहिते युक्ता स्वाचारा विजितेन्द्रिया । इह कीर्तिमवाप्नोति प्रेत्य चानुत्तमां गतिम् ।।

*பர்த்தாவின் பரதேசவாஸத்தில், விளையாட்டு, சரீரத்தைத் தேய்த்துக் குளித்தல், ஜனக்கூட்டம், உத்ஸவம் இவைகளைப் பார்ப்பது, சிரிப்பு, பிறர்வீட்டிற்குச் செல்லுதல் இவைகளை விடவேண்டும். பால்யத்தில் பிதாவும், யௌவனத்தில் பதியும், வார்த்தகத்தில் புத்ரனும், இவர்களில்லாவிடில் ஞாதிகளும் ஸ்த்ரீயை*

ரக்ஷிக்க வேண்டும். அவளுக்கு எப்பொழுதும் ஸ்வாதந்த்ரியமில்லை. பதிக்குப்ரியமாயும் ஹிதமா யுள்ளதைச் செய்பவளும், நல்ல ஆசாரமுடையவளும், இந்த்ரியங்களை ஜயித்தவளுமான ஸ்த்ரீ இவ்வுலகில் கீர்த்தியையும், இறந்தபிறகு சிறந்த ஸ்தானத்தையும் அடைவாள்.

सत्यामन्यां सवर्णायां धर्मकार्यं न कारयेत्। सवर्णासु विधौ धर्म्ये ज्येष्ठया न विनेतरेति ।। सत्यां सवर्णायां असवर्णा नैव धर्मकार्यं कारयेत्। सवर्णास्वपि बह्वीषु धर्म्ये विधौ धर्मानुष्ठाने ज्येष्ठया विना - ज्येष्ठां मुक्त्वा इतरा-मध्यमा कनिष्ठा वा न नियोक्तव्येत्यर्थः ।।

ஸவர்ணையான பார்யை இருக்கும் பொழுது, அஸவர்ணையினால் தர்மகார்யத்தைச் செய்விக்கக் கூடாது. ஸவர்ணைகள் அநேகர்களிருந்தால் ஜ்யேஷ்டையைத் தவிர மற்றவளைக் கொண்டு தர்மகார்யத்தைச் செய்விக்கக் கூடாது.

शङ्खः - 'नानुक्त्वा गृहान्निर्गच्छेन्नानुत्तरीया न त्वरिता व्रजेन्न परपुरुषमभिभाषेतान्यत्र वणिक्प्रव्रजितवृद्धवैद्येभ्यो न नाभिं दर्शयेदागुल्फाद्वासः परिदध्यान्न स्तनौ विवृतौ कुर्यान्न हसेदप्रावृता भर्तारं तद्बन्धून् वा न द्विष्यान्न गणिकाधूर्ताभिसारिणीप्रव्रजिताप्रेक्षणिका मायाकुहककारिकादुः शीलादिभिः सहैकत्र तिष्ठेत् संसर्गेण चारित्रं दुष्यतीति।

சங்கர் - சொல்லாமல் வீட்டிற்கு வெளியில் போகக் கூடாது. உத்தரீயமில்லாமலிருக்கக் கூடாது. வேகமாய் நடக்கக் கூடாது. வ்யாபாரி, ஸந்யாஸி, கிழவன், வைத்யன் இவர்களைத் தவிர்த்து மற்ற பரபுருஷர்களுடன் பேசக் கூடாது. நாபியைக் காண்பிக்கக் கூடாது. வஸ்த்ரத்தைக் கணுக்கால் வரையில் தரிக்க வேண்டும். ஸ்தனங்களை ப்ரகாசப்படுத்தக் கூடாது. வாயை மூடாமல் சிரிக்கக் கூடாது. பர்த்தாவையும் அவன் பந்துக்களையும் த்வேஷிக்கக்

கூடாது. வேசி, துஷ்டை, அபிஸாரிணீ, ஸந்யாஸினீ, சோதிடம் அறிந்தவள், கபடம் செய்பவள், வஞ்சனை செய்பவள், கெட்ட நடவடிக்கை உள்ளவள் இவர்களுடன் ஒரே இடத்தில் இருக்கக் கூடாது. ஸஹவாஸத்தால் நல்ல சீலம் கெட்டுவிடும்.

पराशरः — 'दरिद्रं व्याधितं मूर्खं भर्तारं याऽवमन्यते । सा शुनी जायते मृत्वा सूकरी च पुनः पुनः ।। पत्यौ जीवति या नारी उपोष्य व्रतमाचरेत् । आयुष्यं हरते भर्तुः सा नारी नरकं व्रजेत् । अपृष्ट्वा चैव भर्तारं या नारी कुरुते व्रतम् । सर्वं तद्राक्षसान् गच्छेदित्येवं मनुरब्रवीत् ।।

பராசரர் - தரித்ரனும், வ்யாதியுள்ளவனும், மூர்க்கனுமான பதியை அவமதிப்பவள் மறு பிறப்பில் நாயாகவும், பன்றியாகவும் அநேகம் தடவை பிறப்பாள். பதி ஜீவனுடனிருக்கும் பொழுது உபவாஸம் செய்து வ்ரதத்தை அனுஷ்டிப்பவள் பர்த்தாவின் ஆயுஸ்ஸைக் குறைக்கின்றாள்; நரகத்தையும் அடைவாள். பர்த்தாவின் உத்தரவின்றிச் செய்யப்படும் வ்ரதமெல்லாம் ராக்ஷஸர்களை அடையும் என்று மனு சொன்னார்.

नार्चाजपतपोहोमदानव्रतमखादयः । स्त्रीणां पतिव्रतानां च पत्यौ जीवति किञ्चन ।। तदाज्ञया तु कर्तव्यमकार्यमपि चेत्तया ।। पत्युरप्यवलिप्तस्य कार्याकार्यमजानतः । पत्न्याऽप्याज्ञा तु कर्तव्या पतितस्य तु सर्वदे त्याश्वलायनः ।। बान्धवानां स्वजातीनां दुर्वृत्तं कुरुते तु या । गर्भपातं च या कुर्यान्न तां सम्भाषयेत् क्वचित् ।। यत्पापं ब्रह्महत्यायां द्विगुणं गर्भपातने । प्रायश्चित्तं न तस्यास्ति तस्यास्त्यागो विधीयते इति ।।

தெய்வவழிபாடு, ஜபம், தவம், ஹோமம், தானம், விரதம், வேள்வி, முதலியவை கணவன் உயிருடனுள்ள போது தனித்துப் பெண் செய்வதில்லை எதனையும் அவரது ஆணையிருந்தால் செய்யலாம். திமிரால் செய்வதைப் புரிந்துகொள்ளாத நிலையிலும் கணவனின் ஆணை ஏற்கத்தக்கதே என்பார் ஆச்வலாயனர். பந்துக்களுக்கும்,

ஸஜாதிகளுக்கும் கெடுதியைச் செய்பவளுடனும், கர்ப்பத்தை கலைத்தவளுடனும் ஸம்பாஷணம் செய்யக் கூடாது. ப்ரம்மஹத்தியை விட இரண்டு மடங்கு பாபம் கர்ப்பஹத்தியிலுண்டு. அதற்கு ப்ராயச்சித்தம் கிடையாது. கர்ப்பஹிம்ஸை செய்தவளை விலக்க வேண்டும்.

मार्कण्डेयः — 'नारी खल्वननुज्ञाता पित्रा भर्त्रा सुतेन वा। निष्फलं तु भवेत्तस्या यत्करोति व्रतादिकमिति ॥ कात्यायनः — 'भार्या भर्तुर्मतेनैव व्रतादीनि चरेदितीति ॥ महाभारतेऽपि पतिशुश्रूषणपराया उत्तमां गतिमुक्त्वा व्रतादिपराया अन्यस्या भार्यायास्तदभावं ज्ञापयितु मुदाहृतम् — 'यमोऽथ लोकपालस्तु बभाषे पुष्कलं वचः। मा शोचस्त्वं निवर्तस्व न लोकाः सन्ति तेऽनघे ॥ स्वधर्मविमुखा नित्यं कथं लोकान् गमिष्यसि। दैवतं हि पतिर्नार्याः स्थापितः सर्वदैवतैः ॥ मोहेन त्वं वरारोहे न जानीषे स्वदैवतम्। पतिमत्याः स्त्रिया लोके धर्मः पत्यर्चनं त्विति इति ॥

மார்க்கண்டேயர் - பிதா, பர்த்தா, புத்ரன் இவர்களில் ஒருவருடைய அனுமதியின்றி ஸ்த்ரீ செய்யும் வ்ரதம் முதலியவை நிஷ்பலமாகும். காத்யாயனர் - பார்யை, பர்த்தாவின் உத்தரவினுலேயே வ்ரதம் முதலியவைகளைச் செய்யவேண்டும். மஹாபாரதத்தில் பதிசுப்ரூஷை செய்தவளுக்குச் சிறந்த கதியைச் சொல்லி, அவ்விதமில்லாமல் வ்ரதங்களை மட்டில் அனுஷ்டித்து வந்த மற்றவளுக்கு நற்கதியில்லை என்பதைத் தெரிவிக்க இவ்விதம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது - "லோகபாலனுன யமன் பிறகு இவ்வார்த்தையைச் சொன்னுன். குற்றமற்றவளே! வருந்தாதே. திரும்பிச்செல். உனக்குப் புண்யலோகங்கள் இல்லை. எப்பொழுதும் ஸ்வதர்மத்தில் பராமுகியான நீ எப்படிப் புண்யலோகங்களை அடைவாய்? ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவே தைவமென்று ஸகல தேவர்களாலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. பெண்ணே! மோஹத்தால் நீ உனது தேவதையை அறியவில்லை. உலகில் பதியுள்ள ஸ்த்ரீக்குப் பதிபூஜையே தர்மமாகும்" என்று

मनुरपि — 'नास्ति स्त्रीणां पृथग्यज्ञो न व्रतं नाप्युपोषणम् । पतिं शुश्रूषते यत्तु तेन स्वर्गे महीयते ॥ अनृतावृतुकाले च मन्त्रसंस्कारकृत्पतिः। सुखस्य नित्यं दातेह परलोके च योषितः ॥ अशीलः कामवृत्तो वा गुणैर्वा परिवर्जितः । न स्त्रियाः परिवर्ज्यः स्यात् सततं दैववत् पतिः ॥ पाणि ग्राहस्य साध्वी स्त्री जीवतो वा मृतस्य वा । पतिलोकमभीप्सन्ती नाचरेत् किञ्चिदप्रियम् ॥ बालया वा युवत्या वा वृद्धया वापि योषिता । न स्वातन्त्र्येण कर्तव्यं कार्यं किञ्चिद्गृहेष्वपि ॥ बाल्ये पितुर्वशे तिष्ठेत् पाणिग्राहस्य यौवने । पुत्राणां भर्तरि प्रेते न भजेत स्वतन्त्रताम् ॥ पित्रा भ्रात्रा सुतैर्वाऽपि नेच्छे द्विरहमात्मनः । एषां हि विरहेण स्त्री हीने कुर्यादुभे कुले ॥ सदा प्रहृष्टया भाव्यं गृहकार्ये च दक्षया । सुसंस्कृतोपस्करया व्यये चामुक्तहस्तयेति ॥

மனுவும் - *ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவின்றித் தனியாக யாகம், வ்ரதம், உபவாஸம் ஒன்றுமில்லை. பர்த்தாவின் பணிவிடையினாலேயே ஸ்வர்க்கத்தில் சிறப்பை அடைகிறாள். ருதுகாலத்திலும் மற்றக்காலத்திலும், இவ்வுலகிலும், பரலோகத்திலும் ஸ்த்ரீக்கு ஸுகத்தைக் கொடுப்பவன் பாணிக்ரஹணம் செய்த பர்த்தாவே ஆவான். துச்சீலனாயினும் வேறு ஸ்த்ரீயினிடம் ஆசையுள்ளவனாயினும், குணங்களற்றவனாயினும், பதியை ஸ்த்ரீ தைவம் போல் பாவிக்க வேண்டும்; தள்ளக்கூடாது. பதியுடன் சேர்ந்து செய்த புண்யத்தால் அடையக்கூடிய லோகத்தை விரும்பிய ஸ்த்ரீ பதி ஜீவித்திருக்கும் பொழுதும், இறந்த பிறகும், அவனுக்கு அப்ரியமான கார்யம் எதையும் செய்யக் கூடாது. பால்யத்திலும், யௌவனத்திலும், வார்த்தகத்திலும், தன்வீட்டிலும் ஸ்வதந்த்ரமாய் எக்கார்யத்தையும் ஸ்த்ரீ செய்யக் கூடாது. பால்யத்தில் பிதாவின் வசத்திலும், யௌவனத்தில் பர்த்தாவின் வசத்திலும், பர்த்தா இறந்தால் புத்ரர்கள் வசத்திலும் ஸ்த்ரீ இருக்க வேண்டும். ஸ்வதந்த்ரையாய் இருக்கக் கூடாது. பிதா, அல்லது ப்ராதா, பிள்ளைகள்*

இவர்களை விட்டுப் பிரிந்திருக்க ஆசைகொள்ளக்கூடாது. இவர்களை விட்டுப்பிரிந்தால் ஸ்த்ரீ இருகுலங்களுக்கும் தாழ்வை உண்டாக்குவாள். எப்பொழுதும் ஸந்தோஷ முடையவளும், வீட்டுக்கார்யங்களில் ஸமர்த்தையும், பாத்ரம் முதலியவைகளைச் சுத்தமாய் வைப்பவளும், அதிகச்செலவு செய்யாதவளுமாய் ஸ்த்ரீ இருக்க வேண்டும்.

कात्यायनः— 'अग्निहोत्रादिशुश्रूषां बहुभार्यः सवर्णया । कारयेत्तद्बहुत्वेन च ज्येष्ठया गर्हिता न चेत् ।। या वा स्याद्वीरसूरा सामाज्ञासम्पादनी च या । दक्षा प्रियंवदा शुद्धा तामत्र विनियोजयेत् ।। दिनक्रमेण वा कर्म यथा ज्यैष्ठ्यमशक्तितः । विभज्य सह वा कुर्युर्यथाज्ञानम-शक्तितः इति ।।

காத்யாயனர் - அநேகம் பார்யைகளையுடையவன் ஸவர்ணையான பார்யையைக் கொண்டு அக்னிஹோத்ராதிகளுக்குச் சுப்ரூஷையைச் செய்விக்க வேண்டும். ஸவர்ணைகள் அநேகர்களிருந்தால் குற்றமற்றவளான மூத்தவளைக் கொண்டு செய்விக்க வேண்டும். அல்லது சிறந்தபிள்ளையைப் பெற்றவளையாவது, தன் கட்டளையை நடத்துபவளாயும், ஸமர்த்தையாயும், ப்ரியமாய்ப் பேசுபவளாயும் சுத்தமாயுமுள்ளவளையாவது செய்விக்கலாம். சக்தியில்லாவிடில் ஜ்யேஷ்டைக்ரமமாய் ஒவ்வொருநாள் ஒருவரைச் செய்யச் சொல்லலாம். அதிலும் சக்தியில்லாவிடில் தனியாகவோ சேர்ந்தோ தெரிந்தபடி அவர்கள் செய்ய வேண்டும்.

धर्मसारे — 'यद्गृहे कलहो नास्ति पूज्यन्ते यद्गृहे स्थिताः । तद्गृहे वसते लक्ष्मीर्नित्यं पूर्णकलान्वितेति ।। व्यासः — 'कुरूपो वा कुवृत्तो वा दुःस्वभावोऽथवा पतिः । रोगान्वितः पिशाचो वा मद्यपः क्रोधनोऽपि वा। वृद्धो वाऽथाविदग्धो वा मूकोऽन्धो बधिरोऽपि वा ।। कातरः कितवो वाऽपि ललनालम्पटोऽपि वा । सततं देववत् पूज्यः साध्व्या वाक्कायकर्मभिः। अहङ्कारं

विहायाथ कामक्रोधौ च सर्वदा । मनसो रञ्जनं पत्युः कार्यमन्यस्य वर्जनमिति ॥

தர்மஸாரத்தில் - எவன் வீட்டில் சண்டையில்லையோ, எவன் வீட்டிலுள்ளவர்கள் மதிக்கப்படுகின்றார்களோ அவன் வீட்டில், லக்ஷ்மியானவள் எல்லாக் கலைகளுடன் வஸிக்கின்றாள். வ்யாஸர் - தன்பதி குரூபன், அல்லது கெட்ட நடத்தை யுடையவன், துஷ்டஸ்வபாவன், பிணியுள்ளவன், பிசாசன், கள்குடிப்பவன், கோபிஷ்டன், கிழவன், மூர்க்கன், ஊமை, குருடு, செவிடு, உக்ரன், தரித்ரன், க்ருபணன், இழிவானவன், பயமுள்ளவன், சூதாடுவோன், ஸ்த்ரீலோலன் ஆனாலும், பதிவ்ரதையா யிருப்பவள் அவனை எப்பொழுதும் மனம் வாக்கு காயம் என்ற முக்கரணங்களாலும் தேவனைப் போல் பூஜிக்க வேண்டும். காமம், க்ரோதம், அஹங்காரம் இவைகளை விட்டுப் பதியின் மனதையே ஸந்தோஷப்படுத்த வேண்டும். மற்றதை விடவேண்டும்.

रत्नावल्याम् — 'न पिता नात्मजो नात्मा न माता न सहृज्जनः । गतिर्भवति च स्त्रीणां पतिस्त्वेकः परा गति'रिति ॥ व्यासः — 'द्वारोपवेशनं नित्यं गवाक्षावेक्षणं तथा । असत्प्रलापो हास्यं च दूषणं कुलयोषिताम् ॥ सकामं वीक्षिताऽप्यन्यैः प्रियैर्वाक्यैः प्रलोभिता । स्पृष्टा वा जनसंमर्दे न विकारमुपैति या ॥ पुरुषं सेवते नान्यं मनोवाक्कायकर्मभिः । लोभिताऽपि परेणार्थै सा सती लोकभूषणम् । दैन्येन प्रार्थिता वाऽपि बलेन विधृताऽपि वा । वस्त्राद्यैर्वासिता वाऽपि नैवान्यं भजते सती ॥ वीक्षिता वीक्षते नान्यं हसिता न हसत्यपि । भाषिता भाषते नैव सा साध्वी साधुलक्षणा ॥

ரத்னாவளியில் - ஸ்த்ரீகளுக்குப் பதியொருவனே சிறந்தகதியாவான்; பிதா, பிள்ளை, தனது சரீரம், மாதா, ஸகிஜனம் இவர்களுள் ஒருவரும் கதியாகார். வ்யாஸர் - வாயிலில் உட்கார்தல், ஜன்னலின் வழியாய் வெளியில் நோக்குதல், கெட்டவார்த்தை, சிரிப்பு இவைகள்

குலஸ்த்ரீகளுக்குத் தூஷணங்களாம். அன்னியர்களால் ஆசையுடன் பார்க்கப்படினும், ப்ரியமான வசனங்களால் ஆசைகாட்டப்படினும், ஜனக்கூட்டத்தில் தொடப் பட்டாலும் விகாரமடையாதவள் எவளோ, இதரனால் பண விஷயத்தில் ஆசைகாட்டப்பட்டவளாயினும் முக்கரணங் களாலும் பரபுருஷனை விரும்பாத அந்தப் பதிவ்ரதை உலகத்திற்குப் பூஷணமாவாள். ஏழ்மையுடன் ப்ரார்த்திக்கப்பட்டாலும், பலாத்காரமாய் பிடிக்கப் பட்டாலும், ஆடை முதலியவைகளால் போற்றப் பட்டாலும், பிறனை அடையாதவள் பதிவ்ரதையாம். எவள் பிறனால் பார்க்கப்பட்டாலும்அவனைப்பாராமலும், சிரிக்கப்பட்டாலும் சிரிக்காமலும், பேசப்பட்டாலும் பேசாமலும் இருப்பாளோ அவள் பதிவ்ரதை எனப்படுவாள்.

रूपयौवनयुक्ताऽपि गीतनृत्तेऽपि कोविदा । स्वानुरूपं नरं दृष्ट्वा न याति विकृतिं सती ।। सुरूपं तरुणं रम्यं कामिनीनां च वल्लभम् । या नेच्छति परं कान्तं विज्ञेया सा महासती ।। भुक्ते भुङ्क्तेऽथ या पत्यौ दुःखिते दुःखिता च या । मुदिते मुदिताऽत्यर्थं प्रोषिते मलिनाम्बरा ।। सुप्ते पश्चाच्च या शेते पूर्वमेव प्रबुध्यते । नान्यं कामयते चित्ते सा विज्ञेया पतिव्रता ।।

ரூபம் யௌவனம் இவைகளுடன் கூடினவளா யினும், கானமும் நர்த்தனமும் தெரிந்தவளாயினும், தனக்குச்சமானனான புருஷனைக் கண்டு மனதில் விகாரமடையாதவள் பதிவ்ரதை. ரூபம் யௌவனம் அழகு இவைகள் பொருந்திக் காமினிகள் விரும்பக் கூடியவனான அன்யபுருஷனை விரும்பாதவள் மஹாபதிவ்ரதை. தன் பதி புஜித்த பிறகு புஜிப்பவளும், துக்கித்தால் துக்கிப்பவளும், களிப்புற்றால் களிப்புள்ளவளும், தேசாந்தரம் சென்றிருக்கும் பொழுது அழுக்காடை உடையவளும், தூங்கியபிறகு தூங்குகின்றவளும் பதிக்கு முன்பே விழித்துக் கொள்பவளும், அன்யனைச் சித்தத்திலும் நினையாதவளுமானவள் பதிவ்ரதை என்றறியத் தகுந்தவள்.

भक्तिं श्वशुरयोः कुर्यात् पत्युश्चापि विशेषतः । धर्मकार्यानुकूलत्वमर्थ-कार्येषु संयमम् ।। प्रागल्भ्यं कामकार्येषु शुचित्वं निजविग्रहे । मङ्गलं संमतं पत्युः सततं प्रियभाषणम् ।। भाव्यं मङ्गलकारिण्या गृहमण्डनशीलया । गृहोपस्करसंस्कारतज्ज्ञया प्रतिवासरम् ।। क्षेत्राद्वनाद्वा ग्रामाद्वा भर्तारं गृहमागतम् । प्रत्युत्थायाभिनन्देच्च स्वासनेनोदकेन च ।।

*மாமியார் மாமனூர் இவர்களிடம் பக்தியைச் செய்ய வேண்டும். பர்த்தாவின் தர்மகார்யங்களுக்கு ஆனுகூல்யம் செய்ய வேண்டும். பணத்தில் அதிகச்செலவு செய்யாமலிருக்க வேண்டும். காமகார்யங்களில் தைர்யமுள்ளவளாக வேண்டும். தன் சரீரத்தில் சுத்தையாயிருக்க வேண்டும். மங்களமான கார்யங்களைச் செய்ய வேண்டும். பர்த்தாவிடம் ப்ரியமான வார்த்தையையே எப்பொழுதும் பேசவேண்டும். சுபமான கார்யங்களைச்செய்பவளாயும், வீட்டை அலங்கரிப்பவளாயும், வீட்டிலுள்ள பண்டங்களைச் செய்பவளாயும், வீட்டை அலங்கரிப்பவளாயும், வீட்டிலுள்ள பண்டங்களைச் சுத்தமாய் வைத்துக் கொள்ள அறிந்தவளாயும் இருக்க வேண்டும். வயலிலிருந்தாவது வனத்திலிருந்தாவது க்ராமத்திலிருந்தாவது திரும்பிவந்த பர்த்தாவை எழுந்து எதிரில் சென்று நல்வார்த்தையால் உபசரித்து மணையில் உட்கார்த்திக் கால் கழுவுதற்கு ஜலம் கொடுத்துச் சந்தோஷப்படுத்த வேண்டும்.*

प्रसन्नभाण्डमृष्टान्ना काले भोजनदायिनी । संयता गुप्तधान्या च सुसंमृष्टनिवेशना ।। गुरूणां पुत्रमित्राणां बन्धूनां कर्मकारिणाम् । आहूतानां च भृत्यानां दासीदासजनस्य च ।। अतिथ्यभ्यागतानां च भिक्षुकाणां च लिङ्गिनाम् । आसने भोजने दाने संमाने प्रियभाषणे । तत्तद्गुणानुसारेण प्राप्ते काले यथोचितम् । दक्षया सर्वदा भाव्यं भार्यया गृहमुख्यया ।। गृहव्ययाय यद्द्रव्यं दिशेत् पत्न्याः करे पतिः । निर्वर्त्य गृहकार्यं सा किञ्चिद्बुद्ध्याऽव-शेषयेत् । दानार्थमर्पिते द्रव्ये लोभात् किञ्चिन्न धारयेत् ।।

*பாத்ரங்களைச் சுத்தமாய் வைப்பவளாய், குறைவற்ற அன்னமுடையவளாய், காலத்தில் போஜநமளிப்பவளாய், அடக்கமுள்ளவளாய், தான்யங்களை ரக்ஷிப்பவளாய், வீட்டைச் சுத்தமாய்ச் செய்பவளாய் குரு, புத்ரர்கள், மித்ரர்கள், பந்துக்கள், கூலியாட்கள், வேலைக்காரர்கள், வேலைக்காரிகள், தாஸர்கள், அதிதிகள், விருந்தினர்கள், பிக்ஷுகர்கள், ஸன்யாஸிகள் இவர்களுக்குத் தகுந்தபடி ஆஸனம், போஜனம், தானம், ஸம்மானம், நல்வார்த்தை இவைகளை ஸமயத்தில் கொடுப்பதில் ஸமர்த்தையாய் இருக்க வேண்டும். வீட்டுச் செலவிற்காகப் பதியால் தன்னிடம் கொடுக்கப்பட்ட பணத்தை முழுவதும் செலவிடாமல் தன் புத்தியால் கொஞ்சம் மீதி வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் தானத்திற்காகக் கொடுக்கப்பட்ட பணத்தில் மிச்சம் வைத்துக் கொள்ளக் கூடாது.*

भर्तुराज्ञां विना नैव स्वबन्धुभ्यो दिशेद्धनम् ।। अत्यालापमसन्तोषं परव्यापारसङ्गताम् । अतिहासातिरोषौ च क्रोधस्थानं च वर्जयेत् ।। यच्च भर्ता न पिबति यच्च भर्ता न खादति ।। यच्च भर्ता न चाश्नाति सर्वं तद्वर्जयेत् सती ।। तैलाभ्यङ्गं तथा स्नानं शरीरोद्वर्तनक्रियाम् । मार्जनं चैव दन्ताना मलकानां च कर्तनम् ।। भोजनं वमनं निद्रां परिधानं च वाससाम् । प्रारम्भं मण्डनानां च न कुर्यात् पश्यति प्रिये । आहूता या तु वै भर्त्रा स्त्री न याति त्वरान्विता। सा ध्वाङ्क्षी जायते नूनं दशजन्मानि पञ्च च ।। कामाद्रोषान्मत्सराद्वा भर्तारं याऽवमन्यते । सा सप्तजन्मकं यावन्नारकी स्यान्न संशय इति ।।

*பர்த்தாவின் உத்தரவின்றித் தன் பந்துக்களுக்குப் பணத்தைக் கொடுக்கக் கூடாது. அதிகப்பேச்சு, ஸந்தோஷமின்மை, பிறர் கார்யங்களில் பற்றுவைத்தல், அதிகமான சிரிப்பு, அதிகமான கோபம், கோபத்திற்குப் காரணம் இவைகளை வர்ஜிக்க வேண்டும். பர்த்தாவுக்கு ருசிக்காத பானம், பக்ஷ்யம், ஆஹாரம் இவைகளைப் பதிவ்ரதை தானும் தவிர்க்க வேண்டும். எண்ணெய்*

தேய்த்துக் கொள்ளல், ஸ்நானம், உடம்பில் அழுக்குத் தேய்த்தல், பல்துலக்குதல், மயிர்களை வகுத்தல், போஜனம், வாந்தி, தூக்கம், வஸ்த்ரம் தரித்தல், ஆபரணமணிதல் இவைகளைப் பர்த்தா பார்க்கும் பொழுது செய்யக் கூடாது. பர்த்தாவினால் அழைக்கப்பட்ட உடன் வேகமாய் எவள் வருகிறதில்லையோ அவள் பதினைந்து ஜன்மம் காக்கையாய்ப் பிறப்பாள். காமத்தினாலோ, கோபத்தினாலோ, மாத்ஸர்யத்தினாலோ பர்த்தாவை அவமதித்தவள் ஏழு ஜன்மம் வரை நரகத்தை அடைவாள்.

अत्रिः — 'न व्रतेनोपवासेन धर्म्येण विधिना न च । नारी स्वर्गमवाप्नोति प्राप्नोति पतिपूजनात् । जीवितेनाथ वित्तेन भर्तारं वञ्चयेत या। क्रिमियोनिशतं गत्वा पुल्कसी जायते ततः ॥ जपस्तपस्तीर्थसेवा प्रव्रज्या मन्त्रसाधनम् । देवताराधनं चैव स्त्रीशूद्रपतनानि षडिति ॥

அத்ரி - வ்ரதம், உபவாஸம், தர்ம்யமான கார்யம் இவைகளால் ஸ்த்ரீ ஸ்வர்க்கத்தை அடையமுடியாது; பதிபூஜையினால் தான் அடையமுடியும். தன் ப்ராணனாலோ, பணத்தாலோ பதியை வஞ்சிப்பவள், புழுவாய்ப் பலதடவை பிறந்த பிறகு சண்டாளியாய்ப் பிறப்பாள். ஜபம், தவம், தீர்த்தாடனம், ஸன்யாஸம், மந்த்ராவ்ருத்தி, தேவதாராதனம் இவ்வாறும் ஸ்த்ரீகளுக்கும் சூத்ரர்களுக்கும் பாதித்யத்திற்குக் காரணங்களாகும்.

व्यासः — 'हरिद्रां कुङ्कुमं चैव सिन्दूरं कज्जलं तथा । कूर्पासकं च ताम्बूलं मङ्गल्याभरणं शुभम् ॥ केशसंस्कारकबरीकरकर्णादिभूषणम् । भर्तुरायुष्यमिच्छन्ती दूषयेन्न पतिव्रता ॥ प्रातःकाले तु या नारी दद्यादर्घ्यं विवस्वते । सप्तजन्मानि वैधव्यं सा नारी नैव पश्यति ॥ कृत्वा मण्डलकं बाह्ये तूष्णीमेवाक्षतादिभिः । पूजयेत् सततं या तु तस्यास्तुष्यन्ति देवताः। यद्गृहं राजते नित्यं मङ्गलैरनुलेपनैः । तद्गृहे वसते लक्ष्मीर्नित्यं पूर्णकलान्विता ।

न ददाति तु या नारी ज्येष्ठायै प्रत्यहं बलिम्। भोज्यादन्नाद्यथाशक्ति सा प्रेत्य नरकं व्रजेत्॥ अवश्यमेव नारीभिर्ज्येष्ठायै बलिकर्मणा। प्रीणनं प्रत्यहं कार्यं पुत्रपौत्रधनेप्सुभिरिति॥

வ்யாஸர் - மஞ்சள், குங்குமம், ஸிந்தூரம், மை, கஞ்சுகம், தாம்பூலம், மங்களாபரணம், மயிர் வாரிமுடித்தல், கை, காது இவைகளின் ஆபரணங்கள் இவைகளைப் பர்த்தாவின் ஆயுளை விரும்பும் பதிவ்ரதை வெறுக்கக் கூடாது காலையில் ஸூர்யனின் பொருட்டு அர்க்யம் கொடுப்பவள் ஏழு ஜன்மங்களில் வைதவ்யத்தை அடையாள். வெளியில் பூமியில் மண்டலம் செய்து அதில் மந்த்ரமில்லாமல் அக்ஷதை முதலியவைகளால் பூஜிப்பவளிடத்தில் தேவதைகள் ஸந்தோஷமடைகின்றனர். எந்தக்ருஹமானது மங்களவஸ்துக்களாலும் மெழுகுவதினாலும் ப்ரகாசிக்கின்றதோ, அந்த க்ருஹத்தில் லக்ஷ்மியானவள் எல்லாக்கலைகளுடனும் எப்பொழுதும் வஸிக்கின்றாள். எவள் தான் புஜிக்கும் பொழுது புஜிக்கப் போகும் அன்னத்திலிருந்து சக்திக்குத் தகுந்தபடி ஜ்யேஷ்டா தேவிக்குப் பலி கொடுப்பதில்லையோ அவள் நரகத்தை அடைவாள். புத்ரன், பௌத்ரன், தனம் இவைகளை விரும்பும் ஸ்த்ரீகளும் ப்ரதிதினமும் ஜ்யேஷ்டா தேவிக்குப் பலி கொடுக்க வேண்டும்.

वाल्मीकिः — 'न पिता नात्मजो नात्मा न माता न सखीजनः। इह प्रेत्य च नारीणां पतिरेको गतिः सदा॥ न कृतं न कुलं विद्यां न दत्तं नापि सङ्ग्रहम्। स्त्रीणां गृह्णाति हृदयमनित्यहृदया हि ताः॥ साध्वीनां तु स्थितानां हि शीले सत्ये श्रुते शमे। स्त्रीणां पवित्रं परमं पतिरेको विशिष्यते। नातन्त्री वाद्यते वीणा नाचक्रो वर्तते रथः। नापतिस्सुखमेधेत या स्यादपि शतात्मजा॥ नगरस्थो वनस्थो वा पापी वा यदि वा शुभः। यासां स्त्रीणां प्रियो भर्ता तासां लोका महोदयाः॥ दुःशीलः कामवृत्तो वा धनवान् यदि वाऽधनः।

स्त्रीणामार्यस्वभावानां परमं दैवतं पतिः ॥ पतिशुश्रूषणान्नार्यास्तपो नान्यद्विधीयत' इति ॥ व्यासः — 'पतिव्रता तु या नारी भर्तृशुश्रूषणोत्सका । न तस्या विद्यते पापमिह लोके परत्र च ॥ पतिव्रता धर्मरता रुद्राण्येव न संशयः । तस्याः पराभवं कर्तुं शक्नोति न जनः क्वचिदिति ॥ बोधायनः — 'भर्तृहिते यतमानाः स्वर्गं लोकं जयेरन्निति ।

வால்மீகி - பிதா, பிள்ளை, ஆத்மா, மாதா, ஸகிகள் இவர்கள் கதியாய் ஆகார்; ஸ்த்ரீகளுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் பதி ஒருவனே கதி ஆவான், உபகாரம், குலம், வித்யை, தானம், ஸங்க்ரகம் இவைகளில் ஒன்றையும் ஸ்த்ரீகளின் மனம் பற்றுவதில்லை; அவர்கள் சஞ்சலசித்தைகளானதால். நல்லொழுக்கம், உண்மை பேசுதல், சாஸ்த்ரம், சமம் இவைகளுடைய பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளுக்குப் பதி ஒருவனே சிறந்தவனாகிறான். தந்தியில்லாத வீணை ஒலிக்காது. சக்ரமில்லாததேர் ஓடாது. அநேகம் புத்ரர்களுடையவளாயினும் பதியில்லாதவள் ஸுகமாய் இருக்கமாட்டாள். தன் பர்த்தா நகரத்திலிருப்பவனாயினும், வனத்திலிருப்பவனாயினும், பாபியாயினும், சுபனாயினும், எவர்களுக்கு ப்ரீதிக்கு விஷயமாயிருக்கின்றானோ அவர்களுக்குச் சிறந்த உலகங்களுண்டு. கெட்ட நடத்தையுடையவனாயினும், காமுகனாயினும், தனிகனாயினும், ஏழையாயினும், நல்லொழுக்கமுள்ள ஸ்த்ரீகளுக்குப் பதியே பெரிய தைவமாம். பதி சுச்ரூஷையைத் தவிர வேறு தவம் ஸ்த்ரீகளுக்கு இல்லை. வ்யாஸர் - பர்த்ருசுச்ரூஷையில் ஆவலுள்ள பதிவ்ரதைக்கு இகபரவுலகங்ளில் பாபமில்லை. தர்மிஷ்டையான பதிவ்ரதை பார்வதியே என்பதில் ஸந்தேகமில்லை. அவளை, எக்காலத்திலும் எவரும் அவமதிக்க முடியாது. போதாயனர் - பர்த்தாவின் ஹிதத்திலேயே ப்ரயத்னமுடையவர் ஸ்வர்க்கத்தை அடைவார்.

## गर्भिणीधर्माः

याज्ञवल्क्यः — 'षोडशर्तुर्निशाः स्त्रीणां तस्मिन् युग्मासु संविशेदिति ।। पराशरः — 'ऋतुस्नाता तु या नारी भर्तारं नोपसर्पति । सा मृता नरकं याति विधवा च पुनः पुनः ।। ऋतुस्नातां तु यो भार्यां सन्निधौ नोपगच्छति ।। घोरायां भ्रूणहत्यायां युज्यते नात्र संशय इति ।। पूर्वमेव गर्भाधानं सविस्तरमभिहितम् ।।

### கர்ப்பிணீ தர்மம்

*யாக்ஞவல்க்யர் - ரஜோதர்சனம் முதல் 16 ராத்ரிகள் 'ருது' எனப்படும். அதில் இரட்டைப்படை ராத்ரிகளில் சேரவேண்டும். பராசரர் - ருதுஸ்நாதையான எவள் பர்த்தாவிடம் சேரவில்லையோ அவள் நரகத்தை அடைவாள். அநேக ஜன்மங்களில் வைதவ்யத்தையும் அடைவாள். ருதுஸ்நாதையான பார்யையைச் சேராதவன் ப்ரூணஹத்யா தோஷத்தை அடைவான். ஸம்ஶயமில்லை. கர்ப்பாதானம் விரிவாய் முன்பே சொல்லப்பட்டது.*

स्मृतिचन्द्रिकायाम् — 'नावस्करेषूपविशेन्मुसलोलूखलादिषु । जलं च नावगाहेत शून्यागारं च वर्जयेत् ।। वल्मीकं नाधितिष्ठेत न चोद्विग्नमना भवेत् । विलिखेन्न नखैर्भूमिं नाङ्गारेण न भस्मना ।। न शयालुः सदा तिष्ठेद्व्यायामं च विवर्जयेत् । न तुषाङ्गारभस्मास्थिकपालेषु समाविशेत् ।। वर्जयेत् कलहं लोके गात्रभङ्गं तथैव च । न मुक्तकेशी तिष्ठेत्तु नाशुचिः स्यात् कदाचन ।। न शयीतोत्तरशिरा न चैवाधःशिराः क्वचित् । न वस्त्रहीना नोद्विग्ना न चार्द्रचरणा सती ।। नामङ्गल्यं वदेद्वाक्यं न च हास्यादि किञ्चन । कुर्याच्छ्वशुरयोर्नित्यं पूजां मङ्गलतत्परा ।। तिष्ठेत् प्रसन्नवदना भर्तृप्रियहिते रतेति ।

*ஸ்ம்ருதிசந்திரிகையில் - கர்ப்பணியானவள் உரல், உலக்கை முதலிய பதார்த்தங்களின் மேல் உட்காரக் கூடாது. ஜலத்தில் இறங்கி முழுகக் கூடாது. பாழும்*

வீட்டில் இருக்கக் கூடாது. புற்றின் மேலிருக்கக் கூடாது. மனதில் வருந்தக் கூடாது. நகங்களாலும், கரியாலும், சாம்பலாலும் பூமியில் கீறக் கூடாது. எப்பொழுதும் படுத்திருக்கக் கூடாது. கடுமையான வேலை கூடாது. உமி, கரி, சாம்பல், எலும்பு, ஓடு இவைகளின் மேல் உட்காரக் கூடாது. கலஹம் கூடாது. தேகத்தை நெரிக்கக் கூடாது. விரித்த மயிருடனும் அசுத்தையாயும் இருக்கக் கூடாது. வடக்கிலும் பள்ளத்திலும் தலைவைத்தும், வஸ்த்ர மில்லாமலும், மனவருத்தத்துடனும், ஈரக்கால்களுடனும் படுக்கக் கூடாது. அசுபமான வார்த்தை பேசக்கூடாது. சிரிப்பு முதலியவை கூடா. மாமியார் மாமனார் இவர்களைப் பூஜை செய்ய வேண்டும். மங்களமான கார்யங்களையே செய்பவளாய், தெளிவான முகமுடையவளாய், பர்த்தாவுக்கு ப்ரியமும் ஹிதமாயுள்ளதைச் செய்பவளாய் இருக்க வேண்டும்.

स्मृतिरत्नेऽपि — 'सन्ध्यायां नैव भोक्तव्यं गर्भिण्या तु प्रयत्नतः । न स्नातव्यं न गन्तव्यं वृक्षमूलेषु सर्वदा ।। न शयालुः सदा तिष्ठेत् खट्वाच्छायां विवर्जयेत् । सर्वौषधीभिः कोष्णेन वारिणा स्नानमाचरेत् ।। कृतरक्षा सुभूषा च वास्तुपूजनतत्परा ।। दानशीला तृतीयायां पार्वत्या नक्तमाचरेत् ।। इतिव्रता भवेन्नारी विशेषेण तु गर्भिणी । यस्तु तस्या भवेत् पुत्रः स्थिरायुर्वृद्धिसंयुतः ।। अन्यथा गर्भपतनमवाप्नोति न संशय इति ।।

*ஸ்ம்ருதிரத்னத்தில்* - கர்ப்பிணியானவள் ஸந்த்யா காலத்தில் போஜனம் ஸ்நானம் இவைகளைச் செய்யக் கூடாது. எப்பொழுதும் மரத்தினடியில் போகக் கூடாது. எப்பொழுதும் படுப்பவளாய் இருக்கக் கூடாது. கட்டிலின் நிழலிலிருக்கக் கூடாது. ஓஷதிகளைச் சேர்த்துக் கொஞ்சம் உஷ்ணமான ஜலத்தால் ஸ்நானம் செய்யவேண்டும். ரக்ஷைசெய்து கொண்டவளும், ஆபரணமணிந்தவளும், வாஸ்து பூஜை செய்பவளும், தானம் செய்பவளும், த்ருதீயையில் பார்வதியின் நக்தவ்ரதம் செய்பவளுமாய் எப்பொழுதும் ஸ்த்ரீ இருக்க வேண்டும்; கர்ப்பகாலத்தில்

விசேஷமாய் இந்த நியமங்களுடனிருக்கவேண்டும். இப்படியிருப்பவளுக்குப் புத்ரன் தீர்க்காயுஸ்ஸா யிருப்பான். இல்லாவிடில் கர்ப்பம் நழுவும். ஸம்சயமில்லை.

याज्ञवल्क्यः —'दौहृदस्याप्रदानेन गर्भो दोषमवाप्नुयात्। वैरूप्यं मरणं वाऽपि तस्मात् कार्यं प्रियं स्त्रिया' इति ॥ सुश्रुतेऽपि— 'ततः प्रभृति व्यायाम व्यवसायाति तर्पण दिवास्वप्नरात्रिजागरण शोकभय यानारोहण वेगधारण कुक्कुटासन शोणितमोक्षणानि परिहरेत्तदभिलषितं दत्वा वीर्यवन्तं चिरायुषं पुत्रं जनयतीति ॥ ततः प्रभृति -गर्भग्रहणप्रभृतीत्यर्थः ॥ तद्ग्रहणं च श्रमादिलिङ्गैरवगन्तव्यम् ॥ तान्यपि तत्रैवोक्तानि — 'सद्योगृहीतगर्भायाः श्रमो ग्लानिः पिपासा सक्थिसीदनं शुक्रशोणितयोरवबन्धः स्फुरणं च योन्या' इति ॥

யாக்ஞவல்க்யர் - கர்ப்பிணிக்கு இஷ்டவஸ்துவைக் கொடுக்காவிடில், கர்ப்பத்திற்கு குரூபமாவது மரணமாவது தோஷம் ஏற்படும். ஆகையால் கர்ப்பிணிக்கு ப்ரியத்தைச் செய்ய வேண்டும். ஸுச்ருதத்தில் - கர்ப்பக்ரஹணம் முதல் தேகசிரமம், வேலை, அதிகமான போஜன த்ருப்தி, பகலில் தூக்கம், ராத்ரியில் விழிப்பு, சோகம், பயம், வாகனங்களிலேறுதல், வேகத்தை அடக்குதல், குந்தி உட்காருதல், சோணிதத்தை விடுதல் இவைகளைச் செய்யக்கூடாது. அவளுக்கு இஷ்டமான வஸ்துவைக் கொடுத்தால் வீரனும், தீர்க்காயுஸ்ஸுமான புத்ரனைப் பெறுவாள். கர்ப்பம் தரித்ததென்பதை அடையாளங்களால் அறியவேண்டும். அவைகள் ஸுச்ருதத்திலேயே சொல்லப்பட்டிருக்கின்றன - கர்ப்பம் தரித்தவளுக்கு ச்ரமம், ஓய்ச்சல், தாகம், துடைகள் ஓய்வு, யோனியில் துடிப்பு இவைகளுண்டாகும்.

बृहस्पतिरपि — 'सद्योगृहीतगर्भायाः श्रमस्त्वाद्योऽभिजायते । पिपासा च ततो ग्लानिर्योन्यास्तु स्फुरणं भवेदिति ॥ काश्यपः —

'गर्भधारणमारभ्य व्यायामव्यसनानि च । तक्षणं च दिवास्वप्नं रात्रौ जागरणं तथा ।। गजाश्वारोहणं शोकं वेगधारणमेव च । विरेचनं नैव कुर्यात् क्षाराद्यन्नं च वर्जयेदिति ।।

*ப்ருஹஸ்பதி - கர்ப்பம் தரித்தவளுக்கு உடனே முதலில் ஸ்ரமம், பிறகு தாகம், ஓய்வு, யோநியின் துடிப்பு இவைகளுண்டாகும். காஸ்யபர் - கர்ப்பம் தரித்தது முதல் அதிகவேலை, பொழுது போக விளையாட்டு, செதுக்குதல், பகல்தூக்கம், ராத்ரியில் விழிப்பு, யானை குதிரைகளி லேறுதல், துக்கம், வேகத்தை அடக்குதல், மலமிளக்குதல், உறைப்பு முதலிய அன்னம் இவைகளை தவிர்க்க வேண்டும்.*

गर्भोपनिषदि — 'ऋतुकाले प्रयोग एकरात्रोषितं कलिलं भवति सप्तरात्रोषितं बुद्बुदं भवति अर्धमासाभ्यन्तरेण पिण्डो भवति, मासाभ्यन्तरेण कठिनो भवति मासद्वयेन शिरः कुरुते, मासत्रयेण पादप्रदेशो भवति अथ चतुर्थे मासेऽङ्गुलिजठरकटिप्रदेशो भवति पञ्चमे मासे पृष्ठवंशो भवति षष्ठे मासे नासाक्षिश्रोत्राणि भवन्ति सप्तमे मासे जीवेन संयुक्तो भवत्यष्टमे मासे सर्वसंपूर्णो भवति पितृरेतोतिरेकात् पुरुषो भवति मातृरेतोतिरेकात् स्त्रियो भवन्त्युभयोर्वीर्यतुल्यत्वान्नपुंसको भवति व्याकुलितमनसोऽन्धाः खञ्जाः कुब्जा वामना भवन्त्यन्योन्यवायुपरिपीडितानां शुक्लद्वैधे स्त्रियो योन्यां युग्माः प्रजायन्ते ।।

*கர்ப்போநிஷத்தில் - ருதுகாலத்தில் ஸங்கமத்தால் சுக்லசோணிதங்கள் சேர்ந்து ஒரு நாளில் ஒன்றாய்க் கலக்கின்றன. 7-நாளில் கொப்புளமாய் ஆகிறது. 15-நாளில் பிண்டமாய் ஆகிறது. 1-மாஸத்தில் கடினமாயாகிறது. 2-வது மாஸத்தில் தலையும், 3-வது மாஸத்தில் பாதமும், 4-வது மாஸத்தில் விரல் வயிறு இடுப்பு இவைகளும், 5-வது மாஸத்தில் முதுகெலும்பும், 6-வது மாஸத்தில் மூக்கு, கண், காது இவைகளும் உண்டாகின்றன. 7-வது மாஸத்தில் ஜீவனுடன் சேர்ந்ததாகிறது. 8-வது மாஸத்தில்*

ஸம்பூர்ணமாகிறது. சுக்லம் அதிகமானுல் புருஷனும், சோணிதம் அதிகமானுல் ஸ்த்ரீயாகவும், அவ்விரண்டும் ஸமமானுல் நபும்ஸகமாயும் ஆகிறது. வியாகுலப்பட்ட மனதுடையவர்களிடமிருந்து உற்பத்தியானுல் குருடு, நொண்டி, கூனன், குள்ளன் இவ்விதமான குழந்தைகள் உண்டாகின்றன. வாயுவேகத்தால் இரண்டாய்ப் பிரிந்து சுக்லம் ப்ரவேசித்தால் இரட்டையாய்க் கர்ப்பம் உண்டாகிறது.

अथ नवमे मासि सर्वलक्षणसम्पूर्णो भवति पूर्वजातिं स्मरति, कृताकृतं च कर्म विभाति, शुभाशुभं च कर्म विन्दति। नानायोनिसहस्राणि दृष्ट्वा चैव ततो मया। आहारा विविधा भुक्ताः पीताश्च विविधाः स्तनाः।। जातस्यैव मृतस्यैव जन्म चैव पुनः पुनः। अहो दुःखोदधौ मग्नो न पश्यामि प्रतिक्रियाम् ।। यदि योन्याः प्रमुञ्चामि साङ्ख्यं योगं समाश्रये । अशुभक्षयकर्तारं फलमुक्तिप्रदायिनम् ।। यदि योन्याः प्रमुञ्चामि तं प्रपद्ये महेश्वरम् । अशुभक्षयकर्तारं फलमुक्ति प्रदायिनम् ।। यदि योन्याः प्रमुञ्चामि तं प्रपद्ये भगवन्तं नारायणं देवम्। अशुभक्षयकर्तारं फलमुक्ति प्रदायिनम् ।। यन्मया परिजनस्यार्थे कृतं कर्म शुभाशुभम् । एकाकी तेन दह्यामि गतास्ते फलभा(भो)गिनः ।। जन्तुः स्त्रीयोनिशतं योनिद्वारि सम्प्राप्तो यन्त्रेणा-पीड्यमानो महता दुःखेन जातमात्रस्तु वैष्णवेन वायुना संस्पृश्य तदा न स्मरति जन्म मरणं न कर्म शुभाशुभमिति ।।

9-வது மாஸத்தில் ஸர்வலக்ஷணங்களாலும் பூர்ணமாகிறது. முன்சென்ற ஜன்மங்களை ஸ்மரிக்கின்றது. தான் செய்ததும் செய்யத் தவறியதுமான சுபாசுப கர்மங்களைத் தெரிந்து கொண்டு இவ்விதம் ப்ரலாபிக்கின்றது. நான் அநேக ஆயிரக்கணக்கான ஜன்மங்களை அடைந்தேன். அநேக விதமான ஆஹாரங்களையும் புஜித்தேன். அநேகம் முலைப்பால்களைப் பருகினேன். எனக்கு அடிக்கடி பிறப்பும் இறப்பும்

மாறிமாறி வருகின்றனவே. துக்கமெனும் கடலில் மூழ்கியிருக்கும் நான் பரிஹாரம் செய்யும் வழியை அறிகிலேன். இந்த யோநியினின்றும் விடுபட்டால் நல்ல பலத்தை அளிப்பதும் அசுபத்தைப் போக்குவதுமான ஸாங்க்யம் யோகம் இவைகளை ஆப்ரயிப்பேன். மஹேப்வரனைப் பஜிப்பேன். பகவானான நாராயணனைச் சரணமடைவேன். சுற்றத்தார்களுக்காக நான் அநேக கர்மங்களைச் செய்தேன். அதனால் ஸுகத்தை அடைந்த அவர்கள் சென்றனர். நான் ஒருவன் மட்டில் அப்பாபத்தால் இங்கு எரிக்கப்படுகிறேன். இவ்விதம் தாபமடைந்த ஜந்து, மாதாவின் சிறிதான யோனித்வாரத்தால் வெளியில் வரும்போது மஹாதுக்கத்தை அடைந்து பிறந்தவுடன் விஷ்ணுவின் வாயுவினால் ஸ்பர்சிக்கப்பட்டு முன் ஜன்மஜ்ஞானமெல்லம் மறந்து ஜடனாய் ஆகிறான்.

याज्ञवल्क्यः — 'प्रथमे मासि संक्लेदभूतो धातुविमूर्च्छितः । मास्यर्बुदं द्वितीये तु तृतीयेऽङ्गेन्द्रियैर्युतः ॥ आत्मा गृह्णात्यजः सर्वं तृतीये स्पन्दते ततः । स्थैर्यं चतुर्थे त्वङ्गानां पञ्चमे शोणितोद्भवः ॥ षष्ठे बलस्य वर्णस्य नखरोम्णां समुद्भवः । मनश्चैतन्ययुक्तोऽसौ नाडीस्नायुसिरायुतः। सप्तमे चाष्टमे चैव त्वङ्मांसस्मृतिमानपि ॥ पुनर्द्धात्रीं पुनर्गर्भमोजस्तस्य प्रधावति। अष्टमे मास्यतो गर्भो जातः प्राणैर्वियुज्यते॥ नवमे दशमे वाऽपि प्रबलैः सूतिमारुतैः । निः सार्यते बाण इव यन्त्रच्छिद्रेण सज्वर इति ॥ संक्लेदभूतः - द्रवीभूतः । अर्बुदं - ईषत् कठिनम् ॥ 'हृदि तिष्ठति यच्छुद्धमीषद्रक्तं सपित्तकम् । ओजश्शरीरे सञ्जातं तन्नाशान्नाशमृच्छतीति लक्षितमोजः अष्टमे मासि चञ्चलतया मातरं गर्भं च पुनः पुनः व्रजति। अतस्तत्र जातो म्रियत इत्यर्थः ॥

யாக்ஞவல்க்யர் - இந்த ஜீவாத்மா ஜந்து தாதுக்களில் ஒன்றாகிச் சுக்ல சோணிதங்களில் கலந்து முதல் மாஸத்தில் த்ரவரூபமாய் இருக்கிறான். 2-வது மாஸத்தில் கடினமாய் ஆகிறான். 3-வது மாஸத்தில் அங்கங்களுடனும், இந்த்ரியங்களுடனும் கூடுகிறான். ஆகாசம், வாயு, தேஜஸ்,

ஜலம், பூமி இவைகளினின்றும் அவைகளின் குணங்களை ஜீவன் க்ரகித்துக் கொள்ளுகிறான். பிறகு சலிக்கின்றான். 4-வது மாஸத்தில் அங்கங்கள் த்ருடமாகின்றன. 5-வது மாஸத்தில் ரக்தம் உண்டாகிறது. 6-வது மாஸத்தில் பலம், வர்ணம், நகங்கள், ரோமங்கள் இவைகள் உண்டாகின்றன. 7-வது மாஸத்தில் மனது சேதனை இவைகளுடனும், நாடிகள் (வாயு ஸஞ்சரிக்கும் குழாய்கள்) ஸ்நாயுக்கள் (தசை நார்கள்) ஸிரைகள் (வாதபித்தச்லேஷ்மங்கள் ஓடும் குழாய்கள்) இவைகளுடன் கூடுகின்றான். 8-வது மாஸத்தில் தோல், மாம்ஸம், நினைவு இவைகளுடன் கூடுகின்றான். இந்த மாஸத்தில் அந்தக் கர்ப்பத்தின் 'ஓஜஸ்' என்ற குணம் கர்ப்பத்தினின்று தாயினிடமும் தாயினின்று கர்ப்பத்தினிடமும் அடிக்கடி சஞ்சலமாய்ப் பாய்ந்து கொண்டிருக்கிறது. ஆகையால் 8-வது மாஸத்தில் பிறந்த கர்ப்பம் ப்ராணனற்றதாகிறது. 9, அல்லது 10-வது மாஸத்தில் கர்ப்பமானது, ப்ரபலங்களான ஸூதி வாயுக்களால் சரீரமெனும் யந்த்ரத்தின் சிறியதான த்வாரத்தினால், மகாவேதனையுடையதாய் பாணம் போல் வேகமாய் வெளியில் தள்ளப்படுகிறது. 'ஓஜஸ்' என்பதன் லக்ஷணமாவது - 'சுத்தவர்ணமாயும், கொஞ்சம் சிவந்தும், பித்தத்துடன் கூடியதுமாய் ஹ்ருதயஸ்தானத்திலிருக்கும் வஸ்து' எனப்படுகிறது.

## विधवाधर्माः ।

तत्र याज्ञवल्क्यः — पितृमातृसुतभ्रातृश्वश्रूश्वरमातुलैः । हीना न स्याद्विना भर्त्रा गर्हणीयाऽन्यथा भवेदिति ॥ भर्त्रा विना - भर्तृरहिता पित्रादिरहिता न स्यात् । यस्मात्तद्र हिता गर्हणीया - निन्द्या भवेत् । एतच्च ब्रह्मचर्यपक्षे । 'भर्तरि प्रेते ब्रह्मचर्यं तदन्वारोहणं वेति विष्णुस्मरणात् ॥

### விதவாதர்மங்கள்

யாக்ஞவல்க்யர் - பர்த்தா இல்லாத ஸ்த்ரீ, மாதா, பிதா, பிள்ளை, ப்ராதா, மாமியார், அம்மான் இவர்களை

*விட்டுத் தனியாய் இருக்கக் கூடாது. இருந்தால் நிந்திக்கத் தகுந்தவளாவாள். இது ப்ரம்மசர்யம் அனுஷ்டிக்கும் பக்ஷத்தில். 'பர்த்தா இறந்துவிட்டால் அவனுடன் மரிக்கலாம்; அல்லது ப்ரம்மசர்யத்துடன் ஜீவித்திருக்கலாம்' என்று விஷ்ணுஸ்ம்ருதியினால்.*

व्यासः — 'पत्यौ मृतेऽपि या योषिद्वैधव्यं पालयेत् क्वचित् । सा पुनः प्राप्य भर्तारं स्वर्गभोगान् समश्नुते । विधवाकबरीबन्धो भर्तुबन्धाय जायते । शिरसो वपनं तस्मात् कार्यं विधवया तथा ।। एकाहारः सदा कार्यो न द्वितीयः कदाचन । त्रिरात्रं पञ्चरात्रं वा पक्षव्रतमथापि वा । मासोपवासं वा कुर्याच्चान्द्रायणमथापि वा । कुर्यात् कृच्छ्रं पराकं वा तप्तकृच्छ्रमथापि वा । यवान्नैर्वा फलाहारैः शाकाहारैः पयोव्रतैः । प्राणयात्रां प्रकुर्वीत यावत् प्राणः स्वयं व्रजेत् ।। पर्यङ्कशायिनी नारी विधवा पातयेत् पतिम् । तस्माद्भूशयनं कार्यं पतिसौख्यसमीहया ।। न चाङ्गोद्वर्तनं कार्यं स्त्रिया विधवया क्वचित् । गन्धद्रव्यस्य संभोगो नैव कार्यस्तथा क्वचित् । तर्पणं प्रत्यहं कार्यं भर्तुः कुशतिलोदकैः । तत्पितुस्तत्पितुश्चापि नामगोत्रादिपूर्वकम् । विष्णोस्तु पूजनं कार्यं पतिबुद्ध्या न चान्यथा । पतिमेव सदा ध्यायेद्विष्णुरूपधरं परम् ।। एवं चर्यापरा नित्यं विधवाऽपि शुभा मता । एवं धर्मपरा युक्ता विधवाऽपि पतिव्रतेति ।।

வ்யாஸர் - *பர்த்தா இறந்தபிறகும் ப்ரம்மசர்யத்தை பரிபாலித்து வந்த ஸ்த்ரீ ஸ்வர்க்கத்தை அடைந்து தன் பர்த்தாவுடன் போகங்களை அனுபவிப்பாள். விதவையின் கேசக்கட்டு பர்த்தாவுக்குப் பந்தத்தைக் கொடுப்பதாகின்றது. ஆகையால் விதவை சிரோவபனம் செய்துகொள்ள வேண்டும். ஒருதடவை ஆஹாரம் செய்ய வேண்டும். இரண்டாவது தடவை கூடாது. 3-நாள், 5-நாள், 15-நாள், ஒரு மாஸம் உபவாஸமுள்ள வ்ரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். சாந்த்ராயணம் முதலிய க்ருச்ரங்களை அனுஷ்டிக்கலாம். யவான்னம், பழஆஹாரம்,*

க்ஷீரவ்ரதம் இவைகளால் ப்ராணதாரணம் செய்து கொள்ளவேண்டும். ப்ராணன் தானுகச் செல்லும் வரையில். விதவை கட்டிலில் படுத்தால் பதியை நரகத்தில் தள்ளுவாள். ஆகையால் தரையிலேயே படுக்க வேண்டும். தேஹத்தை அழுக்குத் தேய்த்துக் குளிக்கக் கூடாது. வாஸனைத்ரவ்யங்களை அனுபவிக்கக் கூடாது. தினந்தோறும் தன் பர்த்தா அவன் பிதா அவன் பிதா இவர்களுக்கு நாமகோத்ரங்களை உச்சரித்து குசம் திலம் இவைகளால் தர்ப்பணம் செய்ய வேண்டும். விஷ்ணுவைப் பதியாகப் பாவித்துப் பூஜை செய்ய வேண்டும். பதியே விஷ்ணுரூபமாயுளர் என்று த்யானிக்க வேண்டும். இவ்விதம் அனுஷ்டானத்துடனிருக்கும் விதவையும் பதிவ்ரதை எனப்படுகிருள்.

आश्वलायनः — 'मृते भर्तर्यपुत्रा च बालपुत्रा च याऽङ्गना। बन्धूनाश्रित्य सा तिष्ठेत् संयता जनकादिकान्। जपेच्च शूद्रवत् सा तु नमेद्रविमथान्वहम्। जीवन्ती भर्तृचित्ता स्यान्नान्यथा तु विधीयत इति ॥

ஆப்ஸ்வலாயனர் - பர்த்தா இறந்தபிறகு புத்ரனில்லாதவளும், பாலபுத்ரையானவளும், தன் பிதா முதலிய பந்துக்களை அண்டி நியமத்துடன் இருக்க வேண்டும். சூத்ரனைப்போல் ஜபிக்க வேண்டும். ப்ரதிதினமும் ஸூர்யனை நமஸ்கரிக்க வேண்டும். பர்த்தாவையே த்யானிக்க வேண்டும். வேறு ப்ரகாரம் விதிக்கப்படவில்லை.

पराशरः — 'मृते भर्तरि या नारी ब्रह्मचर्ये व्यवस्थिता। सा मृता लभते स्वर्गं यथा ते ब्रह्मचारिण' इति ॥ ते ब्रह्मचारिणः - प्रसिद्धाः ब्रह्मचारिणः ॥ मनुः – कामं तु क्षपयेद्देहं पुष्पमूलफलैश्शुभैः। न च नाम विगृह्णीयात् पत्यौ प्रेते परस्य तु ॥ मृते भर्तरि साध्वी स्त्रीब्रह्मचर्ये व्यवस्थिता। स्वर्गं गच्छत्यपुत्रा वै यथा ते ब्रह्मचारिण' इति ॥ 'ताम्बूलोऽभर्तृकस्त्रीणां यतीनां ब्रह्मचारिणाम्। एकैकं मांसतुल्यं स्यान्मिलितं तु सुरासम'मिति ॥ आपस्तम्बः - यावज्जीवं प्रेतपत्न्या उदकोपस्पर्शनमेकभुक्तमधःशय्या ब्रह्मचर्यं क्षारलवणमधुमांसवर्जनं चेति ॥

பராசரர் -பர்த்தாஇறந்தபின் ப்ரம்மசர்யத்துடனிருப்பவள் ஸ்வர்க்கத்தை அடைவாள்; ப்ரஸித்தர்களான ப்ரம்மசாரிகள் போல். மனு - பர்த்தா இறந்தபின் பரிசுத்தமான புஷ்பம், மூலம், பலம் இவைகளால் அல்பாஹாரம் செய்து தேஹத்தை ஒடுக்க வேண்டும். பரபுருஷனின் நாமத்தையும் உச்சரிக்கக் கூடாது. இவ்விதம் ப்ரம்மசர்யத்திலிருக்கும் ஸ்த்ரீ ஸநகர் முதலிய ப்ரம்மசாரிகள் போல் ஸ்வர்க்கத்தை அடைவாள். விதவைகள், யதிகள், ப்ரம்மசாரிகள் இவர்கள், வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு இவைகளுள் ஒன்றை உபயோகித்தால் மாம்ஸத்திற்குச் சமமாகும். மூன்றையும் உபயோகித்தால் கள்ளுக்குச் சமமாகும். ஆபஸ்தம்பர் - விதவை ஜீவனுள்ள வரையில் ஸ்நானம், ஒருவேளை போஜனம், பூமியில் சயனித்தல், ப்ரம்மசர்யம், உறைப்பு உப்பு தேன் (மது) மாம்ஸம் இவைகளை தவிர்த்தல் என்ற நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

## अनुगमनम् ।

तत्र विष्णुः — 'भर्तरि प्रेते ब्रह्मचर्यं तदन्वारोहणं वेति ।। पराशरः - 'तिस्रः कोट्योऽर्द्धकोटी च यानि लोकानि मानुषे । तावत्कालं वसेत् स्वर्गे भर्तारं याऽनुगच्छतीति ।। तावत्कालं - तावत्सहस्रसंवत्सरम्। तथा च हारीतः - 'मृते भर्तरि या नारी धर्मशीला दृढव्रता । अनुगच्छति भर्तारं शृणु तस्यास्तु यत्फलम् ।। तिस्रः कोट्योऽर्धकोटी च यानि लोमानि मानुषे । तावत्कालं वसेत् स्वर्गे भर्तारं याऽनुगच्छतीति ।। तावत्कालं - तावत्सहस्रसंवत्सरम् ।। तथा च हारीतः — 'मृते भर्तरि या नारी धर्मशीला दृढव्रता । अनुगच्छति भर्तारं शृणु तस्यास्तु यत्फलम् । तिस्रः कोट्योऽर्द्धकोटी च यानि रोमाणि मानुषे । तावन्त्यब्दसहस्राणि स्वर्गे लोके महीयते ।। मातृकं पैतृकं चैव यत्र चैव प्रदीयते । कुलत्रयं पुनात्येषा भर्तारं याऽनुच्छती' ति ।।

அனுகமனம் (உடன் கட்டை ஏறுதல்)

விஷ்ணு - *பர்த்தா இறந்தபிறகு ப்ரம்மசர்யமாவது, அன்வாரோஹணமாவது (பர்த்தாவோடு மரித்தல்) செய்யவேண்டும்.* பராசரர் - *(மனிதனிடம் 3 1/2 கோடி ரோமங்கள் இருக்கின்றன) 3 1/2 கோடி ஆயிரம் வர்ஷகாலம் வரையில் ஸ்வர்க்கத்தில் வஸிப்பான். அனுகமனம் செய்பவள்.* ஹாரீதர் - *தர்மசீலையான எந்தப் பதிவ்ரதை அனுகமனம் செய்வாளோ அதன் பலனைச் சொல்லுகிறேன்; 3 1/2 கோடி ஆயிரம் வர்ஷங்கள் ஸ்வர்க்கத்தில் சிறப்பை அடைவாள். தன் மாதா பிதா பர்த்தா இம்மூவர்களின் குலங்களையும் இவள் சுத்தமாக்குகின்றாள்.*

न केवलं स्वयमेवानुगमनेन स्वर्गे वसति, किन्तु स्वभर्तारं पापफल भोगाय नरकमार्गाभिमुखमपि स्वकीयेन प्रबलसुकृतेनोद्धरतीत्याह पराशरः — 'व्यालग्राही यथा व्यालं बिलादुद्धरते बलात्। एवं स्त्री पतिमुद्धृत्य तेनैव सह मोदत' इति ।। त्रिकाण्डी - 'अपि दुष्कृतकर्माणं समुद्धृत्य च तत्पतिम्। यावत् स्वलोमसङ्ख्याऽस्ति तावत्कोट्ययुताब्दकम्।। भर्त्रा स्वर्गे सुखं भुङ्क्ते रममाणा पतिव्रता। यमदूताः पलायन्ते पतिमालोक्य दूरत' इति ।।

*தான் மட்டில் ஸ்வர்க்கத்தில் வஸிப்பதில்லை, நரகார்ஹனானாலும் தன் பர்த்தாவையும் நரகத்தினின்றும் விடுவிக்கின்றாள் என்கிறார்* பராசரர் - *அனுகமனம் செய்த பதிவ்ரதை நரகத்தினின்றும் தன் பர்த்தாவைப் பலாத்காரமாய் பாம்பாட்டி பாம்பைப்புற்றினின்றும் இழுப்பதுபோல் இழுத்து அவனுடன் ஸ்வர்க்கத்தில் ஸுகிப்பாள்.* த்ரிகாண்டீ - *அனுகமனம் செய்த பதிவ்ரதை தனது பர்த்தா பாபத்தால் நரகத்திலிருந்தாலும் அவனை க்ரஹித்துக் கொண்டு தன் ரோமங்களின் ஸங்க்யைப்படி ஒரு ரோமத்திற்குப் பதினாயிரம் வர்ஷகாலம் வீதம் ஸ்வர்க்கத்தில் தன் பர்த்தாவுடன் ஸுகித்திருப்பாள். இவளின் பதியைப் பார்த்து யமதூதர்கள் தூரத்தில் ஓடுகின்றனர்.*

शङ्खाङ्गिरसौ — 'तिस्रः कोट्योऽर्द्धकोटी च यानि लोमानि मानुषे। तावत्कालं वसेत् स्वर्गे भर्तारं याऽनुगच्छति ॥ व्यालग्राही यथा व्यालं बिलादुद्धरते बलात्। तद्वदुद्धृत्य भर्तारं सह तेनैव मोदते ॥ तत्र सा भर्तृपरमा स्तूयमानाऽप्सरोगणैः। क्रीडते पतिना सार्धं यावदिन्द्राश्चतुर्दश ॥ ब्रह्मघ्नो वा कृतघ्नो वा मित्रघ्नो वा भवेत् पतिः। पुनात्यविधवा नारी तमादाय मृता तु या ॥ मृते भर्तरि या नारी समारोहेद्धुताशनम्। साऽरुन्धतीसमाचारा स्वर्गलोके महीयते ॥ यावच्चाग्नौ मृते पत्यौ स्त्री नात्मानं प्रदाहयेत्। तावन्न मुच्यते सा हि स्त्रीशरीरात् कथञ्चन' इति ॥

*சங்கர், அங்கிரஸ் - அந்தப் பதிவிரதை ஸ்வர்கத்தில் பதிவிரதைகளால் துதிக்கப்பட்டு பதினான்கு இந்த்ரர்களின் காலம் வரையில் பர்த்தாவோடு ஸுகித்திருப்பாள். ப்ரம்மக்னனாயினும், க்ருதக்னனாயினும், மித்ரக்னனாயினும் தன் பர்த்தாவைப் பாபமற்றவனாக்குகின்றாள் அனுகமனம் செய்தவள். பர்த்தா இறந்தபிறகு அக்னிப்ரவேசம் செய்பவள் அருந்ததிக்குச் சமமானதால் ஸ்வர்க்கத்தில் சிறப்பை அடைகிறாள். பதி இறந்தபிறகு அக்னிப்ரவேசம் செய்யாதவரையில் ஸ்த்ரீசரீரத்தினின்றும் அவளுக்கு நிவ்ருத்தி இல்லை.*

अङ्गिराः — 'साध्वीनामेव नारीणामग्निप्रपतनाद्यते। नान्यो धर्मो हि विज्ञेयो मृते भर्तरि कर्हिचित् ॥ आर्ताऽऽर्ते मुदिते हृष्टा प्रोषिते मलिना कृशा। मृते म्रियेत या पत्यौ सा स्त्री ज्ञेया पतिव्रतेति ॥

*அங்கிரஸ் - பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளுக்குப் பர்த்தா இறந்தபிறகு அக்னிப்ரவேசத்தைத் தவிர்த்து வேறு தர்மம் இல்லை. புருஷன் கஷ்டப்படும்போது கஷ்டமடைபவளும், ஸந்தோஷிக்கும் போது ஸந்தோஷிப்பவளும், வெளியூரிலியிருக்கும் போது அழுக்கடைந்து இளைத்தவளும், இறந்தால் இறப்பவளுமானவள் பதிவ்ரதை என்றறியவும்.*

उपमन्युः — 'अनपत्या च या नारी ब्राह्मणी यदि वेतरा । तस्या नान्या गतिः प्रोक्ता सहानुगमनादृत इति ।। अत्र विज्ञानेश्वरीये — 'अयञ्च सर्वासां स्त्रीणामगर्भिणीनामबालापत्यानामाचण्डालं साधारणो धर्मः । भर्तारं यानुगच्छतीत्यविशेषेणोपादानादिति ।।

*உபமன்யு - ப்ராமணியோ, இதர ஜாதிஸ்த்ரீயோ குழந்தையில்லாதவளாயின் அவளுக்கு அனுகமனத்தைத் தவிர்த்து வேறு கதி இல்லை. இவ்விஷயத்தில் விக்ஞானேஶ்வரீயத்தில் - இந்தத் தர்மம் கர்ப்பிணிகளும், இளங்குழந்தையுள்ளவளுமல்லாத, சண்டாளஜாதிவரையுள்ள ஸகல ஸ்த்ரீகளுக்கும் பொதுகும்; விசேஷமின்றிச் சொல்லப்பட்டிருப்பதால்.*

स्मृतिरत्नेऽपि— 'धर्मोऽयं सर्वनारीणां पत्युश्चित्यधिरोहणम् । अन्यत्र गर्भिणीबालापत्ययुक्ताभ्य एव चेति ।। और्वः — 'बालापत्याश्च गर्भिण्यो ह्यदृष्टर्तव एव च । रजस्वला राजसुते नारोहन्ति चितां शुभे इति ।। स्मृत्यन्तरेऽपि — 'बालापत्या तु या नारी भर्त्रा सह न सा व्रजेत् । रजस्वला न गच्छेत्तु गन्त्रीं रक्षेत्तु गर्भिणीमिति ।।

*ஸ்ம்ருதிரத்னத்திலும் - அனுகமனமென்று இந்தத் தர்மம், கர்ப்பிணிகள்; இளங்குழந்தையுடையவர்கள் தவிர மற்ற எல்லா ஸ்த்ரீகளுக்கும் பொதுவானது. ஔர்வர் - இளங்குழந்தையுள்ளவர்கள், கர்ப்பிணிகள், ருதுவாகாதவர்கள், ரஜஸ்வலைகள் இவர்கள் அனுகமனம் செய்யக்கூடாது. வேறுஸ்ம்ருதியில் - இளங்குழந்தையுள்ளவளும், ரஜஸ்வலையும் அனுகமனம் செய்யக்கூடாது. கர்ப்பிணி அனுகமனம் செய்ய முயன்றாலும் மற்றவர் அவளைத் தடுக்கவேண்டும்.*

अन्यत्र तु — 'सार्तवा सूतिका वाऽपि भर्त्राऽनुमरणोत्सुका । सद्यः शुद्धिमवाप्नोति भर्तुः पापापहारिणी ।। बालापत्या तु या नारी सूतिका वा रजस्वला । सर्वासामपि च स्त्रीणामेष साधारणो विधि' रिति गर्भिण्या निषेध

एव। बालापत्यादीनां विकल्प इत्याहुः। पृथक्चितिविषयमित्यन्ये॥

வேறு க்ரந்தத்தில் - 'ரஜஸ்வலை ஸூதிகை இவர்களும் அனுமரணத்தில் ஆவலுள்ளவரானால் அப்பொழுதே சுத்தியைப் பெறுகின்றனர். 'இளங்குழந்தையுள்ளவள், ஸூதிகை, ரஜஸ்வலை எல்லோருக்கும் அனுகமனம் ஸாதாரணமான விதியாகும்' என்றிருப்பதால் கர்ப்பிணிக்கு நிஷேதமே; மற்றவர்க்கு விகல்பம் என்கிறார்கள். தனித்துத் தனக்கென சிதை அமைப்பது பற்றியது என்று சிலர்.

कपोताख्यानव्याजेन दर्शयति व्यासः — 'पतिव्रता सम्प्रदीप्तं प्रविवेश हुताशनम्। ततश्चित्राङ्गदधरं भर्तारं साऽन्वपद्यत॥ ततः स्वर्गं गतः पक्षी भार्यया सह सङ्गतः। कर्मणा पूजितस्तत्र रेमे च सह भार्यये'ति॥

புறாவின் கதையின் வ்யாஜத்தால் வ்யாஸர் சொல்வதாவது - பதிவ்ரதையான அந்தப் பெண்புறா ஜ்வலிக்கும் அக்னியில் ப்ரவேசித்தது. பிறகு அது அழகான அங்கதமணிந்து விளங்கும் தன் பர்த்தாவை அடைந்தது. ஆண்புறாவும் பார்யையுடன் சேர்ந்து ஸ்வர்க்கத்தை அடைந்து தேவர்களால் புகழப்பட்டுத் தன் பார்யையுடன் ஸுகித்திருந்தது.

ननु ब्राह्मण्या अनुगमननिषेधोऽपि स्मर्यते। तत्र पैठीनसिः। मृतानुगमनं नास्ति ब्राह्मण्या ब्रह्मशासनात्। इतरेषां तु वर्णानां स्त्रीधर्मोऽयं परः स्मृत' इति॥ विराट्— 'अनुवर्तेत जीवन्तं नानुयायान्मृतं पतिम्। जीव्यभर्तुर्हितं कुर्यान्मरणादात्मघातिनीति॥ अङ्गिराः — 'या स्त्री ब्राह्मणजातीया मृतं पतिमनुव्रजेत्। सा स्वर्गमात्मघातेन नात्मानं न पतिं नयेदिति॥ व्याघ्रपादः — 'न म्रियेत समं भर्त्रा ब्राह्मणी शोकमोहिता। प्रव्रज्यागतिमाप्नोति मरणादात्मघातिनीति॥ एवमादीनि वचनानि पृथक्चित्यधिरोहण-विषयाणीति विज्ञानेश्वरीय माधवीय स्मृतिरत्नादिषु व्यवस्थापितम्॥

ஓய்! "ப்ராமணஸ்த்ரீ அனுகமனம் செய்யக் கூடாதென்று நிஷேதமும் ஸ்ம்ருதியிலிருக்கின்றது.

பைடீநஸி - ப்ராமணஸ்த்ரீக்கு அனுகமனமில்லே, ப்ரம்மாவின் ஆக்ஞையினால், மற்றவர்ணத்திலுள்ள ஸ்த்ரீகளுக்கு இது சிறந்த தர்மம். விராட் - பர்த்தா ஜீவித்திருக்கும் வரை அவனே அனுஸரித்திருக்க வேண்டும். இறந்தால் அனுகமனம் செய்யக் கூடாது. பிழைத்திருந்து பர்த்தாவுக்கு ஹிதமான தர்மத்தைச் செய்ய வேண்டும். மரித்தால் ஆத்மஹத்தி செய்த பாபத்தை அடைவாள். அங்கிரஸ் - ப்ராமணஸ்த்ரீ அனுகமனம் செய்தால் ஸ்வர்க்கத்தை அடைவதில்லே. பதியையும் அடைவிப்பதில்லே. வ்யாக்ரபாதர் - ப்ராமணஸ்த்ரீ சோகத்தால் மதிமயங்கிப் பர்த்தாவோடு மரிக்கக் கூடாது. மரித்தால் ஆத்மஹத்திதோஷமடைவாள். ஜீவித்திருந்தால் ஸன்யாஸத்தாலுண்டாகும் நற்கதியை அடைவாள், என்ற வசனங்களால்'' எனில், இதுபோன்ற வசனங்களெல்லாம் தனியான சிதையில் ஏறுவது விஷயத்தைப் பற்றியவை என்று விக்ஞானேச்வரீயம், மாதவீயம், ஸ்ம்ருதிரத்னம் முதலிய க்ரந்தங்களில் வ்யவஸ்தை செய்யப் பட்டிருக்கிறது.

अत एवोशना — 'पृथक्चितिं समारुह्य न विप्रा गन्तुमर्हति। अन्यासां चैव नारीणां स्त्रीधर्मोऽयं परः स्मृत इति। यत्तु अपरार्के — 'देशान्तरे मृते पत्यौ साध्वी तत्पादुकाद्वयम्। निधायोरसि सश्रद्धा प्रविशेज्ज्वा तवेदसम्॥ दयितं याऽन्यदेशस्थं वृत्तं श्रुत्वा पतिव्रता। समारोहति दीप्तेऽग्नौ तस्याः शक्तिं निबोधत॥ यदि प्रविष्टो नरकं बद्धः पाशैः सुदारुणैः। संप्राप्तो यातनास्थानं गृहीतो यमकिङ्करैः॥ तिष्ठते विवशो दीनो वेष्ट्यमानः स्वकर्मभिः। व्यालग्राही यथा व्यालं बिलादुद्धरत्यशङ्कितः। सा तं भर्तारमादाय दिवं याति सती च या। सा भर्तृपरमा स्वर्गे स्तूयमानाऽप्सरोगणैः। क्रीडते पतिना सार्धं यावदिन्द्राश्चतुर्दशेति, एतत् पृथक्चितिमरणं ब्राह्मणी-व्यतिरिक्तविषयम्॥

ஆகையால்தான் உசநஸ் - 'ப்ராமணஸ்த்ரீ வேறு சிதையில் ஏறி அனுகமனம் செய்யக் கூடாது.

*மற்றஸ்த்ரீகளுக்கு இது சிறந்த ஸ்த்ரீ தர்மமாகும். ஆனால் அபரார்க்கத்தில் - "பதியானவன் தேசாந்தரத்தில் மரித்தால், பதிவ்ரதையான ஸ்த்ரீ பதியின் பாதுகைகளை மார்பில் அணைத்துக் கொண்டு ப்ஸரத்தையுடன் அக்னிப்ரவேசம் செய்ய வேண்டும். அவளின் ஸக்தியைத் தெரிந்து கொள்ளுங்கள். தன் பர்த்தா பாபியாயிருந்து நரகத்தை அடைந்து கொடிய பாசங்களால் கட்டப்பட்டு யமதூதர் வசமாகிப் பரவசனாய் இருந்தாலும், பிடாரன் பாம்பைப் புற்றினின்றும் இழுப்பது போல் தன் பர்த்தாவை நரகத்தினின்றும் இழுத்து ஸ்வர்க்கத்தை அடைந்து தேவஸ்த்ரீகளால் துதிக்கப்பட்டு 14 இந்த்ரர்களின் ஆயுள்வரையில் பர்த்தாவுடன் ஸுகிக்கின்றாள்." என்ற வசனம் ப்ராமணஸ்த்ரீயைத் தவிர்த்து மற்றவர் விஷயம்.*

"यत्तु — 'तस्मादुह न पुराऽऽयुषः स्वर्गकामी प्रेयादिति श्रुतिविरोधादनुगमनमयुक्तमिति, तच्च न। स्वर्गकाम्यायुषः प्राङ्न प्रेयादिति। स्वर्गफलोद्देशेनायुषः प्रागायुर्व्ययो न कर्तव्यो मोक्षार्थिना। यस्मादायुषः शेषे सति नित्यनैमित्तिककर्मानुष्ठानक्षपितान्तःकरणकलङ्कस्य श्रवणमनननिदिध्यासनसम्पत्तौ सत्यामात्मज्ञानेन नित्यनिरतिशयानन्द ब्रह्मप्राप्तिलक्षणमोक्षसम्भवः, तस्मादनित्याल्पसुखरूप स्वर्गार्थमायुर्व्ययो न कर्तव्य इत्यर्थः । अतश्च मोक्षमनिच्छन्त्याः स्वर्गार्थिन्या अनुगमनं युक्त मितरकाम्यानुष्ठानवदिति विज्ञानेश्वरः ॥

*"ஸ்வர்க்கத்தை விரும்பித் தன் ஆயுளுக்கு முன் இறக்கக் கூடாது." என்ற ச்ருதிவாக்யத்தால் அனுகமனம் யுக்தமன்று என்பது இல்லை. மோக்ஷத்தை விரும்புகின்றவன். ஸ்வர்க்கத்திற்காகத் தன் ஆயுளைக் குறைக்கக் கூடாது. மிச்சமுள்ள ஆயுஸ்ஸில் நித்ய நைமித்திக கர்மங்களை அனுஷ்டிப்பதால் சித்தத்தின் மலம் நீங்கி, ப்ஸரவணம், மநநம், நிதித்யாஸனம் இவைகள் ஸித்தித்து ஆத்மக்ஞானத்தால் நித்ய நிரதிசயாநந்தமான ப்ரம்மப்ராப்தி ரூபமான மோக்ஷம் ஸம்பவிக்கும்.*

ஆதலால், அநித்யமும் அல்பஸுகரூபமுமான ஸ்வர்க்கத்திற்காக ஆயுளைச் செலவிடக் கூடாது என்பது பொருள். ஆகையால் மோக்ஷத்தை விரும்பாதவளும், ஸ்வர்க்கத்தை இச்சித்தவளுமானவளுக்கு அனுகமனம் யுக்தமே, மற்றகாம்யகர்மானுஷ்டானம் போல்' என்கிறார் விக்ஞானேஶ்வரர்.

इदं चानुमरणं पतिव्रतयाऽनुष्ठितमुक्तरीत्या दम्पत्योरुभयोः श्रेयोहेतुः। पापीयस्याऽनुष्ठितं चेत् पापक्षयहेतुर्भवति । तथा च व्यासशातातपौ — 'अवमत्य च याः पूर्वं पतिं दुष्टेन चेतसा । वर्तन्ते याश्च सततं भर्तॄणां प्रतिकूलतः ।। भर्त्राऽनुमरणं काले याः कुर्वन्ति तथाविधाः । कामात् क्रोधाद्भयान्मोहात् सर्वाः पूता भवन्त्युत ।। आदिप्रभृति या साध्वी भर्तुः प्रियपरायणा । ऊर्ध्वं गच्छति सा तत्र भर्त्राऽनुमरणं गतेति ।। पुराणसारे ब्राह्मणीं प्रति नारदः — 'पापं यदि कृतं भद्रे परपूरुषसेवनात् । तथाऽन्यस्यापि पापस्य नाशो वह्निप्रवेशनात् । पतिव्रता धर्मपत्नी भर्तृशुश्रूषणे रता । याऽनुगच्छति भर्त्रा सा स्वर्गं यात उभौ ध्रुवमिति ।।

இந்த அனுமரணம் பதிவ்ரதையினால் அனுஷ்டிக்கப்பட்டால் இருவருக்கும் ஶ்ரேயஸ்ஸுக்குக் காரணமாகின்றது. பாபிஷ்டையினால் அனுஷ்டிக்கப் பட்டால் பாபக்ஷயத்திற்குக் காரணமாகின்றது. அவ்விதமே வ்யாஸரும் சாதாதபரும் - துஷ்டசித்தத்துடன் பர்த்தாவை அவமதித்திருந்தவர்களும், பர்த்தாவுக்குப் பிரதி கூலமாய் இருந்தவர்களும், பர்த்தா இறந்தபின், காமம், க்ரோதம், பயம், மோஹம் இவைகளுள் எக்காரணத்தினாலாவது அனுகமனம் செய்தாலும் அவர் பாபமற்றவராகின்றனர். ஆதிமுதல் பதிவ்ரதையாய் பர்த்தாவுக்குப் ப்ரியத்தைச் செய்பவளானவள் அனுமரணம் செய்தால் ப்ராமணியைக் குறித்து நாரதர் சொல்வது - பெண்ணே ! அன்யபுருஷ ஸங்கத்தாலும் வேறு காரணத்தாலும் உண்டாகிய பாபத்திற்கு அக்னி ப்ரவேசத்தால் நாசமுண்டாகிறது. பர்த்தாவின்

சுப்ரூஷையில் ப்ரியமுள்ள பதிவ்ரதையான தர்மபத்னி யானவள் அனுகமனம் செய்தால் தம்பதிகள் ஸ்வர்க்கத்தை நிச்சயமாய் அடைகின்றனர்.

### व्यभिचारिण्या निन्द्यत्वम्।

व्यभिचारिणीं प्रत्याह याज्ञवल्क्यः — 'हृताधिकारां मलिनां पिण्डमात्रोपजीविनीम्। परिभूतामधः शय्यां वासयेद्व्यभिचारिणीमिति ॥ पिण्डमात्रोपजीविनीं प्राणयात्रामात्रभोजनाम्। परिभूतां धिक्कारादिभिः। स्ववेश्मन्येव वासयेत्। मनुः — 'अपत्यलोभाद्या तु स्त्री भर्तारमतिलङ्घयेत्। सेह निन्दामवाप्नोति परलोकाच्च हीयते॥ व्यभिचारात्तु भर्तुः स्त्री लोके प्राप्नोति निन्द्यताम्। सृगालयोनिं प्राप्नोति पापरोगैश्च पीड्यते। पतिं हित्वाऽपकृष्टं स्वमुत्कृष्टं योपसेवते। निन्द्यैव लोके भवति परपूर्वेति चोच्यते। नान्योत्पन्ना प्रजाऽस्तीह न चाप्यन्यपरिग्रहे॥ न द्वितीयश्च साध्वीनां कचिद्भर्तोपदिश्यते' इति॥

### வ்யபிசாரிணியின் நிந்தை

யாக்ஞவல்க்யர் - வ்யபிசாரிணியை, வீட்டில் அதிகாரமற்றவளாயும், சோபையற்றவளாயும், ப்ராணதாரணத்திற்குப் போதுமான அன்னத்தை மட்டில் புஜிப்பவளாயும், அவமதிக்கப்பட்டவளாயும், பூமியிற்படுப்பவளாயும் வீட்டிலேயே வஸிக்கச் செய்ய வேண்டும். மனு - எந்த ஸ்த்ரீ குழந்தையின் ஆசையால் பர்த்தாவை விட்டுப் பரபுருஷனை அடைவாளோ அவள் இவ்வுலகில் பழிப்பை அடைவாள்; நற்கதியை யுமடையாள். ஸ்த்ரீ வ்யபிசாரத்தால் உலகத்தில் பழிப்பை அடைவாள். பிறகு நரியாய்ப் பிறப்பாள். பாப ரோகங்க ளாலும் பீடிக்கப்படுவாள். தாழ்ந்தவனானாலும் தன் பதியைவிட்டு உயர்ந்தவனான அன்யபுருஷனை நேசிப்பவள் உலகத்தில் நிந்திக்கப்படுவாள்; 'பரபூர்வை' என்றும் சொல்லப்படுவாள். அன்ய புருஷனால் உத்பத்தி

*செய்யப்பட்டவன் புத்ரனுகான். அன்யஸ்த்ரீயினிடத்தில் தனக்குப் பிறந்தவனும் புத்ரனுகான். பதிவ்ரதைகளுக்கு இரண்டாவது பர்த்தா ஒரு சாஸ்த்ரத்திலும் விதிக்கப் படவில்லை.*

श्रुतिरपि — 'तस्मान्नैका द्वौ पती विन्दत इति ।। याज्ञवल्क्यः — 'व्यभिचाराद्दतौ शुद्धिर्गर्भे त्यागो विधीयते । गर्भभर्तृवधादौ च तथा महति पातक' इति ।। ऋतौ शुद्धिरित्येतत् मानसव्यभिचाराभिप्रायम्। 'रजसा स्त्री मनोदुष्टे'त्युक्तत्वात् । गर्भे त्याग सति । शूद्रकृते तु गर्भे त्यागः। 'ब्राह्मणक्षत्रियविशां भार्याः शूद्रेण सङ्गताः । अप्रजाता विशुध्यन्ति प्रायश्चित्तेन नेतरा इति मनुस्मरणात् । तथा गर्भवधे भर्तृवधे महापातके च आदिग्रहणाच्छिष्यादिगमने च त्यागः । 'चतस्रस्तु परित्याज्याः शिष्यगा गुरुगा च या । पतिघ्नी च विशेषेण जुङ्गितोपगता च येति त्यागस्मरणात् ।। जुङ्गितः प्रतिलोमजः । त्यागश्च उपभोगधर्मकार्ययोः । न तु सर्वथा । तस्याः 'विप्रदुष्टां स्त्रियं भर्ता निरुन्ध्यादेकवेश्मनीति नियमात् ।।

*ஶ்ருதி- ஒரு ஸ்த்ரீ இரண்டு பர்த்தாக்களை அடைவதில்லை. யாக்ஞவல்க்யர்- வ்யபிசாரத்தாலுண்டான பாபம் ருதுவினுல் சுத்தமாகும். வ்யபிசாரத்தால் கர்ப்பம் தரித்தாலும், கர்ப்பஹத்தி, பர்த்ருஹத்தி முதலிய வற்றையும், மஹாபாபத்தையும் செய்தாலும் பரித்யாகம் செய்ய வேண்டும். ருதுவினுல் சுத்தி என்றது மாநஸ வ்யபிசாரத்தைப் பற்றியது. 'மானஸிகவ்யபிசார தோஷ முள்ளவள் ரஜஸ்ஸினுல் சுத்தமாவாள்' என்றிருப்பதால். சூத்ரனுல் கர்ப்பமேற்பட்டால் த்யாகம். ''ப்ராமண க்ஷத்ரிய வைஶ்ய ஸ்த்ரீகள் சூத்ரனுடன் சேர்ந்து கர்ப்பம் தரிக்காவிடில் ப்ராயச்சித்தத்தால் சுத்தராகின்றனர்; மற்றவர்கள் சுத்தராவதில்லை'' என்று மனுஸ்ம்ருதியால். அப்படியே கர்ப்பவதம், பர்த்ருவதம், மஹாபாதகம், ஆதிசப்தத்தால் சிஷ்யன் முதலியவர்களைச் சேர்தல் இவைகளிலும் பரித்யாகம்; சிஷ்யனைச் சேர்ந்தவள்,*

குருவைச் சேர்ந்தவள், பதியைக் கொன்றவள், ப்ரதிலோமஜனைச் சேர்ந்தவள் இந்நால்வருக்கும் பரித்யாகம் என்ற ஸ்ம்ருதியிருப்பதால். த்யாகம் என்பது போகத்திலும், தர்மகார்யத்திலும்; முற்றிலுமல்ல, 'தோஷமுள்ள ஸ்த்ரீயை, பர்த்தா தன்வீட்டிலேயே அடக்கி வைக்க வேண்டும்' என்று நியமமிருப்பதால்.

उशना — 'व्यभिचारिणीं भार्यां कुचेलपिण्डपरिभूतां निवृत्ताधिकारां चान्द्रायणं प्रायश्चित्तं प्राजापत्यं वा चारयेदिति ।। याज्ञवल्क्यः — 'यत् पुंसां परदारेषु तच्चैनां चारयेद्व्रतमिति ।। भृगुः — 'अशीतिर्यस्य वर्षाणि बालो वाऽप्यूनषोडशः । प्रायश्चित्तार्धमर्हन्ति स्त्रियो व्याधित एव चेति ।।

உசநஸ் - வ்யபிசாரிணியான பார்யையைத் தாழ்ந்த வஸ்த்ரம் சோறு இவைகளை மட்டில் கொடுத்து அவமதித்து அதிகாரமற்றவளாக்கி சாந்த்ராயணம் அல்லது ப்ராஜாபத்யம் அனுஷ்டிக்கச் செய்ய வேண்டும். யாக்ஞவல்க்யர் - புருஷர்களுக்குப் பரதாரகமனத்தில் சொல்லப்பட்ட வ்ரதத்தை, பரபுருஷகமனம் செய்தவளை அனுஷ்டிக்கச் செய்யவேண்டும். ப்ருகு - 80 வயதானவனும், 16 வயதிற்குட்பட்டவனும், ஸ்த்ரீகளும், பிணியாளனும், ப்ராயச்சித்தத்தின் அரைப்பாகம் அனுஷ்டிக்கக் கடவர்.

मनुः— 'कृतनिर्णेजनां चैतां न जुगुप्सेत कर्हिचित् । सोमः शौचं ददौ स्त्रीणां गन्धर्वश्च शुभां गिरम् । पावकस्सर्वमेध्यत्वं मेध्या वै योषितो ह्यतः' इति ।। कृतनिर्णेजनां - कृतप्रायश्चित्ताम् । परिणयनात् पूर्वं सोमगन्ध-वाग्नयः स्त्रियो यथा क्रमं भुक्त्वा तासां शौचमधुरवचनसर्वमेध्यत्वानि दत्तवन्तः । तस्मात् स्त्रियःसर्वत्र स्पर्शनालिङ्गनादिषु मेध्यभूता इत्यर्थः ।।

மனு - ப்ராயச்சித்தம் செய்து கொண்ட பிறகும் ஸ்த்ரீயினிடத்தில் அருவருப்பு கொள்ளக் கூடாது. ஏனெனில், விவாஹத்திற்குமுன், ஸோமன், கந்தர்வன், அக்னி இம்மூவர்களும் ஸ்த்ரீகளை முறையே அனுபவித்து

அவர்களுக்குச் சௌசம், மதுரவசனம், ஸர்வசுத்தி இவைகளைக் கொடுத்தனர். ஆகையால் ஸ்த்ரீகள் சுத்தர்களாவர்.

यस्त्वन्तरेणैव निमित्तं दारान् परित्यजति या च भर्तारं त्यजति तयोः निष्कृतिमाह आपस्तंबः। दारव्यतिक्रमी खराजिनं बहिर्लोम परिधाय दारव्यतिक्रमिणे भिक्षामिति सप्तागाराणि चरेत् सा वृत्तिष्षण्मासान्। स्त्रियास्तु भर्तृव्यतिक्रमे कृच्छ्रद्वादशरात्र्याभ्यासस्तावन्तं कालमिति ॥ इति स्त्रीधर्माः ॥

காரணமின்றிப் பார்யையை கைவிடுபவனுக்கும், பர்த்தாவை கைவிடுபவளுக்கும் ப்ராயச்சித்தம் விதிக்கின்றார் ஆபஸ்தம்பர் - தாரத்யாகியானவன் கழுதைத் தோலை வெளியில் மயிருள்ளதாய் உடுத்திக் கொண்டு, 'மனைவியிடம் தவறாக நடந்து கொண்டவனுக்கு பிக்ஷை கொடுங்கள்' என்று சொல்லிக் கொண்டு 7-வீடுகளில் பிக்ஷை எடுத்துப் புஜிக்கவேண்டும். இவ்விதமே ஆறுமாஸமிருக்க வேண்டும். பர்த்தாவை கைவிட்டவள் ப்ராஜாபத்யக்ருச்ரத்தை 6 மாஸகாலம் அடிக்கடி செய்ய வேண்டும்.

## गृहस्थधर्माः ।

दक्षः - 'विधा नव गृहस्थस्य (सव्ययानि) ईषद्दानानि वै नव। नव कर्माणि च तथा विकर्माणि तथा नव ॥ प्रच्छन्नानि नवान्यानि प्रकाशानि पुनर्नव। सफलानि नवान्यानि निष्फलानि तथा नव ॥ अदेयानि नवान्यानि वस्तुजातानि सर्वदा। नवका नव निर्दिष्टा गृहस्थोन्नतिकारकाः ॥

### க்ருஹஸ்த தர்மங்கள்

தக்ஷர் - க்ருஹஸ்தனுக்கு ஒன்பது நடைமுறைகள். ஈஷத்தானங்கள் -9 கர்மங்கள் 9, விகர்மங்கள் 9, ப்ரச்சன்னங்கள் 9, ப்ரகாசங்கள் 9, ஸபலங்கள் 9, நிஷ்பலங்கள் 9, அதேயங்கள் (கொடுக்கத்தகாதவை) 9, இவ்விதம் ஒன்பது நவகங்கள் க்ருஹஸ்தனுக்கு உயர்வைச்

செய்பவைகள். அம்முறைகளைச் சொல்லுகின்றேன்.

विधावस्तूनि वक्ष्यामि विशिष्टे गृहमागते। मनश्चक्षुर्मुखं वाक्यं सौम्यं दत्वा चतुष्टयम्।। अभ्युत्थानमिहागच्छ पूर्ववादः प्रियंवदः।उपासनमनुव्रज्या कार्याण्येतानि नित्यशः ।।

பெரியோர் க்ருஹத்திற்கு வந்தவுடன், மனம், கண், முகம், நல்வார்த்தை இவைகளைக் கொடுத்து, எழுந்திருத்தல், இங்கு வரவேண்டும் என்றுரைத்தல், முன்னரே ப்ரியமாய்ப் பேசுதல், உபாஸித்தல், பின் செல்லுதல் இவைகளைச் செய்யவேண்டும். இவ்விதம் முறைகள் 9.

ईषद्दानानि चान्यानि भूमिरापस्तृणानि च। पादशौचं तथाऽभ्यङ्गमासनं शयनं तथा। किञ्चिद्देयं यथाशक्ति नास्यानश्नन् गृहे वसेत्। सज्जलं चार्थिने देयमेतान्यपि सदा गृहे।।

அதிதிக்கு பூமி, ஜலம், உட்காருவதற்குப் புற்கள், பாதப்ரக்ஷாளனம், எண்ணெய் இடுதல், ஆஸனம், சயனம், சாப்பாட்டிற்கான வஸ்து, நல்லஜலம் இவைகளையாவது கொடுக்க வேண்டும். ஏழைகளான ஸாதுக்கள் வீட்டிலும் இவைகள் இருக்கக் கூடியவையே. அதிதி சாப்பிடாமல் இவன் வீட்டில் வஸிக்கக் கூடாது. இவை ஈஷத்தானங்களாம்.

सन्ध्या स्नानं जपो होमः स्वाध्यायो देवतार्चनम्। वैश्वदेवेक्षणातिथ्य मुदकं वा स्वशक्तितः ।।

ஸந்த்யை, ஸ்நானம், ஜபம், ஹோமம், ப்ரம்மயக்ஞம், தேவபூஜை, வைஶ்வதேவம், அதிதியை எதிர்பார்த்தல், தன்சக்திக்குத் தகுந்த அதிதிபூஜை இவ்விதம் கர்மங்கள் ஒன்பது.

(पितृदेवमनुष्याणां दीनानाथतपस्विनाम्। गुरुमातृपितॄणां च संविभागो यथार्हतः ।। एतानि नवकर्माणि विकर्माणि तथा पुनः ।।)

*(பித்ருக்கள், தேவர், மனுஷ்யர், ஏழை, அநாதர், தவசி, குரு, தாய், தந்தை இவர்களுக்கு முறையுடன் பங்களித்தல் இவை 9 தர்மங்கள்.)*

अनृतं पारदार्यं च तथाऽभक्ष्यस्य भक्षणम् ।। अगम्यागमनापेयपाने स्तेयं च हिंसनम् । अश्रौतकर्माचरणं मैत्रधर्मबहिष्कृतम् ।। नवैतानि विकर्माणि तानि सर्वाणि वर्जयेत् ।।

*பருகத் தகாததைப் பருகுதல், பொய்பேசுதல், பிறர் மனைவியை நாடுதல் உண்ணத் தகாததை உண்பது சேரக்கூடாத பெண்களுடன் சேர்தல், திருட்டு, ஹிம்ஸை, வேதத்துடன் முரண்பட்ட நடைமுறை, நட்புக்கு வெளிப்பட்ட பழக்கம், இவை தவறான செயல்கள்.*

पैशुन्यमनृतं मायां कामं क्रोधं तथाऽप्रियम् । द्वेषं दम्भं परद्रोहं विकर्माणि विवर्जयेत् ।।

*கோட்சொல்லுதல், பொய், வஞ்சனை, காமம், க்ரோதம், அப்ரியம், த்வேஷம், தம்பம், பரத்ரோஹம் இவைகளை விடவேண்டும். இவ்விதம் விகர்மங்கள் 9.*

नृत्तं गीतं कृषिस्सेवा वाणिज्यं लवणक्रिया । द्यूतकर्मायुधीयं च न प्रशस्तानि कर्मसु ।।

*கூத்து, பாட்டு, க்ருஷி, ஸேவை, வ்யாபாரம், உப்புச்செய்தல், சூதாட்டம், ஆயுதம் தரித்தல் இவை இழிவானவை.*

आयुर्वित्तं गृहच्छिद्रं मन्त्रो मैथुनमौषधम् । तपो दानावमानौ च नव गोप्यानि सर्वदा ।।

*ஆயுஸ், பணம், வீட்டிலுள்ளதர்மம், மந்த்ரம், மைதுனம், ஔஷதம், தபஸ், தானம் அவமானம் இவைகளை வெளியிடக் கூடாது. இவ்விதம் கோப்யங்கள் (மறைக்கத் தக்கவை) 9.*

प्रायोग्यमृणशुद्धिश्च दानाध्यनविक्रयाः । कन्यादानं वृषोत्सर्गो रहः पापमकुत्सनम् ।। प्रकाश्यानि न वैतानि गृहस्थाश्रमिणस्तथा ।।

*வட்டிக்குக் கொடுத்து வாங்குதல், கடன் தீர்த்தல், தானம், அத்யயனம், விக்ரயம், கன்யாதானம், வ்ருஷபோத்ஸர்ஜனம், ரஹஸ்யபாபம், பழிப்பின்மை இந்த ஒன்பதையும் க்ருஹஸ்தன் ப்ரகாசப்படுத்த வேண்டும். இவ்விதம் ப்ரகாச்யங்கள் 9.*

मातापित्रोर्गुरौ मित्रे विनीते चोपकारिणि । दीनानाथविशिष्टेषु दत्तं तु सफलं भवेत् ।।

*மாதா, பிதா, குரு, மித்ரன், விநீதன், உபகாரி, ஏழை, அநாதன், சிஷ்டன் இவர்களுக்குக் கொடுப்பது ஸபலமாகும். இவ்விதம் ஸபலங்கள் 9.*

धूर्ते वन्दिनि मल्ले च कुवैद्ये कितवे शठे । चाटुचारणचारेभ्यो दत्तं भवति निष्फलम् ।।

*போக்கிரி, ஸ்துதிபாடகன், மல்லன், கெட்ட வைத்யன், சூதாடி, வஞ்சகன், வாயாடி, சாரணன், திருடன் இவர்களுக்குக் கொடுத்தது நிஷ்பலம். இவ்விதம் நிஷ்பலங்கள் 9.*

सामान्यं याचितं न्यास आधिर्दाराश्च तद्धनम् । अन्वाहितं च निक्षेपं सर्वस्वं चान्वये सति ।। आपत्स्वपि न देयानि नव वस्तूनि सर्वदा । यो ददाति स मूढात्मा प्रायश्चित्तीयते द्विजः । नवकस्य च वेत्तारमनुष्ठानपरं द्विजम् । इह लोके परत्रापि श्रीश्चैव न विमुञ्चतीति ।।

*பொதுவான சொத்து, யாசனையால் கிடைத்தது. வைப்பு, மனக்குறை, மனைவி, மனைவியின் பொருள், அன்வாஹிதம், நிக்ஷேபம், வம்சமிருக்கும்போது ஸகலதனம் இவை 9-ம் ஆபத்திலும் கொடுக்கத்தகாதவை. கொடுப்பவன் ப்ராயச்சித்தியய் ஆவான். இவ்விதம்*

*ஒன்பதைத் தெரிந்தவனும், அனுஷ்டானபரனுமான த்விஜனைவிட்டு இகபரவுலகங்களிலும் லக்ஷ்மி விலகுவதில்லை.*

## गार्हस्थ्यप्रशंसा ॥

तत्र मनुः — 'सर्वेषामेव चैतेषां वेदश्रुतिविधानतः । गृहस्थ उच्यते श्रेष्ठः स त्रीनेतान् बिभर्ति हीति ॥ वेदश्रुतिविधानतः - वेदस्य श्रुत्या प्रत्यक्षेण विधानतः । वैदिकानामाधानादीनां कर्मणां गृहस्थमधिकृत्य विधानस्य प्रत्यक्षश्रुतिमूलत्वादित्यर्थः ॥

### க்ருஹஸ்தாப்ரமத்தின் ப்ரசம்ஸை

மனு - *இந்நான்கு ஆப்ரமிகளுள், ஆதானம் முதலிய கர்மங்களை க்ருஹஸ்தனைக் குறித்து வேதம் ப்ரத்யக்ஷமாய் விதிப்பதால், க்ருஹஸ்தனே சிறந்தவனாகச் சொல்லப்படுகிறான்; அவன் மற்ற மூன்று ஆச்ரமிகளையும் காப்பதால்.*

स एव — 'यथा नदीनदाः सर्वे सागरे यान्ति संस्थितिम् । तथैवाश्रमिणः सर्वे गृहस्थे यान्ति संस्थितिम् । सन्न्यस्य सर्वकर्माणि कर्मदोषानपानुदन् । नियतो वेदमभ्यस्यन् पुत्रैश्वर्ये सुखं वसेत् ॥ पुन्नाम्नो नरकाद्यस्मात् पितरं त्रायते सुतः । तस्मात् पुत्र इति प्रोक्तः स्वयमेव स्वयंभुवा । एवं सन्न्यस्य कर्माणि स्वकार्यपरमोऽस्पृहः । सन्न्यासेनापहत्यैनः प्राप्नोति परमां गतिमिति ॥

*எல்லா நதிகளும் நதங்களும் ஸமுத்ரத்தில் வந்து சேர்வது போல் எல்லா ஆப்ரமிகளும் க்ருஹஸ்தனிடத்தில் சேர்கின்றனர். ஸகலகர்மங்களையும் ஸந்யாஸம் செய்து, கர்மங்களால் உண்டாகும் பாபங்களைப் போக்குகின்றவனாய், நியமத்துடன் வேதத்தை அப்யஸிப்பவன், புத்ரன் ஐப்வர்யம் இவைகளை அடைந்து ஸுகமாய் வஸிப்பான். 'புத்' என்னும் நரகத்தினின்றும் பிதாவைக்*

வைராக்யமுடையவன் விவாஹமாகாதவனாயினும் ஸன்யாஸம் பெறலாம். பராசரர் - விதுரன் முதலியவரும் வைராக்யத்தால் ஸன்யாஸம் பெறலாம். ஸன்யாஸத்தை விதியுடனேயே க்ரஹிக்க வேண்டும்.

अङ्गिराः - 'विरक्तः सन्न्यसेद्विद्वाननिष्ट्वाऽपि द्विजोत्तमः। प्रकर्तुमथ शक्तोऽपि जुहोति यजति क्रियाः। अन्धः पङ्गुर्दरिद्रो वा विरक्तः सन्न्यसेद् द्विजः। सर्वेषामेव वैराग्यं सन्न्यासे तु विधीयते। पतेदेवाविरक्तो यः सन्न्यासं कर्तुमिच्छति। पुनर्दारक्रियाभावे मृतभार्यः परिव्रजेदिति ॥

அங்கிரஸ் - வித்வானான ப்ராமணன் ஹோமம் யாகம் இவைகளைச் செய்யச் சக்தியுள்ளவனாயினும் விரக்தனாகில் யாகம் செய்யாமலே ஸன்யாஸம் பெறலாம். குருடன், நொண்டி தரித்ரன் இவ்விதமான ப்ராமணனும் விரக்தனானால் ஸன்யஸிக்கலாம். ஸன்யாஸத்தில் வைராக்யம் எல்லோருக்கும் விதிக்கப்படுகிறது. வைராக்யமற்றவன் ஸன்யாஸத்தை இச்சித்தால் பதிதனாவான். தாரமிழந்தவன் மறுவிவாஹம் செய்து கொள்ளாவிடில் ஸன்யஸிக்கலாம்.

अन्धपङ्ग्वोः सन्न्यासविधानं विरक्तिप्रशंसार्थं न पुनस्तत् प्राप्त्यर्थम् ॥ 'आरूढपतितो व्रात्यः कुनखी श्श्यावदन्तकः। क्षयी तथाऽङ्गविकलो न तु सन्न्यासमर्हतीति दक्षस्मरणात् ॥ अङ्गिराः - 'यदा मनसि सञ्जातं वैतृष्ण्यं सर्ववस्तुषु। तदा सन्न्यासमिच्छन्ति पतितस्स्याद्विपर्यय इति ॥

குருடன், நொண்டி இவர்களுக்கும் ஸன்யாஸம் விதித்தது விரக்தியைப் பாராட்டவே அன்றி அவர்களுக்கு விதிப்பதற்கல்ல. ஏனெனில் - "ஆருடபதிதன், வ்ராத்யன், சொத்தைநகமுடையவன், சொத்தைப்பல்லன், க்ஷயரோகமுடையவன், அங்கஹீநன் இவர்கள் ஸன்யாஸத்திற்கு அர்ஹரல்லர்." என்று தக்ஷஸ்ம்ருதியினால். அங்கிரஸ் - எப்பொழுது ஸகல

வஸ்துக்களிலும் வைராக்யம் உண்டாகின்றதோ அப்பொழுது தான் ஸன்யாஸம் பெறலாம் என நினைக்கின்றனர் பெரியோர். இல்லாவிடில் பதிதனுவான்.

हारीतः — 'विरक्तः प्रव्रजेद्धीमान् संरक्तस्तु गृहे वसेत्। सरागो नरकं याति प्रव्रजन् हि द्विजाधम' इति ।। व्यासः — 'यस्यैतानि सुगुप्तानि जिह्वोपस्थोदरं करः। सन्यसेदकृतोद्वाहो ब्राह्मणो ब्रह्मचर्यवान्।। परमात्मनि यो रक्तो विरक्तोऽपरमात्मनि ।। सर्वैषणाविनिर्मुक्तः स भैक्षं भोक्तुमर्हति। पूजितो वन्दितश्चैव सुप्रसन्नो यथा भवेत्।। तथा चेत्ताड्यमानस्तु तदा भवति भैक्षभुगिति ।।

ஹாரீதர் - நற்புத்தியுள்ளவன் விரக்தனுனல் ஸன்யஸிக்கலாம். இல்லாவிடில் க்ருஹாஶ்ரமத்திலேயே இருக்க வேண்டும். விஷயராகமுள்ள ப்ராமணுதமன் ஸன்யாஸம் பெற்ருல் நரகமடைவான். வ்யாஸர் - நாக்கு; குஹ்யம், வயிறு, கை இவைகளை ஜயித்த ப்ரம்மசாரியான ப்ராமணன் விவாஹமில்லாமலே ஸன்யாஸம் பெறலாம். பரமாத்மாவினிடம் அன்புள்ளவனும், மற்றவையில் அன்பில்லாதவனும், எல்லாஏஷணைகளாலும் விடுபட்டவனுமே ஸன்யாஸம் பெற்றுப் பிக்ஷையைப் புஜிக்க அர்ஹனுவான். பூஜையாலும், நமஸ்காரத்தாலும் தெளிவது போல், அடியினுலும் (துக்கமின்றி) தெளிவுடையவனே பிக்ஷான்னத்தைப் புஜிக்க அர்ஹனுவான்.

क्रतुः — 'अहमेवाक्षरं ब्रह्म वासुदेवाख्यमव्ययम्। इति भावो ध्रुवो यस्य तदा भवति भैक्षभुक् ।। यस्मिन् क्षान्तिः शमः शौचं सत्यं सन्तोष आर्जवम्। आकिञ्चन्यमदंभश्च स कैवल्याश्रमे वसेत्।। यदा न कुरुते भावं सर्वभूतेषु पापकम्। कर्मणा मनसा वाचा तदा भवति भैक्षभुगिति ।।

க்ரது - குறைவு, நாசம் இவையற்ற வாஸுதேவனெனும், ப்ரம்மம் நானே; என்ற

*த்ருடபாவமுள்ளவனே ஸன்யாஸத்திற்கு அர்ஹனாவான். எவனிடத்தில் பொறுமை, சமம், சௌசம், ஸத்யம், ஸந்தோஷம், ஆர்ஜவம், (நேர்மை) ஆகிஞ்சன்யம் (ஏழ்மை) கபடமின்மை இவைகள் இருக்கின்றவோ அவன் ஸன்யாஸார்ஹன். ஸகல ப்ராணிகளுக்கும், மனம், வாக், காயம் இவைகளினால் கெடுதி செய்யாதவன் ஸன்யாஸர்ஹனாகிறான்.*

माधवीये पाराशरे— 'परिभोगात्परिच्छेदात्परिपूर्णविलोकनात्। परिपूर्णफलत्वाच्च परिव्राजक उच्यते। परितो व्रजते नित्यं परं वा व्रजते पुनः। हित्वा चैवापरं जन्म परिव्राजक उच्यते' इति ॥

*பராசர மாதவீயத்தில் - போகங்களை விடுவதாலும், பகுத்தறிவதாலும், பரிபூர்ணவஸ்துவைப் பார்ப்பதாலும், பரிபூர்ணமான பலனுடையவனாதலாலும் பரிவ்ராஜகன் எனப்படுகிறான். எப்பொழுதும் எங்கும் செல்வதால், அல்லது மறு பிறப்பைத் தொலைத்துப் பரத்தை அடைவதால் பரிவ்ராஜகன் எனப்படுகிறான்.*

व्यासः — 'प्रवृत्तिलक्षणं कर्मज्ञानं सन्न्यासलक्षणम्। तस्मात् ज्ञानं पुरस्कृत्य सन्न्यसेदिह बुद्धिमानिति ॥ मनुः—'दशलक्षणकं धर्ममनुतिष्ठन् समाहितः। वेदान्तान्विधिवच्छ्रुत्वा सन्न्यसेदनृणो द्विजः ॥ धृतिः क्षमा दमोऽस्तेयं शौचमिन्द्रियनिग्रहः। धीर्विद्या सत्यमक्रोधो दशकं धर्मलक्षणमिति। धृतिः - स्वधर्मापरित्यागः। क्षमा - अवमानसहत्वम् ॥

*வ்யாஸர் - ப்ரவ்ருத்தி மார்க்கத்திற்குக் கர்மமும், ஸன்யாஸத்திற்கு ஞானமும் லக்ஷணமாம், ஆகையால் புத்திமான் ஞானத்தை முன்னிட்டு ஸன்யாஸமடைய வேண்டும். மனு - பத்துவிதமுள்ள தர்மத்தைக் கவனமுடையவனாய் அனுஷ்டித்து, வேதாந்தங்களை விதிப்படி ச்ரவணம் செய்து, ருணங்களைத் தீர்த்தவனான ப்ராமணன் ஸன்யாஸம் பெறலாம். த்ருதி (ஸ்வதர்மத்தை விடாதிருத்தல்) பொறுமை, மனோநிக்ரஹம்,*

திருடாமலிருத்தல், சௌசம், இந்த்ரியநிக்ரஹம், சாஸ்த்ர ஜ்ஞானம், ஆத்மஜ்ஞானம், ஸத்யம், கோபமின்மை, இந்தப் பத்தும் தர்மஸ்வரூபமாம்.

दक्षः — 'तस्मात्त्यक्तकषायेण कर्तव्यं दण्डधारणम्। इतरस्तु न शक्नोति विषयैश्चाभिभूयत' इति ।। जाबालिः — 'सन्यासनिश्चयं कृत्वा पुनर्न च करोति यः। कुर्यात् कृच्छ्रमविश्रान्तः षन्मासान् वृत्त्यनन्तरम् ।। सन्यासं पातयेद्यस्तु पतितं न्यासयेत्तु यः। सन्यासविघ्नकर्ता च त्रीनेतान् पतितान् विदुः ।। सम्प्रत्यवसितानां च महापातकिनां तथा। व्रात्यानामभिशस्तानां सन्यासं नैव कारयेत् ।। व्रतयज्ञतपोदान-होमस्वाध्यायवर्जितम्। सत्यशौचपरिभ्रष्टं सन्यासं नैव कारये' दिति ।।

தக்ஷர் - ஆகையால் கஷாயங்களை (விஷயப் பற்றுகளை) விட்டவனே ஸன்யாஸம் பெறலாம். மற்றவன் சக்தனுகான்; விஷயங்களால் அவமதிக்கப்படுவான். ஜாபாலி - ஸன்யாஸம் செய்து கொள்ளவதாய் நிச்சயித்துப் பிறகு செய்து கொள்ளாதவன் ஆறுமாஸம் க்ருச்ரத்தை ஓய்வின்றி அனுஷ்டிக்க வேண்டும். ஸந்யாஸத்தைக் கெடுத்துக் கொண்டவனும், பதிதனுக்கு ஸன்யாஸம் செய்வித்தவனும், ஸன்யாஸித்திற்கு விக்னம் செய்தவனும் பதிதர் எனக்கூறுகின்றனர். ஆச்ரமப்ரஷ்டர்களுக்கும், மகாபாதகிகளுக்கும், வ்ராத்யர்களுக்கும், அபிசஸ்தர் (குறை கூறபட்டவர்) களுக்கும் ஸன்யாஸம் செய்விக்கக் கூடாது. வ்ரதம் யஜ்ஞம், தபஸ், தானம், ஹோமம், அத்யயனம் இவைகளில்லாதவனுக்கும், ஸத்யம் சௌசமில்லாதவனுக்கும் ஸன்யாஸம் செய்விக்கக் கூடாது.

बृहस्पतिः — 'अतीतान्न स्मरेद्भोगान्न तथाऽनागतानपि। प्राप्तांश्च नाभिनन्देद्यः स कैवल्याश्रमे वसेत् ।। अन्तस्थानीन्द्रियाण्यन्तर्बहिष्ठान् विषयान् बहिः। शक्नोति यः सदा कर्तुं स कैवल्याश्रमे वसेदिति ।। अङ्गिराः — 'उत्पन्ने सङ्कटे घोरे चोरव्याघ्रादिगोचरे। भयभीतस्य सन्यासमङ्गिरा

मुनिरब्रवीदिति ।। सुमन्तुः — 'आपत्काले तु सन्यासः कर्तव्य इति शिष्यते । जरयाऽभिपरीतेन शत्रुभिर्व्यार्थितेन च ।।

ப்ருஹஸ்பதி - சென்ற போகங்களையும், வராத போகங்களையும் நினைக்காமலும், கிடைத்த போகங்களைக் கொண்டாடாமலுமிருப்பவன் ஸன்யாஸாஸ்ரமத்தில் இருக்கலாம். உட்சென்ற இந்த்ரியங்களை உள்ளிலும், வெளியிலுள்ள விஷயங்களை வெளியிலும் நிறுத்துவதற்குச் சக்தியுடையவன் ஸன்யாஸாஸ்ரமத்திலிருக்கலாம். அங்கிரஸ் - பயங்கரமான ஸங்கடமுண்டாகிய காலத்திலும், திருடர் புலி முதலியவை இருக்குமிடத்திலும் பயப்பட்டவனுக்கு ஸன்யாஸத்தை அங்கிரோமுனி அனுமதித்தார். ஸுமந்து - ஆபத்காலத்தில் ஸன்யஸிக்கலாமென்று சாஸ்த்ரத்தால் சொல்லப்படுகிறது. அதிக ஜரையுடையவனும், சத்ருக்களால் தொந்தரை யுற்றவனும் ஸன்யாஸம் செய்து கொள்ளலாம்.

आतुराणां च सन्यासे न विधिर्नैव च क्रिया । प्रैषमात्रं समुच्चार्य सन्यासं तत्र पूरयेत् ।। सन्न्यस्तोऽहमिति ब्रूयात् सवनेषु त्रिषु क्रमात् । त्रीन् वारांस्तु त्रिलोकात्मा शुभाशुभविशुद्धये ।। यत्किञ्चिद्बन्धकं कर्म कृतमज्ञानतो मया। प्रमादालस्यदोषाद्यत्तत् सर्वं सन्त्यजाम्यहम् ।। एवं सञ्चिन्त्य भूतेभ्यो दद्यादभयदक्षिणाम् । पद्भ्यां कराभ्यां विहरन्नाहं वाक्कायमानसैः । करिष्ये प्राणिनां हिंसां प्राणिनस्सन्तु निर्भया' इति ।।

ஆதுரர்களின் ஸன்யாஸத்தில் விதியில்லை; க்ரியையுமில்லை. ப்ரைஷத்தை மட்டில் உச்சரிக்கச் செய்து ஸன்யாஸத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். ஸந்யஸ்தோऽஹம் நான் துறவி என்று மந்த்ர மத்யம தாரஸ்வரங்களில் மூன்று தடவை சொல்ல வேண்டும். த்ரிலோகஸ்வரூபனாய் புண்யபாபங்களை விடுவதற்குச் சக்தனாகிறான். நான் அறிவின்மையால் செய்த பந்தகமான கர்மத்தையும், கவனமின்மையினாலும் சோம்பலினாலும்

செய்த கர்மத்தையும் முழுதும் விடுகிறேன் என்றிவ்விதம் த்யானித்துப் பிறகு ப்ராணிகளுக்கு அபயப்ரதானம் செய்ய வேண்டும்; கால்களாலும் கைகளாலும் சேஷ்டிக்கும் நான் மனோவாக்காயங்களால் ப்ராணிகளுக்குத் தொந்தரை செய்யேன். ப்ராணிகள் பயமற்றவையாய் இருக்க வேண்டும்' என்று.

सङ्ग्रहे—'आतुराणां सन्न्यासे सङ्कल्प -सावित्रीप्रवेशन -पाणिहोम-प्रैषोच्चारणाभयदानानि विहितानीति ॥ विष्णुः — 'सन्न्यस्तमिति यो ब्रूयात् प्राणैः कण्ठगतैरपि । न तत् क्रतुशतेनापि प्राप्तुं शक्नोति मानव इति। अङ्गिराः — 'आतुराणां विशेषोऽस्ति न विधिर्नैव च क्रिया । प्रैषमात्रस्तु सन्न्यास आतुराणां विधीयत धति ॥ श्रुतिरपि — 'यद्यातुरः स्यान्मनसा वाचा वा सन्न्यसेदिति ॥

ஸங்க்ரஹத்தில் - ஆதுரர்களின் ஸன்யாஸத்தில் ஸங்கல்பம், ஸாவித்ரீப்ரவேசனம், பாணிஹோமம், ப்ரைஷோச்சாரணம், அபயதானம் இவைகள் விதிக்கப்படு கின்றன. விஷ்ணு - ப்ராணன்கள் கண்டத்திலிருக்கும் ஸமயத்திலும் 'ஸன்யஸ்தம்' என்று உச்சரிப்பவனின் புண்யத்தை மற்றவன் அநேக யாகங்களாலும் அடையமுடியாது. அங்கிரஸ் - ஆதுரர்களின் ஸன்யாஸத்தில் விசேஷமுண்டு. அதில் விதியுமில்லை, க்ரியையுமில்லை. அதில் ப்ரைஷோச்சாரணம் மட்டில் விதிக்கப்படுகிறது. ஶ்ருதியும் - ஆதுரனுகில் மனதினுலாவது வாக்கினுலாவது ஸன்யஸிக்கலாம்.

सन्न्यासफलनिरूपणम् ।

यमः — 'ये च सन्तानजा दोषा ये च स्युः कर्मसम्भवाः । सन्न्यासस्तान् दहेत् सर्वांस्तुषाग्निरिव काञ्चनमिति ॥ मनुः — 'मृत्तोयैः शुध्यते शोद्ध्यं नदी वेगेन शुद्ध्यति । रजसा स्त्री मनोदुष्टा सन्न्यासेन द्विजोत्तमः ॥ यो दत्वा सर्वभूतेभ्यः प्रव्रजत्यभयं गृहात् । तस्य तेजोमया

लोके भवन्ति ब्रह्मवादिनः ।। यस्मादपि हि भूतानां भयं नोत्पद्यते क्वचित् । तस्य देहाद्विमुक्तस्य भयं नास्ति कुतश्चन ।। यदा भावेन भवति सर्वभावेषु निस्पृहः ।। तदा सुखमाप्नोति प्रेत्य चेह च शाश्वतमिति ।।

**ஸன்யாஸத்தின் பலன்**

யமன் -வம்சத்திலுண்டாகியதும், கர்மங்களாலுண்டாகியதுமானதோஷங்கள் முழுவதையும், ஸன்யாஸம் தஹிக்கும்; பொன்னின் அழுக்குக்களை உமித்தணல் போல். மனு- மலாதிகளால் அசுத்தமான பாத்ரம் முதலியவை மண், ஜலம், இவைகளால் சுத்தமாகும். நதியின் ப்ரவாஹம் வேகத்தால் சுத்தமாகும். மானஸ வ்யபிசாரத்தால் தோஷமுள்ள ஸ்த்ரீ ரஜஸ்ஸினால் சுத்தையாவாள். ப்ராமணன் ஸன்யாஸத்தால் சுத்தனாவான். ஸமஸ்த பூதங்களுக்கும் அபயப்ரதானம் செய்து க்ருஹஸ்தாஸ்ரமத்தினின்றும்ஸன்யாஸத்தை அடைகின்றவனுக்குத் தேஜோமயங்களான லோகங்கள் ஸித்திக்கின்றன. எவனிடத்தினின்று ப்ராணிகளுக்குப் பயம் உண்டாவதில்லையோ, அவனுக்குச் சரீரநாசத்திற்குப் பிறகு எதனிடமிருந்து பயம் உண்டாவதில்லை. விஷயங்களில் தோஷபாவனையினால், ஸகல விஷயங்களிலும் ஆசையற்றவனாய் எப்பொழுது ஆகின்றானோ, அப்பொழுது இகபரவுலகங்களில் அழிவற்ற ஸுகத்தை அடைகின்றான்.

याज्ञवल्क्योऽपि — 'अकार्यकारिणां दानं वेगो नद्याश्च शुद्धिकृत्। शोध्यस्य मृच्च तोयं च सन्न्यासोऽथ द्विजन्मनामिति ।। पराशरः — 'द्वाविमौ पुरुषौ लोके सूर्यमण्डलभेदिनौ । परिव्राड्योगयुक्तश्च रणे चाभिमुखो हतः । सन्न्यस्तं ब्राह्मणं दृष्ट्वा स्थानाच्चलति भास्करः । एष मे मण्डलं भित्वा परं स्थानं प्रयास्यतीति ।। व्यासः — 'द्वे रूपे वासुदेवस्य चरं चाचरमेव च । चरं सन्न्यासिनां रूपमचलं प्रतिमादिकमिति ।।

யாக்ஞவல்க்யர் - அகார்யம் செய்தவர்க்குத் தானமும், நதீப்ரவாஹத்திற்கு வேகமும், அசுத்தமான

பாத்ரம் முதலியவைக்கு மண்ணும் ஜலமும், ப்ராமணனுக்கு ஸன்யாஸமும் சுத்திகாரணமாகும். பராசரர் - யோகியான ஸன்யாஸி, யுத்தத்தில் எதிரில் நின்று சண்டை செய்து சத்ருவால் கொல்லப்பட்டவன் இவ்விருவரும் ஸூர்யமண்டலத்தைப் பிளந்து அப்புறமுள்ள உலகை அடைகின்றனர். ஸன்யாஸியாகிய ப்ராமணனைப் பார்த்து ஸூர்யன் தன் ஸ்தானத்தினின்றும் சலிக்கிறான்; இந்தப் ப்ராமணன் என் மண்டலத்தைப் பிளந்து கொண்டு மேலான ஸ்தானத்தை அடையப் போகிறான் என்று. வ்யாஸர் - வாஸுதேவனுக்குச் சரம், அசரம் என்று இரண்டு ரூபங்களாம். சரமென்பது ஸன்யாஸிகளின் ரூபம், அசரமென்பது ப்ரதிமை முதலியவாம்.

विष्णुः — 'एकरात्रोषितस्यापि यतेर्या गतिरुच्यते। न सा शक्या गृहस्थेन प्राप्तुं क्रतुशतैरपीति ।। दक्षः — 'त्रिंशत्परांस्त्रिंशदपरान् त्रिंशच्च परतः परान्। सद्यस्सन्न्यासनादेव नरकात्त्रायते पितॄनिति ।। अङ्गिराः — 'षष्टिं कुलान्यतीतानि षष्टिमागामिकानि च। कुलान्युद्धरते प्राज्ञः सन्न्यस्तमिति यो वदेदिति ।।

விஷ்ணு - ஒருநாள் மட்டிலுமாவது ஸன்யாஸியாயிருந்தவனுக்கு எந்த உலகமோ அது க்ருஹஸ்தனால் நூறுயாகங்களாலுமடைய முடியாததாகும். தக்ஷர் - ஸன்யாஸம் செய்து கொண்டவன் அக்காலத்திலேயே 90 தலைமுறையிலுள்ள பித்ருக்களை நரகத்தினின்றும் காப்பாற்றுகிறான். அங்கிரஸ் - எவன் 'ஸன்யஸ்தம்' (துறவு ஏற்கப்பட்டது) என்று உச்சரிப்பானோ அவன் சென்ற அறுபது குலங்களையும், இனிவரும் அறுபது குலங்களையும் நரகத்தினின்றும் காப்பாற்றுகிறான்.

यमः — 'ज्ञानेन मुच्यते भिक्षुस्तपसा स्वर्गमाप्नुयात्। नरकं विषयासङ्गात् त्रयो मार्गास्तपस्विनामिति ।। व्यासः — 'दिव्यतेजोमयः श्रीमान् सूर्यचन्द्राग्निमण्डलम्। भित्वा प्रयाति सन्न्यासी स्वधर्मपरि-

पालनादिति ॥ तथा च श्रुतिः — 'त्याग एव हि सर्वेषां मोक्षसाधनमुत्तमम् । त्यजतैव हि तत् ज्ञेयं त्यक्तुः प्रत्यक्परं पदम् ॥ अतःसन्न्यस्य सर्वाणि कर्माण्यात्मावबोधतः । हत्वाऽविद्यां धियैवेयात्तद्विष्णोः परमं पदमिति ॥

யமன் - ஸன்யாஸி, ஞானத்தால் முக்தியை அடைவான்; தபஸ்வியாஞல் ஸ்வர்க்கத்தை அடைவான்; விஷயங்களைப்பற்றிஞல் நரகத்தை அடைவான். ஸன்யாஸிகளுக்கு இம்மூன்றுவழிகளாம். வ்யாஸர் - ஸன்யாஸியானவன் ஸ்வதர்மத்தைப் பரிபாலிப்பவ ஞுல், திவ்யதேஜோரூபஞய் ஸூர்யசந்த்ராக்னிகளின் மண்டலங்களைப் பிளந்து மேலுலகத்தை அடைவான். அவ்விதமே ப்ருதியும் - ஸன்யாஸமென்பதே சிறந்தமோக்ஷஸாதனம். த்யாகம் செய்தவஞலேயே அது அறியத்தகுந்தது. த்யாகிக்கே சிறந்த பதமுண்டு.

तैत्तिरीयके च श्रूयते— 'न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुरिति ॥ आधानादिकर्मणा प्रजया धनेन च अमृतत्वं - अपवर्गं नानशुः - नाश्नुवते । किन्तु त्यागेनैव । एक इत्यधिकारिदौर्लभ्यं दर्शयति। पूर्वमधीतवेदा अधिगतसाङ्गवेदार्था अनुष्ठितयथोदितसकलकर्माणो विशुद्धान्तःकरणा जितेन्द्रियाः अनन्तरं सन्त्यक्तकर्माणो वेदान्तवाक्य- श्रवणादिजनितब्रह्मात्मैकत्वविज्ञानाः केचिदेवामृतत्व मश्नुवत इत्यर्थः ।

தைத்திரீயகப்ருதியில் - ஆதானம் முதலிய கர்மத்தாலும், புத்ரஞலும், தனத்தாலும் மோக்ஷத்தை எவரும் அடைவதில்லை. ஆஞல், த்யாகத்திஞலேயே சிலர் அடைகின்றனர். 'சிலர்' என்றது அதிகாரிகள் அரிதென்பதைத் தெரிவிக்கின்றது. முதலில் வேதங்களைக் கற்றவரும், ஸாங்கமான வேதங்களின் அர்த்தத்தை அறிந்தவரும், வேதத்திற் கூறியபடி ஸகல கர்மங்களையு மனுஷ்டித்தவரும், சுத்தசித்தரும், ஜிதேந்த்ரியரும், பிறகு கர்மங்களை த்யாகம் செய்தவரும், வேதாந்தவாக்ய ப்ரவணத்தாலுண்டாகிய ப்ரம்மாத்மைக்யஜ்ஞான

முடையவருமான சிலரே மோக்ஷத்தை அடைகின்றனர் என்பது பொருள்.

तथा च तत्रैव श्रूयते - 'वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः सन्यासयोगाद्यतयः शुद्धसत्वाः । ते ब्रह्मलोके तु परान्तकाले परामृतात्परिमुच्यन्ति सर्व इति ।। ब्रह्मणो लोके दर्शने सति परान्तकाले - पश्चिमजन्मसमाप्तिकाले परामृतात् - परमुत्कृष्टं तदेवामृतं अमरणधर्मब्रह्म तस्मादनुभवगोचरात् ब्रह्मणो हेतोः परिमुच्यन्त इत्यर्थः ।।

அவ்விதமே தைத்திரீயஶ்ருதியில் - வேதாந்த ஜ்ஞானத்தால் அர்த்தஜ்ஞான நிச்சயமுடையவரும், ஸன்யாஸத்தால் சுத்தசித்தருமான யதிகள், ப்ரம்மத்தின் ஞானமேற்பட்டவுடன் கடைசியான ஜன்மம் முடியும் காலத்தில், சிறந்ததும் மரணதர்மமற்றதும், அனுபவ விஷயமுமான ப்ரம்மத்தினால் முக்தியை அடைகின்றனர்.

बृहदारण्यकेऽपि - 'एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्तीति। प्रकृतमात्मानमेव लोकमिच्छन्तः प्रव्रजेयुरित्यर्थः ।। जाबालश्रुतौ - 'अथ परिव्राड्विवर्णवासा मुण्डोऽपरिग्रहः शुचिरद्रोही भैक्षमाणो ब्रह्मभूयाय भवतीति ।। 'शतं कुलानां पुरतो बभूव तथा पराणां च शतं समग्रम् । एते भवन्ति सुकृतस्य लोके येषां कुले सन्यसतीह विप्रः ।। सन्यासाद् ब्रह्मणः स्थानं वैराग्यात् प्रकृतौ लयः । ज्ञानात् कैवल्यमाप्नोति तिस्रस्ता गतयः स्मृता इति ।।

ப்ருஹதாரண்யகத்திலும் - ப்ரக்ருதமான ஆத்மாவையே லோகமாய் அடைய விரும்பியவர் ஸன்யஸிக்க வேண்டும். ஜாபாலச்ருதியில் யதியானவன் சாயமுள்ள வஸ்த்ரமுடையவனாய், சிகையில்லாதவனாய், உடமைகளற்றவனாய், சுத்தனாய், தீங்கு செய்யாதவனாய். பிக்ஷிப்பவனாய் இருந்து ப்ரம்மஸாயுஜ்யத்தை அடைகிறான். ஸன்யாஸம் செய்துகொண்டவனின் முந்திய நூறு தலைமுறைகளும், பிந்திய நூறு தலைமுறைகளும்

புண்யலோகத்தை அடைகின்றன. ஸன்யாஸத்தால் ப்ரம்மலோகம் அடையப்படும், வைராக்யத்தால் ப்ரக்ருதியில் லயம் அடையப்படும். ஞானத்தால் மோக்ஷத்தை அடைகிறான். இவ்விதம் மூன்று வழிகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

क्षत्रियादीनां सन्यासाभावनिरूपणम्।

अस्मिंश्चाश्रमे ब्राह्मणस्यैवाधिकारः । 'आत्मन्यग्नीन् समारोप्य ब्राह्मणः प्रव्रजेद्गृहात्' । 'एष वोऽभिहितो धर्मो ब्राह्मणस्य चतुर्विध' इति। उपक्रमोपसंहाराभ्यां मनुना ब्राह्मणस्यैवाधिकारप्रतिपादनात् 'ब्राह्मणाः प्रव्रजन्ती'ति श्रुतेश्चाग्रजन्मन एवाधिकारो न द्विजातिमात्रस्येति विज्ञानेश्वरः । अत्रिरपि — 'न तावन्मुच्यते दुःखाज्जन्ममृत्योश्च बन्धनात् । यावन्न धारयेद्विप्रो वैष्णवं लिङ्गमादरात् । मुखजानामयं धर्मो वैष्णवं लिङ्गधारणम् । बाहुजातोरुजातानां नायं धर्मो विधीयत' इति ।। वैष्णवं लिङ्गधारणं - सन्यासः ।।

க்ஷத்ரியர் முதலியவர்க்கு ஸன்யாஸமில்லை

இந்த ஸன்யாஸாச்ரமத்தில் ப்ராமணனுக்கே அதிகாரம், 'ப்ராமணன் அக்னிகளை ஆத்ம ஸமாரோபணம் செய்து கொண்டு ஸன்யாஸியாக வேண்டும்' என்று ஆரம்பத்தாலும், 'ப்ராமணனின் நான்கு விதமான இந்தத் தர்மத்தை உங்களுக்குச் சொன்னேன்' என்று முடிவிலும் ப்ராமணனுக்கே அதிகாரமென்பதை மனு சொல்லியிருப்பதாலும், 'ப்ராமணர் ஸன்யஸிக்கின்றனர்' என்ற ச்ருதியாலும், ப்ராமணனுக்கு மட்டில் அதிகாரம் த்விஜாதிகளெல்லோருக்குமில்லை' என்கிறார் விக்ஞானேச்வரர். அத்ரியும் - ப்ராமணன் ஸன்யாஸத்தை அடையாத வரையில் ஜநநமரணதுக்கங்களின்றும் விடுபடுவதில்லை. இந்த ஸன்யாஸதர்மம் ப்ராமணருக்கு மட்டில் விதிக்கப்படுகிறது. க்ஷத்ரியவைச்யர்களுக்கு விதிக்கப்படுவதில்லை.

व्यासः — 'चत्वार आश्रमाश्चैते ब्राह्मणस्य प्रकीर्तिताः। गार्हस्थ्यं ब्रह्मचर्यं च वानप्रस्थ्यं त्रयः स्मृताः ॥ क्षत्रियस्यापि कथिता य आचारा द्विजस्य हि। ब्रह्मचर्यं च गार्हस्थ्यमाश्रमद्वितयं विशः ॥ गार्हस्थ्य मुचितं चैकं शूद्रस्य परिकीर्तितमिति ॥

வ்யாஸர் - இந்த நான்கு ஆப்ரமங்களும் ப்ராமண னுக்கும், ப்ரம்மசர்யம், கார்ஹஸ்த்யம் வானப்ரஸ்தம் இம்மூன்றும் க்ஷத்ரியனுக்கும், ப்ரம்மசர்யம் கார்ஹஸ்த்யம் இவ்விரண்டும் வைச்யனுக்கும், கார்ஹஸ்த்யம் ஒன்று மட்டில் சூத்ரனுக்கும் உசிதமெனச் சொல்லப் பட்டிருக்கிறது.

अन्ये तु त्रयाणां वर्णानां चत्वार आश्रमा इति सूत्रकारादिवचनात् द्विजातिमात्रस्याधिकारमाहुः ॥

சிலரோவெனில் 'மூன்று வர்ணங்களுக்கும் நான்கு ஆப்ரமங்கள்' என்ற ஸூத்ரகாரர் முதலியவரின் வசனத்தால். மூன்று வர்ணத்தாருக்கும் அதிகாரம் என்கின்றனர்.

व्यासोऽपि - 'ऋणत्रयमपाकृत्य निर्ममो निरहङ्कृतिः। ब्राह्मणः क्षत्रियो वाऽथ वैश्यो वा प्रव्रजेद्गृहादिति ॥ क्षत्रियवैश्ययोः प्रव्रज्यानिषेधवचनानि काषायदण्ड निषेधपराणीति स्मृतिरत्नेऽप्यभिहितम् ॥ व्यासः — 'अग्न्याधेयं गवालम्भं सन्न्यासं पलपैतृकम्। देवरेण सुतोत्पत्तिः कलौ पञ्च विवर्जयेदिति ॥

வ்யாஸரும் - ப்ராமணன், க்ஷத்ரியன், வைப்யன் யாராயினும் மூன்று ருணங்களைத் தீர்த்து, மமகாரம், அஹங்காரம் இவைகளைத் துறந்து ஸன்யாஸியாக வேண்டும். 'க்ஷத்ரியவைச்யர்களுக்கு ஸன்யாஸத்தை நிஷேதிக்கும் வசனங்களெல்லாம் காஷாய தண்ட தாரணத்தை நிஷேதிப்பதில் தாத்பர்யமுள்ளவை என்று ஸ்ம்ருதிரத்னத்திலும் சொல்லப்பட்டிருகின்றது. வ்யாஸர்

- ஆதானம், கோவதம், ஸன்யாஸம், மாம்ஸத்துடன் ஶ்ராத்தம் செய்தல், விதவையினிடத்தில் மைத்துனன் பிள்ளைபெறுதல் இவ்வைந்தையும் கலியில் தள்ள வேண்டும்.

अस्यापवादमाह स एव - 'यावद्वर्णविभागोऽस्ति यावद्वेदः प्रवर्तते। तावन्न्यासोऽग्निहोत्रं च कर्तव्यं तु कलौ युग इति ।। कात्यायनः - 'कृच्छ्रांस्तु चतुरः कृत्वा पावनार्थमनाश्रमी । आश्रमी चेत्तप्तकृच्छ्रं तेनासौ योग्यतां व्रजेदिति ।। बह्वृचपरिशिष्टेऽपि - 'मुमुक्षुरात्मविशुद्धये एकं तप्तकृच्छ्रं कृत्वा अनाश्रमी चतुरः प्राजापत्यानिति । बोधायनः - 'अनाश्रमी चतुरः कृच्छ्रानात्मविशुध्यर्थं विदध्यादाश्रमी तप्तकृच्छ्रमेकमिति ।। स्मृतिसारे - 'कुर्याच्चत्वारि कृच्छ्राणि सन्न्यासेप्सुरनाश्रमी । आश्रमी कृच्छ्रमेकं तु कृत्वा सन्न्यासमर्हतीति ।।

இதற்கு அபவாதம் சொல்லுகின்றார் வ்யாஸரே - கலியுகத்தில், வர்ணங்களின் பிரிவு உள்ளவரையிலும் வேதம் ப்ரவர்த்திக்கும் வரையிலும் ஸன்யாஸம், அக்னிஹோத்ரம், இவைகளைச் செய்யலாம். காத்யாயனர் - அநாஶ்ரமியானால் நான்கு க்ருச்ரங்களையும், ஆச்ரமியானால் ஒரு தப்தக்ருச்ரத்தையும் சுத்திக்காக அனுஷ்டித்தால் ஸன்யாஸத்தில் அதிகாரியாவான். பஹ்வ்ருசபரிசிஷ்டத்தில் - ஸன்யாஸத்தை விரும்பியவன் தன் சுத்திக்காக ஒரு தப்த க்ருச்ரத்தை அனுஷ்டிக்க வேண்டும். அநாச்ரமியானால் 4 பிராஜாபத்ய கிருச்ரங்களை அனுஷ்டிக்க வேண்டும். போதாயனர் - அநாச்ரமியானவன் 4 கிருச்ரங்களையும் ஆசிரமியானவன் ஒரு தப்தகிருச்ரத்தையும் அனுஷ்டிக்க வேண்டும். ஸ்ம்ருதிஸாரத்தில் -அநாச்ரமியானவன் 4 க்ருச்ரங்களையும், ஆஶ்ரமியாயிருப்பவன் ஒரு க்ருச்ரத்தையு மனுஷ்டித்தால் ஸன்யாஸத்திற்கு அர்ஹனாவான்.

## दैवादिश्राद्धाष्टकनिरूपणम्

व्यासः — 'देयं पितृभ्यो देवेभ्यः स्वपितृभ्योऽपि यत्नतः । दत्वा श्राद्धमृषिभ्यश्च मनुजेभ्यस्तथाऽऽश्रमी(त्मने) ॥ इष्टिं वैश्वानरीं कृत्वा प्राजापत्यामथापि वा । अग्नीन् स्वात्मनि संरोप्य मन्त्रवत् प्रव्रजेत् पुनरिति। बोधायनः - 'दैवं चैवार्षकं दिव्यं पित्र्यं मातृकमानुषे । भौतिकं चात्मनश्चान्ते अष्टौ श्राद्धानि निर्वपेदिति ॥ अत्रिः - 'दैवमार्षं ततो दिव्यं मानुष्यं भौतिकं तथा । पितॄणां दिव्यमातॄणामात्मनो वृद्धितत्पर इति ॥

### எட்டு ச்ராத்தங்களின் நிருபணம்

வ்யாஸர் - *பித்ருக்கள் (பொதுவானவர்), தேவர்கள், தன் பித்ருக்கள், ருஷிகள், மனுஷ்யர்கள், (ஆத்மா) இவர்களுக்கு ச்ராத்தம் செய்து, வைச்வாநரீ, அல்லது ப்ராஜாபத்யா என்கிற இஷ்டியைச் செய்து, அக்னிகளை ஆத்ம ஸமாரோபணம் செய்துகொண்டு, மந்திரங்களுடன் ஸன்யஸிக்க வேண்டும்.* போதாயனர் - *தைவம், ஆர்ஷம், திவ்யம், பித்ர்யம், மாத்ருகம், மானுஷம், பௌதிகம், ஆத்மச்ராத்தம் என எட்டு ச்ராத்தங்களைச் செய்ய வேண்டும்.* அத்ரி - *தைவம், ஆர்ஷம், திவ்யம், மானுஷ்யம், பௌதிகம், பித்ருக்களின், திவ்ய மாதாக்களின், ஆத்மாவின் ச்ராத்தங்கள் என 8 - ச்ராத்தங்களைச் செய்ய வேண்டும்.*

शौनकः - 'दैवं चैवार्षकं चैव दिव्यं मानुष्यमेव च । भूतश्राद्धं पितृश्राद्धं मातॄणामात्मनस्तथा ॥ एकैकस्मिन् दिने कुर्यादेकैकं श्राद्धमर्थवत् । नान्दीमुखविधानेन विधिरेषां प्रकीर्तितः । वसवोऽष्टौ स्मृतास्तत्र रुद्रा एकादशापि च । तथैव द्वादशादित्या दैवश्राद्धे तु देवताः ॥ मरीचिरत्र्यङ्गिरसौ पुलस्त्यः पुलहः क्रतुः । प्रचेताश्च वसिष्ठश्च आर्षे सभृगुनारदः । दिव्ये हिरण्यगर्भोऽपि विराट् प्रजापतिरेव च । सनकश्च सनन्दश्च तृतीयश्च सनातनः ॥ कपिलश्चासुरिश्चैव वोढुः पञ्चशिखस्तथा । एते मानुष्यके

श्राद्धे मनुष्यास्सप्त देवताः ॥ पृथिव्यापस्तथा तेजो वायुराकाशमेव च । एतानि पञ्चभूतानि भूतश्राद्धे तु देवताः । पितृश्राद्धे कव्यवहोऽनलः सोमोऽर्यमा तथा । अग्निष्वात्ता बर्हिषदः सोमपाश्चैव देवताः ॥ गौरी पद्मा शची मेधा सावित्री विजया जया । देवसेना स्वधा स्वाहा मातृश्राद्धे तु देवताः । आत्मश्राद्धे देवता तु परमात्मा प्रकीर्तित इति ।

*சௌனகர் - தைவம், ஆர்ஷம், திவ்யம், மானுஷ்யம், பூதப்ராத்தம், பித்ருப்ராத்தம், மாத்ரு ப்ராத்தம், ஆத்ம ப்ராத்தம் என 8 ப்ராத்தங்களை ஒரு தினத்தில் ஒரு ப்ராத்தமாய் 8-நாட்களில் செய்ய வேண்டும். நாந்தீ ப்ராத்தத்தின் விதியே இந்த ப்ராத்தங்களுக்கும். 8 வஸுக்கள், 11, ருத்ரர்கள், 12 ஆதித்யர்கள் இவர்கள் தைவப்ராத்தத்தில் தேவதைகள். ஆர்ஷ ச்ராத்தத்தில் மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, ப்ரசேதஸ், வஸிஷ்டர், பிருகு, நாரதர் இவர்கள் தேவதைகள். திவ்யப்ராத்தத்தில் ஹிரண்யகர்ப்பர், விராட், ப்ரஜாபதி இவர்கள் தேவதைகள். மானுஷ்யகப்ராத்தத்தில் ஸநகர், ஸநந்தர், ஸநாதனர், கபிலர், ஆஸுரி, வோடு, பஞ்சசிகர் இவ்வேழுபேர்களும் தேவதைகள். பூத ப்ராத்தத்தில் ப்ருதிவீ, அப், தேஜஸ், வாயு, ஆகாபம் இந்த ஐந்து பூதங்களும் தேவதைகள். பித்ரு ப்ராத்தத்தில் கவ்யவாஹன், அநலன், ஸோமன், அர்யமா, அக்னிஷ்வாத்தர்கள், பர்ஹிஷத்துகள், ஸோமபர்கள் இவர்கள் தேவதைகள். மாத்ருப்ராத்தத்தில் கௌரீ, பத்மா, சசீ, மேதா, ஸாவித்ரீ, விஜயா, ஜயா, தேவஸேநா, ஸ்வதா, ஸ்வாஹா இவர்கள் தேவதைகள். ஆத்ம ப்ராத்தத்தில் பரமாத்மா தேவதை என்று சொல்லப்பட்டிருக்கிறார்.*

अत्रिः - 'पार्वणं च तथा वृद्धिश्राद्धं कुर्याद्यथाविधि । एकैको मन्त्रवत् पिण्डो देयस्तूष्णीमथापरः ॥ सर्वमन्त्रेषु कर्तव्यं नान्दीमुखविशेषणम् । उत्थाय च ततो विद्वान् हृष्टपुष्टेन चेतसा ॥ प्रदक्षिणं ततः कृत्वा नमस्कृत्य द्विजोत्तमान् । क्षन्तव्यमिति तान् ब्रूयात् प्रणम्य शिरसा नतः । सन्न्यासार्थं

मया श्राद्धं कृतमेतद्विजोत्तमाः। अनुज्ञां प्राप्य युष्माकं सिद्धिं यास्यामि शाश्वतीमिति ॥ ततः परेद्युः पुण्याहवाचनपूर्वकं वपनं कुर्यात् ॥

அத்ரி - வ்ருத்திஶ்ராத்தத்தையும் பார்வணமாய் விதிப்படி செய்ய வேண்டும். அதில் பிண்டதானத்தில், ஒரு பிண்டத்தை மந்த்ரத்துடனும் மற்றொன்றை மந்த்ர மில்லாமலும் கொடுக்க வேண்டும். எல்லா மந்த்ரங் களிலும் 'நாந்தீமுக' என்ற பதத்தை விசேஷணமாய்ச் சேர்க்க வேண்டும். பிறகு எழுந்து மகிழ்ச்சிமிக்க மனதுடன் ப்ராமணர்களை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து, பொறுக்க வேண்டும்' என்று பிரார்த்திக்க வேண்டும். பிறகு தலைவணங்கி நமஸ்கரித்து 'பிராமணோத்தமர்களே! ஸன்யாஸத்திற்காக இந்த ஶ்ராத்தத்தை நான் செய்தேன்; தங்கள் உத்தரவை அடைந்து அழிவற்ற ஸித்தியை நான் அடையப் போகிறேன்' என்று தெரிவித்து அவர்களின் அனுக்ஞையை அடையவேண்டும். பிறகு மறுநாளில் புண்யாஹவாசனம் செய்து வபனம் செய்து கொள்ள வேண்டும்.

### सन्यासक्रमः ।

तदाह शौनकः— 'पूर्वेद्युर्नान्दीमुखं कृत्वा ब्राह्मणान् भोजयित्वा पुण्याहं वाचयित्वा केशश्मश्रुलोमनखानि वापयित्वा यथाविधि स्नात्वा होमादि द्रव्यव्यतिरिक्तं द्रव्यजातं पुत्रादिभ्यो दत्वा दण्डादीन् सन्निधाप्य देवायतने ग्रामे वा पुलिने वा रथ्ये वा स्थित्वा ब्रह्मणे नमः, इन्द्राय नमः, आत्मने नमः,अन्तरात्मने नमः, परमात्मने नमः इति ब्रह्माञ्जलिं कृत्वा मानसं जपित्वाऽप उपस्पृश्य दर्भाञ्जलिं कृत्वा वेदादीन् जपित्वा सक्तुमुष्टिं प्राश्य अप आचम्य ओं भूस्सावित्रीं प्रविशामि तत्सवितुर्वरेण्यम् । ओं भुवस्सावित्रीं प्रविशामि भर्गो देवस्य धीमहि। ओं सुवः सावित्रीं प्रविशामि धियो यो नः प्रचोदयात् (ओं भूर्भुवः सुवः सावित्रीं प्रविशामि। तत्सवितुः + प्रचोदयात्) इति जपित्वा किञ्चनाप्राश्य पुरस्तादादित्यस्यास्तमयादाज्यं

विलाप्योत्पूय स्रुचि चतुर्गृहीतं गृहीत्वा समिद्धेऽग्नौ ओं भूर्भुवस्सुवस्स्वाहेति पूर्णाहुतिं हुत्वा सायमग्निकार्यं कृत्वाऽग्न्युत्तरप्रदेशेषु पात्राणि सादयित्वा दक्षिणदेशे दर्भान् संस्तीर्य कृष्णाजिनं चान्तर्द्धायैतस्यां रात्र्यां जागरणं कृत्वेति ॥

### ஸன்யாஸ க்ரமம்

சௌனகர் - 'முதல் தினத்தில், நாந்தீச்ராத்தம் புண்யாஹவாசனம் இவைகளைச் செய்து கேசம், மீசை, ரோமம், நகங்கள் இவைகளை வபனம் செய்வித்து, விதிப்படி ஸ்நானம் செய்து ஹோமம் முதலியவற்றிற்கு வேண்டிய வஸ்துக்களைத் தவிர்த்த மற்றபதார்த்தங்களைப் புத்ரன் முதலியவர்களுக்குக் கொடுத்து, தண்டம் முதலியவவைகளைச் சமீபத்தில் சேர்த்து, தேவாலயம், க்ராமம், மணல்திட்டு, வீதி இவைகளுள் இஷ்டமான ஸ்தலத்திலிருந்து, 'ப்ரம்மணே நம' என்பது முதலான மந்த்ரங்களை ப்ரம்மாஞ்சலி செய்து மாநஸமாய் ஜபித்து ஜலத்தை ஸ்பர்சித்து தர்ப்பாஞ்சலி செய்து வேதாதிகளை ஜபித்து ஸக்துமுஷ்டியை ப்ராசனம் செய்து ஆசமனம் செய்து ஸாவித்ரீப்ரவேச மந்த்ரங்களை ஜபித்து ஒன்றும் புஜிக்காமல் ஸூர்யாஸ்தமயத்திற்கு முன் ஆஜ்ய ஸம்ஸ்காரம் செய்து ஸ்ருக்கில் நான்கு தடவை அவதானம் செய்து ஜ்வாலையுள்ள அக்னியில் வ்யாஹ்ருதிகளால் பூர்ணாஹுதி செய்து ஸாயங்காலம் ஹோமத்தைச் செய்து அக்னியில் வடக்கு ப்ரதேசத்தில் பாத்ரங்களை ஸாதனம் செய்து அக்னியின் தெற்கு ப்ரதேசத்தில் தர்ப்பங்களைப் பரப்பி அவைகளின் மேல் க்ருஷ்ணாஜினத்தை விரித்து அதன்மேலிருந்து ராத்ரி முழுவதும் ஜாகரணம் செய்வர்'' என்கிறார்.

आपोहिष्ठेति च द्वाभ्यां श्मश्रुरोमनखानि च । गौदानिकविधानेन सर्वमन्त्रान्नियोजयेत् ॥ शेषस्य कर्मणः सिद्ध्यै केशान् सप्ताष्ट वा पुनः । संरक्ष्य वापयेत् सर्वं केशश्मश्रुनखानि चेति कात्यायनादिस्मरणात् सप्ताष्टौ

वा केशान् स्थापयित्वा वापयेत्। दक्षिणजानुन्युत्तानं वामहस्तं कृत्वा तदुपरि सपवित्रानुत्तानदक्षिणहस्तस्य निधानं ब्रह्माञ्जलिः। 'संहत्य हस्तावध्येयः स हि ब्रह्माञ्जलिः स्मृत' इति मनुस्मरणात्। तं कृत्वा ब्रह्मणे नम इत्यादि मनसा जपेदित्यर्थः। सक्तुमुष्टिप्राशनं प्रणवेन कृत्वाऽऽचम्य नाभिमभिमन्त्रयेत्।

*இங்கு வபனத்தில் ஏழு, அல்லது எட்டுக் கேசங்களை மீதிவைத்து மற்றவைகளை முழுவதும் வபனம் செய்விக்க வேண்டும்; மற்றகர்மங்கள் ஸித்திப்பதற்காக, கோதானத்தில் சொல்லப்படும் எல்லா மந்த்ரங்களையும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் காத்யாயனர் விதிப்பதால். வலது முழுங்காலின் மேல் இடது கையை நிமிர்ந்ததாய் வைத்து அதன்மேல் பவித்ரத்துடன் கூடிய வலது கையைக் கவிழ்த்து வைத்துக் கொள்வது ப்ரம்மாஞ்ஜலி எனப்படும். இவ்விதம் மனு சொல்வதால். ப்ரம்மாஞ்ஜலி செய்து கொண்டு 'ப்ரம்மணே நம:' என்பது முதலியவையை மனதால் ஜபிக்க வேண்டுமென்பது பொருள். ஸக்துமுஷ்டியை (பிடியளவுள்ள மாவை) ப்ரணவத்தால் ப்ராசனம் செய்து ஆசமனம் செய்து நாபியை அபிமந்த்ரிக்க வேண்டும்.*

तथा च बह्वृचपरिशिष्टे — 'अथ सक्तून् प्राश्याचम्य नाभिमभिमन्त्रयेत्। आत्मने स्वाहा। अन्तरात्मने स्वाहा। प्रजापतये स्वाहेति। ततः पयोदधिघृतानि त्रिवृत्कृतानि त्रिवृदसीति मन्त्रेण प्रथमं प्राश्नीयात् प्रवृदसीति द्वितीयं संवृदसीति तृतीयं आपः पुनन्त्वित्युदकं प्राश्नीयात्तदलाभ इति॥

*அவ்விதமே பஹ்வ்ருசபரிஷ்டத்தில் - ''பிறகு ஸத்துமாவை கரைத்துக் குடித்து ஆசமனம் செய்து 'ஆத்மனேஸ்வாஹா, அந்தராத்மனே ஸ்வாஹா, ப்ரஜாபதயே ஸ்வாஹா' என்று நாபியை அபிமந்த்ரிக்க வேண்டும். பிறகு பால், தயிர், நெய் இவைகளை ஒன்று*

சேர்த்து 'த்ரிவ்ருதஸி' என்று முதல் தடவையும், 'ப்ரவ்ருதஸி' என்று இரண்டாவது முறையும், 'ஸம்வ்ருதஸி' என்று மூன்றும் முறையும் ப்ராசனம் செய்ய வேண்டும். இம்மூன்றும் கிடைக்காவிடில் 'ஆப: புநந்து' என்ற மந்த்ரத்தால் ஜலத்தை ப்ராமனம் செய்ய வேண்டும்'',

अत्र बोधायनः — 'पुण्याहं स्वस्त्यृद्धिमिति वाचयित्वा केशश्मश्रुलोमनखानि वापयित्वोपकल्पयते यष्टयः शिक्यं जलपवित्रं कमण्डलुः पात्रमित्येतत् समादाय ग्रामान्ते ग्रामसीमान्तेऽग्न्यगारे वाऽऽज्यं पयो दधीति त्रिवृत् प्राश्योपवसेदपो वों भूस्सावित्रीं प्रविशामि तत्सवितुर्वरेण्यम्। ओं भुवस्सावित्रीं प्रविशामि भर्गो देवस्य धीमहि। ओं सुवस्सावित्रीं प्रविशामि धियो यो नः प्रचोदयादिति। पच्छोऽर्धर्चशस्ततः समस्ता व्यस्ताश्चाश्रमादाश्रममुप(नि)नीय ब्रह्मपूतो ब्रह्म भूतो भवतीति विज्ञायते। पुराऽऽदित्यस्यास्तमयाद्गार्हपत्यमुप समाधायान्वाहार्यपचन माहृत्य ज्वलन्तमाहवनीयमुद्धृत्य गार्हपत्य आज्यं विलाप्योत्पूय स्रुचि चतुर्गृहीतं गृहीत्वा समिद्वत्याहनीये पूर्णाहुतिञ्जुहोत्यों स्वाहेत्येतद् ब्रह्मान्वाधानमिति विज्ञायतेऽथ सायं हुतेऽग्निहोत्र उत्तरेण गार्हपत्यं तृणानि संस्तीर्य तेषु द्वन्द्वं न्यञ्चि पात्राणि सादयित्वा दक्षिणेनाहवनीयं ब्रह्मायतने दर्भान् संस्तीर्य तेषु कृष्णाजिनं चान्तर्द्धायैतां रात्रिं जागर्ति य एवं विद्वान् ब्रह्मरात्रिमुपोष्यब्राह्मणोऽग्नीन् समारोप्य वा प्रमीयते सर्वं पाप्मानं तरति तरति ब्रह्महत्या' मिति।

இவ்விஷயத்தில் போதாயனர் - புண்யாஹவாசனம் செய்வித்து, வபனம் செய்வித்து, யஷ்டிகள் (தண்டம்) சிக்யம், (உரி) ஜலபவித்ரம், (ஜலத்தை வடிகட்டும் வஸ்த்ரம்) கமண்டலு, (ஜலபாத்ரம்) பிக்ஷாபாத்ரம் என்ற இவைகளைச் சேர்த்து எடுத்துக் கொண்டு, க்ராமத்தின் கோடியில், அல்லது க்ராம எல்லையின் கோடியில், அல்லது அக்னிச் சாலையில், நெய், பால், தயிர் இம்மூன்றையும்

சேர்த்து ப்ராமனம் செய்து, அல்லது ஜலத்தையாவது ப்ராமனம் செய்து உபவாஸமிருக்க வேண்டும். ஓம்பூ: ஸாவித்ரீம் ப்ரவிசாமி என்பன முதலான மந்த்ரங்களை ஜபித்து ஆம்ரமத்தினின்று வேறு ஆம்ரமத்தை அடைந்து ப்ரம்மாகவே ஆகின்முன். எனத்தெரிகின்றது. அஸ்தமயத்திற்குமுன் கார்ஹபத்யத்தை உபஸமாதானம் செய்து, தக்ஷிணாக்னிப்ரணயனம் செய்து ஆஹவனீய ப்ரணயனமும் செய்து, கார்ஹபத்யத்தில் ஆஜ்யவிலாபனம் உத்பவனம் இவைகளைச் செய்து ஸ்ருக்கில் நான்கு தடவை ஆஜ்யக்ரஹணம் செய்து ஸமித்துள்ள ஆஹவனீயத்தில் 'ஓம் ஸ்வாஹா' என்ற பூர்ணாஹுதி ஹோமம் செய்ய வேண்டும். இது ப்ரம்மான்வாதானமெனத் தெரிகிறது. பிறகு ஸாயங்கால ஹோமம் செய்து, கார்ஹபத்யத்திற்கு வடக்கில் தர்ப்பங்களைப் பரப்பி அவைகளில் பாத்ரங்களைக் கவிழ்த்து இரட்டையாய் ஸாதனம்செய்து ஆஹவநீயத் திற்குத் தெற்கில் பிரும்மாவின் ஸ்தானத்தில் தர்ப்பங்களைப் பரப்பி அவைகளின் மேல் க்ருஷ்ணாஜினத்தை விரித்து அதன் மேல் உட்கார்ந்து ராத்ரி முழுவதும் விழித்திருக்க வேண்டும். எவன் இவ்விதமறிந்து ப்ரம்மராத்ரியில் உபவாஸமிருந்து அக்னிகளை ஆத்மஸமாரோபணம் செய்து இறக்கின்முனோ அவன் ஸகலபாபங்களையும் தாண்டுவான்; ப்ரம்மஹத்தியையும் தாண்டுவான்; என்று.

अयमर्थः — पूर्वाह्णे वपनं कृत्वाऽपराह्णे उपकल्पयते-आर्जयति यष्ट्यादीन् ।। यष्टयः - दण्डाः । शिक्यं - रज्जुनिर्मितं शिक्यं भिक्षापात्रधारणम्। 'कुशकार्पाससूत्रैर्वा क्षौमसूत्रैरथापि वा । कुशलैर्ग्रथितं शिक्यं पद्माकारसमन्वितम् ।। षट्पादं पञ्चपादं वा बन्धद्वयविशोभितमिति स्मरणात्। जलपवित्रं - उदकशोधनार्थं वस्त्रम् । 'विकेशं पी(सि)तमस्पृष्टं सर्वतो द्वादशाङ्गुलम् । द्विगुणं त्रिगुणं वाऽपि सर्वतोऽष्टाङ्गुलं तु वा ।। प्रादेशमात्रं वा सूक्ष्मकार्पासैः कृतमव्रणम् । चण्डालाद्यकृतं चैतत् स्मृतं जलपवित्रकमिति स्मरणात् ।। पात्रं - भैक्षचरणार्थं अलाबुमृण्मयादि । इति शब्दः

आसनाद्युपलक्षणार्थः । 'चतुरश्रं वर्तुलं वाऽप्यासनं दारवं शुभम् । कौपीनाच्छादनं वासः कन्थां शीतनिवारिणीमिति स्मरणात् ।

இந்த ஸூத்ரத்திற்கு இனி சொல்லப்படுவது பொருள் - பூர்வாஹ்ணத்தில் (பகலின் முன் பகுதியில்) வபனம் செய்து கொண்டு, அபராஹ்ணத்தில் (பகலின் பிற்பகுதியில்) (உறி) யஷ்டி முதலியவைகளைச் சேர்க்கவும், யஷ்டிகள் தண்டங்கள், சிக்யம் கயிற்றினால் செய்யப் பட்டதும், பிக்ஷாபாத்ரத்தைத் தாங்குவதுமான உறி. '' குசம், பருத்திநூல் கயிறு, க்ஷௌமமென்னும் நார்க்கயிறு இவைகளிலொன்றால் பின்னியதும். தாமரைப் பூப்போலுள்ளதும், ஆறு அல்லது ஐந்து கால்களுள்ளதும், இரண்டு முடியுள்ளதும், சிக்யம்' என்ற ஸ்ம்ருதியில். ஜலபவித்ரம் = ஜலத்தை வடிகட்டும் வஸ்த்ரம், 'மயிர் ஸம்பந்தமில்லாததும், வெண்ணிறமானதும், 12 அங்குலம் சதுரமாயுள்ளதும், இரண்டு அல்லது மூன்றாக மடிக்கப் பட்டதும் எட்டங்குலம், ஒட்டையளவு சதுரமாயுள்ளதும் மெல்லிய பருத்தி நூல்களால் நெய்யப்பட்டதும், சண்டாளர் முதலியவரால் நெய்யப்படாததுமான வஸ்த்ரம் ஜலபவித்ரம் எனப்படுகிறது' என்ற ஸ்ம்ருதியால். பாத்ரம் பிக்ஷை எடுப்பதற்கான சுரைக்காய், மண்பாத்ரம் முதலியவை. 'இதி' என்பது ஆஸனம் முதலியவையைச் சொல்லுகின்றது. 'சதுரம், அல்லது வர்த்துலமாயுள்ளதும், மரத்தினால் செய்யப்பட்டதுமான நல்ல ஆஸனம், கௌபீனம், வஸ்த்ரம், குளிரைப்போக்கும் போர்வை இவைகளை க்ரஹிக்க வேண்டும்' என்ற ஸ்ம்ருதியால்.

त्रिवृत्प्राशनमन्त्रः ओंभूस्सावित्रीमिति । आश्रमादाश्रममिति वचनात् त्रिवृत्प्राशनादूर्ध्वं प्रत्यावृत्तिर्नास्तीति दर्शयति ।। ब्रह्म-सावित्री । तया पूतः ब्रह्मभूतो भवति । त्रिवृत्प्राशनेनैव संन्यास इत्यर्थः । ब्रह्मान्वाधान-मिति । यथा दर्शपूर्णमासयोरन्वाधानं तद्वदेतदपि ब्रह्मप्रवेशस्येति ।।

பால், தயிர், நெய் இவைகளை ப்ராசனம் செய்ய மந்த்ரங்கள் 'ஓம்பூ: ஸாவித்ரீம்' என்பது முதலியவை.

'ஆஶ்ரமாதாஶ்ரமம்' என்று சொல்லியதால் இம்மூன்றையும் ப்ராசனம் செய்த பிறகு, முன் ஆஶ்ரமத்திற்குத் திரும்புவதென்பதில்லை எனத் தெரிவிக்கின்றார். ப்ரம்ம என்பது ஸாவித்ரியைச் சொல்லும். அதனால் சுத்தனாகி ப்ரம்மமாக ஆகின்றான். த்ரிவ்ருத் (பால், தயிர், நெய்) ப்ராசனத்தினாலேயே ஸன்யாஸம் என்பது பொருள். ப்ரம்மான்வாதானமென்பதன் பொருள் - தர்ஶபூர்ண மாஸயாகங்களுக்கு அன்வாதானம் போல், இது ப்ரம்மப்ரவேஶத்திற்கு அன்வாதானமென்பதாம்.

दिनान्तरकृत्यमाह शौनकः - 'ब्राह्मे मुहूर्त उत्थाय यथाविधि स्नात्वा प्रातरग्निकार्यं कृत्वा व्याहृतीर्जपित्वा तरस्तमन्दी धावतीति सूक्तमप्सु जपेदिति ।। दत्तात्रेयः - 'ब्रह्मरात्रिं ततो नीत्वा पौर्णमास्यां द्विजोत्तमः । प्रातर्हुत्वा स्वकल्पेन कृत्वा स्नानादिकाः क्रियाः । प्राजापत्यां प्रतिपदि त्विष्टिं कृत्वा यथाविधि । ततो विप्राय दद्यात्तु सर्ववेदसदक्षिणामिति ।।

மறுநாள் செய்ய வேண்டிய கார்யங்களைப் பற்றி சௌனகர் - ப்ராம்ம முஹூர்த்தத்தில் எழுந்து விதிப்படி ஸ்நானம் செய்து காலை அக்னிகார்யம் செய்து, வ்யாஹ்ருதிகளை ஜபித்து, 'தரத்ஸமந்தீ' என்ற ஸூக்தத்தை ஜலத்தில் நின்று ஜபிக்க வேண்டும். தத்தாத்ரேயர் - சிறந்த ப்ராமணன், பூர்ணிமையில் ப்ரம்மராத்ரியைப் போக்கி மறுநாள் ப்ரதமையில் ஸ்நானம் ஹோமம் முதலியவைகளைச் செய்து 'ப்ராஜாபத்யை' என்னும் இஷ்டியைச் செய்து, பிறகு தன் த்ரவ்யங்கள் முழுவதையும் ப்ராமணனுக்கு தக்ஷிணையாய்க் கொடுக்க வேண்டும்.

शौनकः - 'प्राजापत्ययेष्ट्वा पुनराहवनीयमुद्धृत्य प्राणापानौ समौ कृत्वा सर्वं निदधाति यच्च पूर्तौ यच्च प्रजापतौ तन्मनसि जुहोमि विमुक्तोऽहं देहकिल्बिषात्स्वाहा । अयन्ते योनिरृत्विय इत्यात्मन्यग्नीन् समारोपयति प्राणेन गार्हपत्यमपानेन दक्षिणाग्निं व्यानेनाहवनीयमुदानेनावसथ्यं समानेन सभ्यं पुनराहवनीयं गत्वाऽद्भ्यः सम्भूत इत्यादित्यमुपस्थायोत्तरेण

(उत्तरनारायणेन) गृहान्निष्क्रामे'दिति ॥ आत्रेयः - 'मृण्मयान्यश्ममयानि चाप्सु जुहुयाद्गुरवे तैजसानि दद्यादिति ॥

சௌனகர் - *ப்ராஜாபத்யேஷ்டியைச் செய்து மறுபடி ஆஹவனீயப்ரணயனம் செய்து 'யச்சபூர்த்தௌ' என்ற மந்த்ரத்தால் எல்லாவற்றையும் அக்னியில் ஹோமம் செய்து, ஆத்மஸமாரோபணம் செய்து கொண்டு ஆஹவனீயஸமீபம் சென்று, ஸௌர்யோபஸ்தானம் செய்து வீட்டின் வடக்கு பாகத்தால் வெளியில் செல்ல வேண்டும்.* ஆத்ரேயர் - *மண்ணாலும் கல்லாலும் செய்யப்பட்ட பாத்ரங்களை ஜலத்தில் விடவேண்டும். லோஹபாத்ரங்களை ஆசார்யனுக்குக் கொடுக்க வேண்டும்.*

बोधायनः - 'अथ ब्राह्मे मुहूर्त उत्थाय काल एव प्रातरग्निहोत्रं जुहोत्यथ पृष्ठ्यांस्तीर्त्वाऽपः प्रणीय वैश्वानरं द्वादशकलापं निर्वपति सा प्रसिद्धेष्टिः सन्तिष्ठतेऽथाहवनीयेऽग्निहोत्रद्रव्याणि प्रक्षिपत्यमृण्मयान्य-नश्ममयानि गार्हपत्येऽरणी भवतन्नः समनसावित्यथात्मन्यग्नीन् समारोपयते या ते अग्ने यज्ञिया तनूरिति त्रिस्त्रिरेकैकं समाजिघ्रतीति ॥

போதாயனர் - *காலையிலெழுந்து காலை அக்னிஹோத்ர ஹோமம் செய்து வைச்வாநரீயேஷ்டியைச் செய்து முடித்து மண் கல் இவைகளல்லாத அக்னிஹோத்ர த்ரவ்யங்களை ஆஹவனீயத்தில் போட்டு கார்ஹபத்யத்தில் அரணிகளை 'பவதம்' என்ற மந்த்ரத்தால் எரித்து, 'யாதே அக்னே' என்ற மந்த்ரத்தால் அக்னிகளை ஆத்மஸமாரோபணம் செய்து கொள்ள வேண்டும். ஒவ்வொரு அக்னியையும் மூன்று தடவை ஆக்ராணம் செய்யவேண்டும்.*

शौनकः — 'अथ पुत्रं दृष्ट्वा जपति त्वं ब्रह्म त्वं यज्ञस्त्वं लोक इति स पुत्रः प्रत्याहाहं ब्रह्माहं यज्ञोऽहं लोक इतीति ॥ बह्वृचपरिशिष्टे - 'अथ पुत्रान् सुहृदो बन्धून् प्रत्याह न मे कश्चिन्नाहं कस्यचिदिति जलाशयं गत्वैतस्मादाश्रमात् सन्यासाश्रमं गमिष्यामीति सङ्कल्पयेदिति ॥

சௌனகர் - *பிறகு புத்ரனைப் பார்த்து 'த்வம் ப்ரம்ஹ' என்ற மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். அப்புத்ரன் 'அஹம் ப்ரம்ம' என்ற மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும்.* பஹ்வ்ருசபரிசிஷ்டத்தில் - *பிறகு புத்ரர்கள், மித்ரர்கள் பந்துக்கள் இவர்களைக் குறித்து 'ந மே கஶ்சித் நாஹம் கஸ்யசித்' (எனக்கு எவருமில்லை. எவருக்கும் நானில்லை) என்று சொல்லிவிட்டு, தடாகம் முதலிய ஜலாசயத்திற்குச் சென்று, இந்த ஆஶ்ரமத்தினின்றும் ஸன்யாஸாஶ்ரமத்தை அடையப் போகிறேன் என்று ஸங்கல்பிக்க வேண்டும்.*

ततः अप्स्वेवोदकाहुतिद्वयमाह कपिलः - 'अद्भ्यः स्वाहा पुत्रैषणाया वित्तैषणाया लोकैषणायाश्च व्युत्थितोऽहं स्वाहेत्यद्भ्य एवापः पाणिना हुत्वेति ॥ बोधायनः — अथ यज्ञोपवीतं विसृज्याद्भिः संस्पृश्याप्सु जुहोति वेदान्तविज्ञानेतीति ॥ आरुण्युपनिषदि च — 'उपवीतं भूमौ वाऽप्सु विसृजे'दिति ॥ काठकश्रुतिः — 'सशिखान् केशान्निष्कृत्य विसृज्य यज्ञोपवीतं भूःस्वाहेतीति ॥

*பிறகு ஜலத்திலேயே இரண்டு ஜலாஹுதிகளை விதிக்கின்றார்* கபிலர் - *'அத்ப்ய: ஸ்வாஹா, புத்ரைஷணாயா: என்ற இரண்டு மந்த்ரங்களால், கையினால் ஜலத்தை எடுத்து ஜலத்திலேயே ஹோமம் செய்ய வேண்டும்.* போதாயனர் - *பிறகு யக்ஞோபவீதத்தை நீக்கி ஜலத்துடன் சேர்த்து 'வேதாந்த விஜ்ஞான' என்ற மந்த்ரத்தால் ஜலத்தில் ஹோமம் செய்ய வேண்டும்.* ஆருண்யுபநிஷத்திலும் - *உபவீதத்தைப் பூமியிலாவது ஜலத்திலாவது விடவேண்டும்.* காடகஶ்ருதி - *சிகையுடன் கேசங்களை நீக்கி உபவீதத்தை பூ:ஸ்வாஹா என்று விடவேண்டும்.*

अत्राथर्वणी श्रुतिः - 'ब्रह्म सूत्रमहमेवेति विद्वान् त्रिवृत्सूत्रं त्यजेद्विद्वान् य एवं वेद सन्न्यस्तं मयेति त्रिः कृत्वाऽभयं सर्वभूतेभ्यो मत्तस्सर्वं प्रवर्तत इतीति ॥ बह्वृचपरिशिष्टे तु - 'प्राङ्मुखस्तिष्ठन्नूर्ध्वबाहुर्ब्रूयात् । ओं

भूस्सन्न्यस्तं मया । ओं भुवस्सन्न्यस्तं मया । ओं सुवस्सन्न्यस्तं मया । ओं भूर्भुवस्सुवस्सन्न्यस्तं मया इति त्रिरुपांशु त्रिर्मध्यमं त्रिरुच्चैरिति ।

இங்கு அதர்வச்ருதி - நானே ஸூத்ர ப்ரம்மம் என்று அறிந்த வித்வான் முப்புரியுள்ள உபவீதத்தை விடவேண்டும். 'ஸந்யஸ்தம் மயா' என்று மூன்றுமுறை சொல்லி, 'அயம்' என்ற மந்த்ரத்தைச் சொல்ல வேண்டும். பஹ்வ்ருசபரிசிஷ்டத்திலோ - கிழக்கு முகமாய்க் கைகளை உயரத்தூக்கி நின்றுகொண்டு, 'ஓம்பூ: ஸந்யஸ்தம் மயா' என்பது முதலான நாலுவாக்யங்களுள்ள மந்த்ரத்தை தாழ்ந்தத்வனியிலும், மத்யமத்வனியிலம், உயர்ந்த த்வனியிலும் மூன்று தடவை உச்சரிக்க வேண்டும்.

प्रकारान्तरमाह शौनकः — ओं भूर्भुवस्सुवस्सन्न्यस्तं मया सन्न्यस्तं मयेति मन्द्रमध्यमोत्तमस्वरेणोक्त्वाऽभयं सर्वभूतेभ्यो मत्त इति प्राङ्मुख उदकपूर्णाञ्जलिनिनयनं कृत्वा यथाधिकारं यथाविधि दण्डादि गृहीत्वा स्वधर्मनिष्ठो भवेदिति ॥ बोधायनस्त्वाह — 'अथान्तर्वेदि तिष्ठन् ओं भूर्भुवस्सुवः सन्न्यस्तं मया सन्न्यस्तं मयेति त्रिरुपांशूक्त्वा त्रिर्मध्यमं त्रिरुच्चैस्त्रिषत्याहि देवा इति विज्ञायतेऽभयं सर्वभूतेभ्यो मत्त इति चापां पूर्णमञ्जलिं निनयतीति ॥

சௌனகர் - 'பூர்ப்புவஸ்ஸுவ: ஸன்யஸ்தம் மயா' என்று மூன்று தடவை உச்சரித்து 'அபயம்' என்று ஜலாஞ்ஜலியைவிட்டுத் தண்டாதிகளை க்ரஹித்து ஸ்வதர்மநிஷ்டனாக வேண்டும். போதாயனர் - 'பூர்ப்புவஸ்ஸுவ: ஸன்யஸ்தம் மயா' என்று மூன்று தடவை உச்சரித்து, அஞ்சலியில் நிறைய ஜலத்தை எடுத்து 'அபயம்' என்ற மந்த்ரத்தால் பூமியில் விடவேண்டும்.

अत्र यमः — 'दत्वा तोयाञ्जलिं विप्रो भक्त्या संप्रार्थयेद्धरिम् । सर्वदेवात्मके तोये तोयाहुतिमहं हरे ॥ दत्वा सर्वैषणां त्यक्त्वा युष्मच्चरणमागतः । त्राहि मां सर्वलोकेश गतिरन्या न विद्यते ॥ सन्न्यस्तं मे

जगन्नाथ पाहि मां मधुसूदन । त्राहि मां सर्वलोकेश वासुदेव सनातन ॥ सन्यस्तं मे जगद्योने पुण्डरीकाक्ष मोक्षद । अहं सर्वाभयं दत्वा भूतानां परमेश्वर । युष्मच्चरणमापन्नस्त्राहि मां पुरुषोत्तमेति ॥ ततो दिगम्बरो भूत्वा गच्छेत् किञ्चिदुदङ्मुखः । जिज्ञासुश्चेत् परावृत्य तिष्ठेदाचार्यशासने ॥ ततो दोरकं कौपीनं बहिर्वासः कन्थां दण्डं च क्रमेणैकैकं प्रणवेनैवाददद्यात् । तत इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नः शर्म मे यच्छ यत्पापं तन्निवारयेति दण्डं सम्प्रार्थ्य सखा मा गोपायेति दण्डं धारयेदिति ॥

இங்கு யமன் - ப்ராமணன் ஜலாஞ்சலியை விட்ட பிறகு பக்தியுடன் விஷ்ணுவை ப்ரார்த்திக்க வேண்டும். ஓ ஹரே! ஸகலதேவஸ்ரூபமான ஜலத்தில் ஜலாஹுதியைச் செய்து, ஏஷணை (ஆசை)களை விட்டு உன் பாதத்தை அடைந்தேன். என்னைக் காப்பாற்றும். ஸர்வலோகேச்வர! வேறு கதி இல்லை. ஜகன்னாத! நான் ஸன்யஸித்தேன். மதுஸூதன! என்னைக் காப்பாற்றும். ஸர்வலோகேச! வாஸுதேவ, ஸநாதந, ஜகத்காரண, புண்டரீகாக்ஷ, மோக்ஷத, நான் எல்லோருக்கு மபயமளித்து, ஸன்யஸித்து உன் பாதத்தை அடைந்தேன். ஓ புருஷோத்தம! என்னைக்காப்பாற்றுமென்று. பிறகு திகம்பரனாய் கொஞ்ச தூரம் வடக்கு நோக்கிச் செல்ல வேண்டும். ஜிஜ்ஞாஸுவானால் திரும்பி வந்து ஆசார்யனிடம் இருக்க வேண்டும். பிறகு கடிஸூத்ரம், கௌபீனம். வஸ்த்ரம், போர்வை, தண்டம் இவைகளை க்ரமமாய் ஒவ்வொன்றையும் ப்ரணவத்தால் க்ரஹிக்க வேண்டும். பிறகு 'இந்த்ரஸ்ய' என்ற மந்த்ரத்தால் தண்டத்தை ப்ரார்த்தித்து, 'ஸகா மா கோபாய' என்ற மந்த்ரத்தால் தரிக்க வேண்டும்.

आथर्वणी श्रुतिः — 'सखा मा गोपायौजः सखा योऽसीन्द्रस्य वज्रोऽसीत्यनेन मन्त्रेण कृत्वोर्ध्वं वैणवं दण्डं कौपीनं परिग्रहेदिति ॥ मैत्रायणी श्रुतिरपि - 'इन्द्रस्य वज्रोऽसीति त्रीन्वैणवान् दण्डान् दक्षिणे पाणौ धारयेदेकं

वेति ।। आरुणी श्रुतिरपि — 'काममेकं वैणवं दण्डं धारयेदिति ।। बोधायनः — 'सखा मा गोपायेति दण्डमादत्ते यदस्य पारे रजस इति शिक्यं गृह्णाति येन देवाः पवित्रेणेति जलपवित्रं गृह्णाति येन देवा ज्योतिषोर्ध्वा उदायन्निति कमण्डलुं गृह्णाति सप्तव्याहृतीभिः पात्रं गृह्णातीति ।।

அதர்வஸ்ம்ருதி - ''இந்த்ரஸ்ய' என்ற மந்த்ரத்தால் வேணு தண்டத்தையும், கௌபீனத்தையும் க்ரஹிக்க வேண்டும். மைத்ராயணீ ஸ்ம்ருதி - 'இந்த்ரஸ்ய-' என்ற மந்த்ரத்தால் மூன்று வேணுதண்டங்களை அல்லது ஒரு தண்டத்தை வலது கையில் தரிக்க வேண்டும். ஆருணீஸ்ம்ருதி - ஒரு வேணுதண்டத்தையாவது தரிக்கலாம். போதாயனர் - 'ஸகாமா-' என்ற மந்த்ரத்தால் தண்டத்தையும், 'யதஸ்ய -' என்பதால் சிக்யத்தையும், 'யேநதேவா: பவித்ரேண-' என்பதால் ஜலபவித்ரத்தையும், யேநதேவாஜ்யோதிஷா-' என்பதால் கமண்டலுவையும், ஏழு வ்யாஹ்ருதிகளால் பிக்ஷாபாத்ரதையும் க்ரஹிக்க வேண்டும்.

अन्ये तु प्रकारान्तरं वर्णयन्ति — 'नान्दीश्राद्धं कृत्वा परेद्युरुपोष्य सप्ताष्ट वा केशान् परिहृत्य कण्ठादुपरि वापयित्वा नखनिकृन्तनं च कारयित्वा स्नात्वाऽऽचम्य पुण्याहं वाचयित्वा पुत्रादिदायातिरिक्तं स्वद्रव्यं होमार्थं दक्षिणार्थं च स्थापयित्वा ब्राह्मणेभ्यः सर्वस्वं दत्वा ततो दोरकौपीनाच्छादनानि प्रक्षाल्य सलक्षणं मुद्रासहितं वैणवं दण्डं जलपात्रं च सन्निधाप्य देवायतनादौ स्थित्वा ब्रह्माञ्जलिं कृत्वा ओन्नमो ब्रह्मणे + करोमीति त्रिर्जपित्वा ब्रह्मयज्ञवद्वेदादीन् जपित्वा ओं ब्रह्मणे नमः । ओं इन्द्राय नमः । ओं सोमाय नमः । ओं प्रजापतये नमः । ओं आत्मने नमः। ओं अन्तरात्मने नमः । ओं परमात्मने नमः । इति सक्तुमुष्टित्रयं प्रणवेन प्राश्याचम्य ओं आत्मने स्वाहा । ओं अन्तरात्मने स्वाहा । ओं परमात्मने स्वाहा ओं प्रजापतये स्वाहेति नाभिं स्पृष्ट्वा जपेत् ।

*சிலர் வேறு ப்ரகாரமும் சொல்லுகின்றனர், அதாவது முதல்தினத்தில் நாந்தீப்ச்ராத்தம் செய்து மறுநாளில் உபவாஸத்துடனிருக்க வேண்டும். அன்று 7 அல்லது 8 கேசங்கள் தவிர மற்ற கேசங்களைப் பரிஹரித்து கண்டத்திற்கு மேல் வபனம் செய்வித்து நகங்களையும் நீக்கி, ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து புண்யாஹவாசனம் செய்து புத்ராதிகளுக்குக் கொடுத்த மீதியுள்ள தன் தனத்தில் ஹோமத்திற்கும் தக்ஷிணைக்கும் வேண்டியதை வைத்துக் கொண்டு மற்ற எல்லாவற்றையும் ப்ராமணர்க்குத் தானம் செய்து, கடிஸூத்ரம், கௌபீனம், வஸ்த்ரம் இவைகளை அலம்பி, முத்ரையுடன் கூடிய வேணு தண்டம், ஜலபாத்ரம் இவைகளைச் சேர்த்து வைத்துத் தேவாலயம் முதலிய ஸ்தலத்திலிருந்து ப்ரம்மாஞ்சலி செய்து 'ஓம் நமோ ப்ரம்மணே-' என்பதை மூன்று தடவை ஜபித்து, ப்ரம்மயக்ஞத்தில் போல் வேதாதிகளை ஜபித்து. ஓம் ப்ரம்மணே நம:-' என்பவைகளால் மூன்று ஸக்துமுஷ்டிகளை (ஸத்துமாப்பிடிகளை) உண்டு ப்ரணவத்தால் ஆசமனம் செய்து, 'ஓம் ஆத்மனேஸ்வாஹா-' என்பவைகளால் நாபியைத் தொட்டு ஜபிக்கவும்.*

ततः पयो दधि सर्पिः प्रत्येकं त्रिवारं प्रणवेन प्राश्याचम्य प्राङ्मुख उपविश्य प्राणायामत्रयं कृत्वा यथाशक्ति गायत्रीजपं कुर्यात् । तत आदित्यास्तमयात्पूर्वमेव वक्ष्यमाण पुरुषसूक्त होमाद्यर्थमग्निं प्रतिष्ठापयेत् । पुरुषसूक्तहोमविरजाहोमौ तन्त्रेण करिष्य इति सङ्कल्प्य स्वे स्वेऽग्नावाज्यभागान्तं कृत्वा ओं भूस्स्वाहेति पूर्णाहुतिं जुहुयात् । ततस्सायंसन्ध्यामुपास्य सायमग्निकार्यं कृत्वाऽग्नेर्दक्षिणतो दर्भान् संस्तीर्य कृष्णाजिनं च वस्त्रेणाच्छाद्य तत्रासीनो गायत्रीं जपन् जागरणं कुर्यात्।

*பிறகு பால், தயிர், நெய் இவைகளைத் தனித்தனியாய் மூன்று தடவை ப்ரணவத்தால் ப்ராசனம் செய்து ஆசமனம் செய்து கிழக்கு நோக்கி உட்கார்ந்து, மூன்று ப்ராணாயாமங்களைச் செய்து யதாசக்தி காயத்ரீ ஜபம் செய்ய*

வேண்டும். பிறகு ஸூர்யாஸ்தமயத்திற்கு முன்பே சொல்லப் போகும் புருஷஸூக்த ஹோமம் முதலிய வைக்காக அக்னிபிரதிஷ்டை செய்ய வேண்டும். புருஷ ஸூக்தஹோம விரஜா ஹோமங்களைச் செய்கிறேன் என்று ஸங்கல்பித்து அவரவர் அக்னியில் ஆஜ்யபாகம் வரையில் செய்து 'ஓம்பூ:ஸ்வாஹா' என்று பூர்ணாஹுதி ஹோமம் செய்யவேண்டும். பிறகு ஸாயம் ஸந்த்யாவந்தனமும் அக்னிகார்யமும் செய்து, அக்னிக்குத் தென்பாகத்தில் தர்ப்பங்களைப் பரப்பி அவைகளின் மேல் க்ருஷ்ணாஜினத்தையும் அதன்மேல் வஸ்த்ரத்தையும் விரித்து அதில் உட்கார்ந்து காயத்ரீ ஜபம் செய்பவனாய் விழித்திருக்க வேண்டும்.

ततो ब्राह्मे मुहूर्त उत्थाय स्नात्वाऽऽचम्य स्वाग्नौ चरुं श्रपयित्वाऽभिघार्य बर्हिष्यासाद्य व्याहृतीः पुरुषसूक्तं च जपेत्। प्रजापतये स्वाहा। इन्द्राय स्वाहा। विश्वेभ्यो देवेभ्यः स्वाहा। ब्रह्मणे स्वाहेति च जपित्वा पुण्याहं वाचयित्वा स्रुवेणाज्यं गृहीत्वाऽग्नये स्वाहा सोमाय स्वाहाऽग्नये स्वाहेति हुत्वा प्रयासाय स्वाहेति द्वादशाज्याहुतीः प्राणाय स्वाहेति पञ्चाज्याहुतीर्हुत्वा स्वशाखापुरुषसूक्तेन प्रत्यृचं समिदन्नाज्याहुतीः क्रमेण जुहुयात्।

பிறகு ப்ராம்ம முகூர்த்தத்திலெழுந்து ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து தன் அக்னியில் சருச்ரபணம் செய்து அபிகாரம் செய்து தர்ப்பங்களில் ஸாதனம் செய்து வ்யாஹ்ருதிகளையும், புருஷஸூக்தத்தையும் ஜபிக்க வேண்டும். 'ப்ரஜாபதயே ஸ்வாஹா-' முதலிய மந்த்ரங்களை ஜபித்துப் புண்யாஹ வாசனம் செய்து, ஸ்ருவத்தினால் ஆஜ்யத்தை க்ரஹித்து 'அக்னயே ஸ்வாஹா -' முதலிய மூன்று ஆஹுதிகளையும், 'ப்ரயாஸாய ஸ்வாஹா-' முதலிய 12 ஆஹுதிகளையும், 'ப்ராணாயஸ்வாஹா-' முதலிய 5 ஆஹுதிகளையும் ஆஜ்யத்தினால் செய்து, தன் சாகையிலுள்ள புருஷஸூக்தத்தினால் ருக்குத்தோறும்

*ஸமித் அன்னம் ஆஜ்யம் இவைகளை க்ரமமாய் ஹோமம் செய்ய வேண்டும்.*

ततो विरजाहोममाज्येन चरुणा च कुर्यात्। स्विष्टकृतं हुत्वा उपरिष्टात्तन्त्रं कृत्वा ओं स्वाहेति पूर्णाहुतिं हुत्वा सर्पिर्मिश्रं चरुं प्राश्याचम्य ब्रह्मोद्वासनं कृत्वाऽऽचार्याय दक्षिणां दत्वा प्रातः सन्ध्यामुपास्य प्रातर्होमं कृत्वा सं मा सिञ्चन्तु मरुतः समिन्द्रः सं बृहस्पतिः। संमाऽयमग्निस्सिञ्चत्वायुषा च बलेन चायुष्मन्तं (वर्चस्वन्तं) करोतु(मां) इत्युपस्थाय अयन्ते योनिरिति त्रिरग्निमाजिघ्रेत्॥

*பிறகு விரஜாஹோமத்தை ஆஜ்யத்தாலும் சருவாலும் செய்ய வேண்டும். ஸ்விஷ்டக்ருத்ஹோமம், மேல்தந்த்ரம் இவைகளைச் செய்து 'ஓம் ஸ்வாஹா' என்று பூர்ணாஹுதி ஹோமம் செய்து நெய்யுடன் சேர்த்து, சருவை ப்ராசனம் செய்து ஆசமனம் செய்து, ப்ரம்மோத்வாஸனம், ஆசார்யதக்ஷிணை தானம் இவைகளைச் செய்து, ப்ராதஸ் ஸந்த்யோபாஸனம், ப்ராதர்ஹோமம் இவைகளையும் செய்து, 'ஸம் மா ஸிஞ்சந்து-' என்பதால் உபஸ்தானம் செய்து, 'அயம் தே யோநி:-' என்ற மந்த்ரத்தால் ஆத்மஸமாரோபணம் செய்ய வேண்டும்.*

ततो दोरकौपीनकाषायवस्त्रदण्डादिकं गृहीत्वा जलाशयं गत्वा स्नात्वा अस्मादाश्रमात् परमहंसाश्रमं प्रविशामीति सङ्कल्प्य नाभिमात्रोदके प्राङ्मुखस्तिष्ठन् सावित्रीं व्याहृतौ प्रवेशयामीति सङ्कल्प्य सावित्रीप्रवेशनं कुर्यात्। ओं भूः सावित्रीं (व्याहृतौ) प्रवेशयामि तत्सवितुर्वरेण्यम्। ओं भुवः सावित्रीं प्रवेशयामि भर्गो देवस्य धीमहि। ओं सुवः सावित्रीं प्रवेशयामि धियो यो नः प्रचोदयात्। ओं भूः सावित्रीं प्रवेशयामि। तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि। ओं भुवः सावित्रीं प्रवेशयामि। धियो यो नः प्रचोदयात्। ओं सुवः सावित्रीं प्रवेशयामि। तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि धियो यो नः प्रचोदयादिति व्याहृतौ सावित्रीं प्रवेशयेत्। ततः व्याहृतीः प्रणवे

प्रवेशयामीति सङ्कल्प्य । ओं भूः प्रवेशयामि । ओं भुवः प्रवेशयामि । ओं सुवः प्रवेशयामि । ओं भूर्भुवस्सुवः प्रवेशयामीति व्याहृतीः प्रणवे समारोपयेत् । ततः अहं वृक्षस्य + वेदानुवचनम् । यश्छन्दसामृषभो विश्वरूपः + श्रुतं मे गोपायेति च जपित्वा पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थितोऽहमित्युक्त्वोर्ध्वबाहुः सूर्याभिमुखस्तिष्ठन्, ओं भूः सन्न्यस्तं मया । ओं भुवः सन्न्यस्तं मया । ओं सुवः सन्न्यस्तं मया । ओं भूर्भुवस्सुवः सन्न्यस्तं मयेति मन्द्र मध्यमोत्तमस्वरेण त्रिवारं प्रैषमन्त्रमुच्चार्य अभयं सर्वभूतेभ्यो मत्तः स्वाहेति प्राच्यां दिश्युदकाञ्जलिं प्रक्षिप्य शिखां छित्वा यज्ञोपवीतं निकृत्य उदकाञ्जलिना गृहीत्वा ओं भूः स्वाहेत्यप्सु हुत्वा प्रैषमन्त्रेण त्रिवारमभिमन्त्रितमुदकं प्राश्य तीरं गत्वा वासः कटिसूत्रादिकं भूमौ विसृज्य जातरूपधरः सप्तपदं प्राचीमुदीचीं वा दिशं व्रजेत् ।

*பிறகு கடிஸூத்ர கௌபீன காஷாயவஸ்த்ர தண்டாதிகளை க்ரஹித்துக் கொண்டு ஜலாசயத்திற்குச் சென்று ஸ்நானம் செய்து, 'அஸ்மாதாஶ்ரமாத்-' என்று ஸங்கல்பித்து நாபியளவு ஜலத்தில் நின்று கொண்டு ஸங்கல்பித்து ஸாவித்ரீ ப்ரவேசனம் செய்ய வேண்டும். பிறகு ஸங்கல்பித்து வ்யாஹ்ருதிகளை ப்ரணவத்தில் ப்ரவேசிப்பிக்க வேண்டும். பிறகு 'அஹம் வ்ருக்ஷஸ்ய-' முதலிய மந்த்ரங்களை ஜபித்து, 'புத்ரைஷணயாஶ்ச -' என்றதைச் சொல்லிக் கைகளை உயரத்தூக்கி ஸூர்யனை நோக்கி நின்றுகொண்டு, 'ஓம்பூ: ஸன்யஸ்தம்மயா-' என்ற ப்ரைஷமந்த்ர வாக்யங்களைத் தாழ்ந்தஸ்வரம், மத்யமஸ்வரம், உரக்கஸ்வரம் இவைகளில் மூன்று தடவை உச்சரித்து, 'அபயம், ஸர்வபூதேப்யோ-' என்று கிழக்கு திக்கில் ஜலாஞ்ஜலியை விட்டு, சிகையைச் சேதித்து, உபவீதத்தை அறுத்து ஜலாஞ்ஜலிடன் க்ரஹித்து ஓம்பூ: ஸ்வாஹா' என்று ஜலத்தில் ஹோமம் செய்து, ப்ரைஷமந்த்ரத்தால் மூன்று தடவை அபிமந்த்ரிக்கப்பட்ட*

ஜலத்தை ப்ராசனம் செய்து கரையை அடைந்து வஸ்த்ரம் கடிஸூத்ரம் முதலியவையை பூமியில் விட்டு நக்னனாய் கிழக்கு அல்லது வடக்கு நோக்கி ஏழு அடிகள் செல்லவேண்டும்.

तत आचार्योऽन्यो वा भो भगवन् तिष्ठ तिष्ठ लोकानुग्रहार्थं दण्डादि गृहाणेति निवार्य कौपीनं काषायवस्त्रं च दद्यात् । प्रणवेन स्वीकृत्य परिधायाचम्य मस्तक प्रमाणं परशुशङ्खमुद्रान्विताग्रं सुरभिपद्ममुद्रान्वितमध्यं नागमुद्रान्वितमूलमुक्तलक्षणयुक्तमेकं वैणवं दण्डमिन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नश्श + रय इति तं प्रार्थयन् सखा मा गोपायेति दक्षिणहस्तेन गृह्णीयात् । ओमिति कमण्डलुं च गृह्णीयादिति ॥ 'एवं सन्न्यासकल्पस्य नानात्वमृषिभिः स्मृतम्। तत्र व्यवस्था द्रष्टव्या सम्प्रदायानुसारतः ॥

பிறகு ஆசார்யனாவது அன்யனாவது 'ஓ பகவன்! நில்லும் நில்லும், லோகானுக்ரஹத்திற்காக தண்டம் முதலியவைகளை ஸ்வீகரித்துக் கொள்ளும்' என்று தடுத்துக் கௌபீனம் காஷாயவஸ்த்ரம் இவைகளைக் கொடுக்க வேண்டும். ப்ரணவத்தால் ஸ்வீகரித்து அவைகளைத் தரித்து ஆசமனம் செய்து தலை அளவுள்ளதும், பரசு சங்க முத்ரைகள் நுனியிலுடையதும், ஸுரபி பத்ம முத்ரைகளை மத்யத்திலுடையதும், நாகமுத்ரையை அடியிலுடையதும் லக்ஷணங்களுடன் கூடியதுமான ஒரு வேணு தண்டத்தை 'இந்த்ரஸ்ய-' என்ற மந்த்ரத்தால் ப்ரார்த்தித்து 'ஸகாமாகோபாய' என்று வலது கையினால் க்ரஹிக்க வேண்டும். 'ஓம்' என்பதால் கமண்டலுவையும் க்ரஹிக்க வேண்டும். இவ்விதம் ஸன்யாஸகல்பத்தைப் பல ப்ரகாரங்களால் முனிவர்கள் சொல்லியிருக்கின்றனர். அவரவர் ஸம்ப்ரதாயத்தை அனுஸரித்து அதில் வ்யவஸ்த்தையை அறியவும்.

## उपदेशक्रमः ।

उक्तविधिना सन्न्यासं विधाय आत्मज्ञानाय गुरुसमीपं गच्छेत्।तथा

च मुण्डके श्रूयते — 'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठमिति ॥ ततो विनीतो गुरुमुपगम्य दक्षिणं जानु भूमिं नीत्वा पादग्रहणं च कृत्वा 'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै । तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये' इति मन्त्रेण गुरुं ईश्वरबुद्ध्योपस्थाय अधीहि भगवो ब्रह्मेति ब्रूयात् । तस्मै साधकचतुष्टयसम्पन्नायाधिकारिणे गुरुर्ब्रह्मोपदिशेत्॥

### உபதேசக்ரமம்

*சொல்லிய விதிப்படி ஸன்யாஸத்தை ஸ்வீகரித்து ஆத்மஜ்ஞானத்திற்காகக் குருவின் ஸமீபம் செல்ல வேண்டும். முண்டகஶ்ருதியும் இவ்விதம் சொல்லுகின்றது. வணக்கமுள்ளவனாய், குருவை அடைந்து வலது முழங்காலைப் பூமியில் வைத்து, காலைத் தொட்டு நமஸ்கரித்து 'யோப்ரஹ்மாணம்-' என்ற மந்த்ரத்தால் குருவை ஈஶ்வரபுத்தியுடன் ஸ்துதித்து, 'அதீஹி பகவோ ப்ரம்ம' என்று சொல்ல வேண்டும். நான்கு ஸாதனங்களுடன் கூடிய அந்தச் சீடனுக்குக் குரு ப்ரம்மத்தை உபதேசிக்க வேண்டும்.*

तथा च श्रूयते—'तस्मै स विद्वानुपसन्नाय सम्यक् प्रशान्तचित्ताय शमान्विताय । येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तां तत्वतो ब्रह्मविद्याम् । तदेतत्सत्यमिति । ततो गुरुरात्मानमनुसन्धाय जलपूर्णं शङ्खं पुष्पादिभिरभ्यर्च्य द्वादशप्रणवैरभिमन्त्र्य प्रणवेन शिष्यस्य शिरोऽभिषिञ्चेत् । ततः शन्नो मित्र इति शान्तिं पठित्वा शिष्यशिरसि हस्तं दत्वा पुरुषसूक्तं जपेत् ॥ तथा च बह्वृचपरिशिष्टे - 'अथास्य शिरसि पुरुषसूक्तेन पाणिमुपदधाति । मम हृदये हृदयं ते दधामि मम चित्तमनु चित्तं ते अस्तु मम वाचमेकव्रतो जुषस्व बृहस्पतिस्त्वां नियुनक्तु मह्यमिति हृदयदेशे इति ॥ ततः प्रणवमुपदिश्य तदर्थं बोधयेत् । महावाक्योपदेशपूर्वकं धर्मं बोधयित्वा नाम दद्यात् । 'तत्त्वं पदार्थयोरैक्यं यत्पदं प्रतिपादयेत् । तन्नाम यतये कुर्याद्वाक्यनाम

तदिष्यते।यतीनां ख्यातयशसामाचार्यः पूर्वभाविनाम्। नाम कुर्यान्न शिष्यस्य बुद्धिपूर्वं कदाचने' ति सम्प्रदायविदः ॥

அவ்விதம் ஶ்ருதியும் சொல்லுகின்றது. பிறகு குரு ஆத்மானுஸந்தானம் செய்து, ஜலபூர்ணமான சங்கத்தைப் புஷ்பாதிகளால் பூஜித்து, 12 தடவை ப்ரணவத்தால் அபிமந்த்ரித்து, ப்ரணவத்தால் சிஷ்யனின் சிரஸ்ஸில் அபிஷேகம் செய்ய வேண்டும், பிறகு 'சன்னோ மித்ர:' என்ற சாந்தியைப் படித்து, சிஷ்யனின் சிரஸ்ஸில் கையை வைத்துப் புருஷஸூக்தத்தை ஜபிக்க வேண்டும். அவ்விதமே க்ருஹ்யபரிசிஷ்டத்தில் - 'பிறகு சிஷ்யனின் சிரஸ்ஸில் புருஷஸூக்தத்தினாலும், மார்பில் மம ஹ்ருதயே-' என்ற மந்த்ரத்தாலும் ஹஸ்தத்தை வைக்க வேண்டும்.' பிறகு ப்ரணவத்தை உபதேசித்து அதன் அர்த்தத்தைத் தெரிவிக்க வேண்டும். மகாவாக்யத்தை உபதேசித்துத் தர்மத்தைத் தெரிவித்துப் பெயரைக் கொடுக்க வேண்டும். தத்பதம், த்வம்பதம் இவைகளின் அர்த்தங்களுக்கு ஐக்யத்தைப் போதிக்கும் பதத்தை யதிக்கு நாமதேயமாய்ச் செய்ய வேண்டும். இது வாக்யநாமம் எனப்படும். 'பிரஸித்தமான கீர்த்தியுடையவரும், முன்னோர்களுமான யதிகளின் நாமத்தைப் புத்தி பூர்வமாய் சிஷ்யனுக்கு ஆசார்யன் செய்யக் கூடாது' என்று ஸம்ப்ரதாய மறிந்தவர்கள் சொல்லுகின்றனர்.

बह्वृचपरिशिष्टेऽपि —— 'अथास्मै नाम दद्याद्वैष्णवं मनसा नामाथ वा यद्रोचत इति ॥ सम्प्रदायविद्वचनम् 'योगपट्टं च दातव्यं वेदान्ताभ्यासतः परम् । ततो नाम प्रकर्तव्यं गुरुणा सर्वसम्मतम् ॥ तीर्थाश्रमवनारण्य-गिरिपर्वतसागराः । सरस्वतीभारती च पुरी नाम यतेर्दश। श्रीपादसंज्ञया वाच्यं नाम तस्य यथातथमिति ॥

பஹ்வ்ருசபரிசிஷ்டத்திலும் - பிறகு சிஷ்யனுக்கு விஷ்ணுவினுடைய நாமத்தையாவது தன் மனத்திற்கு ருசிக்கும் நாமத்தையாவது கொடுக்க வேண்டும்.

तपांसि सर्वाणि च यद्वदन्ति । यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं सङ्ग्रहेण ब्रवीम्योमित्येतत् । एतदालम्बनं श्रेष्ठमेतदालम्बनं परम् । एतदालम्बनं ज्ञात्वा ब्रह्मलोके महीयते ।। यस्तु द्वादशसाहस्रं नित्यं प्रणवमभ्यसेत् । तस्य द्वादशभिर्मासैः परं ब्रह्म प्रकाशते ।। श्रवणान्मननाच्चैव निदिध्यासनतस्तथा।

*ஓம் என்பது ப்ரம்மம். அது காணப்படும் இப்பிரபஞ்சம் முழுதும், இந்த அக்ஷரம் பரப்ரம்மம். இதற்கு நாலு வேதங்களும் பாதங்கள். இது நான்கு பாதங்களுடைய ப்ரம்மம். ஸகல வேதங்களும் எதை அடையத்தக்கதாய்ச் சொல்லுகின்றனவோ, ஸகல தவங்களும் எதை அடைவதற்கென்கிறார்களோ, எதை இச்சித்தவர்கள் ப்ரம்மசர்யத்தை அனுஷ்டிக்கின்றார்களோ அந்தப்பதத்தை உனக்கு ஸங்க்ரஹமாய்ச் சொல்லுகின்றேன்; ஓம் என்பது அந்தப்பதம். இது சிறந்த பிடிப்பு; இது பரமும் அபரமுமான பிடிப்பாகும்; இதை அறிந்தால் ப்ரம்மலோகத்தில் சிறப்பை அடைவான். ப்ரதிதினமும் 12000 ப்ரணவ ஜபம் செய்பவனுக்கு 12 மாதங்களில் பரப்ரம்மம் ப்ரகாசிக்கின்றது.*

आराध्यं सर्वथा ब्रह्म पुरुषेण हितैषिणा । ब्रह्मचर्यममानित्वमहिंसा सत्यमार्जवम् । वेदान्तश्रवणं ध्यानं भिक्षोः कार्याणि नित्यशः ।। त्वं पदार्थविवेकाय सन्न्यासस्सर्वकर्मणाम् । श्रुत्या विधीयते तस्मात्तत्त्यागी पतितो भवेदिति ।।

*ஹிதத்தை விரும்புவோன் சிரவணமனன நிதித்யாஸனங்களால் ஸர்வப்ரகாரத்தாலும் ப்ரம்மத்தை ஆராதிக்க வேண்டும். ப்ரம்மசர்யம், கர்வமின்மை, அஹிம்ஸை, ஸத்யம், ருஜுத் தன்மை, வேதாந்த ஶ்ரவணம், த்யானம் இவைகளை ஸன்யாஸி எப்பொழுதும் விடக் கூடாது. த்வம்பதத்தினுடைய அர்த்தத்தின் விவேகத்திற்காக ஸகல கர்மஸன்யாஸத்தை ஶ்ருதி விதிக்கின்றது; ஆகையால் அதை விட்டால் பதிதனுவான்.*

संवर्तः — 'योगाभ्यासपरो नित्यमात्मविद्यापरायणः ।। स ह्याश्रमैर्विजिज्ञास्यः समस्तैरेवमेव तु । द्रष्टव्यस्त्वथ मन्तव्यः श्रोतव्यश्च द्विजातिभिः ।। श्रवणादिक्रिया तावत् कर्तव्येह प्रयत्नतः । यावद्यथोक्तविज्ञानमाविर्भवति भास्वर'मिति ।।

ஸம்வர்த்தர் - யோகாப்யாஸத்திலும் ஆத்ம வித்யையிலும் ஆர்வத்துடன் ஈடுபடவேண்டும். அந்த ஆத்மாவே ஸகல ஆஶ்ரமங்களாலும் அறிய விரும்பத்தகுந்தவன். த்விஜர்களால் அறியத்தகுந்தவன். கேட்கத்தகுந்தவன். மனனம் செய்யத் தகுந்தவன். சாஸ்த்ரங்களில் சொல்லியபடிக்குள்ள ஞானம் ப்ரகாசமாய் உண்டாகும் வரையில் சிரவணம் முதலியவற்றை ப்ரயத்னத்துடன் செய்து வரவேண்டும்.

पुराणे — 'दिने दिने तु वेदान्तश्रवणाद्भक्तिसंयुतात् । गुरुशुश्रूषया लब्धात् कृच्छ्राशीतिफलं लभेत् ।। वेदान्तश्रवणादेव नश्यत्येवोपपातकम् । तथा पातकसङ्घाश्च नित्यं वेदान्तसेवनादिति ।। व्यासः — 'काम एव मनुष्याणां पिधानं ब्रह्मबोधने । तस्मात् कामं त्यजन् धीरो ज्ञानमाप्नोति मोक्षदम् । ज्ञानमुत्पद्यते पुंसां क्षयात् पापस्य कर्मण' इति ।।

புராணத்தில் - குருவுக்கு சுஶ்ரூஷை செய்து அவர் முகமாய் பக்தியுடன் வேதாந்த ஶ்ராவணம் செய்பவன் ப்ரதிதினமும் 80 க்ருச்ரங்களின் பலனை அடைவான். வேதாந்த ஶ்ரவணத்தால் உபபாதகம் நசிக்கின்றது. நித்யமும் வேதாந்தஸேவையால் பாதகங்களெலாம் நசிக்கின்றன. வ்யாஸர் - மனிதர்களின் ப்ரம்மக்ஞானத்தில் காமமே மறைப்பாகும். ஆகையால் காமத்தை விட்டவன் மோக்ஷத்தையளிக்கும் ஞானத்தை அடைவான்.

## भिक्षाचर्यादि

तत्र मनुः — 'एककालं चरेद्भैक्षं न प्रसज्जेत विस्तरे । भैक्षप्रसक्तो भिक्षुर्हि विषयेऽतीव सज्जति ।। विधूमे सन्नमुसले व्यङ्गारे भुक्तवज्जने । वृत्ते

शरावसंपाते भिक्षां नित्यं यतिश्चरेत् ॥ अलाभे न विषादी स्याल्लाभे चैव न हर्षयेत् । प्राणयात्रिकमात्रः स्यान्मात्रासङ्गाद्विनिर्गतः । उदरपूरणावधिर्मात्रा । तत्सङ्गो मात्रासङ्गः । ततो निवृत्त इत्यर्थः ॥

பிக்ஷாடனம் முதலியவை

மனு - *பிக்ஷுவானவன் ஒருநாளில் ஒரு தடவை பிக்ஷாடனம் செய்ய வேண்டும். அதிக பிக்ஷையில் ஈடுபடக்கூடாது. அப்படியானால் விஷயங்களிலும் அதிகப்பற்றுள்ளவனாவான். அடுப்புப்புகை நின்றதும், உலக்கைச்சத்தம் நின்றதும் பாகாக்னி அணைந்ததும், வீட்டிலுள்ள ஜனங்கள் புஜித்த பிறகும், சமையல் பாத்ரங்களை எடுத்த பிறகுமான காலத்தில், யதி பிக்ஷாடனம் செய்ய வேண்டும். பிக்ஷை கிடைக்காவிடில் வருந்தக்கூடாது. கிடைத்தால் ஸந்தோஷிக்கக் கூடாது. ப்ராணதாரணத்திற்குப் போதுமான அன்னத்தைமட்டில் புஜிப்பவனாய் இருக்க வேண்டும். வயிறு நிறையவேண்டுமென்பதில் பற்றுள்ளவனாகக் கூடாது.*

स एव — 'अभिपूजितलाभांश्च जुगुप्सेतैव सर्वशः । अभिपूजितलाभैस्तु यतिर्मुक्तोऽपि बध्यते' ॥ मुक्तः = असक्तः ॥ 'अल्पान्नाभ्यवहारेण रहःस्थानासनेन च । ह्रियमाणानि विषयैरिन्द्रियाणि निवर्तयेत् ॥ इन्द्रियाणां निरोधेन रागद्वेषक्षयेण च । अहिंसया च भूतानाममृतत्वाय कल्पते ॥ न चोत्पातनिमित्ताभ्यां न नक्षत्राङ्गविद्यया । नानुशासनवादाभ्यां भिक्षां लिप्सेत कर्हिचित्' ॥ उत्पातः - भूकम्पादिः । निमित्तं - अधरस्पन्दनादिः । नक्षत्रविद्या - ज्योतिः शास्त्रम्। अङ्गविद्या - चिकित्सा । अनुशासनं - शिष्यपरिग्रहः । वादः - तर्कः ॥ स एव — 'न तापसैर्ब्राह्मणैर्वा वयोभिरपि वा श्वभिः । आकीर्णं भिक्षुकैर्वाऽन्यैरगारमुपसंव्रजेदिति ॥

*பூஜையுடன் கிடைக்கும் பிக்ஷாலாபங்களை நிந்திக்க வேண்டும். அவைகளை ஸ்வீகரித்தால் முக்தனான யதியும்*

பத்தனாவன். ஸ்வல்பமான அன்னத்தைப் புஜிப்பதாலும், ஏகாந்தஸ்தலத்தில் வஸிப்பதாலும், விஷயங்களால் இழுக்கப்படும் இந்த்ரியங்களைத் திருப்பவேண்டும். இந்த்ரிய நிக்ரஹத்தாலும், ராகத்வேஷங்களின் நாசத்தாலும், ப்ராணிகளை ஹிம்ஸியாமலிருப்பதாலும் மோக்ஷத்திற்கு அர்ஹனாகிறான். பூகம்பம் முதலிய உத்பாதங்களுக்கும், உதடு துடிப்பது முதலிய நிமித்தங்களுக்கும் பலன் சொல்வதாலும், ஜோதிஷ சாஸ்த்ரத்தாலும், சிகித்ஸா சாஸ்த்ரத்தாலும், சிஷ்ய பரிக்ரஹத்தாலும், தர்க்கத்தாலும் பிக்ஷையை அடையவிரும்பக்கூடாது. தாபஸர்கள் ப்ராமணர்கள், பக்ஷிகள், நாய்கள் கூடி நிறைந்த வீட்டில் பிக்ஷக்காகப் போகக்கூடாது.

याज्ञवल्क्यः — 'अप्रमत्तश्चरेद्भैक्षं सायाह्नेऽनभिलक्षितः । रहिते भिक्षुकैर्ग्रामे यात्रामात्रमलोलुप इति ।। अनभिलक्षितः - ज्योतिश्शास्त्रज्ञानेनाचिह्नितः ।।

யாக்ஞவல்க்யர் - கண் முதலிய இந்த்ரிய சாபல்ய மற்றவனாய், ஜோதிச்சாஸ்த்ராதி ஞானத்தால் அறியப் படாதவனாய், அதிக ஆசையற்றவனாய், ப்ராண தாரணத்திற்குப் போதுமான அன்னத்தை, பிக்ஷுகர் இல்லாத க்ராமத்தில் ஸாயங்காலத்தில் பிக்ஷிக்க வேண்டும்.

व्यासः — 'प्राणयात्रानिमित्तं च व्यङ्गारे भुक्तवज्जने । काले प्रशस्तवर्णानां भिक्षार्थं पर्यटेद्गृहान् ।। भैक्षेण वर्तयेन्नित्यं नैकान्नादी भवेत् क्वचित् ।। यस्तु मोहेन वाऽऽलस्यादेकान्नादी भवेद्यतिः ।। न तस्य निष्कृतिः काचिद्धर्मशास्त्रेषु कुत्रचित् ।। एकान्नं वर्जयेन्नित्यं कामं क्रोधं परिग्रहम् । सप्तागारं चरेद्भैक्षमलाभे तु पुनश्चरेत् ।। गोदोहमात्रं तिष्ठेत्तु कालं भिक्षुरधोमुख' इति ।।

வ்யாஸர் - *ப்ராணதாரணத்திற்காக, பாகாக்னி அணைந்து ஜனங்கள் புஜித்த பின்பு உள்ளகாலத்தில் உயர்ந்த வர்ணத்தார்களின் க்ருஹங்களில் பிக்ஷாடனம் செய்ய வேண்டும். நித்யமும் பிக்ஷான்னத்தையே புஜிக்க வேண்டும். ஒரே வீட்டு அன்னத்தைத் தொடர்ந்து தினமும் புஜிப்பவனாகக் கூடாது. எந்த யதி மோஹத்தாலாவது, சோம்பலினுலாவது ஏகான்ன போஜியாயிருக்கின்ருனே அவனுக்குத் தர்ம சாஸ்த்ரங்களில் எங்கும் ப்ராயசித்தமொன்றும் விதிக்கப்படவில்லை. ஏகான்னம், காமம், க்ரோதம், பரிக்ரஹம் இவைகளை விடவேண்டும். ஏழு வீடுகளில் பிக்ஷாடனம் செய்ய வேண்டும். அவைகளில் கிடைக்காவிடில் மறுபடி செய்ய வேண்டும். கோதோஹ (பசுகறக்கிற) காலம் (1/4 நாழிகை) வரையில் எதிர் பார்த்துத் தலை குனிந்து நிற்கலாம்.*

हारीतः — 'सायङ्काले तु विप्राणां गृहाण्यभ्यवपद्य तु । स्थित्यर्थमात्मनो नित्यं भिक्षाटनमथाचरेदिति ।। बोधायनः — 'ब्राह्मणानां शालीनयायावराणामपवृत्ते वैश्वदेवे भिक्षां लिप्सेत गोदोहमात्रमाकाङ्क्षेदद्भिः संस्पृश्यौषधवत् प्राश्नीयात् । अयाचितमसङ्क्लृप्तमुपपन्नं यदृच्छया । आहारमात्रं भुञ्जीत केवलं प्राणयात्रिकमिति ।

ஹாரீதர் - *ப்ரதிதினமும் ஸாயங்காலத்தில் ப்ராமணர்களின் வீடுகளை அடைந்து தன் தேஹதாரணத் திற்காகப் பிக்ஷாடனம் செய்ய வேண்டும்.* போதாயனர் - *சாலீனர், யாயாவரர் என்ற ப்ராமணர்களின் க்ருஹங்களில் வைச்வதேவமான பிறகு பிக்ஷையை விரும்பவேண்டும். கோதோஹகாலம் வரையில் நிற்கலாம். பிக்ஷான்னத்தை ஜலத்திஞல் சுத்திசெய்து ஔஷதத்தைப் போல் புஜிக்க வேண்டும். அயாசிதம் (யாசித்துப் பெருதது) அஸம்க்லுப்தம், (முன்னரே பிக்ஷைக்காகத் தயாரிக்க பெருதது) யத்ருச்சோபன்னம் (தற்செயலாகக் கிட்டியது) இவைகளுள் ஒன்ருன ஆஹாரத்தை மட்டில் ப்ராணதாரணமாத்ரத்திற்குப் போதுமானதாய் புஜிக்க வேண்டும்.*

अथाप्युदाहरन्ति — अष्टौ ग्रासा मुनेर्भक्ष्याष्षोडशारण्यवासिनः। द्वात्रिं शतं गृहस्थस्यापरिमितं ब्रह्मचारिणः ।। भैक्षं वा सर्ववर्णेभ्य एकान्नं वा द्विजातिषु। अपि वा सर्ववर्णेभ्यो न चैकान्नं द्विजातिष्वितीति ।।

முன்னோர்கள் இவ்விதம் சொல்லுகின்றனர் - ஸன்யாஸி எட்டுக்கபளங்களும், வாநப்ரஸ்தன் 16 - கபளங்களும், க்ருஹஸ்தன் 32 கபளங்களும். ப்ரம்மசாரி கணக்கில்லாமலும் புஜிக்க வேண்டும். மூன்று வர்ணங்களிலும் பிக்ஷ வாங்குவது, ப்ராமணர் க்ரஹத்தில் ஏகான்னம் புஜிப்பது என்ற இவ்விரண்டில் எது ச்லாக்யமெனில், பின் சொல்லியதைவிட முன் சொல்லியதே ச்லாக்யமாகும்.

स एव — 'ऊर्ध्वं नाभे (जान्वो) रधो नाभेः परिधायैकमम्बरम्। द्वितीयमुत्तरं वासः पात्री दण्डी च वाग्यतः ।। सव्येनादाय पात्रं तु त्रिदण्डं दक्षिणे करे। योऽसौ विष्ण्वाख्य आदित्यः पुरुषोऽन्तरवस्थितः ।। सोऽयं नारायणो देव इति ध्यात्वा प्रणम्य तम्। ततो ग्रामं व्रजेन्मन्दं युगमात्रावलोकनः ।। ध्यायन् हरिं च तच्चित्त इमं मन्त्रमुदीरयेत् ।। विष्णुस्तिर्यगथोर्ध्वं मे वैकुण्ठो विदिशं दिशम्। पातु मां सर्वतो रामो धन्वी चक्री च केशवः ।। प्राणयात्रिकमन्नं तु भिक्षेत विगतस्पृहः । गोदोहमात्रं तिष्ठेत्तु वाग्यतोऽधोमुखस्तथे' ति ।।

போதாயனரே - நாபிக்கு (முழங்காலுக்கு) மேலும் முழங்கால்களுக்குக் (நாபிக்குக்) கீழுமாய் ஒரு வஸ்த்ரத்தையும், உத்தரீயமாய் ஒரு வஸ்த்ரத்தையும் தரித்து, இடதுகையில் பிக்ஷாபாத்ரத்தையும் வலது கையில் த்ரிதண்டத்தையும் தரித்து, ஆதித்யனே நாராயணன் என்று த்யானித்து நமஸ்கரித்து, ஒரு நுகத்தடிக்கு மேல் பூமியைப் பாராமல் மெதுவாய் க்ராமத்திற்குச் செல்லவேண்டும். விஷ்ணுவை த்யானித்து, வரும் மந்த்ரத்தைச் சொல்லவேண்டும். குறுக்கில் விஷ்ணுவும், மேல் புறத்தில் வைகுண்டனும், விதிக்குகளிலும், திக்குகளிலும்

எல்லாவிடங்களிலும் ராமனும், சார்ங்கம் சக்ரம் தரித்த கேசவனும் என்னைக் காப்பாற்ற வேண்டும்.' என்று. ப்ராணதாரணத்திற்கு மட்டில் போதுமான அன்னத்தைப் பிக்ஷிக்க வேண்டும். கோ தோஹகாலமட்டில் மௌனியாய்க் கீழ்நோக்கியவனாய் நிற்கலாம்.

स्मृतिरत्ने — 'स्नात्वा शुचिश्शुचौ देशे कृतजप्यस्समाहितः । भिक्षार्थं प्रविशेद्ग्रामे यतिर्म्लेच्छकुलान्यपि ॥ एकान्नं तु न भुञ्जीत बृहस्पतिसमोऽपि सन् । मेध्यं भैक्षं चरेन्नित्यं सायाह्ने वाग्यतः शुचि'रिति ॥

ஸ்ம்ருதிரத்னத்தில் - ஸ்நானம் செய்து சுத்தனாய் சுத்தஸ்தலத்தில் ஜபம் செய்து பிக்ஷைக்காக க்ராமத்தில் ம்லேச்சக்ருஹங்களில் கூட நுழையலாம். ப்ரஹஸ்பதிக்குச் சமனாயினும் ஏகான்னத்தைப் புஜிக்கக் கூடாது. ஸாயாஹ்னத்தில் மௌனியாய், சுத்தனாய், சுத்தமான பிக்ஷான்னத்தை க்ரஹிக்க வேண்டும்.

उशनाः — 'माधूकरमसङ्क्लृप्तं प्राक् प्रणीतमयाचितम् । तात्कालिकोपपन्नं च भैक्षं पञ्चविधं स्मृतम् ॥ मनःसङ्कल्परहितान् गृहांस्त्रीन् पञ्च सप्त वा । मधुवद्धरणं यत्तु माधूकरमिति स्मृतम् ॥ शयनोत्थापनात् प्राग्यत् प्रार्थितं भक्तिसंयुतैः । तत् प्राक् प्रणीतमित्याह भगवानुशनामुनिः ॥ भिक्षाटनसमुद्योगात् प्राक्केनापि निमन्त्रितम् । अयाचितं तु तद्भैक्षं भोक्तव्यं ब्राह्मणेन हि । तात्कालिकमिति ख्यातं तदत्तव्यं मुमुक्षुणा ॥ सिद्धमन्नं भक्तजनैरानीतं यन्मठं प्रति । उपपन्नं तदित्याहुर्मुनयो मोक्षकाङ्क्षिणः ॥ भिक्षाः पञ्चविधा ह्येताः सोमपानसमाः स्मृता इति ॥

உசநஸ் - மாதூகரம், ப்ராக்ப்ரணீதம், அயாசிதம், தாத்காலிகம், உபபன்னம் என, பைக்ஷம் (பிக்ஷான்னம்) ஐந்து விதமாகும். மனதில் ஸங்கல்பம் செய்யாமல் தத்காலத்தில் 3, அல்லது 5, அல்லது 7 க்ருஹங்களில் சென்று, தேன்வண்டு தேனை க்ரஹிப்பதுபோல் பிக்ஷையை க்ரஹிப்பது 'மாதூகரம்' எனப்படும். சயனத்திலிருந்து எழுந்திருப்பதற்குமுன்பக்தர்களால் ப்ரார்த்திக்கப்பட்டுக்

கொடுக்கப்படுவது 'ப்ராக்ப்ரணீதம்' என்றார் உசநோமுனி. பிக்ஷைக்குப் புறப்படுவதற்குமுன் எவனாலாவது ப்ரார்த்தித்துக் கொடுக்கப்படுவது 'அயாசிதம்' எனப்படும். இது புஜிக்கத்தகுந்தது என்றார் மனு. பிக்ஷைக்குச் சென்றவிடத்தில் ப்ராமணனால் ப்ரார்த்தித்துக் கொடுக்கப்படுவது 'தாத்காலிகம்' எனப்படும். இதை யதி புஜிக்கலாம். பக்தியுள்ள ஜனங்களால் மடத்தில் கொண்டு வந்து கொடுக்கப்படும் அன்னத்தை 'உபபன்னம்' என்று முனிகள் சொல்லுகின்றனர். இந்த ஐந்துவித பிக்ஷைகளும் ஸோமபானத்திற்குச் சமமாம்.

पितामहः — 'अयाचितमसङ्क्लृप्तमुपपन्नं यदृच्छया । जोषयीत सदाभोज्यं ग्रासमागतमस्पृह इति ।। क्रतुः — 'संप्रार्थितमुपस्थानाद-सङ्क्लृप्तमयाचितम् । तत् सदैकान्नमप्यद्याद्भैक्षान्माधूकराद्वरम् ।। अयाचितं यथालाभं भोजनाच्छादनं भवेत् । निमन्त्रितोऽथवाऽश्नीयात् स्वगुणं न प्रकाशयेदिति ।।

பிதாமஹர் - யாசிக்காமலும், ஸங்கல்பிக்காமலும் இருந்து தற்செயலாய் நேர்ந்த அன்னத்தைப் புஜிக்கலாம். க்ரது - ஸங்கல்பிக்காததும், யாசிக்காததும், பிக்ஷைக்குப்போவதற்கு முன் ப்ரார்த்தித்து ஒருவரால் கொடுக்கப்பட்டதுமாகியது ஏகான்னமானாலும் புஜிக்கலாம். இது மாதுகரத்தைவிடச் சிறந்தது. யாசிக்காமல் கிடைத்தமட்டில் புஜிக்க வேண்டும்; வஸ்த்ரத்தை உடுக்க வேண்டும். அல்லது பிறரால் ப்ரார்த்திக்கப்பட்டும் புஜிக்கலாம். தன் குணங்களை வெளியிடக்கூடாது.

पराशरः — 'यतीनामातुराणां तु वृद्धानां दीर्घरोगिणाम् ।। एकान्मे नैव दोषोऽस्ति एकस्यैव दिने दिने । सुजीर्णोऽतिकृशो रोगी दशान्तो विकलेन्द्रियः । पुत्रमित्र गुरुभ्रातृपत्नीभ्यो भैक्षमाहरेत् ।। नापो मूत्रपुरीषाभ्यां

नाग्निर्दहनकर्मणा। न वायुः स्पर्शदोषेण नान्नदोषेण मस्करीति। वसिष्ठः — 'सप्तागाराण्यसङ्कल्पितानि चरेद्भैक्षमिति॥

பராசரர் - வ்யாதியுள்ளவரும், கிழவரும், தீர்க்கரோகிகளுமான யதிகளுக்கு ஏகான்னத்தால் தோஷமில்லை. ஒருவனுடைய அன்னத்தையே ப்ரதிதினமும் புஜித்தாலும் தோஷமில்லை. மிக்க ஜரை உடையவனும், மிக்க இளைத்தவனும், ரோகமுடையவனும், வயதுமுதிர்ந்தவனும், இந்த்ரியங்கள் குறைந்தவனுமான யதி, புத்ரன் மித்ரன் குரு ப்ராதா பத்னீ இவர்களிடமிருந்தும் பிக்ஷையை ஸ்வீகரிக்கலாம். ஜலம் மலமூத்ரங்களாலும், அக்னி எல்லாவற்றையும் தஹிப்பதாலும், காற்று ஸ்பர்சதோஷத்தாலும், ஸன்யாஸி அன்ன தோஷத்தாலும் அசுத்தியை அடைவதில்லை. வஸிஷ்டர் - ஸங்கல்பிக்காத ஏழு வீடுகளில் பிக்ஷாடனம் செய்ய வேண்டும்.

संवर्तः — 'अष्टौ भिक्षाः समादाय स मुनिः सप्त पञ्च वा। अद्भिः प्रक्षाल्य तास्सर्वास्ततोऽश्नीयाच्च वाग्यत' इति॥ यत्पुनर्वसिष्ठवचनम् — 'ब्राह्मणकुले यल्लभते तद्भुञ्जीत सायं प्रातर्मांसवर्जमिति, तदशक्तविषयम्। 'एककालं चरेद्भैक्ष' मिति मन्वादिस्मरणात्॥

ஸம்வர்த்தர் - ஸன்யாஸி, எட்டு அல்லது ஏழு, அல்லது ஐந்து பிக்ஷைகளை ஸ்வீகரித்து அதை ஜலத்தினல் அலம்பி மௌனியாய்ப் புஜிக்க வேண்டும். 'ப்ராமண க்ருஹத்தில் கிடைத்ததைப் புஜிக்க வேண்டும். மாலையிலும், காலையிலும், மாம்ஸமின்றி என்ற வஸிஷ்டவசனம் அசக்தனைப் பற்றியது; 'ஒரு வேளை பிக்ஷாசரணம் செய்ய வேண்டும்.' என்று மன்வாதி வசனங்களால்.

यमः — 'यश्चरेत् सर्ववर्णेषु भैक्षमभ्यवहारकः। न स किञ्चिदुपाश्नीयाद्यावद्भैक्षमिति स्थितिः' इति॥ काठकब्राह्मणे —

'चतुर्वर्णेषु भैक्षचर्यं चरेत् पाणिपात्रेणाशनं कुर्यादौषधवत् प्राश्नीयात् प्राणसन्धारणार्थं यथा मेदोवृद्धिर्न जायत' इति ॥

யமன் - ஸர்வ வர்ணங்களிலும் பிக்ஷை எடுத்து புஜிப்பவன் வேறொன்றையும் புஜிக்கக் கூடாது. காடகப்ராம்மணத்தில் - ஸர்வ வர்ணங்களிலும் பிக்ஷை வாங்கலாம், கைகளையே பாத்ரமாக்கிப் புஜிக்க வேண்டும்; ஔஷதம் போல் புஜிக்க வேண்டும்; ப்ராணனைத் தரிப்பதற்கு மட்டில்; மேதஸ் (கொழுப்பு) வ்ருத்தி ஆகாமலிருக்கும்படி.

मैत्रायणी श्रुतिः — 'भिक्षार्थं ग्रामं प्रविशेदासायं प्रदक्षिणे नाविचिकित्सन् सार्ववर्ण्यं भैक्षचरणमभिशस्तपतितवर्ज' मिति ॥ आरुणी श्रुतिः — 'यतयो भिक्षार्थं ग्रामं प्रविशन्ति पाणिपात्रमुदरपात्रं वा। ओं हि ओं हि ओं हि एतदुपनिषदं विन्यसेद्विद्वान् य एवं वेद । औषधवदशनमाचरेदौषदवदशनमाचरेदिति ॥

மைத்ராயணீ ச்ருதி - பிக்ஷைக்காக ஸாயங்காலம் வரையில் க்ராமத்திற்குள் பிரவேசிக்கலாம். ப்ரதக்ஷிணமாய்ப் போகவேண்டும். ஸம்சயிக்காமல் ஸகல வர்ணங்களிலும் பிக்ஷிக்கலாம். மகாபாதகிகள், பதிதர் இவர்களைத் தவிர்த்து. ஆருணீச்ருதி - யதிகள் பிக்ஷைக்காக க்ராமத்தை அடையவேண்டும்; கையையாவது உதரத்தையாவது பாத்ரமாய்ச் செய்து கொள்ள வேண்டும். ஓம்ஹி ஓம்ஹி ஓம்ஹி என்ற மந்த்ரத்தை அப்யஸிக்க வேண்டும். ஔஷதம்போல் புஜிக்க வேண்டும்.

पराशरः — 'ग्रामैकरात्रवासिनो नगरतीर्थावसथेषु पञ्चरात्रवासिन उदरादिपात्रिणोऽभिशस्तपतितवर्जं चातुर्वर्ण्यं भैक्षं चरन्त आत्मत्वेनावतिष्ठन्ते इति ॥ सर्ववर्णेषु भैक्षचरणमापद्विषयम् ॥ यदाह बोधायनः — 'ब्राह्मण क्षत्रियविशां मेध्यानामन्नमाहरेत् ॥ असंभवे तु पूर्वस्य आददीतोत्तरोत्तरम्। सर्वेषामप्यभावे तु भक्तद्वयमनश्नता। भैक्षं शूद्रादपि ग्राह्यं रक्ष्याः प्राणा विजानतेति ॥

பராசரர் - க்ராமத்தில் ஒரு நாளும், நகரம் தீர்த்தம் ஆவஸதம் இவைகளில் ஐந்து நாளும் வஸிப்பவரும், உதரம் கை இவைகளையே பாத்ரமாயுடையவரும், மகாபாதகிகள், பதிதர்கள் தவிர்த்து நான்கு வர்ணங்களிலும் பிக்ஷாடனம் செய்பவருமாய் ப்ரம்மத் தன்மையுடனிருக்கின்றனர். எல்லாவர்ணங்களிலும் பிக்ஷிப்பது ஆபத்விஷயம். ஏனெனில் போதாயனர் - சுத்தர்களான ப்ராம்ஹண க்ஷத்ரிய வைச்யர்களிடம் அன்னத்தைப் பிக்ஷிக்க வேண்டும். முன்வர்ணத்தான் இல்லாவிடில் பின் வர்ணத்தானிடம் க்ரஹிக்க வேண்டும். மூன்று வர்ணத்தாரும் கிடைக்காவிடில் இரண்டுவேளை புஜிக்காமலிருந்து பிறகு சூத்ரனிடமிருந்து க்ரஹிக்க வேண்டும். ப்ராணரக்ஷணம் ஆவச்யகமானதால்.

वसिष्ठोऽपि — 'ब्राह्मणकुले यल्लभते तद्भुञ्जीत' इति ॥ मैत्रायणी श्रुतिः — 'त्रिषु वर्णेष्वेकागारं भैक्षमश्नीयान्माधूकरं वेति ॥ आपदि सर्ववर्णभैक्षचरणमपि कलौ निषिद्धम्। 'यतेस्तु सर्ववर्णेषु न भिक्षाचरणं कलाविति स्मरणात्॥ गौतमः — 'हविः प्राश्य यथाऽऽचम्य निराहारो गृहे गृहे॥ पात्रमस्य भवेत्पाणिस्तेन नित्यं गृहेगृहे॥ पात्रमस्य भवेत्पाणिस्तेन नित्यं गृहानटेदिति ॥

வஸிஷ்டரும் ப்ராமண க்ருஹத்தில் கிடைத்ததைப் புஜிக்கவேண்டும். மைத்ராயணீ ச்ருதி மூன்று வர்ணங்களிலும், ஏகான்னமாவது மாதூகரமாவது புஜிக்கலாம். ஆபத்தில் ஸர்வவர்ணங்களிலும் பிக்ஷிப்பதும் கலியில் நிஷித்தம்; யதிக்கு ஸர்வவர்ணங்களிலும் பிக்ஷாசரணம் கலியில் கூடாது' என்று ஸ்ம்ருதியினால். கௌதமர் - க்ருஹஸ்தன் ஹவிச்சேஷத்தைப்பக்ஷித்து ஆசமனம் செய்தால், நிராஹாரனென்று எப்படி ஆகின்றானோ, அதுபோல் ஸன்யாஸி ஒவ்வொரு வீட்டிலும் புஜித்து ஆசமனம் செய்தால் நிராஹாரன் என்றே ஆகிறான். கையே இவனுக்குப் பாத்ரமாகும்; அதனாலேயே எப்பொழுதும் பிக்ஷாடனம் செய்ய வேண்டும்.

मुण्डके — 'पाणिपात्रमुदरपात्रं वा गेहे गेहे विशेत् कबलमात्रेण नापरं गृह्णीयात् पदे पदे भुञ्जन् गच्छन् कुलात्कुलेषु सर्वाशीति ॥ उदरपात्रस्वरूपं दर्शितं यतिधर्मसमुच्चये — 'आस्येन तु यदाऽऽहारं गोवन्मृगयते मुनिरिति। शौनकः — 'पाणिपात्रं चरन् योगी नासकृद्भैक्षमाचरेत्। तिष्ठन् भुञ्ज्याच्चरन् भुञ्ज्यान्मध्येनाचमनं तथेति ॥

முண்டகத்தில் கையையே பாத்ரமாக்கி, அல்லது வயிற்றையே பாத்ரமாக்கி ஒவ்வொரு வீடுகளிலும் நுழைந்து கபளத்திற்கு அதிகமாய் க்ரஹிக்கக் கூடாது. அடிக்கடி புஜிப்பவனாய் வீடுவீடாய் ஸஞ்சரித்து எங்கும் புஜிப்பான். உதரபாத்ரனின் ஸ்வரூபத்தைப் பற்றி யதிதர்மஸமுச்சயத்தில் - பசுபோல் வாயினாலேயே ஆஹாரத்தை எப்போது விரும்புகின்றானோ. சௌநகர் - பாணிபாத்ர வ்ருத்தியாய் ஸஞ்சரிக்கும் யோகி அடிக்கடி பிக்ஷாடனம் செய்யக் கூடாது. நின்று புஜிக்கலாம், சென்றுகொண்டும் புஜிக்கலாம். நடுவில் ஆசமனம் வேண்டுவதில்லை.

गोमुखवृत्तिकरपात्रवृत्त्योरशक्तौ पात्रान्तरेण भिक्षाचरणमाह विष्णुः — 'संस्कृत्य प्रणवेनाथ भिक्षापात्रं यथाविधि। भास्कराभिमुखो भूत्वा संस्मरन्मनसा हरिम् ॥ सव्येनादाय पात्रं तु दण्डं वै दक्षिणेन त्विति ॥ कण्वः — 'नमस्कृत्य तथाऽऽदित्यं समाक्रामन्नुपानहौ। सर्वदोपानहौ भिक्षुर्न त्यजेत्तु कदाचन ॥ उदपात्रं च भिक्षा च दुष्येद्दत उपानहाविति ॥

கோமுகவ்ருத்தி, கரபாத்ரவ்ருத்தி இவைகளைச் செய்யச் சக்தி இல்லாவிடில் வேறு பாத்ரத்தால் பிக்ஷாசரணம் செய்யலாமென்கிறார் விஷ்ணு - பிக்ஷா பாத்ரத்தை ப்ரணவத்தினால் ஸம்ஸ்கரித்து, ஸூர்யாபி முகமாய் மனதினால் விஷ்ணுத்யானம் செய்து இடது கையினால் பிக்ஷாபாத்ரத்தையும், வலது கையினால் தண்டத்தையும், தரிப்பர். கண்வர் - ஸூர்யனை நமஸ்கரித்துப் பாதுகைகளைத் தரிப்பர். பாதுகைகளை

ஸன்யாஸி ஒருபொழுதும் விடக்கூடாது. பாதுகை தரிக்காவிடில் கமண்டலுவும், பிக்ஷான்னமும் அசுத்தமாகும்.

बोधायनः — 'भिक्षापात्रविशुद्ध्यर्थमुपमुच्याप्युपानहौ। ततो ग्रामं व्रजेन्मन्दं युगमात्रावलोकक इति । अत्रिः — 'अनिन्द्यं वै व्रजेद्गेहं निन्द्यं गेहं विसर्जयेत्। अनावृते विशेद्द्वारि गेहे नैवावृते व्रजेत्॥ न वीक्षेद्द्वाररन्ध्रेण भिक्षां लिप्सन् कचिद्यतिः। न कुर्याद्वै कचिद्घोषं न द्वारं ताडयेत् कचित्॥ नैव सव्यापसव्येन भिक्षाकाले व्रजेद्गृहान् । अनिन्द्यातिक्रमे योगी प्राणायामशतं चरेत्॥ अदुष्टापतितं साधुं यतिर्यः परिवर्जयेत्। स तस्य सुकृतं दत्वा दुष्कृतं प्रतिपद्यते॥ तथैव च गृहस्थस्य निराशो भिक्षुको गतः । हुतं दत्तं तपोऽधीतं सर्वमादाय गच्छति। असंस्कृता तु या कन्या उदक्या चोदिता तु या। दया उत्तं न गृह्णीयात् प्राण्यङ्गेनायसेन वेति॥

போதாயனர் - பிக்ஷாபாத்ரத்தின் சுத்திக்காகப் பாதுகைகளைத் தரித்து நுகத்தடி தூரமட்டில் பார்ப்பவனாய் மெதுவாய் க்ராமத்திற்குச் செல்லவேண்டும். அத்ரி - தோஷமற்ற வீட்டிற்குச் செல்லவேண்டும். தோஷமுள்ள வீட்டை தவிர்க்க வேண்டும். வாயில் மூடாத வீட்டில் நுழையலாம். மூடப்பட்ட வீட்டில் போகக்கூடாது. கதவு ஓட்டையால் பார்க்கக் கூடாது. சப்தம் செய்யக் கூடாது. வாயிலைத் தட்டக்கூடாது. ப்ரதக்ஷிணமாய்ப் போகவேண்டும். மாறிப்போகக் கூடாது. தோஷமற்றவன் வீட்டைத் தாண்டிச் சென்றால் நூறு ப்ராணாயாமங்கள் செய்ய வேண்டும். தோஷமற்றவனும், பதிதனல்லாதவனு மாகியவனைப் பரிஹரித்தால் யதி தன் புண்யத்தை அவனுக்குக் கொடுத்து அவன் பாபத்தை அடைகின்றான். பிக்ஷையை அபேக்ஷித்து வந்து யதி மறுதலிக்கப்பட்டுப் பிக்ஷையை அடையாமல் சென்றால் அவன் க்ருஹஸ்தனுடைய ஹோமம், தானம், தபஸ், அத்யயனம் இவைகளாலுண்டாகும் பலனை முழுதும் அபஹரித்துச் செல்லுகிறான். விவாஹமாகாதபெண், ரஜஸ்வலையால்

ஏவப்பட்டவள் இவர்களால் கொடுக்கப்பட்டதும், ப்ராணியின் அவயவமான பாத்ரத்திலாவது இரும்புப் பாத்ரத்திலாவது கொடுக்கப்பட்டதுமான அன்னத்தை ஸ்வீகரிக்கக் கூடாது.

शौनकः — 'पीडयित्वा य आत्मानं भिक्षां चेत् सम्प्रयच्छति। सा भिक्षा हिंसिता ज्ञेया नादद्यात्तादृशीं यतिरिति ॥ अत्रिः — 'हितं मितं सदाऽश्नीयाद्यत् सुखेनैव जीर्यति। धातुः प्रकुप्यते येन तदन्नं वर्जयेद्यतिः ॥ उदक्या चोदितं चान्नं द्विजान्नं शूद्रचोदितम्। प्राण्यङ्गे वाऽऽयसे क्लृप्तं तदन्नं वर्जयेद्यतिः ॥ पित्रर्थं कल्पितं पूर्वमन्नं देवादिकारणात्। वर्जयेत्तादृशीं भिक्षां परबाधाकरीं तथेति ॥

சௌனகர் - க்ருஹஸ்தன் தன்னை வருத்திக் கொண்டு பிக்ஷையைக் கொடுத்தால் அந்தப்பிக்ஷை, 'ஹிம்ஸிதா' எனப்படும். அவ்விதமான பிக்ஷையை ஸன்யாஸி க்ரஹிக்கக் கூடாது. அத்ரி - ஹிதமாயும், மிதமாயும், ஸுகமாய் ஜீர்ணமாகக் கூடியதுமாகியதைப் புஜிக்க வேண்டும். தாதுவுக்கு (கபம் முதலியவை) ப்ரகோபம் உண்டாக்குமன்னத்தைப் புஜிக்கக் கூடாது. ரஜஸ் வலையால் ஏவப்பட்டதையும், சூத்ரனால் ஏவப்பட்ட ப்ராம்மணன்னத்தையும், ப்ராணியின் அங்கமான பாத்ரத்திலாவது, இரும்புப் பாத்ரத்திலாவது வைக்கப்பட்ட அன்னத்தையும் யதி தவிர்க்க வேண்டும். பித்ருக்களுக்காவது தேவர் முதலியவர்க்காவது ஸங்கல்பிக்கப்பட்டதும், பிறருக்குப் பீடையைக் கொடுப்பதுமாகிய பிக்ஷையை ஸ்வீகரிக்கக் கூடாது.

बोधायनः — 'भिक्षां न दद्युः पञ्चाहं सप्ताहं वा कथञ्चन। यस्मिन् गृहे जना मौर्ख्यात्त्यजेच्चण्डालवेश्मवत् ॥ एकत्र लोभाद्यो भिक्षुः पात्रपूरणमिच्छति। दाता स्वर्गमावाप्नोति भोक्ता भुञ्जीत किल्बिषम् ॥ या तु पर्युषिता भिक्षा नैवेद्ये कल्पिता तु या। तामभोज्यां विजानीयाद्दाता तु नरकं व्रजेत्। आयसेन तु पात्रेण यदन्नमुपदीयते। भोक्ता विष्ठासमं भुंक्ते

दाता तु नरकं व्रजेत्। स्वयमाहृतपर्णेषु स्वयं शीर्णेषु वा पुनः। भुञ्जीत न वटाश्वत्थकरञ्जानां च पर्णके ॥ कुम्भीतिन्दुकयोर्वाऽपि कोविदारार्कयो-स्तथा। आपद्यपि न कांस्ये तु मलाशी कांस्यभोजनः ॥ सौवर्णे राजते ताम्रमये वा त्रपुसीसयोरिति ॥

போதாயனர் - *ஐந்து நாள் அல்லது ஏழு நாள் எந்த வீட்டில் பிக்ஷை கொடுக்கவில்லையோ, அந்தவீட்டைச் சண்டாளன் வீட்டைப்போல் விடவேண்டும். ஒரே க்ருஹத்தில் பிக்ஷாபாத்ரத்தை நிரப்ப விரும்பிய யதி பாபத்தை அடைவான். கொடுத்தவன் ஸ்வர்க்கத்தை அடைவான். பர்யுஷிதமானதும் (பழையதும்) தேவதைக்கு நிவேதனமானதுமான பிக்ஷை அபோஜ்யமாகும். அதைக்கொடுத்தவனும் நரகத்தை அடைவான். இரும்புப் பாத்ரத்தால் கொடுக்கப்பட்ட அன்னம் விஷ்டைக்கு சமம். கொடுத்தவனும் நரகத்தை அடைவான். தானாய்க் கொண்டுவந்ததும், தானாய் உதிர்ந்ததுமான இலைகளில் புஜிக்கலாம். ஆல், அரசு, புன்கு, குங்கிலி, தும்பை, மலையகத்தி, எருக்கு இவைகளின் இலைகளில் புஜிக்கலாகாது. ஆபத்காலத்திலும் வெண்கலத்தில் புஜிக்கக் கூடாது. அதில் புஜித்தவன் மலத்தைப் புஜித்தவனாவான். ஸுவர்ணம், வெள்ளி, தாம்ரம், பித்தளை, ஈயம் இப்பாத்ரங்களிலாவது புஜிக்கலாம்.*

भिक्षापात्राण्याह मनुः — 'अलाबुदारुपात्रं वा मृण्मयं वैदलं तथा। एतानि यतिपात्राणि मनुः स्वायम्भुवोऽब्रवीत् ॥ अतैजसानि पात्राणि तस्य स्युर्निर्व्रणानि च। तेषामद्भिः स्मृतं शौचं चमसानामिवाध्वर इति ॥ याज्ञवल्क्यः — 'यतिपात्राणि मृद्वेणुदार्वलाबुमयानि च। सलिलं शुद्धिरेतेषां गोवालैश्चावघर्षणमिति ॥ शुद्धिः - तत्र भोजने कृते मृज्जलगोवालघर्षणैः शुद्धिरित्यर्थः ॥

*பிக்ஷாபாத்ரங்களைப்பற்றி மனு - சுரைக்காய் பாத்ரம் மரப்பாத்திரம், மண்பாத்திரம், மூங்கில் துண்டுகளால்*

செய்யப்பட்ட பாத்திரம் இவைகள் யதிக்குப் போஜனபாத்ரங்கள் என்றார் மனு. தாது பாத்ரங்களல்லாத வையும், காயமற்றவைகளுமான பாத்ரங்கள் அவனுக்கு. அவைகளுக்கு ஜலத்தால் சுத்தி. யாகத்தில் சமஸபாத்ரங்களுக்குப் போல். யாக்ஞவல்க்யர் - மண், மூங்கில், கட்டை, சுரைக்காய் இவைகளால் செய்யப்பட்ட பாத்ரங்கள் யதிகளுக்குப் பிக்ஷாபாத்ரங்கள். ஜலத்தால் அலம்புவதும், பசுவின் வாலால் துடைப்பதும் இவைகளுக்குச் சுத்திகரமாகும். சுத்தி என்பதற்கு, அந்தப்பாத்ரத்திலேயே புஜித்தால் மண், ஜலம், பசுவால்களால் துடைத்தல் இவைகளால் சுத்தி என்று பொருள்.

यदाह देवलः — 'तद्भैक्षं गृहीत्वैकान्ते तेन पात्रेण वाऽन्येन वा तूष्णीं मात्रया भुञ्जीतेति। कलौ भिक्षापात्रभोजनं निषेधति पितामहः — 'द्वापरादियुगेष्वेव पात्रभोजी भवेद्यतिः ॥ कलौ नैव तु भुञ्जीत स्वपात्रे योगवित्तम' इति ॥ कण्वः — 'ताम्रं पार्णं च पाषाणं यतीनां पात्रमीरितमिति ॥ अत्रिः — 'क्षौमं पात्रं च पाषाणं ताम्रं पर्णपुटं तथा। उक्तानि यतिपात्राणि ब्रह्मणा विश्वयोनिने'ति ॥

தேவலர் - அந்தப் பிக்ஷான்னத்தை க்ரஹித்து ஏகாந்த ஸ்தலத்தில் அந்தப் பாத்ரத்திலாவது வேறு பாத்ரத்திலாவது மௌனமாய் ஸ்வல்பமாய்ப் புஜிக்க வேண்டும். பிக்ஷாபாத்ரத்தில் புஜிப்பது கலியில் கூடாதென்கின்றார் பிதாமஹர் - த்வாபரம் முதலிய யுகங்களில்தான் யதி பிக்ஷாபாத்ரத்தில் புஜிக்கலாம். கலியில் கூடாது. கண்வர் - தாம்ரம், இலை, கல் இவைகள் யதிகளுக்குப் போஜனபாத்ரங்களாம். அத்ரி - க்ஷௌமம், கல், தாம்ரம், தொன்னை இவைகள் யதிகளுக்குப் போஜனபாத்ரங்க ளென்று ப்ரம்மாவினால் சொல்லப்பட்டது.

व्यासः — 'प्रक्षाल्य पात्रे भुञ्जीत ह्यद्भिः प्रक्षालयेत्तु तत्। अथ

वाऽन्यदुपादाय पात्रे भुञ्जीत नित्यशः ।। भुक्त्वा तु सन्त्यजेत् पात्रं यात्रमात्र मलोलुपः ।। प्रक्षाल्य पाणी पादौ च समाचम्य यथाविधि । आदित्यं दर्शयित्वाऽन्नं भुञ्जीत प्राङ्मुखोत्तरः ।। भुक्त्वा प्राणाहुतीः पञ्च ग्रासानष्टौ समाहितः । आचम्य देवं ब्रह्माणं ध्यायीत परमेश्वरमिति ।।

*வ்யாஸர் - அலம்பி, பிக்ஷாபாத்ரத்தில் புஜிக்க வேண்டும். அந்தப் பாத்ரத்தை ஜலத்தால் அலம்ப வேண்டும். அல்லது வேறு பாத்ரத்தில் புஜிக்கலாம். புஜித்தபிறகு போஜனபாத்ரத்தை எறிந்துவிடவேண்டும். புஜிப்பதற்கு முன் கைகால்களை அலம்பி ஆசமனம் செய்து அன்னத்தை ஸூர்யனுக்குக் காண்பித்து, கிழக்கு அல்லது வடக்கு முகமாய், ஐந்து ப்ராணாஹுதிகளைச் செய்து எட்டுக்கபளங்கள் புஜித்து ஆசமனம் செய்து ப்ரம்மாவையும் பரமேஸ்வரனையும் த்யானிக்க வேண்டும்.*

बोधायनः — 'तस्य प्राणो गार्हपत्योऽपानोऽन्वाहार्यपचनो व्यान आहवनीय उदानसमानौ सभ्यावसथ्यौ पञ्च वा एतेऽग्नय आत्मस्था आत्मन्येव जुहोति स एष आत्मयज्ञ आत्मनिष्ठ आत्मप्रतिष्ठ आत्मानं क्षेमं नयतीति विज्ञायते भूतेभ्यो दयापूर्वं संविभज्य शेषमद्भिस्संस्पर्श्यौषधवत् प्राश्नीयादिति ।।

**போதாயனர்** - *யதியின் ப்ராணனே கார்ஹபத்யாக்னி, அபானனே தக்ஷிணாக்னி, வ்யானனே ஆஹவநீயாக்னி, உதாநஸமானங்கள் ஸப்ய ஆவஸத்யாக்னிகள், இவ்விதம் ஐந்து அக்னிகளும் ஆத்மாவிலிருக்கின்றன; ஆத்மாவில் ஹோமம் செய்பவனாய் ஆத்மயக்ஞனாய் ஆத்மநிஷ்டனாய் ஆத்மப்ரதிஷ்டனாய் உள்ள யதி ஆத்மாவை முக்தியை அடைவிக்கின்றான். தயையால் ப்ராணிகளுக்குப் பாகம் பிரித்துக் கொடுத்துச் சேஷமுள்ளதை ஜலத்தால் அலம்பி ஔஷதத்தைப்போல் புஜிக்கவேண்டும்.*

आश्वलायनः — 'उपावृत्तस्ततो भैक्षं गत्वा तीर्थमकर्दमम् । प्रक्षाल्यान्तर्हिते देशे भिक्षापात्रं विधाय तु । मृत्तोयेन पृथक् पादौ हस्तौ

प्रक्षालयेदथ। आचम्याथ त्रिरायम्य प्राणांस्तु पुनराचमेत्। आपोशनविधिं कृत्वा पञ्चप्राणाहुतीश्चरेदिति ॥ महाभारते — 'शुक्तान्यकालपक्वानि कषायकटुकानि च। नास्वादयेत भुञ्जानो रसांश्च मधुरांस्तथेति ॥

ஆஶ்வலாயனர் - பிறகு திரும்பி, சேறில்லாத ஜலாசயத்திற்குச் சென்று, அலம்பி பிக்ஷாபாத்ரத்தை மறைவான ப்ரதேசத்தில் வைத்து, மண்ணாலும் ஜலத்தாலும் கை கால்களை அலம்பி, ஆசமனம் செய்து, மூன்று ப்ராணாயாமங்கள் செய்து, மறுபடி ஆசமனம் செய்து, ஆபோசனம் செய்து ஐந்து ப்ராணாஹுதிகளைச் செய்ய வேண்டும். மஹாபாரதத்தில் - புளித்தவைகளையும், அகாலத்தில் பழுத்தவைகளையும், துவர்ப்புக்கசப்புகளையும், மதுர ரஸங்களையும் புஜிக்கக் கூடாது.

आश्वलायनः — 'लाक्षां च लशुनं हिङ्गु ताम्बूलं पुष्पमञ्जनम्। मधु मांसमपूपादि तैलांश्चापि विवर्जयेदिति ॥ यमः — 'प्रोक्षितं प्रणवेनैव हुतमध्यात्मकादिषु। शरीरं प्राणवत् पश्येदन्नं तु प्राणलेपवत् ॥ गङ्गातोयाभिषिक्तां तु भिक्षां योऽश्नाति योगवित्। तत्र क्रतुशतैरिष्ट्वा फलं प्राप्नोति मानवः ॥ सन्तापनसहस्रं तु चान्द्रायणशतानि च। अश्वमेधाष्टकं चैव तद्विष्णोः शेषमुत्तममिति ॥

ஆஶ்வலாயனர் - கொம்பரக்கு, பூண்டு, பெருங்காயம், தாம்பூலம், புஷ்பம், மை, தேன், மாம்ஸம், அபூபம் முதலியவை தைலம் இவைகளை தவிர்க்க வேண்டும். யமன் - ப்ரணவத்தால் ப்ரோக்ஷிக்கப்பட்ட அன்னத்தைப் புஜித்தல் அத்யாத்மம் முதலியவைகளால் ஹோமம் செய்யப்பட்டதாகும். சரீரத்தை ப்ராணனைப் போலவும், அன்னத்தை ப்ராணலேபத்தைப் போலவும் த்யானிக்க வேண்டும். கங்காஜலத்தால் அலம்பப்பட்ட பிக்ஷையைப் புஜிக்கும் யோகி, அங்கு நூறு யாகங்கள் செய்த பலத்தை அடைகின்றான். ஆயிரம் ஸாந்த பனங்களையும், நூறு சாந்த்ராயணங்களையும், எட்டு

அச்வமேதங்களையும் விட, விஷ்ணுவுக்கு நிவேதனம் செய்த அன்னத்தைப் புஜிப்பது உத்தமமாகும்.

छान्दोग्यश्रुतिः — 'आहारशुद्धौ सत्वशुद्धिः, सत्वशुद्धौ ध्रुवा स्मृतिः स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्ष इति ।। विष्णुः — 'भैक्षं यवागूस्तक्रं वा पयो यावकमेव वा । फलं मूलं विपक्वं वा कणपिण्याकसक्तवः ।। इत्येते वै शुभाहारा योगिनः सिद्धिकारका' इति ।।

சாந்தோக்ய ஶ்ருதி - ஆஹாரம் சுத்தமாயிருந்தால் அந்தக்கரணம் சுத்தமாகும்; அந்த:கரணம் சுத்தமானுல் ஸ்திரமான ஆத்மஸ்மரணமுண்டாகும்; அதனுல் ஸர்வக்ரந்திகளுக்கும் (ஹ்ருதயத்திலுள்ள ஆசைகளுக்கு) நாசமுண்டாகும். விஷ்ணு - பிக்ஷான்னம், வடிகஞ்சி, மோர், பால், கஞ்சி, பழம், கிழங்கு, (வேகவைத்தது) குருணை, பிண்ணுக்கு, மா இவைகள் யோகிக்கு ஸித்தியளிக்கும் சுபமான ஆஹாரங்களாம்.

यमः — 'आहारस्य चतुर्भागमर्द्धं वाऽप्याहरेद्यतिः । युवा चैवारुजः शक्तः प्रसङ्गं तत्र वर्जयेत् ।। अन्नसङ्गाद्बलं दर्पो विषयासक्तिरेव च । कामः क्रोधस्तथा लोभः पतनं नरके तथा ।। अष्टौ ग्रासा मुनेः प्रोक्ताः षोडशारण्यवासिनः । द्वात्रिंशत्तु गृहस्थस्य यथेष्टं ब्रह्मचारिण इति ।।

யமன் - ஆஹாரத்தில் நாலிலொருபாகமாவது, அரைப்பாகமாவது பிக்ஷித்து எடுத்து வரவேண்டும். யௌவனமுள்ளவனும், வ்யாதியற்றவனும், சக்தியுள்ளவனுமானவன் பிக்ஷான்னத்தில் அதிக ஈடுபாட்டைத்தவிர்க்க வேண்டும். அன்னத்தின் ஸம்பந்தத்தால் பலம், கொழுப்பு, விஷயாசை, காமம், க்ரோதம், லோபம், நரகப்ராப்தி இவைகள் உண்டாகும். ஸன்யாஸி எட்டுக்கபளங்களையும், வானப்ரஸ்தன் 16 கபளங்களையும், க்ருஹஸ்தன் 32 கபளங்களையும், ப்ரம்மசாரி நியமமின்றியும் புஜிக்கலாம்.

तत्र ग्रास प्रमाणं व्याघ्र आह — 'चतुरङ्गुलमुत्सेधं चतुरङ्गुलमायतम्। एतद् ग्रासप्रमाणं तु व्याघ्रेण परिभाषितमिति ।। जाबालिः — 'निमन्त्रितस्तु सन्न्यासी यदि भैक्षं समाचरेत् । लोभात्तत्र प्रवर्तेत पतते च न संशयः ।। यत्किञ्चिद्दीयमानं तु गृहिणीकर संस्थितम् । भिक्षां भिक्षुर्न गृह्णीयात् काकयोनिषु जायत इति ।।

*கபள ப்ரமாணத்தைப்பற்றி வ்யாக்ரர் - நாலங்குலம் உயரமும் நாலங்குலம் சதுரமுமுள்ளது கபளத்தின் ப்ரமாணமென்று வ்யாக்ரரால் சொல்லப்பட்டது. ஜாபாலி - ஏகான்னத்திற்காகஒருவனுல் ப்ரார்த்திக்கப் பட்டிருப்பவன் ஆசையால் பிக்ஷையை எடுத்தால் பதிதனுவான். ஸம்சயமில்லை. க்ருஹத்திலிருக்கும் ஸ்த்ரீயினுல் கொடுக்கப்படுவது ஸ்வல்பமாயினும் அதை யதி க்ரஹிக்காவிடில் காக்கையாய்ப் பிறப்பான்.*

भिक्षां प्रशंसति यमः — 'अब्बिन्दुं यः कुशाग्रेण मासि मासि समश्नुते । न्यायतो यस्तु भिक्षाशी पूर्वोक्तात्तु विशिष्यते । तप्तकाञ्चनवर्णेन गवां मूत्रेण यावकम् । पिबेद्द्वादशवर्षाणि न तद्भैक्षसमं भवेत् ।। शाकभक्षश्च योऽब्भक्षो योऽन्यो यावकभक्षकः । सर्वे भिक्षाभुजस्तस्य कलां नार्हन्ति षोडशीम् ।। न भैक्षं परपाकान्नं न च भैक्षं प्रतिग्रहः । सोमपानसमं भैक्षं तस्माद्भैक्षेण वर्तयेदिति।

*பிக்ஷையை ஸ்துதிக்கின்றூர் யமன் - ப்ரதிமாதமும் குசத்தின் நுனியால் ஜலத்துளியை உட்கொண்டு தவம் செய்பவன், விதிப்படி பிக்ஷையை எடுத்துப் புஜிப்பவன் இவ்விருவர்களுள் முந்தியவனைவிடப் பிந்தியவன் சிலாக்யனுவான். காய்ச்சிய தங்கம்போல் நிறமுள்ள கோமூத்ரத்தால் யவையுணவைப் பன்னிரண்டு வர்ஷம் பானம் செய்வதும் பிக்ஷான்ன போஜனத்திற்குச் சமமாகாது. சாகத்தையே பக்ஷிப்பவனும், ஜலத்தையே உட்கொள் பவனும், யவையுணவையே பக்ஷிப்பவனும், பிக்ஷையைப்*

புஜிப்பவனின் கலைக்குச் (16-ல் ஒருபாகம்) சமமாகார். பிக்ஷான்னம் பரான்னமாகாது. அது ப்ரதிக்ரஹ (தானமேற்பது)மாகாது. அது ஸோமபானத்திற்குச் சமமாகும். ஆகையால் பிக்ஷையினாலேயே ஜீவிக்க வேண்டும்.

शातातपः – 'भिक्षा माधूकरी नाम सर्वपापप्रणाशिनी। भिक्षाहारो निराहारो भिक्षा नैव प्रतिग्रहः ॥ श्रोत्रियान्नं च भैक्षं च हुतशेषं च यद्धविः ॥ आनखाच्छोधयेत् पापं तुषाग्निरिव काञ्चनम् ॥ गङ्गायाः सलिलं पुण्यं सालग्रामशिला तथा। भिक्षान्नं पञ्चगव्यं च पवित्राणि युगे युगे ॥ नक्तात् परश्चोपवास उपवासादयाचितम्। अयाचितात् परं भैक्षं तस्माद्भैक्षेण वर्तयेदिति ॥

சாதாதபர் - மாதுகரீ என்னும் பிக்ஷை ஸகல பாபங்களையும் நாசஞ்செய்வதாகும். பிக்ஷாஹாரம் செய்பவன் நிராஹாரனாவான். பிக்ஷை ப்ரதிக்ரஹ மென்றாகாது. ச்ரோத்ரியான்னமும் பிக்ஷான்னமும், ஹோமசிஷ்டமான ஹவிஸ்ஸும், உமித்தணல் பொன்னைச் சுத்தம் செய்வதுபோல், ஸகலபாபங்களினின்றும் சுத்தமாக்கும். கங்காஜலம் ஸாளக்ராமம், பிக்ஷான்னம், பஞ்சகவ்யம் இவைகள் எல்லாயுகங்களிலும் சுத்த மானவை. நக்த (இரவு) போஜனத்தைவிட உபவாஸமும், அதைவிட அயாசிதமும், (யாசித்து பெறாததும்) அதைவிடப் பைக்ஷமும் சிறந்ததாகும். ஆகையால் பைக்ஷத்தாலேயே ஜீவிக்க வேண்டும்.

मेधातिथिः — 'बह्वन्नं पच्यते यत्र मन्यन्ते यत्र मानवाः। अनुद्विग्नाः प्रयच्छन्ति तं ग्रामं यत्नतो व्रजेदिति ॥ क्रतुः — 'पञ्चसप्तगृहाणां तु भिक्षामिच्छेत् क्रियावताम्। गोदोहमात्रमाकाङ्क्षेन्निष्क्रान्तो न पुनर्व्रजेत्। विना दण्डोदपात्रं तु न गच्छेद्यतिसत्तमः। भिक्षाकाले दण्डमेव नोदपात्रं कदाचनेति ॥

மேதாதிதி - எந்தக்ராமத்தில் அதிகமாக அன்னம் சமைக்கப்படுகின்றதோ, மனிதர்கள் கொடுக்கலாமென்று நினைக்கின்றார்களோ, மன வருத்தமின்றிக் கொடுக்கின்றார்களோ அந்த க்ராமத்திற்கு ப்ரயத்னத்துடன் செல்லவேண்டும். க்ரது - அனுஷ்டான பரர்களான க்ருஹஸ்தர்களின் ஐந்து அல்லது ஏழு வீடுகளில் பிக்ஷையை விரும்பவேண்டும். கோதோஹனகாலம் வரை நிற்கலாம். வெளியில் வந்தவன் மறுபடி அவ்வீட்டிற்குள் நுழையக்கூடாது. தண்டம் ஜலபாத்ரமின்றிப் போகக் கூடாது. பிக்ஷாகாலத்தில் தண்டம் மட்டுமே. கமண்டலு வேண்டுவதில்லை.

दत्तात्रेयः — 'भैक्षादन्यन्न याचेत न चैवोपविशेत् कचित्। उद्यतां नावमन्येत न चैनां श्रावयेत् पुनः ।। आत्मसंमितमाहारमाहरेदात्मवान् यतिः। अत्यन्तक्षुधितस्यापि समाधिर्नैव जायते ।। मिताशनो भवेन्नित्यं भिक्षुर्मोक्षपरायणः। कामदर्पादयो दोषा न भवन्ति मिताशिन' इति ।।

தத்தாத்ரேயர் - பிக்ஷான்னத்தைத் தவிர மற்றொன்றையும் யாசிக்கக் கூடாது. எங்கும் உட்காரக் கூடாது. கொண்டுவந்த பிக்ஷையைத் திரஸ்கரிக்கக் கூடாது. இரண்டாவது முறை கேட்கக் கூடாது. ஞானியான யதி தனக்குப் போதுமான ஆஹாரத்தைச் சம்பாதிக்கலாம். அதிகப் பசியால் வருந்தியவனுக்குச் சமாதி உண்டாகாது. மோக்ஷத்தை விரும்பும் யதி ஆஹாரத்தை அல்பமாய்ப் புஜிக்க வேண்டும். இவ்விதமிருப்பவனுக்குக் காமம் முதலிய தோஷங்கள் உண்டாகா.

विष्णुः — 'यदि भैक्षं समादाय पर्युषेद्योगवित्तमः। स पर्युषितदोषेण भिक्षुर्भवति वै क्रिमिः ।। सुवृत्तस्य गृहे भिक्षेन्न तु तेष्वेव नित्यशः। अभावे बहुगेहानां तेषु भिक्षेदलोलुपः ।। अन्यपात्रे हविर्भुङ्क्ते हव्यकव्येष्वनुज्ञया ।। राजते ताम्रसौवर्णे तत्रायं नास्ति वै विधिः ।। सौवर्णेषु च पात्रेषु ताम्ररौप्यमयेषु च। भुञ्जन् भिक्षुर्न दुष्येत दुष्यते तत्परिग्रहात् ।। भुञ्जीत पर्णपुटके पात्रे वा

वाग्यतो मुनिः । भुक्त्वा पात्रं यतिर्नित्यं क्षालयेन्मन्त्रपूर्वकम् ।। न दुष्येत्तस्य तत् पात्रं यज्ञेषु चमसा इव । अथाचम्य निरुद्धासुरुपतिष्ठेत भास्करम् ।। जपध्यानविशेषेषु दिनशेषं नयेद्बुधः ।। कृतसन्ध्यस्ततो रात्रिं नयेद्देवगृहादिष्विति ।।

விஷ்ணு - பிக்ஷித்துக் கொண்டு வந்த அன்னத்தைப் புஜிக்காமல் பர்யுஷிதமாய்ச் (நாட்பட்டதாகச்) செய்தால் அவன் க்ருமியாய்ப் பிறப்பான். நல்ல ஆசாரமுள்ளவன் கிருகத்தில் பிக்ஷிக்க வேண்டும். ப்ரதிதினமும் அதே வீடுகளில் பிக்ஷிக்கக் கூடாது. அனேக வீடுகள் இல்லாவிடில் அதே வீடுகளில் பிக்ஷிக்கலாம். ஹவ்ய கவ்யங்களில் வரிக்கப்பட்டு ஸ்வர்ணம் வெள்ளி, தாம்ரம் இந்தப்பாத்ரங்களில் புஜிக்கலாம். அந்த பாத்ரங்களில் புஜிப்பதால் தோஷமில்லை. தனக்கென்று ஸ்வீகரித்தால் தோஷமுண்டு. இலையிலாவது பாத்ரத்திலாவது புஜிக்கலாம். புஜித்த பிறகு பாத்ரத்தை மந்த்ரத்துடன் அலம்பவேண்டும். அதனால் அப்பாத்ரம் துஷ்டமாவதில்லை. யாகத்தில் சமஸங்கள் போல். பிறகு ஆசமனமும் ப்ராணாயாமமும் செய்து ஸூர்யோபஸ்தானம் செய்ய வேண்டும். மந்த்ரஜபதேவதா த்யானங்களால் பாக்கிப் பகலைக் கடத்தவேண்டும். ஸாயம்ஸந்த்யையைச் செய்து தேவாலயம் முதலியவைகளில் ராத்ரியைப் போக்க வேண்டும்.

दक्षः — 'इतिहासपुराणाभ्यां षष्ठसप्तमकौ नये'दिति ।। अङ्गिराः — 'पुराणश्रवणाद्भक्तिः मूर्खस्यापि प्रवर्तते । भक्त्या विनिश्चिता मुक्तिस्तस्मात् पौराणमभ्यसेत् ।। तदभ्यासात् परं ब्रह्मभावमापद्यते मुनिरिति ।।

தக்ஷர் - இதிஹாஸபுராணங்களால் பகலின் ஆறாவது ஏழாவது பாகங்களைப் போக்க வேண்டும். அங்கிரஸ் - புராணஶ்ரவணத்தால் மூர்க்கனுக்கும் பக்தி

*உண்டாகின்றது. பக்தியால் முக்தியுண்டாகின்றதென்பது நிச்சயம். ஆகையால் புராணாப்யாஸம் செய்ய வேண்டும். புராணத்தை அப்யஸிப்பதால் பரப்ரம்மஸாயுஜ்யத்தை முனி அடைகின்றான்.*

बृहस्पतिः — 'बन्धमोक्षविभागज्ञो बन्धाच्चेन्मोक्षणेच्छया । उपायान्वेषणे युक्तः को न मुच्यत बन्धनात् ।। यथाचित्तं समासक्तं जन्तोर्विषयगोचरे। यदि नारायणेऽप्येवं को न मुच्येत बन्धनात्। तत् कर्म यन्न बन्धाय सा विद्या या विमुक्तये । आयासायापरं कर्म विद्याऽन्या शिल्पनैपुणम् ।।

*ப்ருஹஸ்பதி - பந்தமோக்ஷங்களைப் பகுத்தறிந்தவன் பந்தத்தைவிட்டு மோக்ஷேச்சையால் அதன் உபாயத்தைத் தேடுவதில் தத்பரனாயிருந்தால் எவன் தான் முக்தியை அடையான்? மனிதனின் சித்தம் விஷயத்தில் நன்றாய்ப் பற்றியிருப்பதுபோல், நாராயணனிடத்திலிருந்தால் எவன் முக்தியை அடையான்? பந்தத்திற்கு ஹேதுவாகாத கர்மமே கர்மம். முக்திக்கு ஹேதுவாகும் வித்யையே வித்யையாகும். இஃதன்றிய மற்ற கர்மம் ப்ரமத்திற்கும், மற்றவித்யை சில்பங்களில் ஸாமர்த்யத்திற்குமேயாகும்.*

लोहितार्कामुपासीत सन्ध्यामातारकोदयात् । हृत्पद्मकोटरावासं चिन्मात्रज्योतिषं हरिम् ।। ध्यायेन्नारायणं ह्यादौ त्रीन् कृत्वा प्राणसंयमान्। तावद्ध्यायेत् पुनर्यावन्निद्रावशमुपागतः ।। सुस्वोत्थितः पुनर्ध्याये-त्तिष्ठन्ध्यायेज्जपन् पुनः । प्राग्रात्रेऽपररात्रे च मध्यरात्रे समाहितः । सन्ध्यास्वह्नि विशेषेण चिन्तयेन्नित्यमीश्वरम् ।। कृत्वा हृत्पद्मनिलये विष्ण्वाख्यं विश्वसम्भवम्। आत्मानं सर्वभूतानां परस्तात्तमसः स्थितम् ।। सर्वस्याधारमव्यक्तमानन्दं ज्योतिरव्ययम्। पुराणं पुरुषं शम्भुं ध्यायन् मुच्येत बन्धनात् ।।

*ஸூர்யன் ரக்தவர்ணமாய் இருக்கும் போது ஸாயம்ஸந்த்யையை ஆரம்பித்து நக்ஷத்ரோதய பர்யந்தம்*

செய்ய வேண்டும். ஹ்ருதய பத்மத்திலிருப்பவரும், ஞானமாத்ர ப்ரகாசனுமான ஹரியை, முதலில் மூன்று ப்ராணாயாமங்கள் செய்து பிறகு நித்ரை வரையில் த்யானிக்க வேண்டும். நித்ரை தெளிந்த பிறகும் த்யானிக்க வேண்டும். நிற்கும்போதும், ஜபிக்கும்போதும், முன் ராத்ரி பின் ராத்ரி மத்யராத்ரி ஸந்த்யாகாலம் பகல் இவைகளிலும் ஈஶ்வரனை த்யானிக்க வேண்டும். ஹ்ருதய பத்மஸ்தானத்தில் விஷ்ணு என்ற பெயருடையவனும், ஜகத்காரணனும், ஸர்வபூதாந்த ராத்மாவும், அக்ஞானத்திற்கப்புறமுள்ளவனும், ஸர்வா தாரனும், அவ்யக்தனும், ஆனந்தனும், ப்ரகாசரூபனும், அழிவற்றவனும், புராதனனும், புருஷனுமான சம்புவை த்யானிப்பவன் முக்தனாகிறான்.

मत्वाऽपृथक् स्वमात्मानं सर्वस्मादेव केवलम् । आनन्दमक्षरं ज्ञानं ध्यायीत च पुनः पुनः। तस्माद्ध्यानरतो नित्यमात्मविद्यापरायणः । ज्ञानं समभ्यसेद् ब्रह्म येन मुच्येत बन्धनादिति ॥

தன் ஆத்மாவையும் ஸகல ப்ரபஞ்சத்தினின்றும் தனியாகாதவனும், ஒருவனும் ஆனந்தனும், அக்ஷரனும், ஞானரூபனுமாய் த்யானிக்க வேண்டும். ஆகையால் எப்போதும்த்யானத்தில்தத்பரனாயும், ஆத்ம க்ஞானத் திலேயே ஆஸக்தியுள்ளவனாயும், ஞானரூபமான ப்ரம்மத்தை த்யானிக்க வேண்டும். அதனால் முக்தனாவான்.

## चातुर्मास्य व्यासपूजादिविधिः

तत्र श्रूयते — 'वर्षासु ध्रुवशील' इति ॥ अत्रिः — 'चतुरोऽयं वसेन्मासान् वार्षिकान् द्वावथापि वा । वृद्धाननु क्रमेणैव नमस्कृत्य विधानतः। अनेन विधिना भिक्षुराषाढ्यां सुसमाहितः । स्थानाभावाद्व्रजेत्तावद्यावद्भवति पञ्चमी ॥ प्रायश्चित्तेन युज्येत पञ्चम्यूर्ध्वं व्रजेद्यदि ॥ कक्षोपस्थशिखावर्जमृतुसन्धिषु वापयेत् ॥ चातुर्मास्यस्य मध्ये तु वर्जयेद्वपनं यतिः । तेषु मासेषु केशादीनृतुसन्धौ न वापयेत् । नदीं च न तरेत्तेषु क्रोशादूर्ध्वं न च व्रजेत् ॥ वापयेद्यदि केशादीनुत्तरेद्यदि वा नदीम् ।

प्राणायामांस्त्रिंशत् कृत्वा जपेत्त्रिकशतत्रयम् ।। वर्षाभेदं यतिः कुर्याद्यदि कश्चिदनापदि । प्राजापत्येन कृच्छ्रेण मुच्येत नात्र संशय इति ।।

வ்யாஸபூஜாதி விதி

*ச்ருதி - வர்ஷாகாலத்தில் ஒரே இடத்திலிருப்பவனாய் இருக்கவேண்டும். அத்ரி - ஆஷாட பூர்ணிமையில், சொல்லிய விதிப்படி கவனமுள்ளவனாய் வரிசைப்படி முன்னோர்களை நமஸ்கரித்து, வர்ஷருதுவின் நான்குமாதங்கள் முழுவதும், அல்லது இரண்டு மாதங்களாவது ஒரே ஸ்தானத்தில் இருக்க வேண்டும். ஸ்தானம் கிடைக்காவிடில் பஞ்சமி வரையில் ஸஞ்சரிக்கலாம். அதற்குமேல் ஸஞ்சரித்தால் ப்ராயச்சித்தி ஆவான். கக்ஷம் குஹ்யம், சிகை இவைகளை வர்ஜித்து, ருது ஸந்திகளில் வபனம் செய்து கொள்ள வேண்டும். சாதுர்மாஸ்யத்தின் நடுவில் வபனம் கூடாது. ஆஷாட பூர்ணிமையில் வபனம் செய்து கொள்ளவேண்டும். அந்த நான்கு மாதங்களிலும், ருதுஸந்தியில் வபனம் கூடாது. நதியைத் தாண்டிச் செல்லக்கூடாது. க்ரோசத்திற்கு அதிகதூரம் போகக்கூடாது. வபநம் செய்து கொண்டாலும். நதியைத்தாண்டிச் சென்றாலும், முப்பது ப்ராணாயாமங்கள் செய்து 300 ப்ரணவஜபம் செய்ய வேண்டும். வர்ஷாகாலத்தில், ஆபத்தில்லாத ஸமயத்தில் இடம் மாறி யதி ப்ராஜாபத்யக்ருச்ரத்தால் சுத்தனாவான். ஸம்சயமில்லை.*

अत्र सम्प्रदायविद्वचनम् — गुरून्नत्वा शिरस्यन्तः क्षालनं तदनन्तरम् । आचम्य वाग्यतो यत्नात् सवासाः क्षौरमाचरेत् ।। अन्तर्धाय तृणं किञ्चित्तत्र निक्षेपयेद्यतिः ।। क्षुरं सन्दंशनं चैव ततो नखनिकृन्तनम् अभिमन्त्र्य द्विषड्वारं प्रणवैः प्रोक्षयेज्जलम् ।। क्षुरमादाय तारेण श्मश्रुकेशान्निकृत्य च । नासास्थितांश्च तथा यत्नेन प्रयतो यतिः ।। कारयेत् करपादस्थनखानां च निकृन्तनम् । द्विषड्वारं निमज्ज्याप्सु तीरं गत्वोपविश्य च ।। प्रतिस्थानं द्विषड्वारं करावारभ्य पादयोः । मृदं दद्यान्मुखे चैव प्रतिवारं जलं तथा ।।

ततो जलं प्रविश्याथ शिर आलिप्य सन्मृदा। द्विषड्वारं निमज्ज्याथ प्रतिवारि मृदं तथा ॥ पुनरुत्प्लुत्य तत्तीरं गत्वा गण्डूषमाचरेत्। पञ्चैकादशवारांश्च सम्यगाचम्य यत्नतः ॥ प्राणायामांस्तथा कुर्यात् पञ्चैकादशसङ्ख्यया ॥ क्षौरस्नानं यतीनां तु व्यासाद्यैश्च प्रकीर्तित' मिति ॥

இவ்விஷயத்தில் ஸம்ப்ரதாயமறிந்தவர்களின் வசனம் -குருக்களை நமஸ்கரித்து, சிரஸ்ஸை அலம்பிக் கொண்டு, ஆசமனம் செய்து, வஸ்த்ரத்துடன் க்ஷௌரம் செய்து கொள்ள வேண்டும். பூமியில் புல்லைப் போட்டு அதன்மேல் க்ஷுரம் (கத்தி) ஸந்தம்சனம், (கிடுக்கி - மூக்கில் உபயோகிக்கும் ஆயுதம்) நகநிக்ருந்தனம் (நகமெடுக்குமாயுதம்) இவைகளை வைக்கச் செய்து, பன்னிரண்டு தடவை ப்ரணவத்தால் அபிமந்த்ரித்து, ஜலத்தால் ப்ரோக்ஷிக்க வேண்டும். ப்ரணவத்தால் கத்தியை யெடுத்து மீசை மயிர் இவைகளை வபநம் செய்வித்து. நாஸா ரோமங்களையும் அப்படியே செய்வித்து. கை கால்களிலுள்ள நகங்களையும் வெட்டி பன்னிரண்டு தடவை முழுகி, கரையில் உட்கார்ந்து ஒவ்வொரு ஸ்தானங்களிலும், 12 ம்ருத்திகைகள் போடவேண்டும். கைகள் முதல் கால்களிலும், முகத்திலும். ஒவ்வொரு ம்ருத்திகையிலும் ஜலமும் சேர்க்க வேண்டும். பிறகு ஜலத்தில் இறங்கி, சிரஸ்ஸை ம்ருத்திகையினுல் பூசி, பன்னிரண்டு தடவை, ஒவ்வொரு தடவையிலும் ம்ருத்திகையுடனுக முழுகி, கரையில் வந்து 16 - தடவை கண்டூஷம் செய்து, ஆசமனம் செய்து, 16 ப்ராணுயாமங்கள் செய்ய வேண்டும். இவ்விதம் ஸன்யாஸிகளுக்கு க்ஷௌரஸ்நாநம் வ்யாஸர் முதலியவர்களால் சொல்லப்பட்டது.

अत्रिः — 'वपनानन्तरं स्नात्वा पूजयेत् पुरुषोत्तम' मिति ॥ यतिधर्मसमुच्चये — 'देवं कृष्णं मुनिं व्यासं भाष्यकारं गुरोर्गुरुम्। गुरुं देवं गणाध्यक्षौ दुर्गां देवीं सरस्वतीम्' ॥ गणः - गणेशः। अध्यक्षः - क्षेत्रपालः। तत्र मध्ये कृष्ण सनत्कुमार सनक सनन्दन सनत्सुजातान्, तद्दक्षिणतो

व्याससुमन्तु जैमिनि वैशम्पायन पैलान्, वामतो भाष्यकार पद्मपाद विश्वरूप तोटक हस्तामलकाचार्यांश्च पूजयेत्। भगवतः पुरतः गुरुपरमगुरुपरमेष्ठि-गुरूनन्यानप्याचार्यान् पूजयेत्। यथा दिशं लोकपालान् भगवत्पार्श्वयोः ब्रह्मशङ्करौ च प्रणवादिनमोन्तैस्तत्तन्नामभिः पूजयेत्। ततो गोपीचन्दन-मृत्तिकादन्तकाष्ठदोरकादि दद्यात्। मासचतुष्टयपर्याप्तमृत्तिकादन्तकाष्ठादि सङ्गृह्णीयादिति ॥

அத்ரி - வபநத்திற்குப்பிறகு ஸ்நானம் செய்து விஷ்ணுவைப் பூஜிக்க வேண்டும். யதிதர்ம ஸமுச்சயத்தில் - க்ருஷ்ணதேவன், வ்யாஸர், பாஷ்யகாரர், குருவின்குரு, குரு, கணேசர், க்ஷேத்ரபாலர், துர்க்கை, ஸரஸ்வதீ இவர்களைப் பூஜிக்க வேண்டும். அதில் நடுவில் க்ருஷ்ண ஸநத்குமார, ஸநக ஸநந்தன ஸநத் ஸுஜாதர்களையும், தெற்கில் வ்யாஸ - ஸுமந்து - ஜைமினி - வைசம்பாயன - பைலர்களையும், இடதுபுறத்தில் பாஷ்யகார - பத்மபாத - விச்வரூப - தோடக - ஹஸ்தாமலகாசார்யர்களையும் பூஜிக்க வேண்டும். பகவானின் கீழ்பாகத்தில் குரு பரமகுரு பரமேஷ்டி குருக்களையும் மற்ற ஆசார்யர்களையும் பூஜிக்க வேண்டும். அவரவர் திக்குகளில் லோகபாலர்களையும், பகவானின் இருபுறங்களிலும் ப்ரம்மா சங்கரர் இவர்களையும், ப்ரணவத்தை ஆதியிலும் நம: என்பதை அந்தத்திலு முடைய அவரவர் நாமங்களால் பூஜிக்க வேண்டும். பிறகு கோபீசந்தனம், ம்ருத்திகை, தந்தகாஷ்டம், கடிஸூத்ரம் முதலியவைகளைக் கொடுக்க வேண்டும். நான்கு மாதங்களுக்குப் போதுமான ம்ருத்திகை முதலியவைகளை ஸங்க்ரஹிக்க வேண்டும்.

अत्रिः — 'असति प्रतिबन्धे तु मासान् वै वार्षिकानिह। निवत्स्यामीति सङ्कल्प्य मनसा बुद्धिपूर्वकम्॥ प्रायेण प्रवृषि प्राणिसङ्कुलं वर्त्म दृश्यते। आषाढादिचतुर्मासं कार्तिकान्तं तु संवसेत्॥

அத்ரி - ப்ரதிபந்தமில்லாவிடில், வர்ஷாகாலத்தின் நான்கு மாதங்களில் இவ்விடத்திலேயே வஸிக்கின்றேன் என்று ஸங்கல்பம் செய்து வஸிக்க வேண்டும். வர்ஷாகாலத்தில் அநேகமாய் மார்க்கம் ப்ராணிகளால் நிறைந்து காணப்படுகிறது. ஆகையால் ஆஷாடம் முதல் கார்த்திகம் வரையில் ஓரிடத்திலேயே வஸிக்க வேண்டும். ஜகத்பதியான மாதவன் ஆதிசேஷசயனத்தில் லக்ஷ்மியுடன் ஸகலப்ராணிகளின் க்ஷேமத்திற்காக நித்ரையை அடையப்போகின்றார்; தூங்கிய அந்த மஹாபுருஷன் எழுந்திராத வரையில் நான் இங்கு வஸிக்கின்றேன்.

शातातपः— 'निगृहीतेन्द्रियग्रामो यत्र यत्र भवेद्यतिः । तत्र तत्र कुरुक्षेत्रं नैमिशं पुष्करं तथेति ।। अत्रिः—'पिता भ्राता स्वसा माता स्नुषा जाया सुतस्तथा । ज्ञातिबन्धुसुहृद्वर्गो दुहिता तत्सुतादयः ।। यस्मिन्देशे वसन्त्येते न तत्र दिवसं वसेत् ।। मुहूर्तमपि नासीत देशे सोपद्रवे यतिः । उपद्रुते तु मनसि समाधिर्नोपजायते ।। चातुर्मास्ये च कार्तिक्यां क्षौरं कार्यं न चान्तरा । देशकालविरोधे तु भाद्रपद्यामपि क्वचित् ।। चतुःक्रोशान्तरा यत्र नदी भवति कुत्रचित् । पक्षान्ते तत्र गन्तव्यमापस्तम्बवचो यथा ।।

சாதாதபர் - ஜிதேந்த்ரியனான யதி எங்கெங்கு இருக்கின்றானோ, அவ்விடமெல்லாம் குருக்ஷேத்ரம், புஷ்கரம், நைமிசம் இருக்கின்றனவாம். அத்ரி - பிதா, ப்ராதா, பகினீ, மாதா, நாட்டுப்பெண், பிள்ளை, ஞாதி, பந்து, ஸுஹ்ருத், (நண்பன்) பெண், தௌஹித்ரன் முதலியவர் வஸிக்கும் தேசத்தில் ஒருநாள் கூட வஸிக்கக் கூடாது. உபத்ரவமுள்ள இடத்தில் ஒரு முஹூர்த்த காலம்கூட வஸிக்கக் கூடாது. மனத்திற்கு உபத்ரவ முண்டானால் ஸமாதி உண்டாகாது. சாதுர்மாஸ்யத்தில் கார்த்திக பூர்ணிமையில் க்ஷௌரம் செய்து கொள்ள வேண்டும். மத்தியில் கூடாது. தேசகாலங்கள் அனுகூலமாயில்லாவிடில் பாத்ரபத பூர்ணிமையிலும் செய்யலாம். தான் வஸிக்குமிடத் திலிருந்து நான்கு க்ரோச

தூரத்தில் நதியிருந்தால் பர்வகாலங்களிலும் அங்கு போய் வரவேண்டும் என்பது ஆபஸ்தம்பரின் மதம்.

सर्वदा वन्दनं कुर्याद्गुरोर्ज्येष्ठयतेस्तथा ।। आपञ्चमि नमस्कुर्यादतिक्रातेऽपि पर्वणि । त्रिमुहूर्ताधिकं ग्राह्यं पर्वक्षौरप्रणामयोः ।। प्रणतं न यतिर्ब्रूयात् आशिषं व्यास शासनात् । नारायणेति च ब्रूयात् प्रणतायुर्विवृद्धय इति ।। अभ्यागताचारादिकं सम्प्रदायमूलं यथासम्प्रदायं वेदितव्यम् ।।

எப்பொழுதும் குருவுக்கும் ஜ்யேஷ்டயதிக்கும் பர்வகாலங்களில் வந்தனம் செய்ய வேண்டும். பர்வத்தில் முடியாவிடில் பஞ்சமி வரையில் நமஸ்கரிக்கலாம். க்ஷெளரம் வந்தனம் இவ்விரண்டிலும் மூன்று முஹூர்த்தங்களுக்கதிகமுள்ள பர்வத்தை க்ரஹிக்க வேண்டும். தன்னை நமஸ்கரித்தவனுக்கு யதி ஆசீர்வாதம் செய்யக் கூடாது. நமஸ்கரித்தவனின் ஆயுர்வ்ருத்தியின் பொருட்டு 'நாராயண' என்று சொல்லவேண்டும். வந்தவரிடம்நடைமுறைமுதலியவை ஸம்ப்ரதாய மூலங்களானதால் அவரவர் ஸம்ப்ரதாயப்படி அறியத்தகுந்தவை.

हारीतः—'सर्वेषामाश्रमाणां तु सन्यासी ह्युत्तमाश्रमी । स एवात्र नमस्यः स्याद्भक्त्या सन्मार्गवर्तिभिः ।। ब्रह्मिष्ठः परमो हंसः साक्षान्नारायणः स्मृतः । यतिं यः पूजयेन्नित्यं विष्णुस्तेन प्रपूजितः ।। अष्टाक्षरेण मन्त्रेण यतिर्यत्र नमस्कृतः । स्मृतो नारायणो हन्ति प्राणिनां पापपञ्जरम् ।। अष्टाक्षरेण मन्त्रेण नमोनारायणात्मना । नमस्यो भक्तिभावेन विष्णुरूपी यतिर्यतः ।। स्वधर्मस्थान् यतीन् वृद्धान् देवांश्च प्रणवेद्यतिः । नान्यमाश्रमिणं कञ्चित् प्रशस्तमपि तं नमेत् ।। अपि शास्त्रसमायुक्तं सदाचारसमन्वितम् । साधुवृत्तं गृहस्थाद्यं न नमस्येत् कचिद्यतिरिति ।।

ஹாரீதர் - எல்லா ஆச்ரமிகளுக்குள் ஸன்யாஸியே சிறந்த ஆச்ரமி. ஸதாசாரத்திலிருப்பவர் பக்தியுடன் அவனையே நமஸ்கரிக்க வேண்டும். பரமஹம்ஸனே ஸாக்ஷாத் நாராயணனெனப்படுகிறான். யதியைப்

பூஜித்தவனால் விஷ்ணுவே பூஜிக்கப்பட்டவராகின்றார். அஷ்டாக்ஷர மந்த்ரத்தால் நமஸ்கரிக்கப்பட்டு நாராயண ஸ்மரணம் செய்த யதி நமஸ்கரித்த ப்ராணிகளின் பாபங்களைப் போக்குகின்றான். யதி விஷ்ணுரூபியானதால் அவனைப் பக்தியுடன் ஓம் நமோநாராயணாய என்ற அஷ்டாக்ஷர மந்த்ரத்தால் நமஸ்கரிக்க வேண்டும். ஸ்வதர்மத்திலிருப்பவரும், வ்ருத்தருமான யதிகளையும், தேவர்களையும் நமஸ்கரிக்க வேண்டும். சிறந்தவனானாலும் மற்ற ஆச்ரமியை நமஸ்கரிக்கக் கூடாது. சாஸ்த்ர க்ஞனாயினும், ஸதாசாரமுடையவனாயினும், க்ருஹஸ்தன் முதலிய ஆச்ரமியை நமஸ்கரிக்கக் கூடாது.

मनुः—प्राणायामैर्दहेद्दोषान् धारणाभिश्च किल्बिषम्। प्रत्याहारेण संसर्गान् ध्यानेनानीश्वरान् गुणानिति ॥ वसिष्ठः — 'प्रणवेनैव कुर्याच्च प्राणायामान् यतिर्मुहुः। रेचकं वाममार्गेण पूरकं दक्षिणे तथा ॥ कुम्भकं तु तयोर्हीनं मध्यमं हृदि तिष्ठति ॥ चतुर्विंशतिमावृत्तिं षट्त्रिंशद्वा दशाथ वा। प्रणवस्य स्मरेत् स स्यात् प्राणायामो यतानिल' इति ॥

மனு - ப்ராணாயாமங்களால் ராகாதி தோஷங்களையும், தாரணைகளால் பாபத்தையும், ப்ரத்யாஹாரத்தால் விஷய ஸங்கங்களையும், த்யானத்தால் ஈச்வரனுடையதல்லாத க்ரோதலோபமோஹாதிகளையும் தஹிக்கவேண்டும். வஸிஷ்டர் - ப்ராணாயாமங்களை ப்ரணவத்தினாலேயே யதி செய்ய வேண்டும். இடது நாசியின் மார்க்கத்தால் ரேசகம். வலதினால் பூரகம். இவ்விரண்டிலுமில்லாத நடுவில் இருப்பது கும்பகம். மூச்சை அடக்கி 24, அல்லது, 36, அல்லது 12 தடவை ப்ரணவத்தை ஸ்மரிப்பது ப்ராணாயாமம் எனப்படும்.

वैवस्वतः— 'द्वादशावर्तितं यत्तु प्रणवस्य मनोर्हृदि। प्राणायामो यतेः प्रोक्तः प्राणानायम्य चोमितीति ॥ कूर्मपुराणे— 'प्राणस्तु देहजो वायुरायामस्तन्निरोधनम्। मात्राद्वादशको मन्दश्चतुर्विंशतिमात्रकः ॥

मध्यमः प्राणसंरोधः षट्त्रिंशन्मात्रकोत्तमः । सगर्भमाहुस्सजपमगर्भमजपं बुधाः । रेचकः पूरकश्चैव प्राणायामोऽथ कुम्भकः । रेचकोऽजस्रनिश्वासात् पूरकस्तन्निरोधतः । साम्येन संस्थितिर्या सा कुम्भकः परिगीयत' इति ॥

*வைவஸ்வதர் - மூச்சை அடக்கி ப்ரணவத்தை பன்னிரண்டுமுறை மனதில் ஜபிப்பது யதிக்கு ப்ராணாயாமம் எனப்பட்டிருக்கிறது கூர்மபுராணத்தில் - ப்ராணன் என்பது தேஹத்திலுண்டாகும் வாயு. ஆயாமம் என்பது அதை அடக்குவதாம். அந்த ப்ராணாயாமம் 12 மாத்ரைகளுள்ளதாகில் மந்தம், 24 மாத்ரைகளுள்ளதாகில் மத்யமம், 36 மாத்ரைகளுள்ளதாகில் உத்தமம். ஜபத்துடன் கூடியதாகில் ஸகர்ப்பமென்றும், ஜபமில்லாவிடில் அகர்ப்பமென்றும் அறிந்தவர் சொல்லுகின்றனர். ப்ராணாயாமம், ரேசகம் பூரகம் கும்பகம் என மூன்று விதமாகும். இடைவிடாது மூச்சு விடுவது ரேசகம், அதை மேலாக இழுப்பது பூரகம், ஸமமாயிருப்பது கும்பகமெனப்படும்.*

शौनकपरिशिष्टे — 'यावत्यो रेचके मात्रास्तावद्द्विगुणाः पूरके विद्यात् कुम्भके चातुर्गुण्य मष्टमात्रो रेचकः षोडशमात्रः पूरको द्वात्रिंशन्मात्रः कुम्भक इति शिशुप्राणायामो, द्वादशमात्रको रेचकश्चतुर्विंशतिमात्रकः पूरकोऽष्टाचत्वारिंशन्मात्रकः कुम्भक इति मध्यमः। षोडशमात्रो रेचको द्वात्रिंशन्मात्रः पूरकोऽष्ट षष्टिमात्रः कुम्भक इति प्राणायामोऽकारकालो मात्रा प्रायश्चित्तं चैतत् सर्वेषु दुष्कृतेषु। रेचकं दक्षिणे न्यस्येत् पूरकं वामनासिके। अङ्गुष्ठाङ्गुलिभिश्चैवं प्राणायामं समाचरेत्॥ प्राणायामैक निष्ठस्य न किञ्चिदपि दुर्लभमिति ॥

*சௌனக பரிசிஷ்டத்தில் - ரேசகத்தில் எவ்வளவு மாத்ரைகளோ அவை இரண்டு மடங்கு பூரகத்திலும், நான்கு மடங்கு கும்பகத்திலும் அதிகமாம், 8 மாத்ரைகளுடையது ரேசகம், 16 மாத்ரைகளுடையது பூரகம், 32 மாத்ரைகளுடையது கும்பகம், இது*

சிசுப்ராணாயாமம். 12 மாத்ரைகளுடையது ரேசகம், 24 மாத்ரைகளுடையது பூரகம், 48 மாத்ரைகளுடையது கும்பகம், இது மத்யம ப்ராணாயாமம். 16, 32, 64, மாத்ரைகளை முறைய உடையே ரேசக பூரக கும்பகங்களுடையது உத்தமம். அகாரத்தின் காலம் மாத்ரை எனப்படும். இது ஸகல பாபங்களுக்கும் பிராயச்சித்தம். வலது நாசியில் ரேசகமும் இடது நாசியில் பூரகமும் செய்வேண்டும். ஒரு நாசியில் அங்குஷ்டத்தாலும் மற்றொரு நாசியில் விரல்களாலும் ப்ராணாயாமம் செய்ய வேண்டும். ப்ராணாயாமத்தில் நிஷ்டையுள்ளவனுக்குத் துர்லபமொன்றுமில்லை.

## यतेर्निषिद्धानि

अथ यतेर्निषिद्धानि ।। तत्र व्यासः — 'द्वावेतौ समवीर्यौ तु सुरा ताम्बूलमेव च । तस्मात् सर्वप्रयत्नेन ताम्बूलं वर्जयेद्यतिः ।। माद्यति प्रमदां दृष्ट्वा सुरां पीत्वा च माद्यति । तस्माद्दृष्टिमदां नारीं दूरतः परिवर्जयेत् ।। शिल्पं व्याख्या नियोगश्च कामो रागः परिग्रहः । अहङ्कारो ममत्वं च चिकित्साकर्म साहसम् ।। एकान्नं मदमात्सर्ये गन्धपुष्पविभूषणम् । ताम्बूलाभ्यञ्जने क्रीडा भोगकाङ्क्षा रसायनम् ।। सन्धिश्च विग्रहो यानं मञ्चकं शुक्लवस्त्रकम् । शुक्लोत्सर्गो दिवास्वापो भिक्षाधारस्तु तैजसम् ।। एतानि वर्जयेन्नित्यं यतिर्मूत्रपुरीषवत् ।।

### யதிக்கு நிஷித்தமானவை

வ்யாஸர் - மத்யம், தாம்பூலம் இவ்விரண்டும் வீர்யத்தால் ஸமமாகும். ஆகையால் யதி தாம்பூலத்தை தவிர்க்க வேண்டும். மத்யத்தைப் பருகினால் போதை அடைவான். ஸ்த்ரீயைப் பார்த்தாலுமே கலங்குவான். ஆகையால் ஸ்த்ரீயை தூரத்தில் தவிர்க்கவேண்டும். சில்பம், வியாக்யானம், ஆக்ஞை செய்தல், காமம், ஆசை, பரிக்ரஹம், அஹங்காரம், மமதை, சிகித்ஸை, வேலை, ஸாஹஸம், ஏகான்னம், மதம், மாத்ஸர்யம், கந்தம்,

புஷ்பம், பூஷணம், தாம்பூலம், அப்யஞ்சனம், க்ரீடை, போகத்திலாசை, ரஸவாதம், ஸந்திசெய்தல், சண்டை, வாஹனம், கட்டில், வெளுத்தவஸ்த்ரம், ரேதஸ்ஸேகம், பகலில் நித்ரை, தாதுபாத்ரமான பிக்ஷாபாத்ரம் இவைகளை மல மூத்ரங்களைப் போல் யதி தவிர்க்க வேண்டும்.

न स्नानमाचरेद्भिक्षुः पुत्रादिनिधने श्रुते। पितृमातृक्षयं श्रुत्वा स्नात्वा शुध्यति साम्बरः ॥ अन्नदानपरो भिक्षुः भिक्षादानपरो गृही। उभौ तौ मन्दबुद्धित्वात् पूती नरकशायिनौ ॥ यस्तु प्रव्रजितो भूत्वा पुनः सेवेत मैथुनम्। षष्टिवर्षसहस्राणि विष्ठायां जायते कृमिः ॥ न किञ्चिद्भैक्ष(ष)जादन्यदप्पानाद्दन्तधावनात्। विना भोजनकालेन जातुचिद्भक्षयेद्यति-रिति।

புத்ரன் முதலியவர் இறந்ததைக் கேட்டால் யதி ஸ்நானம் செய்யக் கூடாது. மாதாபிதாக்களின் மரணத்தைக் கேட்டால் ஸசேலஸ்நானம் செய்து சுத்தனாகிறான். அன்னதானம் செய்யும் யதியும், பிக்ஷை வாங்கும் க்ருஹஸ்தனும், புத்தியற்றவராதலால் பூதிநரகம் என்னும் நரகத்தை அடைவர். ஸன்யாஸியாயிருப்பவன் ஸ்த்ரீஸங்கம் செய்தால் அறுபதினாயிரம் வர்ஷம் மலத்தில் க்ருமியாய்ப் பிறப்பான். போஜனகாலம், (மருந்து ஏற்கின்ற காலம்) ஜலபானகாலம், தந்ததாவனகாலம் இவைகளைத் தவிர்த்து மற்ற காலத்தில் ஒன்றையும் உட்கொள்ளக் கூடாது.

अङ्गिराः— 'सन्यासं चैव यः कृत्वा पुनरुत्तिष्ठते द्विजः। न तस्य निष्कृतिः कार्या स्वधर्मात् प्रच्युतस्य च। आरूढो नैष्ठिकं कर्म पुनरावर्तयेद्यतिः। आरूढपतितो ज्ञेयः सर्वधर्मबहिष्कृतः ॥ चण्डालाः प्रत्यवसिताः परिव्राजकतापसाः। तेषां जातान्यपत्यानि चण्डालैस्सह वासयेत् ॥ नैष्ठिकानां वनस्थानां यतीनामवकीर्णिनाम्। शुद्धानामपि लोकेऽस्मिन् प्रत्यासत्तिर्न विद्यत' इति ॥

